வெளியீடு எண் 109.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

அருளிய



பண்டாரசாத்திரங்களுள் ஒன்றாகிய

# முத்திநிச்சயம்

( மூலம் )

வெள்ளியம்பலவாணமாபாடியம் என வழங்கும்

## பேருரையுடன்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
உரு-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்
ஆணையின்படி வெளியிடப்பெற்றது.

தருமபுர ஆதீனம்.

1946

# பொருளடக்கம்

உ

குருபாதம்

# முகவுரை

முன்னை ஞான முதற்றனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே.

ஞானத் தாற்றொழு வார்சில ஞானிகள்
ஞானத் தாற்றொழு வேனுனை நானலேன்
ஞானத் தாற்றொழு வார்க டொழக்கண்டு
ஞானத் தாயுனை நானுந் தொழுவனே. —அப்பரடிகள்.

சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்கும் தென்னாடு தெய்வத் திருநாடாகத் திகழ்கின்றது. சிவஞானப்பயிர் தழைத்துச் சிவபோகம் விளைக்கும் செல்வநாடாக விளங்குகின்றது. இதனாலேயே சிந்தையுருக்குந் திருவாசகமும் எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய சிவபெருமானுக்குத் தென்னாட்டை உடைமையெனவுரைத்தது. உடைமைப் பொருளிடத்து உடையானுக்கு உள்ளவிருப்பம் மிகத்தானேசெய்யும்! அதனால் தென் தமிழ்நாட்டில் சிவஞானப்பயிர் விளைக்கும் தவஞான உழவர்களும் உரியகாலத்தே தோன்றிவந்தார்கள். தோன்றிவருகிறார்கள். அவர்களுடைய அநுபவஞானப் பெருநூல்களே இன்றைக்கும் என்றைக்கும் சிவநெறி தழைக்கச் செய்கின்றன. அத்தகைய பெருநூல்கள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார் முதலிய பதினான்குமாம்.

பின்னர், அந்த ஞானாசாரிய பரம்பரையில் வந்த பரமாசாரியமூர்த்திகள் பலர் நூலறிவோடு திருவருள் கூட்டப்பெற்ற அநுபவஞானத்தையும் சேர்த்துத் தமிழ் நாட்டவர் உய்யப் பண்டாரசாத்திரங்கள் பலவற்றை அருளிச்செய்தார்கள். அவர்களுள், செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைத் திருவாரூர்ச் செட்டித்தெரு ஞானப்பிரகாசர் வாயிலாகப் பெற்றுத் தருமை ஞானபீடத்து எழுந்தருளிப் பக்குவான்மாக்களுக்குக் காட்டாதன காட்டிச் சிவங்காட்டித் தாட்டாமரைகாட்டித் தன்கருணைத்தேன்காட்டி யாட்கொண்ட ஞானசம்பந்தப் பெருமானே தலையாயவர்கள் என்பதை அங்கணர்தம் புவனத்து அறியாதார் யார்?

அங்ஙனமே பண்டார சாத்திரங்கள் பலவற்றுள்ளும் முன்னணியில் நிற்பது முத்திநிச்சயமே.

பல பிறவிகளிற் செய்த சிவபுண்ணிய விசேடத்தால், வேதபாதவத்துத் தளிர் கொள்ளாது, இலை கொள்ளாது, அரும்பு மலர் பிஞ்சு அருங்காய் முதலியன

கொள்ளாது, உச்சியிற் பழுத்த ஆராவின்ப அருங்கனி பிழிந்த சாரமாகிய சைவ சித்தாந்தத் தேனமுதருந்தி நன்னிலை பெறவேண்டும் என்ற விருப்பம் மக்களுக்கு நிகழும் வேளையிலே, எந்தமுத்தி சித்தாந்தமுத்தி என்று அறிந்து ஒழுக அவா நிகழும். அப்போது அவசித்தாந்தங்கள் பலவற்றையுங்கொண்டு தடுமாறுது இதுதான் சித்தாந்த முத்தியென, ஆகமக்கருத்தானும் அநுபவத்திறத்தானும் அறுதியிட்டுக் கூறும் நூலின் உதவி இன்றியமையாது வேண்டப்பெறும். அப்போது சந்தான நற்குரவரும் சமயந் தோற்றுவித்த நற்குரவரும் அருளிய நூல்வழிவருகின்ற, 'இதுவே முத்தியெனத்' தெரிவிக்கு நூலாகிய முத்திநிச்சயம் என்ற இந்நூல் இனிதுவேண்டப்படும்.

இந்நூல், அகச்சமயம் ஆறனுள் முதலிலுள்ள சைவம் நால்வகைப்படும் எனவும், அந்நால்வகையுட் சிறந்த சித்தாந்த சைவத்தின் கன்மாந்தம் ஞானந்தம் என்ற இருவகை நெறியில் ஒன்றைப்பற்றி நிற்கும் ஆன்மா எய்துகின்ற முத்திநிலை இவ்வாறாகும் எனவும் எடுத்துக் காட்டுகிறது. அங்ஙனம் காட்டுமுறையால் துணைவருவாரைப் போல உடன் வந்து நடுவழியில் மயங்குஞ் சிவசமவாதி ஆன்மாநந்தவாதிகளுடைய முத்தி நிலைகளை மறுத்துச் செல்கின்றது.

இந்நூலுக்குத் தருமை யாதீனத்து அடியார் குழாங்களுள் ஒருவராக விளங்கிய ஸ்ரீமத் வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளால் இயற்றப்பெற்ற பேருரை ஒன்று உண்டு. அவ்வுரை, ஸ்ரீமத் சுவாமிகளுடைய இரு மொழிப் புலமைக்கும், உண்மைகண்டு உரைக்கும் உரைவன்மைக்கும், நியாய சாத்திரங்களை எடுத்தாளும் நேர்மைக்கும், பொருந்தாக்கோளைக் கண்டிக்குந் திறமைக்கும் ஓர் உரையாணியாக விளங்குகின்றது.

இவ்வுரை, இன்று, வழக்காற்றில் இன்றிச் சைவத் தமிழ்மக்களின் முயற்சிக் குறைவாலும், தவக்குறைவாலும் மறைந்து கிடக்கும் நூல்களின் பெயர்கள், அவற்றின் பொருட்பாகுபாடுகள் யாவற்றையும் உணர்த்தி ஒரு புத்துணர்ச்சியைத் தந்து நம் எல்லோருக்கும் நூல்தேடும் ஊக்கத்திலும், வெளியிடும் தமிழாக்கத்திலும் பெருவிருப்பத்தை விளைவிக்கின்றது.

இத்தகைய பேருரையை வெளியிட வேண்டுவது இன்றியமையாதது என்று, தருமை யாதீனத்து இருபத்துமூன்றாவது மகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்த **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்** திருவுளத் தடைத்தார்கள். அப்போது, தருமையாதீன வித்துவசிகாமணியாக விளங்கிய செந்தமிழ்ச் செல்வர் சுவாமிநாத பண்டிதர் அவர்கள் மகாசந்நிதானத்தின் அருள்பெற்று முத்திநிச்சயச் சிற்றுரை என்ற ஒரு நூலை அச்சிட்டார்கள். பின்னர் மகாசந்நிதானம் அவர்கள் தருமை யாதீனப் புத்தகசாலையிலுள்ள முத்திநிச்சயப்பேருரை ஏட்டுப்பிரதியைப் பிரதி செய்விக்கத் திருவுளங்கொண்டார்கள். அப்போது இனிது எழுதி அக்கருத்தை முற்றுவித்தவர்கள் இப்போது திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர்களாக இருக்கின்ற **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**. இதனோடு ஒப்பிட்டு நோக்க ஏடுதேடும் முயற்சியிலும் பலரை ஏவினார்கள். அதன் பயனாகக் கிடைத்தன ஆறு பிரதிகள். அவற்றுள் ஆதீனத்துப் பிரதியும் இன்னும் இரண்டுமே முழுதும் பயன்பெறுவன ஆயின. இவ்வுண்ணம் வெளியீட்டு முயற்சி வளர்ச்சி நிலையில் இருந்தது.

பேருரையதனைப் பிரதிசெய்வித்த



திருக்கயிலாய பரம்பரை தருமபுர ஆதீனம்
உ௬-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்

பின்னர் இருபத்துநான்காம் குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் இந்த வெளியீட்டு விஷயத்திலும் தம் குருமூர்த்தியைப்போலப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டார்கள். அப்போது ஆதீனத்து வித்துவசிகாமணியாக இருந்த திரு. ப. அ. முத்துத்தாண்டவராயப் பிள்ளை அவர்களிடமும், பரங்கிப்பேட்டையில் தமிழாசிரியராக இருந்த வித்துவான், பெரியசாமிப் பிள்ளை அவர்களிடமும் இப்பிரதிகளைச் சேர்ப்பித்து ஆராய ஆணை தந்தார்கள். திருத்தங்கள் ஒருவாறு நடந்தன. பிறகு, " இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து, அதனை அவன்கண் விடல் " என்ற வள்ளுவர் வாய்மொழியைத் திருவுளத்துக் கொண்டவர்களாதலின், வடமொழியும் தென்றமிழும் கலந்து எழுதப்பெற்ற இந்தப் பேருரையை ஆராய இருமொழிப் புலமை எய்தியவர்களும், அருந்தமிழிலக்கண ஆற்றல் மிகுந்தவர்களும், நூற்பதிப்புவகையில் இருமொழியிலும் மிகப் பழக்கம் வாய்ந்தவர்களும், சாத்திர நுணுக்கங்கள் செறிந்தவர்களும், துறவொழுக்கத்திற் சிறந்தவர்களும், பானுகோயிலாதீனத்தைச் சார்ந்தவர்களுமாகிய **ஸ்ரீமத் இலக்கணம் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகளைத்** திருமடத்திற்கே யழைப்பித்து ஆவன செய்வித்தார்கள். அவர்கள் உடனிருந்து ஆராயும்வண்ணம் **அடியேனையும்** இப்பணியில் ஈடுபடுத்தினார்கள். இரண்டு ஆண்டுகள் ஏடு திருத்தவேலை இனிது நடைபெற்றது. இவ்வுரையிற் காணும் வடமொழிப் பிரமாணங்களை ஒப்புநோக்க உதவியாகத் தருமையாதீன பாடசாலை சமஸ்கிருத ஆசிரியராகிய **வேதாந்தசிரோமணி பிர்மஸ்ரீ இராஜகோபால சாஸ்திரிகள்** அவர்களையும் நியமித்தார்கள். அதனால் இந்நூல் ஒருவாறு நன்கு ஆராயப்பெற்று எழுதுவோரான் நிகழ்ந்த வழுக்களைந்து தூய்மை யுறுத்தப்பெற்றது. பின்னர் அச்சுவாகனமும் ஏறியது. உடனிருந்து ஒப்புநோக்கவும், அடிக்குறிப்பு மேற்கோள்விளக்க முதலியன எழுத உதவியாயிருக்கவும் ஆதீனப் புத்தகசாலைக் கண்காணிப்பாளர், **வித்துவான் திரு. மு. ஆறுமுக தேசிகர்** அவர்களும் ஆணையை மேற்கொண்டு ஈடுபட்டார். இவ்வாறாக இவ்வுரைநூல் பதின்மூன்று பாரம்வரையில் அச்சேறியது. பின்னர் இருபத்துநான்காவது மகா சந்நிதானத்தின் பரிபூரணதசை காரணமாக நின்றது.

பின்னர், இருபத்தைந்தாம் குருமூர்த்தியாக ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த பீடத்து எழுந்தருளி அறச்செங்கோல் நடாத்தும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்,** நூன்முறை பயின்ற நுண்மைசா லறிவின் சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞராயும், கற்றவர் வியக்குங் காவியப்புலவராயும் இருப்பதால் சாயா மும்மலச் சகலான்மாக்கள் உய்ய, எம்முருக்கொண்டு எம்மொடு பயின்றும், நல்வழிநின்று நல்லறம் புரிந்தும், பரமன் எழுந்தருளிய பண்பெறு தலங்களில் விதிமுறைப் பூசனை வேண்டுவ் ஆற்றியும், திருமுறை பலவும் சிறுபுத்தகமாக எல்லோர்கையினும் இனிய வுளத்தும் நல்வளம் பெறவே மல்குறச் செய்தும், ஞானசாத்திரங்களை நானிலந்தேற எவ்வகை மொழியினும் பெயர்த்தினி தருளியும், தெய்வத் தொண்டும் தேமொழித் தொண்டும் சிந்தையி னிறைவுடன் செய்துவருபவர்களாதலின், இப்போது வெளிவந்து கொண்டிருக்கிற இந்த முத்திநிச்சயப்பேருரையும், இனி வெளிவர இருக்கின்ற சிவஞான சித்தியார் ஞானவரண விளக்கம் என்னும் பேருரையும் சிவஞானசித்திநெறி காட்டும் தமது ஆதீனத்திற்குச் சிறந்த பாடியங்களாக இருத்தலான், இவ்விரண்டனுள் வெள்ளியம்பலவாண பாடியம் என்னும் இந்த முத்திநிச்சயப் பேருரையை முடித்துவிடவேண்டும்

னத் திருவுளத்தடைத்து, ஆதிகுருமூர்த்திகளாகிய குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் குருபூஜை தினத்தில் (வியவாண்டு வைகாசித் திங்கள் ௯-ம் நாள்) வெளிப்படுத்தியருளினார்கள்.

இவ்வுரைப் பிரதியைத் தேடுகின்றகாலத்து நிகழ்ந்த சிலவற்றையும் ஈண்டு நினைவுகூர்தல் இன்றியமையாததாகும். இவ்வுரையின் பிரதியொன்று தருமையாதீனத்தில் மிகப்பழைமையானதாகவும், அதிகச்சீர்கேடில்லாததாகவும் இருந்தது. 23-வது மகா சந்நிதானம் அவர்கள் ஒப்புநோக்க வேறுபிரதி தேடிக்கொணருமாறு ஆதீனத்து வித்துவ சிகாமணிகளாகிய சுவாமிநாத பண்டிதர் அவர்களுக்கும், முத்துத்தாண்டவராயப் பிள்ளை அவர்களுக்கும் ஆணை தந்தார்கள். அவர்கள் வைத்தீஸ்வரன்கோயில் சோமசுந்தர தேசிகரிடமும், சீகாழி பெருநிலக்கிழவர் சதாசிவ முதலியார் அவர்களிடமும் இருந்த பிரதிகளைத் தேடித்தந்தனர். சைவசித்தாந்தப் பேரறிஞர் செந்தில்நாதையர் அவர்களிடம் இருந்தும் ஒருபிரதி கிடைத்தது. இவற்றைவைத்து ஒத்துப்பார்த்தபோது அறுபத்தேழுக்கு மேற்பட்ட வடநூல் மேற்கோள்கள் பலவிடத்தும் வந்திருந்தமையின் அவற்றை ஆராய்வதற்கேற்ற ஆகம சாஸ்திரங்கள் கிடையாமையால் திருத்தம் செய்யமுறவில்லை போலும். அந்தநிலையில் ஆதீனத்தொடர்புடைய வித்வான் பால்வண்ண முதலியார் அவர்கள் திருத்தமாக எழுதப்பெற்ற கையெழுத்துக் காகிதப்பிரதியைப் பதிப்பிப்பதாக உத்தரவுபெற்று எடுத்துச்சென்றார்கள், பின்னர் 24-வது மகாசந்நிதானமவர்கள் அந்தப் பிரதி மடத்திற்குத் திரும்பப் பலமுயற்சிகளை மேற்கொண்டார்கள். அங்ஙனம் அரிதில் தேடிப்பெற்ற பிரதியை உடனே அச்சிடவேண்டும் என்று எண்ணி இன்னும் இரண்டு பிரதிகள் செய்யுமாறு எழுத்தாளர்களை ஏவினர். பிறகு இலக்கணம் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் வந்ததும் நல்ல எழுத்தாளர்களைக்கொண்டு பதிப்புக்கான வகையில் எழுதச்செய்தார்கள். உரையில் மேற்கோளாக வந்துள்ள ஆகமபுராண சாஸ்திர சுலோகங்களை ஒப்புநோக்கித் திருத்த ஆதீனப் புத்தகசாலையிலுள்ள ஏடுகளும், புத்தகங்களும் பெரிதும் பயன்பட்டன. எஞ்சிய சிலவற்றிற்குத் தேவகோட்டை சிவாகம சித்தாந்த சங்கத்தினின்று ஆகமப்பிரதிகள் வரவழைக்கப்பெற்றன. அவைகளால் உரை பெற்ற திருத்தங்கள் பல. மற்றும் இவ்வுரையில் எடுத்தாளப்பெறும் பல அரிய, வெளிவராத நூல்களிலுள்ள பாடல்கள், தஞ்சை சரஸ்வதிமால் புத்தகசாலையிலுள்ள ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு ஒப்புநோக்கிப் பார்க்கப்பட்டது.

இவ்வுரையினிடையே முன்பின்தொடர்பு சிறிதேனும் இன்றி, மிருகேந்திராகமம் வித்தியாபாதத்து மொழிபெயர்ப்பில் பசுபடலச் சூத்திரங்கள் ஏழு கலந்திருந்தன. அவை இவ்வுரையின் மேற்கோளே என்று ஐயுறக்கிடந்தன. பின்னர், இறுதியிலுள்ள "ஆறாவது பசுபடலம் முற்றியது" என்ற சொற்றொடரால் இவை இவ்வுரையைச் சார்ந்தன வல்ல; இடையே ஏடுமாறிக் கோக்கப் பெற்றமையால் வந்தன என்று அறிந்து பிரித்து எடுக்கப் பெற்றன. இந்த முயற்சி ஒரு பெருநன்மையைத் தந்தது. எங்ஙனமெனின் இவ்வாதீனத்து ஏடுகளைப் பார்க்கநேர்ந்த காலத்து 'மிருகேந்திரம் வெள்ளியம்பலவாண சுவாமிகள் மொழி பெயர்த்தது' என்ற குறிப்புடன் கூடிய ஏடுகிடைத்தது. அதனைப் பெயர்த்தெழுதச் செய்தபோது பசுபடலத்தின் ஏழு சூத்திரங்கள் காணப்பெறவில்லை. அக்குறையை முத்தி

நிச்சயத்திற் கலந்திருந்த ஏழு சூத்திரங்கள் நிறைத்தன என்றால் எதிர்பாராத ஒரு நன்மை இறையருளாற் சைவ உலகிற்குக் கிட்டியது என்றே சொல்லவேண்டுமல்லவா!

இருபதாம் பாட்டுரையில் 236-ம் பக்கத்தில் 'ஆநந்த சத்தத்திற்கு அகண்டார்த்தம் இல்லை' என்று கண்டிக்கும் இடத்தில் "இதனை நன்றாக உரைக்கேற்க இனிமேல் வாசகமாக எழுதிக்கொள்ளவேண்டும் நினைவுக்கு வந்ததை எழுதினமாத்திரம்" என்ற வரிகள் இடையே காணப்பட்டன. குறிப்பிடுகின்ற இந்தப்பகுதி நீண்ட தொடர் வாக்கியமாக, சரியான முடிபும், பொருள்கொள்ளும் அமைதியும் இன்றித்தான் கிடந்தது. பிறசாதனங்களைக் கொண்டும் முன்பின் உரைப்பகுதிகளைக் கொண்டும், ஒருவாறு திருத்தப்பெற்றது. ஏடுகளின் பிறழ்வால் உவமையும் பொருளும் மாறிக்கிடந்த இடங்கள் பல. வடமொழி சுலோகங்கள் கிரந்த எழுத்துக்களால் எழுதப் பெற்றிருந்தமையின் தமிழ் வாக்கியங்களை வடசொற்றொடராக மாற்றியும், வடஎழுத்துக்களாலே எழுதியும் இருந்தமையான் சரியான பொருள்விளக்கங் காணச் சிறிது சிரமம்நேர்ந்தது. உதாரணமாக 234, 235-ம் பக்கத்து "சிவதர்மமான நிர்மல ஞானநந்த தர்மம் ஜடவஸ்துங்யாரோப்ய ஜடத்வமபோஹ்ய அன்யத் த்ரவ்யஜாதம் சிவரூபநிர்மல ஞானநந்த தர்மீகிருத்ய சிவாய ஸமர்ப்பிக்கவேண்டும்." என்பது காணற்குரியது. இவைபோலப் பல விடங்களில் மொழி மாற்றி எழுதப்பெற்றிருந்தன. 197-ம் பக்கத்தில் வரல் வக்கிரக நியாயம் என்பதும், 215-ம் பக்கத்தில் எழுவகைச் சமரசிபாவம் என்பதும் அச்சேறும் வரையிலுங்கூட பெருமயக்கத்தை விளைத்தன. அவற்றில் "வரல் வக்கிர நியாயம் போல விவேகபூர்வமன்மையின்" என்ற சொற்றொடரில் விவேக பூர்வமன்மையின் என்ற சொற்றொடர் வாயிலாகத் திருவருள் உணர்த்த "ஏரல் அக்கர நியாயம் போல" என்றிருக்க வேண்டும் எனத் துணியப் பெற்றது. எழுவகைச் சமரசிபாவம் என்பது கீழ்வரும் சிவ, சத்தி, முத்தி சமரசிபாவமென மூன்றே குறிக்கப்படுகின்றமையானும், 251-ம் பக்கத்தில் சித்தாந்தபக்ஷத்தில் கண்டனங் கூறுமிடத்தும் சிவ சத்தி முத்தி சமரசிபாவங்களையே எடுத்துக்காட்டிச் செல்வதாலும் மூவகைச் சமரசிபாவங்களே எழுதுவோரால் எழுவகையாக எழுந்தது என்று துணியப் பெற்றது. இவைபோல நிகழ்ந்த திருத்தங்கள் பல.

இங்ஙனம் பல பெரியோர்கள் பார்த்தும், அடியேங்களைப் போன்ற சிலர் பன்முறை சிந்தித்துச் சிந்தித்தும் உண்மைகாண எடுத்த முயற்சியில் ஒருவாறு வெற்றி கண்டாலும் காணவேண்டிய இடங்கள் இன்னும் பலவுள. அவற்றைக் காய்தலுவத்தலில்லாக் கருத்து நிறைவொடு உணர்த்தும் ஆன்றோர்களின் அருமொழியை ஏற்றுத் திருத்திக்கொள்வேன். அத்தகைய பேரறிவின் திருவாளர்களுக்கு என்றும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்.

இப்பதிப்பில், நூலாசிரியராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளின் வரலாறும், பேருரையாசிரியராகிய வெள்ளியம்பலவாணத் தம்பிரான் அவர்களின் வரலாறும், இவ்வுரையைப்பற்றிய சிலஆராய்ச்சிக் குறிப்புக்களும், எடுத்தாண்ட இலக்கண இலக்கிய நியாய தர்க்கச் சொற்களின் பொருளகராதியும் பிறவும், சேர்க்கப்பெற்றுள்ளன.

இங்ஙனம் அமைதியுடன் இருந்து ஆராய எல்லாவகையினும் இனிய உதவிகள் புரிந்து நூலை வெளிப்படுத்தும் குறிப்பொன்றையே திருவுளத்துக்கொண்ட 25-வது மகா சந்நிதானம் அவர்கள் பீடத்து எழுந்தருளிய இந்த ஓராண்டிற்குள் தருமையழகு இருமடங்காயிற்று. சிவப்பிரகாசம், சிவஞானபோதம், சித்தாந்தத்திரயம், திருவருட்பயன் முதலிய ஞானசாத்திரங்கள் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிடப்பெற்று அனைவர்க்கும் பயன்தருவவாயின. "தெளிவு குருவுருவம் சிந்தித்தல்தானே" என்னும் திருமந்திரத்தைத் திருவுளத்துக்கொண்டு, ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆனந்தபரவசமூர்த்தியையும், இருமருங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாணிக்கவாசகமூர்த்தியையும், ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிகமூர்த்தியையும் தமது மனக்கோயிலிற்கண்டு சிந்திப்பது போலவே புறத்தும் எல்லோருங்கண்டு இருமைப்பயனையும் எய்த வேண்டும் என்ற பெருங்கருணையால் மும்மூர்த்திகட்கும் மூன்றுகோயில் கட்டிவருகிறார்கள். இந்நிகழ்ச்சி குருபக்தியை உலகம் அறிந்துய்யச்செய்யும் ஓர் எடுத்துக்காட்டாகும். இங்ஙனம் இறைபணி, உயிர்ப்பணி, நூற்பணி முதலியவற்றைச் செம்மனச்சிறப்போடு இடைவிடாது இயற்றிவரும் இருபத்தைந்தாவது குருமூர்த்திகளாகிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** துறவரசாட்சி செந்தமிழ் நலஞ்செய் கந்தனருளால் நீடுவாழ முருகனடியை உருகிய மனத்துடன் உன்னுகின்றேன்.

குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்,
தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
வித்துவான், ச. **தண்டபாணி தேசிகன்,**
தமிழ்ப்பேராசிரியர்,
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள்
செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

தருமபுரம்,
22—5—46.

ஆப்வித்ததனை அச்சிட்டருளிய



திருக்கயிலாய பாரம்பரைத் தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# பேருரையில் எடுத்தாண்ட மேற்கோள் நூல்களின் பெயர் அகராதி

## தமிழ் நூல்கள்:-

அப்பர்தேவாரம்
இறையனார்களவியலுரை
உண்மைநெறிவிளக்கம்
உரிச்சொல்நிகண்டு
ஐக்கியவியல்
கந்தரலங்காரம்
குமரகுருபரர்தனிப்பாடல்
சங்கற்பநிராகரணம் (உமாபதி சிவம்)
,, (கண்கட்டிமறைஞானர்)
சம்பந்தர்தேவாரம்
சிவஞானசித்தியார் சுபக்கம்
,, பரபக்கம்
சிவஞானபோதம்
சிவதருமோத்தரம்
சிவப்பிரகாசம்
சிவபோகசாரம்
சிவானந்தமாலை
சீவகசிந்தாமணி
சுந்தரர்தேவாரம்
சைவசமயநெறி
ஞானசம்பந்தகுருதசமணிமாலை
ஞானபூசாகாரணம்
தசகாரியம் (வெள்ளியம்பலவாணர்)
,, (களந்தைஞானப்பிரகாசர்)
தண்டியலங்காரம்
தத்துவவிளக்கம்
திருக்கழுமலமும்மணிக்கோவை
திருக்களிற்றுப்படியார்
திருக்குறள்
திருக்கோவையார்
திருப்பல்லாண்டு
திருப்புகழ்
திருமந்திரமாலை
திருமுருகாற்றுப்படை
திருவருட்பயன்
திருவாசகம்
திருவிசைப்பா
திருவிடைமருதூர்மும்மணிக்கோவை
திருவிரட்டைமணிமாலை
திருவுந்தியார்
துகளறுபோதம்
தொல்காப்பியம்
,, நூன்மரபு
,, மொழிமரபு
,, தொகைமரபு
,, புணரியல்
,, புள்ளிமயங்கியல்
,, குற்றியலுகரப்புணரியல்
,, கிளவியாக்கம்
,, வேற்றுமைமயங்கியல்
,, எச்சவியல்
,, அகத்திணையியல்
,, புறத்திணையியல்
,, செய்யுளியல்
,, உவமயியல்
,, பொருளியல்
,, மரபியல்
நம்மாழ்வார்திருமொழி
நன்னூல்
நெடுநல்வாடை
பண்டாரக்கலித்துறை
பதிபசுபாசப்பனுவல்
பரம்பரைத்தனிப்பாடல்
பரமததிமிரபானு
பரமோபதேசம்
பன்னிருபாட்டியல்
புறநானூறு
பெரியபுராணம்
பொன்வண்ணத்தந்தாதி
மறைஞானமாலை
யாப்பருங்கலக்காரிகை
யாப்பருங்கலவிருத்தி
விருத்தகிரிப்புராணம்
வினவெண்பா

## வடமொழி நூல்கள்:-

அசிதம்
அசிந்தியவிசுவசாதாக்யம்
அமரகோசம்
அவாந்தரசைவபத்ததி
ஆத்மபோதம்
ஆன்மார்த்தபூஜாபத்ததி
ஆலாஸ்யமான்மியம்
இரத்தினத்திரயம்
இரௌரவம்
கந்தகாலோத்தரம்
காந்தம்
காமிகம்
காரணம்
காலோத்தரம்
கிரணம்
கிரியாக்கிரமபத்ததி
கிரியாக்கிரமத்யோதிகை
கிரியாதீபிகை
கூர்மபுராணம்
சகலாகமசாரம்
சர்வசுரோதஸாரசங்கிரகம்
சர்வஞானோத்தரம்
சித்தாந்தஸம்போதிகை
சித்தாந்தசாராவளி
சித்தாந்தசேகரம்
சித்தாந்தபோதம்
சித்தாந்தரகசியம்
சிவஞானபோதம்
சிவதருமோத்தரம்
சிவாகமம்
சுப்பிரபேதம்
சுவாயம்புவம்
சுவேதாரண்யமான்மியம்
சூக்குமம்
சூதசம்ஹிதை
சைவபரிபாஷை
சைவபுராணம்
சௌந்தரநாதாசாரியபத்ததி
ஞானசித்தி
தத்துவப்பிரகாசம்
தந்திரசாரம்
தியானதீபம்
துவிசதிகாலோத்தரம்
தேவிகாலோத்தரம்
நிச்சுவாசகாரிகை
பகவத்கீதை
பஞ்சதசப்பிரகரணம்
பராசரம்
பரமோட்சநிராசகாரிகை
பிரமகீதை
பௌட்கரம்
மதங்கம்
மிருகேந்திரம்
மேருதந்திரம்
மோக்ஷகாரிகை
யோகஜம்
வாக்விருத்தி
வாதுளம்
வாதுளோத்தரம்
வாயுஸம்ஹிதை
விச்சுவாசம்
விசுவசாரோத்தரம்
வீரதந்திரம்

நூலாசிரியர்:-

## குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

செந்தமிழ்வளமும் தென்றலின்பமும் மூந்துறநுகர, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானல் மன்னர் மன்னனுகை மணிமுடி தாங்கிச் சவுந்தர பாண்டியன் எனும்பேர் சார்ந்து ஆளப்பெற்றதும், தமிழ்நயம் தெரிந்து சைவங் காத்த பெரும்புனல் வையைத் திருவளம் பெருக்கும் சிறப்புடையதும் ஆகிய பாண்டிய நாட்டிலே 'மின்னூர் தடமதில்சூழ் வில்லிபுத்தூர் என்றொருக்கால் சொன்னூர் கழற்கமலஞ் சூடிஞேம்' என்று தன் பெயர் கூறவே பேரின்பமும், பெறுபயனும், தெய்வத்தன்மையும் அளிப்பதாகிய வில்லிபுத்தூரிலே, தாளாற்றித் தந்த பொருளெல்லாவற்றினையும் தக்கார்க்கு வேளாண்மை செய்யும் சிறப்பு வாய்ந்ததும், மன்னன் செங்கோலையும் தன்ஏர்க்கோல்வழி நடாத்தும் மாண்பு வாய்ந்ததும், வானம்தந்த மழைப் பயன் கொண்டு வாரிபெருக்கி வளம்பல செய்து தானமும் தவமும் தடையின்றி நடக்கச்செய்யும் பெருமைசேர்ந்தது மாகிய கார்காத்த வேளாளர் குடியிலே, கற்றல் கேட்ட லுடையார் பெரியார் என்னும் ஞானநூற் சொற்றொடரைப் பெருவரம்பாகக் கொண்டு, சமயசாத்திர நுணுக்கங்களை நன்கு கற்றுக் கேட்டுத் தெளிந்து நற்றவச் செல்வராய், சிவபூஜை தியானம் சிவாலயவழிபாடு முதலியவைகளைச் செவ்வனே செய்துவருகின்ற **சுப்பிரமணியபிள்ளை** என்கின்ற ஞானச்செல்வர் ஒருவரிருந்தார். அவருக்குப் பண்டைநற் றவத்தால் இல்லறப்பண்பு எல்லாம் ஒருங்கு வாய்ந்த நற்குடிப் பிறந்த **மீனுட்சியம்மை** என்னும் கற்பிற்சிறந்த பொற்புடைநங்கை நல்லூழ் கூட்ட இல்லறத்துணைவியாயினர்.

இவர்கள் இருவரும் இல்லறத்தையே இம்மை மறுமை இரண்டும் தரும் நல்லறமாக நடத்திவந்தனர். இவர்கள் சிந்தை எப்பொழுதும் சிவத்தினிடமே சேர்ந்திருந்தமையால் இவர்கள் செய்யும் புண்ணியங்கள் யாவுமே சிவபுண்ணியங்களாயின. அத்தவத்தின் மிகுதியால் சிவஒளி திகழும் தவநிறை குமரர் அவதரித்தார். பிறந்தநாளோ இறைவனுக்குகந்த திருநாளாகிய சோமவாரம். செல்வச் சிறுவரின் முகவொளி பெற்றோர் மனத்தைக் கவர்ந்ததென்பது ஒரு வியப்பன்று. குழவியைக் காணவந்தவர்களுள் தெய்வவொளி திகழும் சிறுவரென்பார் சிலர். உலகம் உய்யப் பல்கலை நிறைந்த பாலரென்பார் சிலர். இங்ஙனம் வருங்கால நிகழ்ச்சியைக் குறிப்பாலுணர்த்தும் திருமேனியைக் கண்டு பலரும் வியந்து பாராட்டுவாராயினர். கண்டவர் மனத்தை வசீகரிக்கும் கருணைக் குழந்தையின் பெற்றோர் மனம் பேரின்ப வெள்ளத்து ஆழ்ந்தமையைப்பற்றி அறிவிக்க முடியுமோ? வளர்ச்சிக்காலத்துத் தளர்நடை நடத்தல் சிறுதேருருட்டல் சிறுபறை கொட்டல் முதலிய பிள்ளைப்பருவ விளையாட்டுக்கள் யாவும் உரிய காலத்தே நிகழ இளமைப்பருவத்தின் ஐந்தாம் பருவத்தை அடைந்தார். பக்குவமறிந்து மார்ச்சார நியாயத்தால் வலியவந்து ஆட்கொள்ளும் பரமாசாரியனைப்போலக் கல்வி ஞானமும் இவரைவந்து ஈண்டின. இருமொழிப் புலமையும் ஒருசேர எய்தின. உலகத்து வினைவயத்தானெழுந்த பிறப்பொன்று.

பண்டை நற்றவத்தால் உலகிற்கு நல்வழி காட்ட வந்த பிறப்பு மற்றொன்று. வினைப்பிறப்பு கல்வி ஞானத்தையும்கூட மிகுந்த உழைப்பாலுறும்; உற்றதை யும் மறக்கும். அருட்பிறப்பைக் கல்விஞானமும் தாமே வந்தடைந்து பெருமை எய்தும். இவர்கள் பிறப்போ உய்விக்கவந்த பிறப்பு. ஆதலால் கல்வியிற் சிறந்தார்களென்பதில் வியப்பொன்றுமில்லை. இவ்வாருக ஞானச்செல்வர் பதி ஞெரும் ஆண்டினை அடைந்தார். தாய்தந்தையர்களும் கல்வி கேள்விகளிற் சிறந்த மகனைத் தம்மிற் றம்மக்க ளறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லா மினிதாம் என்று எண்ணி மகிழ்ந்திருந்தனர்.

அப்போது தமது ஆன்மார்த்தமாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வழிபடவேண்டும் என்ற பெருவிருப்பம் தாய்தந்தையர்கட்குண்டாயது. தமது அரும்பெறற் செல்வரையும் அழைத்துக்கொண்டு மதுரையம்பதியை அடைந் தனர். புலவர் தலைவராயிருந்து புலவரைப்போற்றிய பெருமானும்-வாதவூரடிகளை வழியடிமைகொண்ட வள்ளலாய் - வேதத்திற்குப் பொருளருளிய விழுமிய தலை வனும் - முப்பொருளுண்மைகளையும் முத்திநிலையையும் உணர்த்திய முதல்வனு யுள்ள சோமசுந்தரக்கடவுளையும், தமிழ்நாட்டுத் தனியரசியாய் - கடைக்கண் பொழித்த கருணைப்பெருவெள்ளத்து மூழ்கும் அடியார் பிறவிப்பிணிக்கு ஓர் மருந்தாய் - மலையத்துவசன் பெற்ற பெருவாழ்வாயுள்ள மீனுக்ஷியம்மையாரையும், வணங்கிக்கொண்டு சிலநாள் அங்கு வதிந்தனர். காலந்தவருது வழிபாடு செய்து வந்தனர். அப்போது கண்ணுதற்பெருமான் கடைக்கண்பெருவெள்ளம் ஞான சம்பந்தர்மீது பாயத்தொடங்கியது. கருணைப் புதுவெள்ளத்தால் ஞானசம்பந் தருடைய மனத்தாமரை மலரத்தொடங்கிற்று. சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது. தெய்வக்களை மேன்மேலும் விளங்கத்தொடங்கிற்று. அதனால் இல்லத் தொடர்பு மெல்ல நழுவி வந்தது.

தாய்தந்தையர்களோ! இல்லறப்பற்று இழுக்க வில்லிபுத்தூர் செல்ல விரைந்தனர். சமய முறைப்படி கோயிலுக்குச்சென்று பொற்றாமரையில் நீராடி விடையேறும் பெருமானிடம் விடைகொண்டனர். வீடு திரும்புகிறவர்கள் செல்வக் குமாரரை—ஞானசம்பந்தரை விட்டுக்கழைத்தனர். குமாரர் மனமோ நிலைத்த குறிக்கோளில் நிலைத்திருந்தது. தந்தையார் அழைப்பு செவி புகவில்லை. மீட்டும் மீட்டும் வற்புறுத்தி அழைத்தனர். சிவஞானத்தேனரும்பு சிந்தை யாராகிய ஞானசம்பந்தர் 'என்னுயிர்த்தந்தையும் தாயும் இவ்வாலயத்தில் இருக்கின்றூர்களே; இவர்களைவிட்டு எங்ஙனம் நீங்குவேன்; எப்படிவருவேன்; உடற் றந்தையராகிய உங்களோடு எனக்கு உறவில்லை' என்றுரைத்தனர். இதைக்கேட்ட தாய் தந்தையர்கள் மனங்கலங்கினர். ஞானசம்பந்தர் சாத்திர தோத்திரவாயிலாகப் பல சமாதானங்கள் சொல்லித் தேற்ற, ஒருவாறு தேறிச் செல்கின்றவர்கள் தமது செல்வர் சிவஞானப்பெரியாராக—சமயம் வளர்க்குந் தலைவராக ஆகக்கூடுமென்ற எண்ணமானது அவருடைய நிகழ்ச்சியாலும் திரு வருளாலும் மனத்துள் தோன்ற மட்டற்ற மகிழ்ச்சியோடு இல்லம் அடைந்தனர்.

பின்பு ஞானசம்பந்தர் விதிமுறை வழிபாடாற்றிப் பல நாள் மதுரையில் வசித்து வந்தனர். ஒருநாள் விடியற்காலையில் பொற்றாமரைத்தடத்து நீராடச் சென்றனர். அங்கு திருநீறும் கண்டிகையும் திகழ்தருமேனியோடு வடக்கு

நோக்கியிருந்து சிவலிங்கத்திருமேனியைத் தம்முன் எழுந்தருளப்பண்ணிக் கொண்டு பல அடியார்கள் தன்வசமற்று நாக்குழற, உரை தடுமாறக், கண்ணீர் வாரச் சிவபூசை செய்துகொண்டிருத்தலைக் கண்ணுற்றார். தாமும் அவ்வாறு சிவபூசை செய்து சிவானந்தத்துள் திளைத்திருப்பது எந்நாட்கூடுமோ என்று எண்ணிக்கொண்டே ஒரு விருப்புமின்றி வழிபாடு செய்துவரும் அவர் அன்று சொக்கேசர் திருமுன்பு 'தேவரீருடைய அருட்டிருமேனியைவைத்து அருச்சிக்கும் பேறு எனக்கும் இப்பிறவியில் கிட்டுமா?' என்று வேண்டிநின்றனர். நெடுநேரஞ் சென்று அந்தக்குறைமனத்தோடு வீடுசென்று அன்று இரவு துயில் கொண்டனர். குறைமுடித்தருளும் நிறைசெல்வச் சொக்கர் அவர்கனவில் எழுந்தருளி 'ஞானசம்பந்த! நீ விரும்பியவண்ணம் நாம் சிவலிங்கத்திருமேனிகொண்டு பொற்றாமரைத் தடாகத்தின் ஈசானமூலையிலே கங்கைக்குளிருக்கிறோம்; காலையில் அங்குச் சென்று மூழ்கி எம்மைப்பூசிப்பாயாக' என்று திருவாய்மலர்ந்தருளினர். ஞானசம்பந்தர் இறைவன் அருட்செயலிருந்தபடி என்னே! எளிவந்த கருணையால் அடியேனையும் ஆட்கொண்டனரே; இதனைக்காட்டிலும் இப்பிறப்பில் எளியேனெய்தும் பேறு வேறுண்டோ; என்று எண்ணி எண்ணி எழுந்து ஆனந்தக் கூத்தாடித் தோத்தரித்தவண்ணமே விடியுமளவை எதிர்நோக்கினர். அவர்கள் உள்ளத்தின் விரைவு விடியலை நெடிதாக்கி விட்டதாகத் தோன்றிற்று. விடியல் நீள, விழைவு பெருகுகின்றது. விடிந்ததும் நாட்கடன் முடித்து நீராடப் பொற்றாமரைக்குச் சென்று நீராடி இறைவனுணர்த்திய இடத்தில் இறங்கி மூழ்கித் தேடினர். அப்போது இறைவன் சிவலிங்கத்திருமேனி கொண்டு பெட்டகக் கோயிலோடும் இவர் கரத்திலெழுந்தருளினூர். உடனே ஞானசம்பந்தர் கரையேறிப் பெட்டகத்தைத் திறந்து சிவலிங்கத்திருமேனியைக்கண்டு சிந்தை நிறைந்த மகிழ்ச்சிக்கடலிற்றிளைத்து, ஆனந்தக் கூத்தாடி, சந்நிதியை அடைந்து, சொக்கநாதப் பெருமானை வணங்கிக் 'கண்ணுக்கினிய' என்னும் பாடலை முதன்மையாகக் கொண்டு பதினொருபாடல்களைக்கொண்ட கலித்துறையை ஆக்கி அருளினூர்கள். அதில் ஆன்மவியல்பை எடுத்துக்கூறிச் சொக்கநாதப்பெருமானை நோக்கி 'நீ பூரணவாரியுள்ளே நண்ணும்படிச்செய்; நின்னைப்பாடும்படிச்செய்; நினைந்தேத்திப் பணிந்தெழுந்தே ஆடும்படிச்செய்; மலமைந்தும் வீடும்படிச்செய்' என வேண்டுகிறார். மற்றும், 'ஏறுதவிண்ணப்பம் கூறுகின்றேன்; அஃது ஏதெனில்' எனத் தொடங்கிச் சொக்கநாதர் திருச்செவியில் ஏற்றிய வரந்தான் இன்றைக்கும் என்றைக்கும் சொக்கலிங்கத் திருவுருவிடை இறைவன் இருந்து அருள் வழங்கி நிற்கும் அருளாற்றலாகும்.

இவ்வண்ணம் சொக்கநாதப்பெருமானை வழிபட்டு எழுந்தருளியிருக்கின்ற வேளையிலே சிவலிங்கப்பெருமானைப் பூசித்தற்குரிய விதிமுறைகளையும் சிவஞானோபதேசத்தையும் ஒரு ஆசாரியன் வாயிலாகவே அடையவேண்டுமென்று சொக்கநாதர் திருமுன்புசென்று வேண்டினர். கருத்தறிந்து முடிக்கும் கண்ணுதற்பெருமான் அன்றிரவு வழக்கம்போலக் கனவிற்றோன்றி 'ஞானசம்பந்த! நமது உபதேச பரம்பரையில் வந்த கமலை ஞானப்பிரகாசரிடம் நீ விரும்பியவற்றைப் பெற்றுப் பூசித்துவருக' என ஆணைதந்தனர். அவ்வாறே திருவாரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றி 'வருகிற சோமவாரத்தன்று உன்னிடம் வருகிற

நமது ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம் செய்து சிவலிங்கபூசையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுக்க' என்று கட்டளையிட்டருளினர்.

ஞானசம்பந்தர் விடியலெழுந்து சொக்கலிங்கத்திருவருள் இருந்தபடியே திருவாரூர் செல்லத்தொடங்கி, திங்கட்கிழமை காலை திருவாரூரை யடைந்தனர். கமலாலயம் என இப்போது வழங்கும் தேவதீர்த்தத்தில் நீராடி 'இன்றுதானே பெருமான் அருளிய இனிய நாள்; குருநாதன் தரிசனம் கிடைக்கும் பெருநாள்' என்று எண்ணிக்கொண்டே திருக்கோயிலை வலம்வந்தனர். இவ்வாறே சொக்கலிங்கப்பெருமான் ஆணைதாங்கிவரும் அருந்தவச்சீடர் கிடைக்குநாள் இதுவே என்று திருவாரூர்ச் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தித்திருமுன் கமலை ஞானப் பிரகாசர் சிவயோகத்தினிதமர்ந்திருந்தனர். அப்போது வலம் வருகின்ற ஞான சம்பந்தர் **கனமல இருள் நீக்கும் ஞானபாநு** இவர்தான் என்பதையறிந்து காந்தங்கண்ட இரும்புபோல் விரைந்துசென்று திருவடிகளில் வீழ்ந்து வணங்கி ஒருபக்கத் தொதுங்கிநின்றார். அப்போது ஞானப்பிரகாசதேசிகர் அபய அத்தங்கொடுத்து, தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே யிருக்கப்பணித்து, திருவருள் நோக்கஞ்செய்து ஞானதீக்கை புரிந்து பூசையை எழுந்தருளப்பண்ணிக் கொடுத் தனர். ஞானசம்பந்தர் தமது குருநாதன் மேல் **பண்டாரக்கலித்துறை** என்னும் ஒரு நூலையியற்றித் தோத்தரித்தனர். பின் தமது ஆன்மார்த்த மூர்த்தியின்மேல் **சொக்கநாதவெண்பாச்** சொல்லித் தோத்தரித்தனர்.

இவ்வாறு குருவழிபாடும் இறைவழிபாடும் இயற்றிக்கொண்டு திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் போது ஒருநாள் மாலைக்காலத்து கமலை ஞானப்பிரகாசர் திருக்கோயில் வழிபாட்டிற்காகச் சென்றவர்கள் அர்த்தயாமம் ஆகும் வரையில் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்தமர்ந்திருந்தனர். அர்த்த யாமம் ஆனதும் வீட்டுக்குத்திரும்புகையில் கைவிளக்குக்காரன் தூங்கிவிட்டமை யால் ஞானசம்பந்தர் தாமேசென்று கைவிளக்கை எடுத்துக்கொண்டு உடன்வர குமரகோவில் பின்தெருவிலுள்ள தமது இல்லத்திற்கு எழுந்தருளினர். வீட்டுக் குட்செல்லுகின்ற ஞானப்பிரகாசர் தமது சீடரை நோக்கி நிற்க எனப்பணித்துச் சென்றார்கள். குருவாணை நிற்க என்று தானே, என்று எண்ணிய அவர்கள் நின்ற இடத்திலேயே சிவயோகத்தமர்ந்து சிவானந்த இன்பநிலையில் மூழ்கியிருந்தனர். அன்றிரவு பெருமழை பெய்தது. பெய்தும் திருமேனியில் ஒரு தூளிகூட விழவில்லை. ஒருகோல் சதுரத்தில் சுற்றிப்பெய்திருந்தது. விடியலில் விழித்து இல்லம் விளக்கவந்த ஞானப்பிரகாசருடைய மனைவியார் கைவிளக்கேந்தி ஞானசம்பந்தர் நிற்பதையும் மழையின் நிலையையும் அறிந்து வியந்து உள்ளே சென்று தம் கணவர்க்கு உணர்த்தினார்கள். வெளிப்போந்த ஞானப்பிரகாசர் இவர்களது அதிதீவிர பக்குவ நிலையை அறிந்து 'அப்பனே! உன்னாற் பல ஆன்மாக்கள் பல்லூழிக் காலம்வரை யீடேறத் திருவருள் துணைநிற்கின்றது. ஆதலால் வடக்கேசென்று உபதேசவாயிலாக உண்மையைப்பரப்புக; சித்தாந்த சைவச் செந்நெறியை நிலைநிறுத்துக' என்று ஆணைதந்தனர். அதனைக்கேட்ட இவர்கள் மனம்பதைத்துத் 'தேவரீரைவிட்டு எவ்வாறு பிரிந்திருப்பேன்; எருதுக் கும் பொதிக்கும் இச்சை உண்டோ; எனக்கும் உடற்கும் அப்படியே; ஆதலால் பரமாசாரியர் பணித்தபடியே நடக்கக்கடமைப்பட்டவன்' என்று வருந்தி

நிற்கின்றபோது, 'நமக்கு மிக அணிமையிலுள்ள சித்திக்ஷேத்திரமாகிய தருமபுரத்தையடைந்து ஆண்டுத்தங்கி அருள்வழங்குக' என்று ஆணைதந்து அனுப்பினர். தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டலாதலின் ஆசிரியராணைப்படித் தருமபுரம் வந்து அருள்வழங்கி அமர்ந்திருந்தனர். தமது சிவாநுபவங்களையெல்லாம் செறித்துப் பெரும்பொருளடக்கிய சிறு நூலாக—சிந்தை தெளிக்கும் தெளிதேனுகஉள்ள **சிவபோகசாரத்தையும், நிரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவலையும்** அருளிச்செய்தனர்.

இவர்கள் இவ்வாறு ஞானபாநுவாய் எழுந்தருளியிருக்குங் காலையில் சிதம்பரத்திலுள்ள கண்கட்டிமறைஞானபண்டாரம் என்பவர் ஒரு கல்விமானுக விளங்கிவந்தார். அவர் ஆகமசாத்திரங்களிலும் சைவப்பெருநூல்களிலும் தக்க பயிற்சியும் அநுபவமு முடையவராயிருந்தார். ஆனுல் அவருக்குத் திருவருள் விலாசம் பதியவேண்டிய நிலையிலிருந்தது. அதனுல் அவருடைய அநுபவமானது ஆன்மாவிற்கே இயற்கையாக ஆனந்தம் உண்டென்றும், அது மலத்தாற் தடைப்பட்டிருக்கிறதென்றும், தடைநீங்க வெளிப்படும் ஆனந்தத்தை ஆன்மா நுகருகிறதென்றும்,சிவனைஒப்ப ஆன்மாவுஞ்சச்சிதானந்தரூபிஎன்றும், அதுவேமுத்திநிலையென்றும் உணர்ந்து **முத்திநிலை** என்றதொரு நூலையும் அருளச்செய்தது. மக்கள் பலரும் இக்கொள்கையை இவருடையகல்வி வல்லமையாலும் சொல்லுந்திறத்தாலும் பசிநீங்கக்காணும் இன்பம்போல மலம் நீங்கக்காணும் மகிழ்ச்சிஎன்ற முறைமையின் எளிமையினுலும் கடைப்பிடித்தனர். இதனைத்திருவுளம் பற்றிய இக்குருமூர்த்திகள் மக்கள்மேல்வைத்த பெருங்கருணையினுல் ஆன்மாவுக்கு ஆனந்தம் இயற்கையல்லவென்றும், திருவருள்பதிவால் மலம்நீங்கச்சிவாநந்தத்துத் திளைக்கும்பேறே முத்தி என்றும், ஆன்மா சத்சித்ரூபியே சிவம் சச்சிதானந்த ரூபி என்றும், ஆன்மாவிற்கு உளதாகும் ஆனந்தம் இறைவனிடத்திலிருந்து பெற்றபேறே என்றும் முடிந்தமுடிபாக இருபத்திரண்டு வெண்பாக்களாலாகிய **முத்திநிச்சயம்** என்னும் அநுபவ ஞானநூலை ஆக்கியருளினுர்கள்.

இவ்வாறு பலநாள் அரன்பணி அறப்பணி ஆற்றி ஆனந்தபரவசர், சச்சிதானந்தர், மருதூர் ஆபதுத்தாரணர் முதலான சீடர்களுக்குச் சிவஞானேபதேசம் செய்து எழுந்தருளியிருக்கும் காலத்து, சிவயோகசமாதியி லெழுந்தருளத் திருவுளங்கொண்டு தீவிரதரபரிபக்குவராகிய ஆனந்தபரவசரை ஞானபீடத்திலெழுந்தருளுவித்துத் தாம் விரும்பியவண்ணம் சிவலிங்கத்தினடியில் அமர்ந்தார்கள்.

ஆனந்தப்ரவசர் கனிந்த கனியாயிருந்ததால் அவர்களும் தனது ஞான மூர்த்தியின் திருக்கோயில் மேல்பால் சிவயோகத்திலமர்ந்தனர். இதனை அடியார்கள் விருப்பப்படித் திருவுளத்தடைத்த குருமூர்த்திகள் அவிச்சின்ன சத்சம்பிரதாயம் உலகில் நீடுவாழ எண்ணி, சிவயோகத்தினின்றும் வெளிப்போந்து சச்சிதானந்தருக்குச் சிவஞானங் கைவரப்பண்ணி வைகாசிமீ அபரபக்கசப்தமி தினத்திலே சிவசமாதி கூடினுர்கள்.

இவர்கள் குருவாகிய கமலை ஞானப்பிரகாசரைப்பற்றிய, சதாசிவதேவ மகாராயர்காலத்தில் அவர்பிரதிநிதியாகத் தஞ்சையையாண்ட கிருஷ்ணதேவ

ராயர் பெண்வயிற்றுப் பேரனை கிருஷ்ணமகாராசையன் ஆணைப்படி வெட்டுவித்த கல்வெட்டொன்றில் 'சிக்கல் வடகுடி ஒடாச்சேரி முதலியதேவதானங்களுக்கு திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தை கணக்கு எழுத்தும் **பாதேசி முத்திரையும்** அடைந்துக் கொள்ளும்படிக்கு உத்தரமளிக்கிறது' எனத்தெரிவிக்கப்பட்டுள்ளது. இச்சாசனகாலம் கி. பி. 1561. அன்றியும் கமலை ஞானப்பிரகாசரியற்றிய மழுவாடிப்புராணத்துச் செய்யுளாகிய இது,

*தழுவிய கலியு கஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்*
*றழிதரு மெண்பத் தேழாண் டொழிந்தபின் குரோத னுண்டின்*
*மொழிதரு மாசித் திங்கண் முற்பக்க முதனு டன்னின்*
*மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் றமிழி னுலே.*

சாலிவாகன சகாப்தம் 1488 என்று தெரிவிக்கிறது. இவ்விரு ஆதாரங்களும் ஞானசம்பந்தர்காலம் 385 ஆண்டுகட்கு முன்னர் என்று துணிய இடம்தருகின்றன.

இங்ஙனம் திருக்கயிலாய பரம்பரையில் அவிச்சின்ன சத்சம்பிரதாயியாகிய இந்த குருமூர்த்திகள் தன்னடைந்தார்க்கு ஊனுடைப் பிறவிக்கானத் துழலாது முத்திநாடெய்த ஓர் ஞானவாரணம் நல்கும் பெருமானுகை-ஞானவாரமுதபானமதருந்திக் கருவிகள் கழன்று பரவசமாகிப் பரமானந்தப்பரவையுட்படிந்து பேராவியற்கை பெற்றினிதிருப்ப ஆரா இன்பமளித்தருள் அண்ணலாகத் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்றார்கள் என்பது ஏனைய குருமூர்த்திகளது சமாதித்தானங்கள் போலாது இவர்களுடைய கோயில் ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயம் என்ற திருநாமத்தோடு சகல ஆவரணபரிவாரங்கள் சூழ விளங்கி வருவதாலும், நித்திய பூஜையோடு பிரமோற்சவ மாசோற்சவ பக்ஷோற்சவங்கள் இடையறாது நடைபெற்றுவருவதாலும் அறியக்கிடக்கின்றது. இது கண்கண்ட தெய்வமாக விளங்குகின்ற குருஞான சம்பந்தருடைய திருக்கோயிற்குள்ள தனிமாண்பாகும்.

பேருரையாசிரியர்:

## ஸ்ரீமத் வெள்ளியம்பலவாணத் தம்பிரான்.

ஸ்ரீமத் சுவாமிகளுடைய பிள்ளைப்பருவத்து நிகழ்ச்சிகள் ஒன்றும் அறியக்கூடவில்லை. இவர்கள் ஞானசம்பந்தர் பரம்பரைக் குழந்தையாக ஆனபிறகே இவர்கள் வாழ்வு யாவரானும் அறியவேண்டிய வாழ்வாக - தமிழுக்கும் சைவத்திற்கும் ஆக்கம் அளித்த வாழ்வாக ஆயிற்று.

இவர்கள் இவ்வாதீனத்தில் நான்காவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானநுபூதிச் செல்வராகிய, தோத்திர சாத்திரங்களின் அநுபவப்பொருள் கண்டு காட்டும் தன்மையினராகிய மாசிலாமணி ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளிடத்தில் துறவாச்சிரமம் மேற்கொள்ளும் விருப்பத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். குருமூர்த்திகள் இவரது இளமையின் முதுமையைத் திருவுளங் கொண்டு, நல்லதொருநாளிலே சைவசந்நியாச முறைப்படி சந்நியாசம் உதவினர். பெற்றுக்கொண்ட இவர்கள் ஆதீன சம்பிரதாயப்படி யாத்திரை செல்லப்புறப்பட்டனர். காசிவரை சென்றார்கள்.

அப்போது காசியில், மலைமகள் கேள்வன் மன்னிய சிந்தையினாலும் கலைமகள் கருணை பெருக்கெடுத்தோடுவதாலும் நிகழ்ந்த பெருஞ்சொல்மழையால், இமயம் வரையிலும் தமது குருஞானசம்பந்தர் அருட்டிறத்தையும், சைவசித்தாந்தக் கொள்கைகளையும், தமிழமுதின் தேறலையும், **இந்திமொழி வாயிலாகவும்** பரப்பிக்கொண்டு, பல்வகையறங்களையும் பண்புடன்செய்து, கல்விக் கடற்கோர் கலங்கரை விளக்காய், பழுத்த கவியமுதம் தோன்றும் பாற்கடலாய், துறவொழுக்கத்தின் நிலைக்களனாய், முருகனருளால் உருகிய மனத்துடன் மாசிலாமணி ஞானசம்பந்தரின் ஞானராஜ்ய பிரதிநிதியாய், வடநாட்டு மக்களின் சாக்தேயம், காணபத்யம், ஸ்மார்த்தம் முதலான கொள்கையால் மேற்கொண்டுள்ள அறியாமையாகிய கப்பத்தைக்கொண்டு சித்தாந்த ஞானச் செங்கோலாட்சிச் செலுத்தி விளங்கிவந்த குமரகுருபர சுவாமிகளை அடைந்தனர். சுவாமிகளுடைய பல மொழிவன்மையையும், சொல்லாற்றல் ஒழுக்க நிலை மக்களோடு பழகும் மாண்பு ஆகியவற்றையும்கண்டு இவர்களிடம் கல்வி பயிலவேண்டும் என்ற எண்ணம் நாளுக்குநாள் வளர்ந்துவந்தது. இக் கருத்தைக் காலம் அறிந்து இடம் அறிந்து ஒருநாள் குமரகுருபர சுவாமிகளிடம் தெரிவித்தனர். சுவாமிகள் இவருடைய தணியாத கல்விக்காதலைக் கண்டு எல்லாக் கல்விகளையும் கற்பித்தார்கள். இவர்களும் விரும்பிக் கற்பவர்களாதலின் கருவிநூற் படிப்பும் ஞானநூற் சிந்தனையும் செய்து, பதிநூல்களாகிய சிவாகமங்களையும் முறையே ஓதினர். சித்தாந்தக் கருத்தின் உயர்வை நாட்டிற்கு அறிவிக்கப் புறச்சமய நூல்களையும் நன்கு ஓதியுணர்ந்து சித்தாந்தத்தின் சிறப்பை ஆய்ந்துவந்தனர். இவர்களுக்குச் சொல்லாற்றலும், செய்யுளியற்றும் சிறப்பும் தானகவே அமைவனவாயின. 'ஆசுமுதல் நாற்கவியும், அட்டாவதானமும், சீர் பேசுமியல் பல்காப்பியத்தொகையும், ஓசை எழுத்துமுதலாம் ஐந்திலக்

கணமும் தோய்ந்த பழுத்த புலமையைச்' செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய சண்முகப் பெருமானிடம் வேண்டிப்பெற்ற விழுமியோரிடம் படித்தால் அவர் புகட்டும் ஒவ்வொரு சொற்சங்கத்திலும் கந்தனருட்டேனல்லவா கலந்திருக்கும். அதனால் இவர் புலமை இறையொளி வீசுவதாக எல்லோரையும் வசிப்பதாக இருந்தது என்பதில் வியப்பென்னை!

இங்ஙனம் கல்விக்கடலை நீந்திக்கொண்டிருக்கும்போதே 'கல்வியென்னும் அல்லலிற் பிழைத்தும்' என்பனபோன்ற ஞானவாக்குகள் மனத்துட்டோன்றி 'நீயடைந்த இவைகள் யாவும் நூற்கல்வி. இக்கல்விக்கு ஒரு தனிப்பெருமையும் அழகும் உண்டாகவேண்டுமானால் குறிவழியநுபவங் கூடுதல் வேண்டும். அதனை எளிதில் உணர்த்துவது குருமொழியேயாகும்.' என்று இவர் உள்ளத்தை ஊக்கத் தொடங்கின. உடனே தமது ஞானபீடத்துக்குச் செல்லவேண்டும் என்ற குறிப்பைத் தமது கல்வியாசிரியராகிய குமரகுருபர சுவாமிகளிடம் குறிப்பான் உணர்த்தினர். உடனே சுவாமிகள் விடைதந்தனர். இவர் தருமையம்பதியையடைந்து, அப்போது பீடர்த்தமர்ந்திருந்த திருஞானசம்பந்த தேசிக மகாசந்நிதானம் அவர்கள் திருவடிகளில் நமஸ்கரித்து எழுந்து கண்கள் நீர்வார, **ஞானசம்பந்தர் சமுகமாலைத்** தோத்திரத்தை மெய்ப்பாட்டுடன் பாடி நின்றனர். குருநாதர் இவரது உள்ளக்கனிவையும், ஞானதாகத்தையும் உணர்ந்து ஞானோபதேசம் செய்து **வெள்ளியம்பலவாணன்** என்ற தீக்ஷா நாமத்தையும் சூட்டியருளினார்கள். **வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளாகிய** இவர்கள் "தெளிவு குருவின் திருமேனி காண்டல், தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல், தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல், தெளிவு குருரூபம் சிந்தித்தலே" என்ற திருமூலர் வாக்கின்படி எல்லாம் குருவாக, குருவினுடையதாகக் கண்டு, கேட்டு, சிந்தித்து, தெளிந்த அநுபூதிமானாய்த் தருமையிலேயே அணுக்கத் தொண்டராக வாழ்ந்துவந்தார்கள்.

அப்போது, ஆதீனத்து இளவடியார் கூட்டத்து ஒருவராகிய சம்பந்த சரணாலய சுவாமிகளும், காவை யம்பலவாண சுவாமிகளும் கல்விகற்கவேண்டும் என்ற விருப்பத்தை இவர்களிடம் தெரிவித்துக்கொள்ள, அவர்களை ஏற்றுத் தம்மைப்போலவே இருமொழிப்புலமையும் எய்துவித்தனர். இவர்கள் மாணாக்கராகிய சம்பந்த சரணாலயரது கல்விப்பெருமைக்கும், இவர்கள் போதனைத் திறத்திற்கும் தக்கசான்று; பதினாயிரத்து முந்நூற்று நாற்பத்தாறு பாடல்கள் கொண்ட கந்தபுராணத்தை ஆயிரத்து நாற்பத்தெட்டுப்பாடல் கொண்ட சுருக்க நூலாக இயற்றியதேயாகும்.

பின்னர், சுவாமிகள் குருமஹாசந்நிதானத்தின் உத்தரவுப்படி புள்ளிருக்கு வேளூர் கட்டளைவிசாரணை மேற்கொண்டிருந்த காலத்துத் திருக்கோயில் திருப்பணிகள் பலவற்றைத் திறம்படச்செய்வித்தனர். திருவெண்காட்டிலே நடராஜப்பெருமான் திருச்சபையும் இவர்களாலேயே திருத்தியமைக்கப் பெற்றது. இங்ஙனம் சொற்பணியும் கற்பணியும் செய்துகொண்டிருந்த இவர்கள் தொண்டின் திறத்தை யுளத்தடைத்த குருமூர்த்திகள் தக்ஷிணத்திற்குப் போகும் வண்ணம் பணித்தார்கள். அங்ஙனமே சுவாமிகள் திருநெல்வேலிக்குச் சென்று சிந்துபூந்துறையிலுள்ள ஆதீனத் திருமடத்திற்றங்கியிருந்தனர். மணம்பொருந்திய

மலரிருந்தால் வண்டுகள் வராதிருக்குமோ! கல்விமணம்நிறைந்த சுவாமிகள் அவண் எழுந்தருளியதும் பல மாணவ வண்டுகள் வந்துபயன்கொள்ளத் தொடங்கின. சுவாமிகள் தென்றமிழும் வடமொழியும் அவர்கட்குக் கற்பித்து எழுந்தருளியிருக்குங் காலத்து இவர்கள் இலக்கிய இலக்கணப் போதனைத்திறம் தமிழ்நாடெங்கும் பரவிற்று. கற்பனைக் களஞ்சியம் என்று சிறப்பித்துச் சொல்லப்பெறும் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இவர்களுடைய இலக்கணவாற்றலை - தொல்காப்பிய முழுதும் ஐயந்திரிபறப் பாடஞ்சொல்லும் பண்பைக் கேள்வியுற்றுச் சிந்துபூந்துறைக்கு வந்து சுவாமிகளிடம் தம்கருத்தை விண்ணப்பித்துக் கொண்டனர். சுவாமிகளும் சிவப்பிரகாசருடைய இலக்கிய அறிவின் எல்லையைக் காணவிரும்பி 'கு' என்று தொடங்கிக் 'கு' எனமுடியும் வெண்பாவொன்று விரைவின் இயற்றுக என ஆணைதந்தனர். ஆணையைச் சிரமேற்றாங்கிய துறைமங்கலம் சிவப்பிரகாசர்,

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு — வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு.

என்னும் பாடலைப் பாடிமுடித்தனர். இதனைக் கேட்டவுடன் சுவாமிகள் திருவுள்ளம் தென்றற் காற்றுக்குச் சிவப்பிரகாசர் படைத்த ஒரு சொல்லோவியத்தில் அப்படியே திளைத்துநின்றுவிட்டது. அந்தச் சொல்லோவியந்தான் "வடக்கு ஓடுந் தேர்" என்பது. இங்ஙனம் கவித்திறத்தைக் கண்ட சுவாமிகள் தொல்காப்பியத்தை ஒரு பக்ஷத்திற்குள் பாடஞ்சொல்லி முடித்தார்கள். கேட்டுத் தெளிந்த சிவப்பிரகாசர் இலக்கிய இலக்கணக் கடலை நிலைகண்டுணர்ந்த ஆசிரியப் பெருந்தகைக்கு யாம் செய்யும் கைம்மாறு என்னே? என்று எண்ணியிருக்கின்றபோது சுவாமிகள், தன்னொடு கல்விச் செருக்கால் மாறுபட்ட புலவர் ஒருவரைத் தருக்கடக்கி வருக என ஆணை வழங்கினர்கள். சிவப்பிரகாசர் திருச்செந்தூர் முருகனை வழிபடச் சென்றிருந்தனர். அப்போது அந்தப்புலவர் அவண்வழிபட வந்திருந்தார். அவர் இவர்களைப்பற்றித் தெரிந்துகொண்டு ஆசிரியர்க்குத் தாம் வழங்கிவரும் இழிப்புரையைச் சுவாமிகள் மாணுக்கராகிய இவருக்கும் வழங்கினர். உடனே சிவப்பிரகாசர் செந்திலாண்டவன்மேல் நிரோட்டகயமக அந்தாதி பாடி, யார் சிறந்தார் என்பதை நிச்சயித்துக் கொள்வோம் 'விரைந்து முடித்தவர் முடிக்காதவர்க்கு அடிமையாவோம்' என்று சூள் செய்துகொண்டு பாடத்தொடங்கினர். செந்திலாண்டவன் திருவருள் சிவப்பிரகாசர் திருவாயில் செய்யுள் விரைந்து வரத்தூண்டிற்று. செருக்குடைப் புலவர் தோற்றார்; அடக்கமுடையவர் வென்றார். உடனே புலவரையழைத்துக்கொண்டு சிந்துபூந்துறையையடைந்து தமது ஆசிரியப் பெருந்தகை முன் சேர்ப்பித்தார். வந்த புலவர், வெறுந்தமிழ்க்கும் தெய்வத்தமிழ்க்கும் உள்ள வேற்றுமையையுணர்ந்து வெள்ளியம்பலவாணர்க்கு அடிமையாயினர். சுவாமிகள் "நானே ஞானசம்பந்தத்தின் அடிமை. ஆதலால் அடிமைக்கு அடிமை வேண்டாம்" என்று எண்ணி அவருக்குச் சிவஞானநூல்களைச் செப்பமுறக் கற்பித்து ஆதீனத்திற்கு அழைத்துவந்து தமது குருநாதனுடைய திருவருளுக்கு இலக்காக்கி ஆதீனத்திற்கு அடிமையாக்கினர்கள்.

பின்னர், சுவாமிகள் தமிழ்நாடெங்கும் சிவமணங்கமழப் பல சாத்திரப் பிரசங்கங்களும், புராணப் பிரசங்கங்களும்செய்து சைவமுந் தமிழும் தழைத்தோங்கச் சிந்துபூந்துறை மடத்திலேயே தங்கியிருந்தார்கள். அப்போது சிதம்பரம் கண்கட்டி மடத்துக் கிளையான அறச்சாலை மடத்து அதிபர்களாலும் அவர்கள் சீடர்களாலும் ஆன்மாநந்தவாதமானது பரவிற்று. அதனைக்கண்ட சுவாமிகள் தமது ஞானமுதல்வராகிய குருஞானசம்பந்தர் செய்த முத்திநிச்சயம் என்ற பண்டார சாத்திரத் தலைநூல் பரிபக்குவம் உடையார்க்கு அன்றி எல்லோருக்கும் எளிதில் விளங்கும் இயல்பினதாயில்லாமல், சுருங்கிய இருபத்திரண்டு வெண்பாவில் பல ஆகம சாத்திர தோத்திரக்கருத்துக்களைச் செறித்திருக்கும் சிறப்பினதாயிருப்பதால் அதற்குப் பெரியதொரு விரிவுரை இயற்றினால் அனைவரும் அறிந்து உய்யக்கூடும் என்று எண்ணினார்கள். முத்திநிச்சயப்பேருரை ஒன்றை எழுதினார்கள்.

அன்றித், தம் ஆதீனத்திற்கு முதனூலாகிய சிவஞானசித்தியாருக்கு ஞானாவரணவிளக்கம் என்னும் ஒரு நல்லுரையும் தந்தார்கள். மற்றும், காமிகத்தின் உபாகமமாகிய மிருகேந்திராகமத்தின் வித்தியாபாதத்தைச் சூத்திர யாப்பான் மொழிபெயர்த்தருளினார்கள். இங்ஙனம் பலவகையிலும் தமிழுலகைப் பண்படுத்திவந்த சுவாமிகள் பரிபூரணம் எய்திய இடம் சிதாகாசமாகிய தில்லையம்பதியாகும். இவர்கள் சமாதி ஞானப்பிரகாசக்குளத்துத் தென்மேற்கு மூலையில் இருக்கிறது.

**இவர்கள் காலம்:—** சுவாமிகள் குமரகுருபர சுவாமிகளிடம் கல்வி பயின்றவர்கள் ஆகலின் குமரகுருபர சுவாமிகள் காலம் 17-ம் நூற்றாண்டின் முற்பகுதி என்று துணியப்பெறுகின்றது. இவர்களுடைய மாணாக்கர் சிவப்பிரகாசராதலின், சிவப்பிரகாசர் பிரபுலிங்கலீலை எழுதிய காலம் கி. பி. 1652 என்று துணியப்பெறுகின்றது. ஆகவே இந்தச் சுவாமிகள் காலம் 17-ம் நூற்றாண்டின் இடைக்காலமாக இருக்கவேண்டும் என்று துணியப்பெறும்.

சுவாமிகளைத் தமிழுலகமும் சைவ உலகமும் எங்ஙனம் தெரிந்து கொண்டிருக்கின்றது என்பதையாராய்தல் இன்றியமையாததாகும். சுவாமிகள் தம்பாடல்கள் பலவற்றைத் தேவாரத்தினும், பெரியபுராணத்தினும் செறித்து அவைகள் சமயாசாரியர்கள் வாக்கோடு வேற்றுமையின்றி விளங்குதலைக்கண்டு வியந்தனர் என்றும், அதனால் பல பாடல்கள் பெரியபுராணத்தும் தேவாரத்தும் கலந்துவிட்டன என்றும் தெரிந்து கொண்டிருக்கிறது. அதனால் அப்பாடல்களை வெள்ளிப்பாடல் என்று வழங்கத் தொடங்கிற்று.

ஆனால் சுவாமிகளோ தாம் எழுதிய முத்திநிச்சயப்பேருரையில்,

"இவ்வாற்றாற்போந்தது: கன்மசித்தாந்த குரவரான சத்தியோசோதி, அகோரசிவாசாரியர், நாராயணகண்டர், ராமகண்டர் முதலியோர் வாய்மொழியினும், ஞானசித்தாந்தகுரவரான திருமூலதேவர், மெய்கண்டதேவசிவாசாரியர், அருணந்திதேவசிவாசாரியர் முதலியோர் வாய்மொழி வலியுடைத்து. அவ்வாய்மொழியினும் பட்டினத்துபபிள்ளைமுதலியோர் வாய்மொழி வலியுடைத்து. அதனினும் சம்பந்தமூர்த்திமுதலிய சமயகுரவர் முதலியோர் வாய்மொழிவலியுடைத்து. அதனினும் உபாகமவசனம்

வலியுடைத்து. அதனினும் மூலாகமவசனம் வலியுடைத்தென்பதாம். என்னெனில் சந்தானகுரவருள் கன்மசித்தாந்த குரவரினும் ஞானசித்தாந்தகுரவர் உயர்ந்தோரென்பது,

कर्मान्त मेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं मरं स्मृतम् ।

என்பதனானும் அவர்பெரும்பான்மையும் ஞானாதிகாரிகளன்றியிருத்தலானும் தாம் கற்றறிதலன்றி மெய்கண்ட தேசிகர் முதலான இவர்போல் தெய்வத்தன்மையா னுணரும் உணர்வினரல்லராகலானும் என்க. அவரினும் பட்டினத்துப்பிள்ளை முதலியோர் உயர்ந்தோரென்பது அவர்போற் பரம்பரையா னன்றிச் சிவன்றானேயருளும் தெய்வத்தன்மையானும் பிறவாற்றானுமென்க. அவரினும் சமயகுரவர் உயர்ந்தோரென்பது சிவன்றன்னேயருள்பெற்றதே யன்றிச் சமயபரிபாலனம் பண்ணுகை யானும் பரமசிவன் எவரினின் எஞ்ஞான்றும் வெளிப்படுதலானும் நிக்கிரகாநுக்கிரகம் உடைமை யானும் பிறவாற்றானும் என்க. இதனானேயன்றே சமயாசாரியரைச் சிவாலயத்தும் பூசை செய்வதாஉம் என்க.'' —முத்திநிச்—பக்கம் 67-68.

என்று சமயாசாரியர்களைப் புகழ்கின்றார்கள். இங்ஙனம் தம்மாட்டுத் தோன்றிய மெய்ப்பாட்டைப் படிப்பாரும் எய்தும்நிலையின் உரை வகுக்கும் உத்தமரா! தம் பாடல்களைச் 'சிவன் தானேயருளுந் தெய்வத்தன்மைவாய்ந்த சமயாசாரியர்கள் வாக்கோடு இணைத்துப் பார்க்கும் எண்ணமுடையவர் ஆவர் என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும்.

இதனால், பொன்னைத்த - போற்றத்தக்க - மங்கா ஒளியுடைய திருமுறைகளின் இடையிலேயே, வேறு யாரோ ஒரு சமய வரம்பழிக்கும் கல்விப் புலவரால் கலக்கப்பெற்ற பாடல்கள் பொன்னிடைக் கலந்த வெள்ளிபோல விளங்குதலின் வெள்ளிப்பாட்டு என வழங்கிற்று என்று துணிதலே சாலச்சிறந்ததாகும். இதனால் ஒன்றுமட்டும் துணியக்கூடும். தமிழுலகம் வெள்ளியம்பலவாணர் வாக்கு திருமுறைகள்போல தெய்வ ஒளிவீசும் தன்மையதாக இருக்கின்றமையை உணர்ந்திருக்கிறது என்பதே. இங்ஙனம் எல்லா வகையினும்சிறந்து விளங்கிய அடிகள் தமிழுலகிற்குச்செய்த நன்றி மிகப் பாராட்டத்தக்கதாகும்.

# நூலாராய்ச்சிக்குறிப்பு

கருணைக் கடலாகிய பரமாப்தனால் உபதேசிக்கப்பெற்றதே நூலெனப் பெறும். அது, தன்னை விரும்பிப்பயிலும் மக்களுக்கு இம்மை மறுமைப் பயன்களை எளிதில் எய்துவிப்பது. வஞ்சக பிராந்தர்களுடைய குயுக்திவாதங்களாகிற புயற்காற்று சுற்றிச்சுற்றி யடித்தாலும். அசையாத-உதிராத-முறியாத பழமரம் ஒப்பது. அறிவின் தரமும், உழைப்பின் எல்லையும், அருளின் துணையுங் கொண்டு பயன் அளிப்பது.

பரமாப்தன், இருநிலனாய்த் தீயாகி எல்லாமாகிப் 'பூவினுள் நாற்றம் நீ தீயினுள் தெறல் நீ' என்று பண்டைப்பெரியோர் பகர்ந்தமைக்கு ஏற்ப, அறிவினுக்கு அறிவாய் நிற்கும் அநாதிமலமுத்தனாகிய இறைவன் ஒருவனே.

அந்த இறைவனுடைய திருவருட் பெருக்காற்றில் மூழ்கி அழியா இளமையும் ஆநந்தமும் பெற்ற பழுத்த மனத்தடியவர்கள் ஆப்தராவர். அவர்கள் செய்வனவும் நூல்களே! அதிலும், புகழுக்காகவும் பொருளுக்காகவும் பிற வற்றிற்காகவும், பிராந்த வஞ்சக ஆசிரியர்கள் தத்தம் அறிவையே பெரிதென மதித்துச் செய்தனவும் நூலெனக் கொண்டு மக்கள் மயங்குகின்ற காலத்து பரமாப்தன் திருவருள்வழி யியங்குகின்ற சிந்தையையுடைய செம்மனச் செல்வர்கள், தம்மதிவழிச் செல்லாது அருள்வழிநின்று அவனுரை தன்னுரையாகச் சிறந்த நூல்களைச் செய்வாராயின், அவை பருவமறிந்து பருக்கும் பாலமிழ்தம் போல, நோயறிந்து கொடுக்கும் மருந்துபோல மக்களால் வரவேற்கப்படுமன்றோ! அவற்றின் பெருமை எம்மனோரால் அளவிடற்பாலன அன்று.

அங்ஙனமாக, அநாதிமல முத்தனாய், சுத்தஷாட்குண்ய பரிபூரணனாய், ஆன்மாக்களுக்காகவே சத்தியோடுகூடி ஐந்தொழில் ஆற்றுபவனாய், உண்மை அறிவானந்த வடிவனாய், இலயபோக அதிகார பேதத்தால் ஈச சதாசிவ மகேசுர வடிவுடையவனாய், ஒருவனேயாய், இருக்கும் இறைவனோடு நித்தியமாய் வியாபகமாய் உண்மை அறிவு வடிவாய், அநாதியே பாசத்தடையுண்டனவாய், ஆணவத்தால் விளக்கம் மழுங்கி, மாயையால் சிறிது விளக்கம் பெறும் அறிவினையுடையவாய், முத்திநிலையில் முற்றறிவு பெறுதற்குரிய பெற்றியன வாய்ப், பலவாய் நிற்கும் ஆன்மாக்கள் முத்தியில்,

"முன்னோன் தனது முதிரொளி ஞானம்
அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டென வுயிரைக் கொண்டிடும் உயிரது
தன்னை நோக்கித் தானது வாகி
ஐவகைத் தொழிலும் மெய்வகை யுணர்வும்
பிரியாவாறு பெற்றுச் சமமாக இருக்கும்

என்று உரைக்கும் சிவசமவாதிகளும், ஆநந்தமின்றி அரன்சமதை முத்தி

எனக்கூறும் ஏகதேச சமவாதிகளும், சிவன் ஆன்மாக்களுக்கு மலநீக்கமளவே உபகாரப்படுகின்றான், மலநீங்கியவுடன் ஆன்மாவினிடம் இயற்கையேயுள்ள ஆநந்தம் வெளிப்படுகின்றது என்று கூறும் ஆன்மாநந்த வாதிகளும் ஆகிய மயங்கிய (பிராந்த) ஆசிரியர்கள் உய்யுநெறி காட்டுவார்கள்போலத் தவறான வழியில் மக்களை அழைத்துச்செல்கின்ற இன்றியமையாத காலத்தே எழுந்த ஞானஞாயிறே எமது குருஞானசம்பந்தர். அச்சூரியன் உடலாக்கமும், உணர்ச்சிப் பெருக்கமுந் தழையத் தந்த செங்கதிர்த் திரட்சியே முத்திநிச்சயம். அதன் விளைவே 'சிவாநந்த வெள்ளந்திளைத்து அதுவாய் மேவுதல்' என்ற சித்தாந்த முத்தி.

இவர்கள் அருளிச்செய்த நூல்கள் சிவபோகசாரம், முத்திநிச்சயம் சொக்கநாதவெண்பா, சொக்கநாதர் கலித்துறை முதலியன. இவர்கள் நூல்கள் மிக எளியனவாய்ப், பொருளாழமுடையனவாய், அநுபவியான மாணவன் அறிந்து ஆய்ந்து ஆழ்ந்து அநுபவிக்க அநுபவிக்கப் புத்துணர்ச்சியும் பேரின்பமும் பயப்பனவாய் அமைந்திருக்கின்றன. செஞ்சொல்லாலாக்கப் பெற்று அநுபவ ஞானத்தினை அள்ளி வழங்குவன.

அவற்றுள், இந்நூல், 'தான்கண்டனைத்து இவ்வுலகம்' என்றமைக் கேற்பப் பல்வேறு சமய வாதிகளும் தத்தம் அநுபவத்திறம் இருந்தபடி எடுத்துக்காட்டி இதுவே முத்திநிலை என்று கூறவும், சைவசித்தாந்த நெறியினிற்பார் சிலரும் திருவருள் கூடாமையாற் றிரிய உணர்ந்து இதுதான் முத்தியென்று சிவசமதையையும் ஆன்மாநந்தத்தையும் கூறவும், இவர்கள் 'குறிவழியநுபவம் குருமொழி முதனூல்' துணைக்கொண்டு 'சிவாநந்த வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே' முத்தியெனத் துணிந்து உணர்த்துதலின் முத்தி நிச்சயம் என்றழைக்கப்பெறுவது.

## நூலமைப்பு:

இந்நூல் இருபத்திரண்டு நேரிசை வெண்பாக்களான் இயற்றப்பெற்றது. முதற்பாட்டு குருவணக்கமும், ஏனைய பாட்டுக்கள் ஆன்மாநந்தவாதி உட்கோள் எடுத்துக்காட்டி மறுத்தலும், இறுதிப்பாட்டு தன்கோள் கூறுதலும் ஆக அமைந்துள்ளது. மறுத்தற்குரிய ஆன்மாநந்தவாதி சிவசமவாதிகளை முன்னிலைப்படுத்தி உரையாடல் வாயிலாக உண்மையை உணர்த்துவது. வழிநூற்பாற்பட்ட எதிர்நூலாகவும், இறையனாரகப்பொருள்போலப் பல சூத்திரங்களான் இயைந்த சிறு நூலாகவும் திகழ்வது.

## நூல் நுதலிய பொருள்கள்:

முதற்கண், தமது குருநாதனாகிய ஆரூர்ச் சிதம்பரநாத ஞானப்பிரகாசருடைய திருவடிகளை வணங்கி, முத்திநிச்சயம் என்னும் நூலை இயம்புவேன் என்று, தமக்கு குருவே கடவுள்; குருவே எல்லாம் என்ற, உயர்ந்த உறுதியை விளக்கி நிற்கின்றது. பின்னர் நூல் வந்தவழி கூறுகின்றது. 'ஞானம் பரப்பிய நல்லருளாளர்களாகிய அகச்சந்தான புறச்சந்தான குரவர்களும், சென்ற

சென்ற தலங்களிலெல்லாம் சிவச்சோதி காட்சியளிக்கக் கனிந்த உளத்துடன் யாவர்க்கும் வழிகாட்டி யாட்கொண்ட சமயாசாரியர்களும், ஏனைய திருமுறை கண்ட பெருமக்களும், ஆகமநூலுணர்க்கத்தைத் திருவருள் கூட்ட உணர்ந்து தத்தம் பெரும் பாடல்களில் 'ஏதனை முத்திநிலை யென்று உரைத்தருளினர் களோ அதனை அங்ஙனமே அறிவிப்பது இந்நூல்' என முதனூல்கள் இவை என்பதையும், வழிநூல் வகையுள் அடங்குவது இதுவென்பதையும் அறிவிக் கின்றது.

பிறகு, உரையாடல்போல 19 பாடல்கள் பின்வரும் உட்கோளை யுணர்த்துகின்றன.

**ஆன்மாநந்தவாதி:**—மூலாகம உபாகமங்களும், தேவாரதிருவாசகங்களும், ஏனைய அருள்நூல்களும், சிவஞானபோத முதலிய சாத்திரங்களும் ஆன்மா விற்கு இயற்கையே யானந்தம் உண்டு; தடைநீங்கியகாலத்துத் தன்னாநந் தத்தைத் தான் நுகர்கின்றான் என்று கூறுகின்றன. ஆதலால் ஆன் மாவிற்கு ஆநந்தம் இயற்கையே.

**குரு:**—நீ கூறும் பிரமாணநூல்கள் ஆன்மாவிற்கு இயற்கையே ஆநந்தமில்லை என்பதையும், ஆன்மா நுகருங் கருத்தாவே ஆதலால் நுகரப்படும் இன்பமாகிய ஆநந்தம் உன்னுடையதல்ல; வேறே; என்று இயம்பு கின்றன. ஆதலான் ஆனந்தம் உன்னுடையதன்று.

**ஆன்மா:**—திருமந்திரமாலை முதலிய ஞானநூல்கள் 'தேவியுந் தேவனும் சேர்ந் தின்பநுபகம்' எனவும் 'மருட்டி யவனை மணம்புரிந்தாளே' எனவும் சிவனுக்கும், சிவசக்திக்கும் சேர்ந்த கூட்டத்தை ஆநந்தம் என்று கூறினாற்போல ஆன்மாவுக்கும் ஆன்மசத்திக்கும் ஈசனால் சேர்ந்த இயைபு ஆனந்தம் என்றால் என்ன?

**குரு:**—நீ சொல்வது முத்தியாகாது. ஆன்மாவை யநாதியே பந்தித்து நின்ற தடையகலச் சிவன் அநுபவமாய்த் தோன்றுவன். சிவத்தோடு இரண் டறக் கலந்து நிற்றலே முத்தி என்பது.

**ஆன்மா:**—சிற்றின்பம் பேரின்பம் இரண்டுமே ஆன்மாவினுடையன. வேறொன் றிலிருந்து பெறுவன அல்ல.

**குரு:**—அப்பா! நீ ஒரு பளிங்குபோல. எந்த இன்பத்தைச் சார்ந்தனையோ அப் படி இருக்கின்றாய். சிற்றின்பத்தைச் சேர்ந்தாய்! பெத்தன் என்று பெயர்சூட்டிச் சிற்றின்பனாகிறாய். பேரின்பத்தைச் சேர்ந்தாய்! முத்தன் எனப் பெயர் தாங்கி இரண்டறக் கலந்து இன்பமயனாகிறாய். பெத்த நிலையில் நீ அநுபவிக்கிற சிற்றின்பமோ மாலை, மலர், சந்தனம் முத லிய வடிவினவாக உன்னை வந்து அடைகின்றன. இவ்வின்பங்களோ நீ செய்த புண்ணியப் பயனால் பொருந்துவன. ஆதலால் அவை சூக்கும கன்மப் பயன். அதுபோலப் பேரின்பமும் உன்னால் அநுபவிக்கப் பெறு தலின் சிவகுணமே. உன்னதன்று.

**ஆன்மா:**—சிவபெருமான் தடை நீக்குகிறார். நான் எனது ஆநந்தத்தை நுகர்கின்றேன். ஆதலால் நான் வேறு என்னாநந்தம் வேறன்று. பெறுவானும் பேறும் நானே!

**குரு:**—சிவன் என்று சொல்லினையல்லவா? அவர் எங்கிருக்கிறார்?

**ஆன்மா:**—என்னுள்ளே!

**குரு:**—எப்படி யறிந்தாய்?

**ஆன்மா:**—என்னாநந்தத்தை எனக்கு அநுபவமாகச் செய்து வெளிப்படுத்துகிறார்; அதனால் உள்ளிருக்கிறார் என அறிந்தேன்.

**குரு:**—ஆநந்தாநுபவம் உண்டாவதாற்றானே வெளிப்படுத்த இறைவன் வேண்டும். அவர் உள்ளிருக்கிறார் என்று அறிகிறாய் ஆதலால் உன் அறிவு (சாக்ஷாத்கார ஞானம்) நேர்முக அறிவன்று. அநுமான ஞானமே! அன்றியும், வேதாகமங்கள் பெறுவானும் பேறும் வேறென்றே விளம்ப நீ தானே இன்பம் என்று கூறுவது சற்றும் பொருந்தாது. பேதாய்! என்றும் நீ இன்பம் பெறுபவனே ஆநந்தம் பேறே என்று அறிவாயாக. மற்றும், இன்பம் நின்குணம் என்றால் உனக்கும் உன் இன்பத்திற்கும் உள்ள இயைபு குணகுணிகட்கு உள்ள இயைபு தானே. அப்படியாயின் உன்னை நீ காண்பதுதானே முத்தி யென்றாகிறது. வேதாகமங்களும், ஞானிகள் வாய்மொழியும், சிவன் உருவம் காண்பதே முத்தி யென்று சொல்கின்றனவே. அத்தகைய ஞானத்தை இப்போது மறந்துவிட்டாய் போலும்! இங்ஙனம் மாறாக உணர்ந்து மயங்கியதால் இதுவரை ஈசனைக் காண நீ செய்த தவம் யாவும் மோசமாயிற்றே; பாசங் கழன்ற காலத்தும் பரமனை யறியாமையால் பெத்தரினும் பெரிய பெத்தனாயினையே! அம்மட்டோ! ஆன்மவியல்பு மழுங்கக் குழைந்த காலத்து எழும் உண்மை யறிவானந்த உருவனாகிய சிவத்தை 'நான்' என்றும் அவன் குணமாகிய ஆநந்தத்தை என்குணம் என்றும் சொல்கின்ற கேடுகாலம் உனக்கு எப்படி உண்டாயிற்று. சிவகருணையால் சிவஞானம்பெற்றும் பழைய பெத்த நிலைபோல நான் நான் என்கின்ற ஈனகுணம் இன்னம் போனபாடில்லையே! என்னே!!

**ஆன்மா:**—என்னிடத்து இருவகை இன்பம் ஒரேகாலத்து உண்டாகிறது. என்னிடத்துச் சிவாநந்தச்சோதி சேருகின்றகாலத்தே அதனோடு எனக்கியல்பான சுகமும் தோன்றுகிறது. ஆகையால் ஆன்மாவிற்கும் ஆநந்தம் உண்டு என்றால் என்ன?

**குரு:**—பாற்சுவையும், காமச்சுவையும் போல சிவ் சீவாநந்தங்கள் வேறாகக் காணப்படாமையானும், ஒருகாலத்து இருவகை யின்பமும் நுகரவாராமையானும், நீ சொல்வது சுத்தப்பொய். சிவத்தோடு சேர்கின்ற காலத்து உண்டாகின்ற இன்பம் சிவனதே. அதனை அறிவது உயிர். அறிவதாகிய உயிரும், அறியப் பெறுவதாகிய சிவாநந்தமும் இன்றி வேறொரு

பொருள் தோன்றுது. அப்படி ஒருக்கால் தோன்றினால் நீ திருவருள் சேரச் செல்கின்ற காலத்து உன்னை விட்டு நீங்கும் மலம் தோன்றலாம். அம்மலக்காட்சி இங்கே வேண்டுவதில்லை. ஆதலால் நீ நுகர்வது சிவா நந்தமே. அன்றியும் நீ சொல்கின்றபடி ஆன்மாவிற்குச் சிவனைப் போலவே ஆநந்தம் இயற்கையாயின் அவ்வான்மா பிறப்பிறப்பை யடைய வேண்டுவதில்லை யல்லவா? நீயே யோசித்துப்பார். பேரொளியாகிய சூரியன் இருக்கிறது. சிற்றொளியாகிய கண் இருக்கிறது. இரண்டும் ஒளி என்ற அளவில் ஒன்றுதான். ஆனாலும் இருள் ஓட்டும் வன்மை எதற்கு இருக்கிறது. கண்ணுக்கா? இல்லையே. ஏன் இல்லை. காட்டுதலும் காணுதலுமாகிய தொழில் வேறுபாடுண்மையானன்றே! அதுபோலச் சிவனுக்கே ஆநந்தம் உள்ளது. சீவனுக்காநந்தமின்று. இரண்டற்கும் சித்துருவத்தான்மட்டும் ஒப்பு. அப்பா! இன்னுங்கேள். சிவரூபத்தை யறியவொட்டாது மறைக்கின்ற மலங்களைப் போக்குகின்ற பேராநந்தம் நீ நுகரக்கிடந்தமைகொண்டு உன் குணம் என்றே உரிமை கொண்டாடி விட்டாயே! பழுக்கக் காய்ந்த இரும்பு சுடுகிறது. செவ்வொளி சேர்ந் திருக்கிறது. அந்த ஒளியும் சூடும் தீயின் குணமா? இரும்பின் குணமா? சிந்தித்துப்பார். தீயும் இரும்பும் இறண்டறக் கலந்தமையால் இரும்பினிடம் உண்டான தீத்தன்மையே அவை. அதுபோலச் சிவனும் நீயும் இரண் டறக் கலந்தகாலை உண்டான சிவாநந்தத்தை யுன்னதாக உரைத்தனை. அன்றி உண்மையில் உனக்கு ஆநந்தமில்லை. மலமகற்றி மகிழ்ச்சி தரும் சிவாநந்தத்தை உன்குணம் என்று வாய் கூசாது சொல்லும் பேயா! உன்னைப்போல மயங்கிச் சொல்வார் வேறு யாரும் இல்லை. ஆதலால் உனக்கு திக்கோ! இல்லை. ஆனாலும் நாம் உனக்கு ஒருதுணை யல்லது புகலிடம் தருகிறோம். உன்னை மாயாவாதிக்கு மகனாக அழைக் கிறோம். இருள் நீங்க எழுந்த இன்பத்தைச் **சிவயோகம்** என்று சொல்லாமல் உன்சுகம் என்று உரைத்தனையே! நீ 'நோய்நீக்கமே சுகம் என்றவன்போல' மலம் போதலே முத்தி யென்பவனைச் சேர்ந்தவனே. நீ எடுத்துக்காட்டுகிற பிரமகீதை வேதாந்தம். சிவாகமங்கள் யாவும் ஆனந்தம் ஆன்மாவிற்கு உண்டு என்று சொல்லவில்லை. சிவத்திற்கு உண்டென்றே செப்புகின்றன. சித்தாந்தியாகிய உனக்கு எந்த நூலும் உதவி யில்லை. நன்கு சிந்திக்க.

**ஆன்மா:**—சிவாநந்தம் என்பது சிவசத்திதானே!

**குரு:**—ஆம்.

**ஆன்மா:**—சிவசத்தியை முத்தான்மா நுகர்கின்றான் என்றால் மாபாதகம் அல் லவா? தாயைத் தனயன் திளைத்தலாகுமல்லவா?

**குரு:**—சிவபோகம் என்றவுடன் மிகவும் எளிய பொருளிலே புணர்ச்சி யென்று கொண்டனையே முதற்றவறு. இரண்டாவது உனக்கு உவமை யிலக்கண மும் தெரியாது என்று தோன்றுகிறது. "புசிப்போம் சிவபோகம்" என்றும், 'சிவாநந்த வெள்ளம் திளைத்து' என்றும் கூறுவார்களேயன்றி

நீ சொல்வதுபோலப் புணர்ச்சி யென்று ஒருவரும் கூறவும் இல்லை. அருவாய், அறிவானந்தவெள்ளமாய், மனம் வாக்குக் கெட்டாததாய் நிற்கும் சிவசத்தியைப் பெண்வடிவுபோலக் கூறிய பேதமைக்கு என்செய்வது. இப்போதாவது தெரிந்துகொள். அருமை மக்கள் அன்னை முலைப்பாலை நுகர்வதுபோல முத்தான்மாக்கள் சிவாநந்தத்தைத் திளைப்பது என்று சிவசத்தியைத் தரிசித்து ஞான மேவரத் திருவருளில் அழுந்தி நின்று சிவத்தை யிரண்டறக் கூடலே சிவபோகமாதலின் அதற்கு நீ சொன்ன குற்றம் சிறிதும் செல்லாதென்றுணர்க.

இங்ஙனம் ஆன்மாநந்தவாதிக்கு அறிவுறித்தியருளும் நிலையில் உடனிருந்த சிவசமவாதி குருநாதரைப்பார்த்துத் தேவரீர் தெரிவித்தவாற்றால் ஆன்மாவுக்கு ஆனந்தமில்லை யென்றும், 'சிவாநந்தத்தே அமிழ்கின்றான் ஆன்மா' என்றும் அறிந்து கொண்டேன். அதனால் ஆன்மா சத், சித், ரூபி யென்பது பெறப்பட்டது. ஆதலால் சத் சித் மாத்திரத்தால் ஆன்மாவும் சிவனும் சமந்தானே என்றான்.

**குருநாதன்:**—சிவனுக்கு ஆனந்தமில்லை என்று நூல்கள் சொல்லிற்றில. தசகாரியங்களுள் பல பயனற்றுப்போம். ஆதலால் இவற்றைக் குருமுகமாகக் கேட்டுத்தெளி. அப்படியும் கொண்டது விடாக் குரங்காய்ப் பற்றிச் சிவசமமே முத்தி யென்பையாயின் அது சைவசித்தாந்த முத்தியல்ல. சிவசமவாத முத்திகளிலே இது ஒருவகை என்று சொல்லப்பெறும். உன்னைச் சிவசமவாதி என்றும் சொல்லிவிட முடியாது. சிவசமவாதி, முத்தான்மா ஐந்தொழிலியற்றல் முதல் எல்லா வகையானும் சிவத்தோடு சரி எனக் கூறுவான். நீ சத் சித் மாத்திரத்தில் கூறுகின்றாய்! ஆதலால் நீ அவர்கள் கூட்டத்திலும் சேராது ஏகதேசசமவாதி என்று அழைக்கப்படுவாய். இல்லை! நான் சித்தாந்திதான். என்று சாதிக்க வருவாயாயின் அந்த முழுச்சமவாதிகளும் சித்தாந்திகளே என்று நீயும் ஒத்துக்கொள்ள வேண்டிவரும்.

ஆதலால், ஏகதேச சமவாதிகளே! ஆன்மாநந்த வாதிகளே அநாதியே பந்தித்த மலம் நீங்கி எஞ்சாத பூரணமாயுள்ள இறையின்பத்தில் மூழ்கி இறைவனும் தானும் இரண்டுமற ஒன்றுமற ஒன்றி நிற்கும் அத்துவித நிலையை யடைதலே முத்தி யென்று இறைவனருளிச்செய்த ஆகமங்கள் கூறும் இதனைத் தெளிக என்று தேற்றினார்கள் என்பதாம்.

## இந்நூலால் விளங்கும் ஆன்மாநந்தவாதிக் கொள்கைகள்:

1 சிவன் தனது ஆனந்தத்தை யநுபவிப்பன். அதுபோல ஆன்மாவும் சிவனால் மலமகலத் தனது ஆனந்தத்தை யநுபவிப்பன்என்பது. (பா. 4.)

2. சிற்றின்பம், பேரின்பம் ஆகிய இரண்டுமே ஆன்மகுணம் என்பது. (பா. 5.)

3. பெறுவானும் பேறும் நானே. பேற்றினைக்காட்டிப் பெருமான் உள்ளிருக்கின்றார் என்பது. (பா. 6.)

4. என்னுருவத்தை நான் கண்டிருப்பதே முத்தி என்பது. (பா. 8.)

5. ஈசனைக் காணவேண்டும் என்று தவமும் செய்தல். (பா. 9.)

6. சிவத்தைத் தான் என்றும், சிவகுணமாகிய ஆநந்தத்தைத் தன்னது என்றும் கூறுதல். (பா. 10.)

7. சிவாநந்தமும் ஆன்மாநந்தமும் ஒருசேரத் தோன்றுகிற தெனல். (பா. 11.)

8. சிவத்தைப்போலவே ஆன்மாவிற்கும் ஆனந்தம்உண்டெனல்(பா.12)

9. மலங்களைப் போக்கும் பேரின்பத்தை ஆன்மகுணமென்றல்(பா. 13.)

10. மலநீங்கத் தோன்றும் ஆநந்தமே தன்குணம் என்பது. (பா. 15.)

11. பிரமகீதை முதலிய வேதாந்த நூல்களிலும் சிவாகமங்களிலும் ஆன்மாவிற்கு ஆனந்தம் உண்டென்று உரைக்கப்பெற்றுளது எனல். (பா. 17.)

12. சிவசத்தியைச் சீவன்முத்தர் திளைப்பர் என்றது பாதகம் எனல். (பா. 17.)

**சிவசமவாதிக் கொள்கைகள்:**

1. சிவனும் சத்சித்ரூபி. உயிரும் அப்படி. ஆதலால், சமதை எனல். (பா. 19.)

2. சிவசமதையே முத்தி எனல். (பா. 21.)

**மறுத்துரைக்கும் மாண்பு:**

இந்நூலாசிரியர் தெய்வத்திருவருள் கைவந்த சிவாநுபூதிச் செல்வர் ஆதலின் பூர்வபக்கக்காரர் சொல்லும் பிரமாணங்கள் அவர்களுக்கே ஒரு சிறிதும் துணையாவன அல்ல என்று மூன்றும் பாட்டிலும், பதினொரும் பாட்டிலும் எடுத்துக்காட்டி, அவர்கள் அவற்றிற்கு உரைகண்ட திரிபுணர்ச்சியைக் கண்டிக் கிறார்கள். நீ படிகம்போல் சார்ந்ததன் வண்ணம் ஆவை (பா. 5.) எனவும், ஆதவனுக்கு ஒத்த ஒளி உண்டாயின் கண் இருளை ஓட்டாதோ (பா. 12.) எனவும், இரும்பு தன்குணமோ தீயியல்பு (பா. 13.) எனவும், அன்னை முலைப் பால் என்றறி (பா. 17.) எனவும் ஏற்ற உவமைகளை எடுத்துக்காட்டி உளங் கொளத் தேற்றுகிறார்கள். அன்றியும், 'முத்தி ஒவ்வாது பாசம்விட அதுவாம்'

(பா. 4.) என உண்மையைச் சாதாரணமுறையில் எடுத்துக்கூறியும் விளக்கு கிறார்கள். அப்படியும் உண்மை உணராவிட்டால், மறக்கருணை காட்டியாவது உய்விக்க வேண்டும் என்ற கருணை ஆசாரிய மூர்த்திகட்கு எழுவது இயற்கைதானே! அதனால், ஈனகுணம் போனதிலையே (பா. 10.) எனவும், சுத்தப்பொய் (பா.11.) எனவும், கேட்டாயோ கேட்டிலையேற் கேள் (பா. 12.) எனவும், பேதாய் கேள் (பா. 13.) எனவும், உவமையும் தெரியாது (பா. 17.) எனவும் சினந்து கூறித் தெளிவிக்கிறார்கள். பின்னர் அறியாமைபற்றி நிற்கும் அவர்கள் மாட்டுப் பேரிரக்கம் பிறக்கிறது. அவ்விரக்கமோ இவர்கள் சித்தாந்திகளைப் போல இருந்து சித்தாந்த வரம்பழிக்கின்றார்களே என்றும், உண்மையுணரும் திருவருட்பதிவு இவர்களிடம் இயைந்த தில்லையே என்றும் இருவகையான் எழுகிறது. இவ்விருவகையினையும் 'என்குணம் என் இடும் பென்னே! ஞான குணம் பெற்றும் நான் நான் என நவிலும் ஈனகுணம் போனதிலையே' (பா. 10.) 'பேயா வாதிக்கு ஏது மாயாவாதிக்கு மகன்' (பா. 14.). 'வேதாகமம் சாற்று' 'தசகாரியத்திற் பலவுங் கெடுமே' (பா. 20.) என்பனவற்றால் விளக்கி யருளுகின்றார்கள். இவைகள் இவர்களது மறுக்கும் மாண்பு விளக்கும் பகுதிகளாகும்.

## உரைச்சிறப்பு:

இத்தகைய ஞானப்பெருநூலுக்கு ஒரு பேருரை யமைந்த பெற்றி யாவரையும் இன்புறுத்துவதாகும். பேருரையாசிரியர் ஞானசம்பந்த ஞான புத்திரர் ஆவார்கள். இவர்களது இருமொழிவன்மையும் திருவருள் விலாசமும் இவ்வுரையில் எங்கும் மிளிர்கின்றன. இலக்கண நுட்பங்கள் நியாய தர்க்க சாஸ்திரக் கொள்கைகள் குலவுகின்றன. இறைவன் நூலிலிருந்து தோத்திரங்கள் சாத்திரங்கள் பிற்காலத் தநுபூதிமான்கள் இயற்றிய நூல்கள்வரை முறையாகப் பிரமாணங்களைக் கோத்து வைத்திருக்கும் பெற்றி, மேற்கோள் காட்டு முறையினைப் பிற்காலத்தார் அறிந்துய்யும் வண்ணம் அமைந்த மேல்வரிச்சட்டமாகும். சில உரையாசிரியர்களைக் கண்டிக்கும் அழகு இவர்களது நுண்மாண் நுழைபுலத்திற்கு ஓர் உரையாணியாகும். இவ்வுரையால் எத்தனையோ இன்று காணவியலாத—கிடையாத நூல்கள், நூல்களின் போக்குகள், சில பாடல்கள் எல்லாந் தெரிகின்றன. சுருங்கக் கூறின் ஞானப் பெருநூல்கட்கு உரை காணும் வன்மையை இவ்வுரையால் அடையலாம் எனலாம்.

ஒரு ஆன்மாநந்தவாதியோ, சிவசமவாதியோ தன் கொள்கைக்குப் பிரமாணங்கள் காட்டப் புகுந்தாலும் இவ்வளவு பிரமாணங்களைக் காட்டியிருக்க முடியாது. இவ்வளவு தடை விடைகளைத் தர்க்க நியாய வரம்புக் குட்படுத்தி எழுப்பியிருக்கவும் முடியாது. அங்ஙனம் எதிர்க்கட்சியை எடுத்துக்கூறி அனைத்தையும் கண்டித்துச் செல்லுமாயின் இவ்வுரையின் மாட்சி அளவிடற்குரியதா என்பது அறிஞர் ஆய்தற்குரிய ஒன்று.

இவ்வுரையுள் காளத்தி மறைஞானபண்டாரம் செய்த தசகாரியச் செய்யுட்கள் ஆறு எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. (பக். 237.) இருபத்திரண்டாம் பாட்டுரையில் முடித்துக்காட்டலாக எல்லாப் பாடல்களிலும் வந்த மேற்கோள் பாடல்களை எல்லாம் தொகுத்துக் காட்டப் பெற்றுள்ளது.

**உவமைகள்:**

அணியிலக்கணத்தின் அன்னையாகிய உவமையே பொருள் விளக்கம் காணப் பெரிதும் உதவிசெய்வது என்பதை யாவரும் அறிவர். அதிலும் நுண்ணிய சாத்திரக்கருத்துக்கள் விளங்கவேண்டுமாயின் உவமையின்றி முடியாது. பொருளினது உண்மையை—ஒட்பத்தை—இலக்கணத்தை மூவகைக் குற்றம் வராது வகுக்கும் தருக்க நூலும் இதனை ஒரு அளவையாக (பிரமாணமாக) எடுத்தாளுகிறது. அம்மட்டோ! அநுமானப் பிரமாணத்திற்கு மிகஇன்றியமையாத உறுப்புக்களாகிய பிரதிஞ்ஞை முதலிய மூன்றனுள் 'எடுத்துக்காட்டு' என்னும் பெயருடன் இலங்குவதும் இதுவே. தான் தெரிந்ததாக இருந்து தெரியாத பொருளைத் தெரிவிக்கும் உபகாரம் இதன் சிறந்த தொண்டாகும். இத்தகைய உவமையை இதனை இவ்வுரையில் 120-க்கு மேற் பலவாக ஆண்டாண்டுக்காணலாம். அவற்றுள் சிறந்த சில உவமைகளை உரையழகு நோக்கச் சிந்திப்போம்.

முத்தான்மா சிவத்தோடு சமனன்று என்பதைக் கூறவந்த இடத்து 'யாதொன்று தன்மபேதமுடைத்து அது அதனோடு சரியன்று' என்பதனை விளக்க 'அக்கினியும் நீரும்போல' (பக். 281.) என்றும், ஒரு காரணமும் பற்றாது ஒருவர் கூறியதைத் தாமும் கூறுதற்கு 'அரைத்தமாவை யரைத்ததுபோல' என்றும், சராசரங்களைச் சிவமாகக் காணவேண்டும் என்புழிச் சிவன் சராசரமாகுங்காலத்துச் சராசரம் சிவமாகுமே! என்று குற்றங் கற்பிப்பானுக்குப் புத்தி கற்பிக்க 'அரசபுத்தியை மந்திரியிடத்துப் பண்ணக்கூடுமே யன்றி அரசனிடத்து மந்திரி புத்தி பண்ணுதவாறு போல' என்றும், ஆழ்ந்த நூல் ஒன்று செய்யாது பெரும் பயன் தாராப் பலநூல் செய்வார் வினைக்கேட்டிற்குப் 'பன்றி பல குட்டியிட்டாங்கு' என்றும், சிவயோக சமாதியில் எழுந்தருளி ஆண்டுக்கொரு செய்யுளாக வந்த திருமந்திரத்திற்குக் 'குஞ்சர மீன்ற கன்றென' என்றும், சிவ ஞானம் பெற்றும் இறைவனடி எண்ணுது தன்னுநந்தம் எனப் பகரும் சழக்கர்களாகிய ஆன்மாநந்தவாதி செய்கைக்கு 'கனகவரை குறித்துப் போய்க் கடற்கே வீழ்ந்தமை' போல என்றும், மறைஞானர் திரிபுணர்ச்சியால் சிவசமதா நூல்செய்து அதற்கு ஆதாரமாக அகோர சிவாசாரியர் உரையைக் கொண்டமைக்கு 'வரையின் சிகரத்தினின்றும் தவறி வீழ்பவன் சிலந்திநூல் பிடித்துத் தரிக்கலாம் எனப் பற்றியாங்கு' என்றும், சித்தாந்த நூலாகிய சிவ ஞான சித்தியார் செய்யுட்கள் தமது சமதா கருத்துக்கு இயையுமோ என்று எண்ணிய சிவசமவாதிக்குச் 'சுகப்பிரமரிஷியைப் பின்தொடர்ந்து சென்ற வியபிசாரியைப்போல' என்றும், சமாதி நிலையைச் சித்தாந்த நெறி நிற்கும் செவ்வியோர்பாற் கேட்டுணராது சோகம் பாவனையே போதும் என்றிருக்கின்ற ஏகான்மவாதிகட்கு 'அரசனுக இருந்து சந்தனம், மாலை, மாதர் முதலிய போகங்களும், குழம்பு பால் முதலிய அசனங்களும் அநுபவிக்கக் கிடையாதார், இரவலனுகத் திரிந்து முட்டி புகுந்து கஞ்சிகாடிகொண்டு சீவித்தல்போல' என்றும் உவமித்துள்ள பகுதிகள் மிக இன்புறுத்துவனவாம். இங்ஙனமே பிற உவமைகளும் சிந்திக்கப் பேரின்பந் தருவன.

## சில இலக்கண நுட்பங்கள்:

இலக்கண நுட்பங்களே உரைச்சிறப்பை யுணர்த்துவன. நுணுக்கமான பொருளமைதியைப் புலப்படுப்பன. ஆதலால் அத்தகைய பல இலக்கண நுட்பங்களை இவ்வுரையிற் காணலாம்.

### 1. நூன்முகம் என்ற சொற்குப்பொருள்

தொல்காப்பிய எழுத்ததிகாரத்து இளம்பூரண அடிகள் 'எல்லா நூன் முகத்தும் பொதுவாக உரைக்கப்படுதலில்' என்று உரை வகுப்பதால் நூன் முகம் என்பதற்கு நூற்குமுன் உரைக்கப்பெறுவது என்றே பொருள் கொண்டாராயிற்று. 'பாயிரம்போல நூல்முகத்து நிற்கும் என்றலும்', என்ற மரபியல் நச்சினார்க்கினியர் உரைப்பகுதியும், இக்கருத்தையே வலியுறுக்கும். "முகவுரை பதிகம்" என்ற நன்னூற் சூத்திரவுரையில் 'முன்னுரைத்தலில் முகவுரை என்றும், முகவுரை என்றாற்போல நூன்முகம் என்றும், எனச் சங்கரநமச்சிவாயப்புலவரும், சிவஞான சுவாமிகளும் உரைகண்டருளினர்கள். சிவஞானமாபாடியத்து 'நூன் முகத்து உரைக்கப்படுவதாய சிறப்புப்பாயிரம்' என்றபகுதியும் நூற்குமுன் னுரைக்கப்பெறுவது என்ற பொருளையே விளக்கிநிற்கின்றது. அங்ஙனமிருக்க நமது பேருரையாசிரியராகிய வெள்ளியம்பலவாண முனிவர் 'ஒருவரை யறிய வேண்டுழி முகமன்றி யறியப்படாவாறுபோலச் சிறந்த உறுப்பாகிய இஃதன்றி நூலறியப் படாமையின் நூன்முகம்எனப் பெயர்பெறும்' என்று உரைகண்டனர். இது முகமே மனிதன் அடையாளத்தைச் செவ்வனே தெரிவிப்பதுபோல நூலின் சிறப்பை விளக்குவது நூன்முகமே என்ற பொருளமைதியைப் புகட்டிப் புத்துணர்ச்சி நல்குகிறது.

### 2. நூல்வகைபற்றியது

நூல்கள் முதல் வழி சார்பு எனமூன்றாகும் எனப்பின்னூல்கள் வகுத்தன. ஆசிரியர் தொல்காப்பியனாரோ "இருவகையியல, முதலும்வழியும் நுதலிய நெறியின" எனச்சொல்லினர். ஆதலால் சார்புநூல் என ஒன்றில்லை. சார்புநூல் முன்னின்ற நூலைநோக்க வழிநூலாகுமேயன்றி அதற்முன்னின்றதை நோக்கிச் சார்பு நூலாகாது. ஆயின்பின்வருவன எல்லாவற்றையும்,சார்பிற் சார்பிற்சார்பிற்சார்பு எனப்பன்முறை யடுக்கிக் கூறவேண்டிவரும். அநவத்தை தங்கும் என்றும் அருணந்திசிவாசாரியார் கூறியது பிறன்கோட்கூறலாக மேற்கொண்டு கூறியது அன்றி அவர்க்குடன்பாடன்று என்றும் உரைப்பது நுணுகிய இலக்கணப் பகுதிகளாம். (பக். 26.)

### 3. எதிர்நூல்

இளம்பூரணர் எதிர்நூல் என்பது முதனூற்பாற் படவருதலின்றி வழிநூற்பாற்படவாரா தென்றதை மறுத்து, எதிர்நூல் முதனூற் கருத்துக்கள் முரண்பட்டமையாலேயே எழுவதாகலின் அது வழிநூலாகுமேயன்றி முதனூற் பாற்படாது எனவகுத்தமையும் நுணுகியபகுதியுள் ஒன்று. (பக். 27.)

### 4. நூல்வகை

நூல் பெருநூல், இடைநூல், சிறுநூல் என மூவகைப்படும் எனவும், பெருநூல் என்பன பிண்டத்தை யடக்கிநிற்கின்ற பிண்டியாகிய அகத்தியமும் மூன்றுறுப் படக்கிய பிண்டமாகிய தொல்காப்பியமும் போல்வன எனவும், இடைநூல் என்பன பலவோத்தால் பிண்டமான பன்னிருபடலம் போல்வன எனவும், சிறுநூல் என்பன பலசூத்திரங்களாற் பிண்டமான இறையனர் களவியல் போல்வன எனவும் நூற்பாகுபாடு செய்வது ஊன்றியறிதற்குரியது.

### 5. தொல்காப்பியம் நச்சினர்க்கினியர் உரையாராய்ச்சி

நச்சினர்க்கினியர் எழுத்ததிகாரத்து 'ஓரெழுத்தொருமொழி ஈரெழுத் தொருமொழி' என்ற சூத்திரத்திற்கு ஒற்றும் குற்றுகரமும் அலகிடப்படா எனக்கூறிய செய்யுளியல்விதி யுட்கொண்டு உதாரணங்காட்டியது, 'எழுத்தெனப் படுப' என எழுத்தியல்பு ஒற்று குற்றகரங்கட்கும் எய்தினமையின், மொழி யாக்கத்திற்குப் பயன்பட நிற்றலின் பொருந்தாது எனக்கூறுதலும் அத்தகைய வற்றுள் ஒன்று. இதற்கு எடுத்துக்காட்டாக எழுவாய் வேற்றுமையை எழுத் ததிகாரத்துள்' வேற்றுமை யல்வழி எனவும், சொல்லதிகாரத்துள் வேற்றுமை யாகவும் தொல்காப்பியனரே கூறியது போல என்று கூறலும் இயைத்து இன்புறக்கூடியது.

### 6. உத்திவகை

இவ்வுரையுள் ஆங்காங்கு ஒருதலையன்மை, அதிகார முறைமை, ஆணை கூறல், இரட்டுறமொழிதல் முதலிய உத்திவகைகள் பல பொதிந்துள்ளன. இவ்வாறே பத்துவகை அழகுகளும் தொகுத்துணர்த்தப் பெறுகின்றன.

### 7. குற்றங்கள்

குன்றக்கூறல் முதலிய பத்துக் குற்றங்களுக்கும் மறைஞானரியற்றிய நூல்களினின்று மேற்கோள் காட்டியிருப்பது மிகவும் இனிமை பயப்பது. அவற்றுட் சிறப்பிற் சிறப்பாகப் பழித்த மொழியான் இழுக்கம் கூறற்குச் 'சிவ சத்தியைத் தினைப்பர் ஆதிமுத்தர் என்னும், அவசத்த மாபாதகம்' என்னும் பர மோபதேசச் செய்யுளை எடுத்துக் காட்டியிருப்பதும், இந்நூலாசிரியர் 17-ம் பாட்டில் **அன்னைமுலைப் பாலென்றறி** என்று அதற்கு உவமையமைதி உரைத் திருப்பதும் உணரத்தக்கனவாம்.

## உரையிற்காணப்பெறும் ஆசிரியர்கள்:

இவ்வுரையில் மேற்கோளாக எடுத்தாளப்பெறும் நூல்கள், உரைகள் பல. ஆதலால் இவைகளை இயற்றிய ஆசிரியர்கள் நூற்றுக்கு மேற்பட்டவர்கள் காணப்பெறுகிருர்கள். பலவேறு சந்தானங்களைப்பற்றிக் கூறும்பொழுது சந்தானசாரியர் பெயர்களும் பரம்பரை முறைப்படிக் காட்டப்பெற்றுள்ளன. அவைகளுள்; அகோரசிவாசாரியார், அருணந்திசிவாசாரியார், இராமகண்டர்,

இறையனுர், உபமன்யதேவர், உமாபதிசிவாசாரியர், கஞ்சமலையமான், கருவூர்த் தேவர், காலாங்கன், சங்கரர், சத்தியோசோதி, சத்தியோசாத சிவாசாரியர், சனகர், சிங்கநாதர், சிவயோகமாமுனிகள், சேரமான்பெருமாள், சோமசம்பு சிவாசாரியர், சௌந்தரநாதசிவாசாரியர், ஞானசிவாசாரியர், திருமூலதேவர், நச்சினுர்க்கினியர், நாராயணகண்டர், நிறைந்தநாயனுர், பரிமேலழகர், பிரம தேவர், மருதச்சம்பந்தர், மாலாங்கன், போகநாதசித்தர், போசராசர், வன்மீக நாதர், வாமதேவர், வியாக்ரபாதர் முதலியோர்கள் ஒப்புக்காட்டு முகத்தானும் கண்டிக்குமுகத்தானும் பற்பல இடங்களில் பகரப்பெற்றுள்ளார்கள். அன்றியும் சமயாசாரியர்கள், சந்தாணசாரியர்கள், திருமுறையாசிரியர்கள் பெயர்களும் குறிக்கப்பெற்றுள்ளன.

இவருள் கண்டிக்கப்பெறும் ஆசிரியர்கள் இளம்பூரணர், பரிமேலழகர், அகோரசிவாசாரியர், கண்ணப்பபண்டாரம், காளத்திமறைஞானர், நச்சினுர்க்கினியர், பேராசிரியர் முதலாயினேராவர். ஒருவரைக் கண்டிப்பது அவரறியாமை விளக்கவாதல், அன்றித் தமது சிறந்த உட்கோள் விளக்கவாதல் இருக்கும் என்பது அறிஞர் துணிபு. அவற்றுள் முன்னையதைவிடப் பின்னையதே பொருளுணரும் புனிதற்குப் பெருநன்மை விளைப்பது. ஆதலின் இவ்வுரையாசிரிய முனிபுங்கவர் கண்டிக்குந்திறனைத் தாலீபுலாகமாகச் சிந்திப்பது சிறந்ததாம்.

### 1. இளம்பூரணர்

நூல்வகைபற்றிய ஆராய்ச்சியில், இளம்பூரணர் "தன்கோ ளிறீஇ" என்ற மரபியற் சூத்திர உரையில் "எதிர்நூல் வழிநூற்பாற்பட வாராது என்றுராலோ எனின்" என்பதனை எடுத்துக்காட்டி எதிர்நூல் எனப்படுவது முதனூல் பற்றித்தான் வரவேண்டும் என்று விதிக்கும் எடுத்தோத்தோ இலேசோ இல்லை எனவும், வேதாகமங்களைப்பற்றிச் சாங்கியர், யோகர், சைவர், முதலியோர் எதிர்நூல் செய்ததை அவர் (இளம்பூரணர்) கண்டிலர் எனவும் கண்டிப்பதால் எதிர்நூல் முதல் வழி என்ற இரண்டும் பற்றிவரும் என்ற துணிபை விளக்குகிறார்கள்.

### 2. பரிமேலழகர்

"அகர முதல" என்ற முதற்குறளுக்கு உரைவகுத்தபொழுது முதற்கண் உலகம் என்பது ஈண்டுஉயிர்கண் மேனின்றது என்றுஉரைத்துப் பின்னர்க் 'காணப்படாத கடவுளது உண்மையைக் காணப்பட்ட உலகின்மேல் வைத்துக் கூறினர்' என்றது மாறுபடவுரைத்தது என்று கண்டிக்கிறார்கள். பரிமேலழகர் கருத்துப்படி உலகு உயிராயின் அது காணப்படுமாறு எங்ஙனம்? அன்றியும் உயிர்அறிவுடைப்பொருள் (சித்து)காணப்பட்டஉலகம்(சடம்)அறிவிலாப்பொருள் ஆதலின் சித்து சடவேறுபாடின்றிக் கூறியது பொருந்துமா? என்று எண்ண உரையின் பொருந்தாக்கோளும் உண்மையுரை காணும் உள்ளமும் எழுகின்றன.

### 3. அகோரசிவாசாரியார்

இவர், இவ்வுரையுள் சற்றேறக்குறைய பத்துக்கு மேற்பட்ட இடங்களில் கண்டிக்கப்பெறுகிறார். அதிலும் சிறப்பாக இருபதாம் பாட்டுரையில்,

ஆனந்தம் என்பது ஆன்மசத்தி யபிவியத்தியாகிய இயல்பே யன்றி ஆன்ம குணமான இனிய இரசமான சுகம் என்ற பொருள் கூடாது என்று கூறும் ஆன்மாநந்தவாதி தத்வப்பிரகாசிகை உரைப்பாயிரச் சுலோகமான अद्वैतवासनाविष्टैः என்றதையும், மிருகேந்திர வியாக்யானங்களேயும் எடுத்துக்காட்டித் தன் கோளை நிலைபெறுத்த முயன்ற காலத்து, இவ்வுரையாசிரியர் அகோரசிவாசாரியர் இங்குமட்டுமல்ல சர்வஞானேத்தர வுரையினும், இரத்தினத்திரயத்தினும் பொருந்தா வுரைகள் புகன்றனர் எனப் பல நியாயங்கள் எடுத்துக்காட்டிச் (பக் 228-29) செல்கின்றார்கள். திரிலோசனசம்பு போன்ற பெரியோர்கள் அத்துவிதமாக உரைகூறியிருக்கவும், தத்துவப்பிரகாசத்தில் சிவசமானதா என்பதற்கு ஏகரூபம் எனப் பொருள்கொண்டும், "அத்வைத வாசனு" என்று தொடங்கி ஆநந்தசத்தத்திற்கு ஆன்மசத்தி வெளிப்பாடு என்றே பொருள் கொண்டும் தடுமாறுவதைக் காட்டி மறுத்துச் செல்வது மிக இனிய விளக்கமான பகுதிகளாம். (பக் 252-53)

4. சேனுவரையர், பேராசிரியர்.

"உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்னும் திருக்கோவை ஞானநூற் பகுதிக்குப் பின்னுணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலான் மீட்டும் உணர்வரியோன் எனவும், தவத்தானும் தியானத்தானும் எல்லாப் பொருளையும் உணர்ந்தார்க்கும் உணர்வரியோன் எனவும் கூறியது என் னெனில்? அவனை யறிதற்குச் சித்தவிருத்தி கருவியன்று என்பதூஉம், தவத் தானும் தியானத்தானும் எல்லாப் பொருளும் உணர்ந்தார்க்கும் உணரப்படா னுகில் அவைகளை இயற்றுதலாற் பயனில்லை எனவும், அவனும் சூனியமாகப் போவன் எனவும் அறியாமையின் அவர்கள் அங்ஙனம் உரை யெழுதினர்கள் என்று கண்டித்து, உணர்ந்தார்க்கு-அறிந்தார்க்கு, உணர்வு அரியோன்-சொல்லு தற்கு அரியோன். அதாவது அநுபூதி யொன்றானே யறியப்பெற்று உரை மனங் கடந்தவன் என்று பொருள்காண வேண்டும் என்று வாதுளோத்தரம், சிவஞான சித்தி முதலிய ஞானநூல்களினின்று எடுத்துக்காட்டிச் செல்கின்றார்கள்.

இங்ஙனமாகப் பல ஆசிரியர்களின் பொருந்தாக்கோளை எடுத்துக்காட்டி உண்மைப்பொருள் உரைத்துச் செல்வதை இவ்வுரையிற் பல இடங்களிற் காணலாம்.

## தொல்லாசிரியர்களைப் பாராட்டுதல்:

தெய்வத்திருவளைப் பெற்ற தொல்லாசிரியர்களைப் பாராட்டுவதிலும் இவ்வுரை இணையற்றது என்னலாம். இரண்டாம் பாட்டுரையில், (68ம் பக்கம்) 'கன்மசித்தாந்த குரவரினும் ஞானசித்தாந்த குரவர் உயர்ந்தார். அவரினும் பட்டினத்துப் பிள்ளை போன்றார் உயர்ந்தார். அவரினும் சமயகுரவர் நால்வரும் உயர்ந்தார்' எனக்கூறிச் செல்வதாற் புலனாகும்.

**பட்டினத்துப்பிள்ளை உயர்ந்தார் என்றற்குக் காரணம்:**—சந்தானுசாரியர் கள் பரம்பரையான் அருள்பெற்றவர்கள். இவரோ சிவன்றானே முன்னின் றருள அருள்பெற்றவர் ஆதலின் என்பது.

**சமயாசாரியருக்குள்ள உயர்வின் காரணம்:**-(1) **श्रीमद्वातपुरेजातं** எனவும் **प्रबन्धः सुन्दरश्चैव** எனவும் சூக்குமம் பூர்வகாரணம் என்ற சிவாகமங்களிலேயே சிவபெருமானாலே பாராட்டப் பெற்றிருத்தல். (2) திருத்தொண்டத்தொகை, நம்பியாண்டார்நம்பி அந்தாதி, திருத்தொண்டர் புராணம் முதலிய திருமுறைகளே பாராட்டுதல். (3) சிவன்றன்னாலே அருள் பெற்றது. (4) சமயத் தாபனஞ்செய்தது; பரிபாலனம் செய்தது. (5) சிவபெருமான் எளிதில் எஞ்ஞான்றும் வெளிப்படுதல். (6) நிக்கிரகாநுக்கிரகம் உடைமை.

**சந்தானாசாரியர்:**— தெய்வத்தன்மையான் உணரும் உணர்வு பெற்றிருத்தல்

**திருமூலதேவர்:**—இவர் திருமூலநாயனார் என்றும், திருமூலதேவசிவாசாரியார் எனவும், திருமூலதேவநாயனார் எனவும் பலபடப் பாராட்டப்பெறுவதால் இவ்வுரையாசிரியருக்கு இவர்களிடம் உள்ள நன் மதிப்பு விளங்கும். அன்றியும் இவர்கள் நூலாகிய திருமந்திரம், திருமந்திரமாலை என்றும், திருமந்திர மாலையார் என்றும் பாராட்டப்பெறுகின்றது.

**சீகாழிச் சிற்றம்பலநாடி பண்டாரம்:**—இவர்கள் மெய்கண்ட சந்தானத்தில் வந்தவர்கள் என்றும், அறுபத்து மூன்று திருப்பெயருக்குச் சாம்பவ தீக்கையாற் சத்தியோநிர்வாணதானம் பண்ணித் தாமும் சமாதியிலிருந்து சிவகதி யடையும் பெருமை யுடையவர் என்றும், உண்மைவிளக்கத்திற்குச் சிறந்த உரை யியற்றினோர் என்றும் பாராட்டப்பெறுகின்றார்கள். (பக். 257.)

## ஆகமங்களைப்பற்றிய சில குறிப்புக்கள்:

ஆகமம் என்பது இறைவனிடமிருந்து வருதலையுடையது எனப் பொருள்படும். ஆ எல்லையையும் அண்மையையும் வழிமுறையையும் உணர்த்தும் இடைச்சொல்; கம் என்பது வருதல், போதல், உணர்தல் எனப்பொருள் தரும் வினைப்பகுதி. ஆகவே இறைவனிடமிருந்து வருதலையுடையதாய், உணர்ச்சி பயப்பதாய், பரமார்த்தங்களை விளக்குவதாய் இருப்பது ஆகமம் எனப்படும். சிவாகமங்கள் மூலாகமம் உபாகமம் என இருவகைப்படும். மூலாகமம் காமிகம் முதலாக வாதுளமீறாக இருபத்தெட்டாம். உபாகமம் பல. இருநூற்றேழு என்று சிந்தாந்த சேகரம் கூறும். இக்காலத்து வழங்கும் மதங்கம் முதலியன உபாகமபேதம். (பக். 67) இவ்வாகமங்கள் இறைவன் வாய்மொழியாக இருத்தலின் மிகச்சிறந்தன. உபாகமங்களில் தேவிகாலோத்தரம், சர்வஞானோத்தரம், கந்தகாலோத்தரம் முதலியவைகள் சிவோகம்பாவனையைச் சமாதியெனக் கூறி, அத்துவிதம் பிரதிபாதித்து, எண்குணத்தையும், ஆறுகுணத்தையும் ஆன்மாவும் அடையும் எனக் கூறுதலின் யோகசாங்கிய நூல்களாம் எனவும், ஏனைய பவுட்கர மதங்க மிருகேந்திர கிரண ஆகமங்கள் தத்துவசாராதி பேதங்களாய் எண்ணியறிய இருத்தலின் ஞானசாங்கிய நூல்களாம் எனவும் இவ்வுரைகாரர் கூறுவர். அன்றியும் இருபத்தோராம் பாட்டுரையில் வரும் ஞானசித்தியாகமச் சுலோகங்கட்குப் பொருள்வகுக்கும் முறையும் அதற்குரிய காரணமும் குறிப்பித்தல் ஈண்டுச் சிந்தித்தற்குரியன.

இன்னும் பலஆகமங்களில்திருவருள்வழிப்பட்ட நுண்மாண்நுழைபுலம் இவ்வுரையாசிரியர்க்கு இருத்தலின் அவாந்தரசைவரில் கிருகத்தருக்குக் குருத்துவம் உண்டு என்பதையும், அதிலும் ஞானவான்களாயுள்ளவர்க்கு நிச்சயமாக உண்டு என்பதையும் விளக்கத் தேவிகாலோத்தரம், காமிகம், மேருதந்திரம், மோட்ச காரிகை முதலிய பிரபல பிரமாணங்களை எடுத்துக்காட்டிச் செல்லுதல் மிகவும் ஆழ்ந்து உணர்தற்குரிய பகுதியாம். அதினும், விதியும் விலக்குமாகவரும் ஆகம வாக்கியங்கட்கு நித்தியத்தில் விதியும், நைமித்தியத்தில் விலக்குமாக ஆசாரிய லக்ஷணத்திற் கொள்ளவேண்டும் என வழிவகுப்பது மிகச்சிறந்த பகுதியாம். (பக்.15)

மற்றும், ஞானதீக்ஷாவான்கள் கிரியையினும் அதிகாரமுடையார் எனக்காட்டுவதும், அவாந்தர சைவர்க்கும் சந்நியாசம் உண்டு என்பதை விளக்க அசிந்திய விசுவாகமம் நைட்டிகனுக்கு விதிப்பதை எடுத்துக்காட்டி, நைட்டிக பதத்தில் சந்நியாசியும் அடங்குவான் என்பதற்குத் தீக்ஷாவிதிப்பிரமாணமும் காட்டிச் செல்வதும் (பக். 17) ஊன்றியின்புறற்குரியன. ஞானிகள் கிரியாதீக்கை செய்வது வழக்கமில்லை. ஞானதீக்கையாற் செய்வது எளிமையாதலானும், சந்நியாசம் மேற்கொண்ட பின்பு ஞானம் கூடுதலின் அக்னிகாரியம் வேண்டாமையானும், "தத்தம் நிலைக்கும் வருணத்திற்கும் ஓதப்பெற்றவைகளை மனத்தாலும் தாண்டலாகாது" என ஆகமவாக்கியம் இருத்தலின் வரம்பழித்தல் வழக்கமில்லை என்று விளக்கியிருத்தலும் ஆகம நுணுக்கமாக உரையால் யறியப் பெறுகின்றது. இவ்வாறே மரித்தவனுக்கு அந்தியேட்டி செய்யவேண்டியதன் அவசியத்தையும், பயனையும் (பக். 184) அறிவிக்கும் உரைப்பகுதியும், சிவோகம் பாவனை யோக சமாதியேயாய் ஞான சமாதி யடைதற்கு நிமித்தமாம் என்ற நுணுக்கமான பகுதியும், (பக். 272) சிவரசாநுபவம் ஞான சமாதியானன்றி நிகழாமையின் சிவோகம்பாவனையாகிய உபாசனாமுறையை ஞான சமாதி நிலைக்காரியமான பரீக்கையெனக் கொண்டு தசகாரியத்துட் கூறுதல் தவறு என்ற பகுதியும், தசகாரியம் குருமுகமாகவே கேட்டுத் தெளியத்தக்கது என்ற பகுதியும் மிக நுணுகியாராயத்தக்க சம்பிரதாயங்களாம். (பக். 273)

## எத்தகைய நூல்களைப் பிரமாணங்காட்டலாம் எனல்:

நூல் எந்த முதனூல்வழி யியங்குவதோ அதனையும் அதன் வழிவந்த நூல்களையுமே பிரமாணமாக எடுத்துக் காட்டுதல் வேண்டும். அன்றிப் புறம்பான நூல்களைக் காட்டுதல் கூடாது. அங்ஙனம் காட்டநேரின் மாறுபாடின்றி ஒத்த கருத்தினவாயின் எடுத்துக் காட்டலாம். இதற்குக் காமிகம் **वैदिकं सर्वं संग्राह्यं शैववाक्याविरोधियत् ।** என்று கூறுகிறது. (பக். 168) மற்றும் தருக்க முதலிய நூல்கள் சிவாகமத்திற் கலந்து கூறலாகாது எனவும், (பக். 260) அங்ஙனம் கூறநேரின் பொருட்பகுயில் ஒப்புச் சிறிதேனும் இருப்பின் கூறலாம். ஆனல் சமய நூற் சங்கேதம் தனித்தனிக் கொண்டதன்றிக் கொள்ளாமையே சிறப்பு எனவும் வருவனபிரமாணவகையில் போற்றத்தக்ககருத்துக்கள்.

## தருமையாதீன வரலாறும் — சம்பிரதாயங்களும்:

*சிவஞானப்பயிர் தழைக்கக் கருணைமழை பொழியும் காரெனவருவன சைவ ஆதீனங்கள். இவ்வாதீனங்களே சற்றேறக்குறைய ஐந்தாறு நூற்றாண்டுகளாகச் சித்தாந்தச் சைவந் தழைக்கவும், செந்தமிழ் வளம்பெறவும் பலவழிகளிற் பாதுகாத்துவருகின்றன என்பதைத் தென்னிந்திய சரித்திர ஆசிரியர்கள் யாவரும் காய்தல் உவத்தல் இன்றி ஒப்புவர். இவ்வாதீனங்கள் திருக்கயிலாய பரம்பரையாகத் திகழ்வன. திருக்கயிலாய பரம்பரை முதற் குரவராகிய ஶ்ரீகண்டதேவர் முதல் வழிவழியாகத் தொடர்ந்து வருகிறது. அதனால் அச்சந்தானம் அகச்சந்தானம், புறச்சந்தானம் என் இருவகையாக எண்ணப் பெறும். திருக்கயிலையினின்றும் மண்ணுலகிற்கு வந்தவரை அகச்சந்தானம் என்றும், மண்ணுலகில் வெண்ணெய்ப் பெருமான் மெய்கண்டதேவர் முதல் நாளதுவரை புறச்சந்தானம் என்றும் பேசப்பெறும். அவற்றின் முறையைப் பின்வரும் குலமுறைப்படம் குறித்துக்காட்டும்.*

### அகச்சந்தானம்



## புறச்சந்தானம்


மெய்கண்டதேவசிவாசாரியர்
அருணந்திதேவசிவாசாரியர்
மறைஞானசம்பந்தர்
உமாபதிசிவாசாரியர்
மச்சுச்செட்டியார்
காழிக்கங்கைமெய்கண்டார்
காழிப் பழுதைகட்டிச் சிற்றம்பலநாடி பண்டாரம் முதலியோர்
பழுதைகட்டிச் சம்பந்தபண்டாரம் முதலியோர்
சிவபுரம் ஞானப்பிரகாச பண்டாரம்
சிவபுரம் தத்துவப்பிரகாச பண்டாரம்
திருவாரூர்ச் செட்டித்தெரு பழுதைக்கட்டி ஞானப்பிரகாச பண்டாரம்
சிதம்பரநாதமாசிலாமணிக் கமலைஞானப்பிரகாச பண்டாரம்
1. தருமபுரம் குருஞானசம்பந்தர்
2. ஆநந்தபரவசர்
3. சச்சிதாநந்தர்
4. மாசிலாமணிமூர்த்தி
5. ஞானசம்பந்தர்
6. திருஞானசம்பந்தர்

## இவ்வுரையால் தெரியும் ஞானசம்பந்தர் வரலாறுகள்:

ஸ்ரீ குருஞானசம்பந்தமூர்த்திகள் கமலைஞானப்பிரகாசரிடம் சிவஞானோபதேசம் பெற்றுத் திருவாரூரிலேயே குருரூபம் காண்டல் முதலியன இடையறாது இயற்றி யணுக்கத்தொண்டராக எழுந்தருளியிருந்தார்கள். பின்பு தமது குருநாதர் பரமபதம் அடைந்தபின்பு தருமபுரத்திற்கு எழுந்தருளினார்கள். ஆனந்தபரவசரும், சச்சிதாநந்தரும், மாசிலாமணி முனிவரும் இவர்களைக் குருவாக வந்தடைந்தனர். அவர்கட்கு அருளுபதேசம் அளித்து எழுந்தருளியிருந்தார்கள். குருஞானப்பிரகாசரை முன்னர் வழிபட்டதுபோலவே அவர்கள் திருநாளிலும் சந்தன முதலிய க்ஷணிகத்தில் ஆவாகனஞ் செய்து வழிபட்டு வந்தார்கள். இச்செய்திகளை முறையே "இந்நூல் செய்த குரவருக்கு ஊர் கமலையாகவும், தருமபுரம் ஊர் என்றது தமது குரவர் பரமபதம் அடைந்தபின் தருமபுரத்தே யிருந்தார் ஆகலானும்" என்றும், "இந்நூல் செய்த குரவர் தமது குரவர் எழுந்தருளியிருந்த காலத்து இயல்பால் வழிபடுதலே யன்றிப் பரமபதம் அடைந்துழியும், தினம் சிவபூசையினும் யாண்டுதோறும் திதியினும் தமது சரீரமுள்ளளவும் வழுவாது குருபூசை செய்து வழிபட்டனர்" என்றும் வரும் உரைப்பகுதிகள் நன்கு விளக்கும்.

இங்ஙனம் இவர்கள் பக்குவர்கட்கு அருள்வழங்கி எழுந்தருளியிருந்து பரமபதம் அடைந்தபின்பு ஆனந்தபரவசமூர்த்தி முதலாயினர் தமது குருபக்தி மிகுதிதோன்ற இவரது சமாதித்தானத்தில் லிங்கப் பிரதிட்டை செய்து ஆண்டே வசித்து வந்தார்கள். (பக். 21) அன்றியும், பத்துநாள் விழாச்செய்தும், நித்திய நைமித்திகங்கள் வழுவாது செய்தும் வழிபட்டுவந்தனர். இச்செய்தி "தமது குரவர் பூரணம் ஆனவழி இவ்வாறாகவேண்டுமெனப்பத்தி மிகுதியால் சிந்தித்துச் சிவலிங்கப் பிரதிட்டை செய்தமையானும், பிறர் சேவித்துப் பிழைத்தற்கு ஏதுவான நன்மைப்பகுதி அதுவாகலானும், துறவறம் பூண்டார்க்கு மிகவும் செய்யவேண்டுதலிற் குற்றமன்றாகலானும், திருவிழாப் பரியந்தம் பூசை செய்தனர்" என்ற பகுதி நன்கு எடுத்துக்காட்டும். (பக். 22, 23) ஆதிகுருமூர்த்திகள் காலத்திலேயே இவ்வாதீனத்திற்கு இடம் பொருள் ஏவல் எல்லாம் இருந்தமையும் முற்றத்துறந்தார் குரவராணையினால் அவற்றைப் பாதுகாத்து அறஞ்செய்தல் இன்றியமையாதது என்பதையும், அப்பொருளை வழிவழி அருள்பெற்ற மாணாக்கர்க்கே கொடுக்கவேண்டும் என்பதையும் விளக்கும் அகச்சான்றுகள் பல இவ்வுரையுள் உள. (பக். 23)

இவ்வுரையுள் பிறசந்தானங்கள் சில குறிக்கப்பெற்றுள்ளன. அவை:- (1) சம்புசந்தானம். இது ஸ்ரீகண்டதேவரிடத்தில் உபதேசம் பெற்ற சநகரால் தோற்றுவிக்கப்பெற்றது. (2) மலையமான் சந்தானம். இதுவும் அவராற்றோன்றியதே. (3) விஞ்ஞானதேவ சந்தானம். (4) மெய்கண்டசந்தானம். இவை சனற்குமரரால் தரப்பெற்றவை. (5) உபமன்னியதேவசந்தானம். (6) பரமதேவ சந்தானம். (7) சிவாநந்தபோதர் சந்தானம் இவைகள் சநந்தனரால் தரப்பெற்றன. (8) பிரமதேவர் சந்தானம். (9) சிங்கநாததேவர் சந்தானம் சநாதனர் தந்தன. (10) சிவயோகமாமுனிசந்தானம் வாமதேவர்வழியாகச்சந்தானம் பரவச் செய்தது. (11) நிறைந்த நாயனார் சந்தானம் பதஞ்சலி தோற்றச்செய்தனர்.

வியாக்கிரபாதர் (12) சத்தியோஜாதர் சந்தானத்தையும், திருமூலர் (13) பிரமதேவர். (14) இந்திரதேவர். (15) விட்டுணுதேவர். (16) உருத்திரதேவர். (17) கந்துருமகாவிருடிகள். (18) காலாக்னியுருத்திரர். (19) கஞ்சனூர் மலையமான் என்னும் ஏழு சந்தானங்களையும் தந்து வளர்த்தனர். திருமூலதேவர் **சதாசிவமாமுனிகள்** என்றும் இவ்வுரையுள் வழங்கப்பெறுகின்றார். இவ்வாறு ஞானசந்தான வரலாறு கூறுமிடத்துப் பத்தொன்பது சந்தானங்களும், அவற்றின் முதற்குரவர்கள் வரலாறுகளும் விளங்கக் கூறப்பெற்றுள்ளன.

## உரையிற் குறிக்கப்பெற்றுள்ள நூல்கள்:

இவ்வுரையுள் அறுபதிற்கு மேற்பட்ட நூல்கள் இதுவரை உண்டென்று கேட்கப்பெற்று வெளிவராதனவாக இருப்பன எடுத்தாளப் பெற்றுள்ளன. இவைகளிற் சில இவர்கள் காலத்திலேயே பெயர் மட்டும் அறியப்பெற்று அழிந்தன. சில வழக்கத்திருந்தும் பெயர் மட்டும் அறிவிக்கப்பெற்றுள்ளன. சில மேற்கோள் காட்டப்பெற்றுப் பெயரும் அறிவிக்கப்பெறுவன. அவற்றுள் வடமொழி நூல்கள் வருணபத்ததி, சௌந்தரநாதாசாரியபத்ததி, சோமசம்பு பத்ததி, ரௌரவம், மகுடம், அசிந்தியவிசுவம், தீப்தம், ஞானசித்தி முதலியன. தமிழில் மறைஞானரியற்றிய பரமததிமிரபாநு, பரமோபதேசம், சகலாகமசாரம், போசனவிதி, சங்கற்பநிராகரண முதலியன. இவற்றின் விரிவை மேற்கோள் நூல் விளக்க அகராதியுள் இட்டுள்ள அடையாள வேற்றுமையான் அறியலாம். சிறப்பாகத் திருமூலர் சந்தானத்துப் பல நூல்கள் எழுந்ததாகவும், அவற்றுள் வழங்குவது திருமந்திரம் ஒன்றுமே என்றும், வழங்காது இறந்தன ஆதிமெய்ஞ் ஞானம் முதலாக உண்மை மும்மணியீறாகச் சொல்லப்பெற்ற இருபத்தாறுமே என்றும் கூறப்பெற்றுள்ளன. (பக். 59) இக்குறிப்பு நூல் தேடும் முயற்சியாளர்க்குத் திருவருள் வாய்ப்பு இருக்குமாயின் பெருந்துணையாகும். மற்றும் மெய்ந்நெறி விளக்கம், பொருணெறி விளக்கம், மயேச்சுரர்யாப்பு, அணியியல் என்ற கருவி நூல்கள் காட்டப்பெற்றுள்ளன. அவ்வாறே திருவாவடுதுறை மும்மணிக்கோவை, திருவாவடுதுறை நான்மணிமாலை, குடந்தைக்கோவை, குடந்தைக் கலம்பகம், ஆளுடையபிள்ளையார் ஒலியலந்தாதி முதலியனவும் காட்டப் பெற்றிருக்கின்றன. ஒலியலந்தாதி அவர்கள்காலத்து வழங்கிற்று என்கிறார்கள். இக்குறிப்புகள் தமிழ்நூற் பரப்பை மக்கள் தேடும் முயற்சியில் ஊக்குவனவாம்.

## உரையாசிரியர் செய்த நூல்களும் உரைகளும்:

### 1. சிவஞானசித்தியாருக்கு உரையெழுதியமை

"இங்ஙனம் கூறும் எண்வகைக் குணங்கள் முன்னர்க் கூறியவாறன்றிச் **சித்தியாருரையிற்** கூறிய எண்குணங்கள் எனினுமாம். **அவை அவ்வுரையிற் கண்டுகொள்க."** என்பதனால் விளங்கும். இவ்வுரை ஞானவரண விளக்கம் என்னும் பேருரையாகும். (பக். 242)

## 2. சந்தான வரலாறு

சந்தான விளக்கம் எழுதி (பக். 58) "சந்தான வரலாற்றிற் காண்க" என்று குறிப்பிடுகிறார்கள். இந்நூல் இவர்கள் செய்ததாகத் துணிந்து சொல்லச் சான்று ஏதுமில்லை ஆயினும் இவர்கள் காலத்துப் பெருவழக்கிற்றாதல் குறிப்பிடலாம்.

### தசகாரியத்தைப்பற்றிய குறிப்புகள்:

இந்நூல் இருபதாம்பாட்டுரையில் தசகாரித்தைப்பற்றிய சிலகுறிப்புகள் வருகின்றன. பேதவாதிக்குத் தசகாரியங்கள்நிகழா. தசகாரியநிகழ்ச்சிகள் ஞானாசாரியரையடுத்து உபதேசம்பெற்று அநுபவிப்பார்க்கன்றி, என்னதான் விரித்துக் கூறினும்புலப்படா. இவற்றைப்பாகுபடுத்தி விரியக்கூறின் சம்பிரதாய வாய்மைகள்வெளிப்பட்டுவிடும். ஆதலின் விரித்துக் கூறுவதுமில்லை. தந்திரகலாபாகமான சாத்திரங்களுட் கிடப்பனவற்றைத் தொகுத்துக் கூறின் பிரகரணபேதத்தால் வேறுபொருள் பெற்றுச் சம்பிரதாயம் தவறும். ஆதலால் ஒருசிறிது உபதேச கலாபாகமாக உபாகமங்களில் உரைக்கப்பெற்றன. அநுமேயச்சுருதியாலறியப்படுவன அன்றி மூலாகம, உபாகம வசனங்களால் அறியவொண்ணாதன. இங்ஙனம் உபதேச வாயிலாகப் பெறவேண்டிய இதனை நிருவாணதீக்ஷை மட்டும் பெற்ற சிலர் தந்திரபாகங்களிற் கிடைப்பவற்றைத் தொகுத்து இது தசகாரியம் என நூலும் செய்தனர். அது அநுபவத்திற்காகாது தவறியனவாகும். எவ்வழியானும் தசகாரிய நிகழ்ச்சி குருமுகமாகக் கேட்டு நின்று அநுபவிக்கத் தக்கன வன்றித் தெரிந்ததாக எண்ணுதல் தவறென்பது (பக். 258, 65) நன்கு விளக்கப் பெற்றுள்ளன. இவர்கள் கூறும் தசகாரிய நுட்பங்களைத் 'திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்' என்னும் நூலிற் சிறக்கக் காணலாம்.

### முத்தியின் மறு பெயர்களும் — காரணமும்:

இவ்வுரை 292-ம் பக்கத்து, பக்குவான்மாக்கள் பெறும் வீட்டின் பெயரைச் சிவாநந்தம், சிவாநந்தாநுபவம், பிரமரசம், பிரமரசாநுபவம், நிரதிசயாநந்தம், சிவதரிசனம், சிவஞானம், அருட்பேறு, சிவயோகம், சிவபோகம், பரமாநந்தபோகம், பரமபதம், சிவப்பேறு, சிவசாயுச்சியம், ஆன்மாநந்தம், நிசாநந்தம், ஆன்மசுத்தி, ஆன்மலாபம், ஆன்மஞானம் என்பன அனைத்தும் ஒருபொருட் கிளவியெனத் தொகுத்துக் காட்டி அவற்றின் காரணத்தைப் பிரமாணங்களுடன் குறித்திருப்பது மிகவும் இனியபகுதியாம்.

### கண்கட்டி மறைஞானர் வரலாறு:

இவர் சிறுவயதில் காளத்தி கண்ணப்ப பண்டாரம் என்பவரிடத்து விசேட தீக்கைபரியந்தம் செய்துகொண்டவர். இவர் காளத்தியிற் சென்று வசித்து வந்தனர். கண்ணப்ப பண்டாரம் "இவர் கல்வியுடையராகவேண்டும்" எனத் திருவுளங்கொண்டு சோழநாட்டிற்கு அனுப்பினர். இவரும் ஆசிரிய ராணைப்படி சோழநாடு போந்து சிதம்பரத்தில் வடமொழியும் தென்றமிழும் பயில்வாராயினர். சிறந்த புலவராயினர். அதனால் சிறிது விவேகம் பிறந்தது.

அதனால் நைட்டிகராகவே இருந்து ஒழுகத்தொடங்கினர். தவறாது சிவலிங்க பூசையும் செய்துகொண்டு சிறப்புடன் இருந்தனர். கண்ணப்ப பண்டாரம் தமதுசீடர் தம்கருத்துப்படி நிரம்பிய கல்வியராய்த் திறம்பாத ஒழுக்கத்தினராய், கூரியமதியினராய், சமய சீலராய் ஒழுகுதலை யுணர்ந்து பார்க்கவிரும்பித் தில்லைக்கு வந்தனர். சீடரிடம் தம் வரவையறிவிக்கச் செய்தனர். தாமே நேரிற் சென்றனர். அப்போதும் இவர் ஆசிரியனைக் கண்டவுடன் செய்யவேண்டிய வழிபாடுகளைச் செய்திலர். உடனே காளத்தி கண்ணப்பபண்டாரம் தமது சீடர் தருக்குமலையின் உச்சியில் இருப்பதையும், தாம் நைட்டிகராயிருப்பதால் இல் லறத்தானை வணங்கக் கூசியிருப்பதையும் அறிந்து சினக்க, இவர், அவர் எழுந் தருளுவித்துக் கொடுத்த சிவலிங்கத்தை அவரிடமே கொடுத்துவிட்டார். சிவ பூசையைத் துறந்தார். தம்மைவிட ஞானத்திற்சிறந்தார் யாரும் இல்லையென்ற எண்ணமும், நைட்டிகரிற் சிறந்தாரில்லை என்ற எண்ணமும் நிலைத்துவிட்டது. அதனால் கண்கட்டிமடத்தினுள்ளேயே அடங்கியிருந்துவிட்டார். இதனைக்கண்ட உலகமக்கள் இவரை உயர்ந்தாராக அநுபவியாகக் கருதிவழிபடத் தொடங்கினர். மக்கள்கூட்டம் திரள இவர் செருக்கும் திரண்டது. அதனால் தன்சிந்தனைக்கு எட்டுவன யாவுமே சிறந்தகருத்து என்ற துணிபு பிறந்தது. பலநூல்களை ஆக்கினர்.

**இவர்செய்த நூல்கள்:**—சிவதருமோத்தரம், சைவசமய நெறி, பரமத திமிரபானு, பரமோபதேசம், ஐக்கியவியல், பதிபசுபாசப்பனுவல், சங்கற்பநிரா கரணம், அகவல், அளவைநூல் முதலிய தமிழிற் செய்யப்பெற்றன. வடமொழி யில் **ஆன்மார்த்த பூசாபத்ததி** முதலியனவும் செய்திருந்தனர் என்பது இவ்வுரை 234, 280ம் பக்கங்களாற்றெரிகின்றது.

இவர் காளத்தியிற் சென்று தீக்ஷைபெற்றதால் காளத்தி மறைஞான பண்டாரம் எனவும், கண்கட்டிமடத்தில் இருந்தமையால் கண்கட்டி மறைஞான பண்டாரம் எனவும், சிதம்பரத்தில் இவரிருந்த மடத்திற்குக் குகைமடம் என்னும் பெயருண்மையின் குகைமடம் மறைஞானர் எனவும் வழங்கப் பெறுகின்றனர். இவரது குருவாகிய காளத்தி கண்ணப்ப பண்டாரம் சிவஞானபோதத்திற்குப் படலப்பாகுபாடு செய்துள்ளனர் என்பது (280 பக்) 'காளத்தி மறைஞானபண் டாரம் சிவஞானபோதத்தில் பத்தாங்கிரந்தத்துட் படலப்பாகுபாடுபடுத்தினழுதிய வாற்றானும் கண்டுகொள்க' என்றுகூறுவதால் அறியப்பெறும்.

களந்தை ஞானப்பிரகாசபண்டாரம் என்னும் ஒருவரும் இவ்வுரையுள் காணப்படுகிறார். அவர் ஆன்மாநந்தவாதி யென்பதுமட்டும் அறியப்பெறும்.

## நியாய தர்க்க வரலாற்றுச் சொற்கள்:

இவ்வுரை ஒருமறுப்புரையாதலின், உண்மை காண்பதற்கும், பொருள் நிச்சயத்திற்கும், பிறன்கோண் மறுத்தற்கும், தன்கோள் நிலைபெறுத்தற்கும் தருக்கநூலும் நியாயமும் இன்றியமையாததாகலின் இம்முனிவர் பெருமகனர் அந்தச் சாத்திரநுணுக்கங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டிச் செல்கின்றார்கள். அவற்றுள் மிகச்சிறந்தன, (157ம் பக்) அத்துவிதத்தைப் பற்றி ஆய்மிடத்து ஐக்கியவகைகள் பதினொன்கையும் தக்களடுத்துக்காட்டொடு அமைத்திருப்பதும்,

சாதக பாதக பிரமாணங்களை எவ்விடத்து எங்ஙனம் கொண்டுநீக்குதல் வேண்டும் எனவிளக்கி யிருப்பதும், ஆநந்தசப்தத்திற்குப் புணர்ச்சிப்பொருள் கூடாது எனக்கண்டிக்கு மிடத்து மறுத்துரைக்கும் மாண்பும் முதலானவைகளாம்.

மூகஸ்வப்பன நியாயம், சோடசகிரகண நியாயம், ஷுரலக்கர நியாயம் (குணக்ஷர நியாயம்) தாலீபுலாக நியாயம், பிரசம்சாவாத நியாயம் முதலிய நியாயங்களும் தக்க இடங்களில் விளங்குகின்றன.

## சிறந்த சொற்பொருள்:

வெள்ளம்: ஒருகாலும்குறைவுநிறைவு இன்றி ஒருதன்மைத்தாய் நிகழும் பெருந் தன்மை. ஆனந்தம்: பலபொருள் படுமாயினும் சிவரசம் எனக் கோடலேசிறந்தது என்பது.



# முத்தி நிச்சயமூலம்

௧. சீர்மேவு மாரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன்—ஊர்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமொன்
றுவ தெனமொழிவேன் யான்.

௧. இப்பாடல் ஆதீன மூலப்பிரதி ஒன்றில் 21-ம் பாடலாக உள்ளது. ஏனைய பிரதிகளில் காணப்படவில்லை.

௨. சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம்
நந்தாது தோற்றுவித்த நற்குரவர்—முந்தவே
எந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம்.

௨. இது ஆதீன மூலப்பிரதியில் 22ம் பாடலாக உள்ளது. ஏனைய பிரதிகளில் காணப் படவில்லை.

௩. அந்நிலையா னும்பிறவு மான்மாநந் தத்திறமாம்
எந்நிலையே சித்திக்கு மென்றியம்பில்—உன்னிலைதான்
இல்லதென வேநீ யியம்பு மளவைமுதற்
சொல்லுமது கேளாய் துணிந்து.

௩. இது ஆதீன மூலப்பிரதியில் 23-ம் பாடலாக உள்ளது. ஏனைய பிரதிகளில் காணப்பட வில்லை.

௪. ஈசன் றனதுசத்தி யின்பருந்து மீசனல்
ஆசறத்தன் சத்தியிலின் பான்மாவு—நேச
முடனருந்து [1]மென்னின்முத்தி யொவ்வாது பாசம்
[2]விடவதுவாய் நிற்பதுவா மே.

௪. இது எல்லா மூலப்பிரதிகளிலும் 5-ம் பாடலாக உள்ளது. ‘[1]முத்திநிலை யோவாது’ ‘[2]விடவுபலம் போற்சிவமா மே’ என்பன பாடபேதங்கள்.

௫. சிற்றின்பம் பேரின்பஞ் சிவகுண மென்றனைநீ
[1]உற்றின் பிரண்டு முணர்ந்திலையோ—சிற்றின்பம்
நாடிற் கருமபல நாதனுருப் பேரின்பம்
நீடிப் படிகம்போ னீ.

௫. இது எல்லா மூலப்பிரதிகளிலும் 6-ம் பாடலாக உள்ளது. ‘[1]உற்றிங் கிரண்டு’ என்பது பாடபேதம்.

௬ பெறுவானும் [1]பேறுநான் பெம்மா[2]னுள் ளுண்டேல்
அறிவாயோ வானந்த மன்றி—யறிவேனென்
ஆனந்தங் காட்டி யகத்திருப்ப [3]னெகிலது
[4]மானந்தான் கண்டறியாய் மற்று.

௬ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 8-ம் பாடலாக உள்ளது. '[1]பேறுந்தாம்' '[2]அருளுண்டேல்' '[3]என்னிலது' '[4]மான மதுபவமொவ்வா' என்பன பாடபேதங்கள்.

௭ வேதா கமத்தின் விதித்தமுத்தி தானன்றி
நீதானே யின்பமென்ற [1]நீதியோ—பேதாய்
[2]பெறுவானீ யானந்தம் [3]பெறென் றுரைத்த
[4]தறியா திருந்தனைநீ யாம்.

௭ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 9-ம் பாடலாக உள்ளது. '[1]செட்டோம்' '[2]பெறுவாய் நீ' '[3]பெற்றென்' '[4]தறுவாய் மறந்தனை' என்பன பாடபேதங்கள்.

௮ [1]உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்திசிவன்
[2]றன்னுருவங் கண்டிருக்கத் [3]தக்கதே—முன்னறிஞர்
ஓது சிவன்றோற்ற மொன்றுமே காண்பரேனும்
போத மறந்தனையிப் போது.

௮ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 13ம் பாடலாக உள்ளது. '[1]உன்னுருவை' '[2]தன்னுருவை' '[3]தக்கதோ' என்பன பாடபேதங்கள்.

௯ ஈசனையே காண வெணத்தவமுன் செய்ததெலா
மோசமாய் வந்து முடிந்ததே—பாச
வினையகன்ற போதும் விமலனே நின்று
டனையறியா மூடர்க்குத் தான்.

௯ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 15ம் பாடலாக உள்ளது.

௰ தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதா நந்தனைநீ
யானென் குணமென் னிடும்பென்னே—ஞானநீ
ஞானகுணம் [1]பெற்றின்னு நானெ னெனநவிலும்
ஈனகுணம் [2]போனதிலை யே.

௧௦ இது எல்லா மூலப்பிரதிகளிலும் உள்ளது. '[1]பெற்ற நாடோறு நானென்னும்' '[2]போச்சு தில்லை' என்பன பாடபேதங்கள்.

௧௧ தோன்றுபர மானந்தச் சோதியன்றி நின்னறிவிற்
றோன்றுசுக முண்டென்றாய் சுத்தப்பொய்—தோன்றுமின்பம்
ஈச னுயிரறிவை நீதன்றி வேறுண்டேற்
[1]பாசமலா தேதுண்டு பார்.

௧௧ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 17-ம் பாடலாக உள்ளது. '[1]பாசமிலா நீயறிந்து பார்' என்பது பாடபேதம்.

௧௨ அண்ணாலைப்போ லாகந்த மான்மாவிற் குண்டாகில்
எண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ—கண்ணிருளை
ஓட்டாதோ வாதவனுக் கொத்தவொளி யுண்டாகிற்
கேட்டாயோ கேட்டிலையேற் கேள்.

௧௩ ஓரின்ப மில்லா துறுமலங்கள் போக்கியிடும்
பேரின்ப நின்குணமென் பேதாய்கேள்—பேரின்ப
நின்குணம்போற் றேன்றுமது நீயாகை யாணிரும்பு
தன்குணமோ [1]தீயியல்பு தான்.

௧௩ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 18-ம் பாடலாக உள்ளது. '[1]அக்கினிதான் சாற்று' என்பது பாடபேதம்.

௧௪ ஆசகற்றி நின்னறிவி லாநந்த மாஞ்சிவனைக்
கூசகற்றி [1]யுன்றன் குணமென்று—பேசியிடும்
பேயாவா திக்கேது [2]பேசிடினீ தானந்த
மாயாவா [3]திக்கே மகன்.

௧௪ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 11-ம் பாடலாக உள்ளது. '[1]நீயென்' '[2]பேசியிடின் முன்னுரைத்த' '[3]திக்கொப்ப வன்' என்பன பாடபேதங்கள்.

௧௫ என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்
துன்றுசிவ [1]போகமெனச் சொல்லாமல்—உன்றன்
நலம்போக மென்றுரைத்தாய் நாமறிவோ நீயு
மலம்போக முத்தியென்ப வன்.

௧௫ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 14-ம் பாடலாக உள்ளது. '[1]போகமதை' என்பது பாடபேதம்.

௧௬ தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூல்
இன்பமுயிர்க் குண்டென் றியம்பியதேல்—இன்பஞ்சீ
வான்மாவிற் குண்டென் றுறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம்.

௧௬ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 24-ம் பாடலாக உள்ளது.

௧௭ சிவசத்தி யைத்திளைப்பர் சீவன்முத்த ரென்னு
மவசத்த மாபா தகமென்—சிவசத்தி
தன்னைப் [1]புணர்ந்ததன்று சாற்றுவமை [2]யுந்தெரியா
தன்னைமுலைப் பாலென் றறி.

௧௭ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 3-ம் பாடலாக உள்ளது. '[1]புணர்வென்றாய்' '[2]எது வமை' என்பன பாடபேதங்கள்.

௧௮ சிவசத்தி யைத்திளைப்ப [1]ராதிமுத்த ரென்னு
மவசத்த மாபா தகமென்—சிவசத்தி
தன்னைக்கண் டாங்கருளாற் சச்சிதா நந்தமெனு
மன்னைத் திளைத்துவாழ் வார்.

௧௮ இது எல்லா மூலப்பிரதிகளிலும் முதற்பாடலாக உள்ளது. '[1]சீவன் முத்தர்' என்பது பாடபேதம்.

௧௯ அன்றியுயிர் சற்சித்தே யானந்த மில்லையதற்
கென்றுபல வாற்றானு மெய்துவிக்க—நின்ற
முறையானு மீசனொடு முற்றுஞ் சமதை
யறையாமை கூறியது மாம்.

௧௯ இது ஆதீன மூலப்பிரதியில் 25-ம் பாடலாக உள்ளது. ஏனைய பிரதிகளில் காணப்படவில்லை.

௨0 ஆனந்த மின்றி யரன்சமதை முத்தியெனிற்
றானந்த வேதா கமஞ்சாற்று—ஞானம்
படுமே தசகா ரியத்திற் பலவுங்
கெடுமேயொன் றுமெனலுங் கேள்.

௨0 இது ஆதீன மூலப்பிரதியில் 26-ம் பாடலாக உள்ளது. ஏனைய பிரதிகளில் காணப்படவில்லை.

௨௧ சிவசமமே முத்தியெனிற் சித்தாந்த மன்றுஞ்
சிவசமய பேதமெனாற் செப்பு—மவைகளிலே
யொன்றென்பர் வேறெனினு மோரேக தேசமத
மன்றெனின்மற் றேற்கு மது.

௨௧ இது ஆதீன மூலப்பிரதியில் 27-ம் பாடலாக உள்ளது. ஏனைய பிரதிகளில் காணப்படவில்லை.

௨௨ உள்ள மலநீங்கி யோங்கு சிவாநந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு.

௨௨ இது எல்லா மூலப்பிரதிகளிலும் 28-ம் பாடலாக உள்ளது.

# சில மூலப்பிரதிகளில் அதிகமாகக் காணும் பாடல்கள்.

*சிவசத்தி யைத்திளைப்பர் சீவன்முத்த ரென்னு*
*மவசத்த மாபா தகமென் — சிவசத்தி*
*சேரத் தனுவல்ல சிற்பரா னந்தவெள்ள*
*மாரத் தெவிட்டா தது.*

*அகம்பிரம மென்னா தடாகெடுவாய் கேணீ*
*சகம்பிரமம் பாசமுறு சொல்லின் — இகம்பரமு*
*நீயே சிவமல்ல நீகருட னாகையினால்*
*நீயே சிவோகமென நில்.*

*நின்மலத்தை நீக்கி நினதுருவைத் தானாக்கு*
*நின்மலமா மானந்த நீயென்றாய் — நின்மலமாந்*
*தன்வடிவாய் நிற்பதுவோ சந்ததமு முத்தியிலே*
*யுன்வடிவாய் நிற்பதுவோ வோது.*

*இன்பமுயிர்க் குண்டென்ற தேதோ யுபனிடத்தே*
*துன்பில் பிரமகீதை சொன்னதே — யின்பஞ்சீ*
*வான்மாவுக் குண்டென் றறைந்ததல வாகுபர*
*மான்மாவுக் குண்டென்ற தாம்.*

*ஆகங் கரணா மறியாமை துக்கசுக*
*போக மவையணைந்த போதெல்லா — மேகமாய்த்*
*தானவையாம் பான்மைபோற் றற்பரமா னந்தநீ*
*தானதுவாய் நிற்குந் தரம்.*

*முத்தி நிலையணுக்கள் சேர மொழிந்திட்டான்*
*சத்திய மெய்ஞ்ஞான சம்பந்தன் — முத்திதனை*
*யீவா னுடன்பேறுங் கொள்வானு மெந்நாளும்*
*ஆவா னனன்னியமென் றாய்ந்து.*

இப்பாடல்கள் முறையே 2, 4, 7, 16, 13, 20-ம் பாடல்களாகக் காணப்படுகின்றன.

பேருரையதனைப் பெற்றியின் முடித்தருள்



திருக்கயிலாய பரம்பரை தருமபுர ஆதீனம்

உரு-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

ஸ்ரீ வெள்ளியம்பலவாண மாபாடியம்

எனவழங்கும்

# முத்திநிச்சயப்பேருரை

### காப்பு

மலைமகள் கொழுநன் மைந்த னைங்கரன்
கலைமகள் சேவடி கருதுதுந்
தலைமை சான்றசெந் தமிழ்பெறற் பொருட்டே

### இதுவுமது

சத்திநிபா தர்க்குத் தகுமுத்தி நிச்சயத்தில்
வைத்தபொரு ளெல்லாம் வராதெனினுஞ்-சித்தத்தில்
தோன்று மளவுந் தொகுத்தெழுத ஞானமதங்
கான்ற மழகளிறே காப்பு.

### குருவணக்கம்

தென்கமலை மேவுந் திருஞான சம்பந்தன்
றன்கமல பாதந் தலைமேற்கொண் —டென்கமலத்
தேதா னிருந்துணர்த்தச் செய்தளவிற் செய்யுமெனைப்
பேதாயென் றுரே பிறர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# சிறப்புப்பாயிரம்

மலர்தலை யுலகி னிருள்கெடத் தோன்றும்
பலர்புகழ் கதிரெனப் பழிநெறி மேற்கொள்
சிலர்மன விருள்கெடச் சிறந்த செய்கையின்
அலகில ரிதுசிவா நந்த மாமெனத்
துணிபொருள் காணத் துலங்கு மாடியின்
அணிபெறத் தொகையி னறிஞரு மறிதரக்
குறிவழி யநுபவங் குருமொழி முதனூல்
நெறிதிகழ் முத்தி நிச்சயம் பண்ணினன்
அறுமூன் றீரிண் டானவெண் பாட்டின்
ஒழுகு நல்லறத் தொழுகலுஞ் சிறிதும்
வழுவில் கல்வியும் வாய்மையு முழுதுணர்
நிலைமையு முடையோர் நின்று தாடொழுந்
தலைவ னெம்மனோர் தம்பொருட் டாகத்
துறவறம் பூண்ட தோன்றன் ஞானத்
திறநெறி நிறுத்துஞ் செங்கோல் வேந்தன்
முறைவழி மரபின் முதிர்ந்தமெய்ஞ் ஞானம்
நிறைதர நிகழ்ந்த நின்மலன் கமலை
உறையுஞா னப்பிர காசனென் றொருவன்
திருவடி யேதின மிறைஞ்சுந்
தருமை ஞானசம் பந்ததே சிகனே.

என்பது பாயிரம்.

நூல் கேட்கப்புகுவார்க்குப் பாயிரம் உரைப்பது என்னை எனின்,

[1] ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே.

என நூற்கு இன்றியமையா உறுப்பாக எடுத்தோதலின், ஒருவரை அறிய வேண்டுழி முகமன்றி அறியப்படாவாறுபோலச் சிறந்த உறுப்பாகிய இஃதன்றி நூலறியப்படாமையின், நான்முகமெனப் பெயர்பெறும் இதனைக் கேட்டே நூல் கேட்க வேண்டுமாகலின் ஈண்டு இப்பாயிரம் முற்படவுரைத்தது. என்னை,

[2] பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்கும்.

என்றாராகலின். அப்பாயிரம் பொதுவுஞ் சிறப்புமென இருவகைப்படும். அவற்றுள் பொதுப்பாயிரம் ஈண்டுணர்த்திற் பெருகுமாகலின் இன்றியமையாதுணர்த்த வேண்டுஞ் சிறப்புப்பாயிரத்தியல்பே சிறிதுணர்த்துதும். அஃது இச்சிறப்புப் பாயிரத்தின் பொருளுணர்த்துமுகத்தாற் புலப்படுத்த வேண்டுதலின் முதற்கண் இதன்பொருள் கூறுதும்.

**மலர்தலை உலகின் இருள் கெடத் தோன்றும்**
**பலர் புகழ் கதிர் என**

என்பது, பாரிற் பலரும் வழிபடுங் கதிரோன் பரந்தவிடத்தையுடைய இந்நில வுலகத்துள்ளார்க்கு உபகாரமாகப் பரம்பிய இருளைத் துரக்குஞ் சிறந்த செய்கை போல

**பழிநெறி மேற்கொள்**
**சிலர் மன இருள்கெடச் சிறந்த செய்கையின்**

என்பது, தொன்றுதொட்டுவருஞ் சந்தானமரபிற் சைவசித்தாந்த மன்றிப் பிறராற் பழிபடுமரபிற் பிறிதொன்றை மேற்கொண்டு இதுவே சித்தாந்தமென மயங்குஞ் சிலருடைய மனத்திருள் தீரக் கருணையாற் செய்யுஞ் சிறந்த செய்கை காரணமாக;

**அலகிலர் இது சிவாநந்தம் ஆம் எனத்**
**துணிபொருள் காண**

என்பது, தொன்று தொட்டுவரும் மரபிற் சந்தானகுரவர் சமயகுரவர் முதலாயுள்ள சைவசித்தாந்திகளனைவரானுஞ் சிவாநந்தமாவதே சித்தாந்தமுத்திநிலையெனப் பலவகைப்பட்ட சற்பிரமாணங்களானும் அறுதியிடப்பட்டது கருதிய பொருளாக;

**துலங்கும் ஆடியின், அணிபெறத் தொகையின்**

என்பது விளங்குஞ் சிறுகண்ணாடி அகன்ற பெரும்பொருள்களைத் தனக்குள்ளே

---

1 இறையனார் களவியலுரை மேற்கோள். 2 ௸ உரை.

அடக்கிக் காட்டுமாறுபோற் காட்ட அழகொடுந் தொகுத்து யாத்தமையின்;

அறிஞரும் அறிதர

என்பது, சிறிது கேள்வியின் முத்திநிலை அறியவேண்டும் பரிபாகமுடைய சிலர் அறிதலே பயனாகச் செய்ததாயினும், முழுதுணர்ந்தோரும் இதுவும் உணர்ந்திட வேண்டுமென விரும்பிக் கற்பராகலின் அதுவும் பயனாக;

குறிவழி அநுபவங் குருமொழி முதல் நூல்
நெறிதிகழ் முத்தி நிச்சயம் பண்ணினன்

என்பது, குருவுபதேசமும், அக்குருவருளாற்பெற்ற உபதேசப்படி நின்று அநுட்டிப்ப உள்ளபடியே நிகழ்ந்த அநுபவமும், இவ்விரண்டிற்கும் இயைந்த முதனூல் வசனங்களும் இம்மூன்றும் ஒப்பநாடி உண்டானபடியே பிரமாண விரோதமின்றி இதுவே சித்தாந்த நிலையென முத்திநிச்சயம் பண்ணினன்;

அறுமூன்று ஈரிரண்டு ஆன வெண்பாட்டின்

என்பது, இருபத்திரண்டு வெண்பாட்டான் முடிவுபோகச் செய்தான்; அவன் யாரெனின்;

ஒழுகும் நல்லறத்து ஒழுகலும் சிறிதும்
வழு இல் கல்வியும் வாய்மையும் முழுதுணர்
நிலைமையும் உடையோர் நின்றுதாள் தொழும்
தலைவன்

என்பது, தத்தமக்கேற்ற நிலைகளில் நின்று ஒழுகும் நல்லறநெறி யொழுக்கமும், சிறிதுங் குற்றமில்லாத கல்வியும், ஞானவியல்பு முழுதும் உணர்ந்து ஒழுகும் ஒழுக்கமும் உடைய நன்மாணாக்கர் நின்று தன் திருவடியை வழிபடுமுறையே வழிபடத் தன்னியல்பினிருக்கும் முதல்வன்;

எம்மனோர்தம் பொருட்டாகத்
துறவறம் பூண்ட தோன்றல்

என்பது, எம்போல்வார் கண்டு பிழைத்தற்பொருட்டு, விலக்கிய ஓம்பி விதித்தன ஒழுகும் துறவறத்தை இயல்பாகப் பூண்ட விரத்தர் சிகாமணி;

ஞானத்
திறநெறி நிறுத்துஞ் செங்கோல் வேந்தன்

என்பது, ஞானநிலையிற் றத்தம் பரிபாகத்திற் கேற்க நின்றொழுகுமாறு நிறுத்தும் ஆணையுடைமையின் நீதியான் மிக்க ஞானவேந்தன்;

முறைவழி மரபின் முதிர்ந்த மெய்ஞ் ஞானம்
நிறைதர நிகழ்ந்த நின்மலன் கமலை

**உறையும் ஞானப்பிரகாசன் என்று ஒருவன்**
**திருவடியே தினம் இறைஞ்சும்**
**தருமை ஞானசம்பந்ததேசிகனே.**

*என்பது, அவிச்சின்னமாய் வருகிற மெய்கண்டதேவசிவாசாரியர் சந்தானத்தில் சற்சம்பிரதாயமாகப் பெறும் ஞானோபதேசத்தாலுண்டான முறையே அதீதமளவும் நிறைய அநுபவிக்க நிகழ்தலின் சிறிதேனும் மலமின்மையின் நிருமலனயினேன், திருவாரூரிலிருக்கும் ஞானப்பிரகாச தேசிகன் என்னும் உத்தம குரவனுடைய திருவடியைத் தினமுந் தவறாது வழிபடும் திருமயிலாடுதுறையுள்ளே தருமபுரமான திருநகரத் தெழுந்தருளியிருக்குந் திருஞானசம்பந்த தேசிகன் என்றவாறு.*

உலகத்துள்ளோர்க்கு ஒருவழிக் கதிரோன்கிரணங் கலவாமையான் இந்திரியார்த்த [1]சன்னிகரிடங் கிடையாமையிற் கண்கூடாக அறியவேண்டும் பொருளை யதார்த்தமாக அறியாது போலியைப் பொருளென உட்கொள்ளுமாறு நிகழ்வது இருளன்றே; [2]அது கலந்துழிப் [3]பாவமூலமன்மையிற் காணுமையே கேடாகக் கழிந்தபின் உண்மையை அறிந்து பயன்கொள உபகரிக்குஞ் சிறந்த செய்கையால் பாரிற்பலரும் மகிழ்வெய்துமாறுபோல, ஈண்டுஞ் சிலர்க்கு அவிச்சின்னமாக இயன்றுவரும் மரபிற் சற்குருவருளால் ஞானோபதேசங் கிடையாமையின் சற்சம்பிரதாய மின்மையால், அநுபவத்திற்கு ஏற்பக் குருமுகத்தாற் சிரவணம் பண்ணிய பின்னர்ச் சிவாகமப் பொருள்களை யுத்திபூர்வமாக மனனம் பண்ணப்பெறுமையின், சித்தாந்தமல்லாத பிறிதொன்றைத் திரியக்கொள்ளுங் கோட்பாடன்றே, சற்சம்பிரதாய விவகாரங்கண்டுழிப் பிரமாணமூல மன்மையின் எளிதிற் காணுமையே கேடாகக் கழிந்தபின், உண்மையையறிந்து பயன்கொள உபகரிக்குங் கருணைச் செய்கையாற் பிறர்சிலர் மகிழ்ந்து புகழ்வர் என்பது தோன்ற **மலர்தலை யுலகின் இருள்கெடத் தோன்றும் பலர்புகழ் கதிரெனப் பழிநெறி மேற்கொள் சிலர்மன இருள்கெடச் சிறந்த செய்கையின்** என்றது. அன்றியும், பலர்புகழ் கதிர் என்றதனால் மறைமொழிகின்றவாறே கதிரோனிடத்துச் சிறப்பித்து விளங்குஞ் சிவனது இயல்பு நோக்கி, அனைவரும் தத்தம் பதியென வணங்குதற்கு உரிமை கிடந்தவாறுபோல இவ்வாசிரியனிடத்துந் தான் அவனுய்நின்ற ஞானச்சிறப்பு நோக்கி அனைவரும் வணங்குதற்கு உரிமையுந் தோன்றக் கிடந்தது. சிறந்த என்னும் பொருளடை உவமையினுஞ் சென்றியையும். ஈண்டுச் சிலர் என்றதனால் அவர்கள் ஒருவர் இருவரே யன்றிப் பலர் இலர் என்க. எனவேவெகுசனபரிக்கிரகமுமில்லை என்பதாம்.

இனி, அவ்வாறின்றிச் சிவாநந்தாநுபவமாவதே சைவசித்தாந்த முத்தியெனப் பலரும் உட்கொண்டு ஒழுகுமாற்றால் வெகுசனபரிக்கிரகம் உண்டென்பது தோன்ற **அலகிலர் இது சிவாநந்தமாமெனத் துணிபொருள் காண** என்றது. அன்றியுந் துணிபொருள் காணவென்றதனால் சிவசமதை கூறும் பிறர்போல என்பிலாப் புழு முதலிய எண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதத்தும்

[1] சன்னிகரிடம்—சம்பந்தம். [2] அது என்றது கதிரோன் கிரணத்தை. [3] பாவமூலமன்மையின்—உள்பொருள் காரணமாகாமையின்.

பிறப்பித்தன்முதலிய கிருத்தியங்களாற் றிரிந்த சிற்றுயிர் அவராற் கருணை பண்ணப்பட்டுழி,

1 "எண்ணில்பல் கோடி குணத்தரேர் வீழி
யிவர்நம்மை யாளுடையாரே"

என்னுந் திருவிசைப்பா முதலிய பிரமாணங்களான் அளவிறந்த குணங்களான் மிக்குள்ள பரமசிவனென அறிந்தும், அவனொடு [2]சரி யாமெனப் பொய்ம்மொழி கூறுமாற்றால் தன்னை வியக்கும் ஆன்மத்துதியுர், நாயகப்பழுதுபடச் சிவநிந்தனையும் செய்தமையாற் சிவத்துரோகமுஞ், சமயத்துரோகமு முடையராய் ஆழ்ந்த கொடிய நரகத்தழுந்தி எழாதவாறு விழாமன் முத்தியினுஞ் சிவனுபகாரத்தை உண்மையாகக் கூறுதலால் நாயக முதன்மையும், செய்ந்நன்றி பாராட்டலும், சமயநிலை விளக்கமும் தோன்ற நிகழ்த்துஞ் சிவாநந்தாநுபவவாதிகள் அவ்வநுபவம் பெறுவிடினும் பதிகருணையாற் பரலோகமுண்டென்பதுந் துணிந்தமை தோன்றக் கிடந்தது.

அநேக சிவாகமங்களானும், அவற்றின் வழிநூல்களானும் விரித்துணர்த்திய சித்தாந்த முத்திநிலைமை சில செய்யுளாலுணர்த்துவது கூடாமையின் புகழ்ச்சி வாதமென்று வருதலின், அது நீக்குதற்கு யுத்தியினடங்கச் செய்தமை தோன்றத் **துலங்கும் ஆடியின்** என்றது. அதனல் வாய்ப்பதோர் அழகேயன்றிச் சொற்பொருளியலுக்கு மாறுபடாது ஒத்து முடியச்செய்யும் அழகுடைமையுந்தோன்ற **அணிபெற** என்றது.

[3] முற்பவ மெவற்று முற்று முதுதவ வலியாற் சைவத்
தப்பருஞ் சரியை யாதி சரித்தருள் சார்வ ரன்றிச்
செப்பிய தொழில்செய் யாதே திருவருள் சேர்வோ ருண்டேல்
இப்பவ மொழிந்த முற்பா லியற்றின ரென்ன லாமே.

என ஞானபூசாகாரணத்தில் உமாபதிசிவாசாரியார் கூறுமாறே எல்லாம் ஒரு பிறப்பிற் கற்று அநுட்டித்து முடியாமையின் முன்னுள்ள பிறப்பிலே முடிவனவெல்லாம் முடிந்து, இப்பிறப்பிற் பெரும்பான்மையும் குருபணிவிடை மாத்திரத்தின் அக்குருவருளாற் பெற்ற சிவாநுபூதி உடையோர் உண்மைமாத்திரந் தெளிதற்கேற்ற [4] அத்தியான்ம சாத்திரமான உபதேசகலாபாகங்களைக்கற்று அதனனே அமைதிபெற்றிருப்பராகலின், அவர்கள்பால் அவ்வாறு முற்றுப் பெருத பிறர், சிலர் தடுமாறக்கூறியவழி அன்னோர் வாதநூல்களிற் செல்லாமையின், மலையவரினும் வருமன்றே; அவ்வாறு நிகழாவண்ணம் இவர்களுஞ் சிறிது கேள்வியின் எளிதாக முத்திநிச்சயம் பண்ணுவதற்கு உபகாரமாதலேயன்றிப் பிறர்க்கும் பயன்படும் என்பது தோன்ற **அறிஞரும் அறிதா**என்றது.

[5] இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்.

---

[1] திருவிசைப்பா; திருவீழிமிழலை. [2] 'சரி யாம் என' என்பதை அவனோடு யாம் சரியெனக் கூட்டுக. [3] ஞானபூசாகாரணம், 8. [4] சித்தாந்தப்பிரகாசிகையில் ஆன்மஞானத்தைப் பயப்பிக்கும் நூல்களை அத்தியான்மிகநூல் என்றதன் கருத்துவேறு. [5] திருக்குறள், கேள்வி 5.

[1] கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே.

என்பவாகலின், பிறர் பலவுங் கற்றுரெனினும், குருபரம்பரையாகவரும் அவிச்சின்ன சம்பிரதாய வுபதேசத்தினிகழும் அநுபவ முண்டாயினோர் அவர் சொற்களைக் கொள்ளாமை நியாயமாகலின், அவையிற்றை நீக்குதற்கும், பிறருக்குக் குருபரம்பரையாகவரும் ஞானோபதேசம் இல்லையாகவும் உண்டானவாபோல் சில கற்பித்துக் கூறலின், அது பொருந்தாமை காட்டி நிராகரிக்கு மாறுபோல ஈண்டுக் கூடாதென்பதற்கும் **குறிவழி அநுபவம் குருமொழி** என்றது,

முதனூலொடு மாறுபடவரும் குற்றமின்ருக, அதன் வழியே சென்று தனது கற்பனையின்றிக் கூறினமை தோன்ற **முதனூனெறிநிகழ் முத்திநிச்சயம் பண்ணினன்** என்றது. ஈண்டு முதனூலென்றது காமிகாதி சிவாகமமும், அவற்றின் வழிநடந்த உபாகமமும், சந்தான சமயகுரவர் வாய்மொழியும் பிறவுமாம்.

இவ்வளவு செய்யுளென வரையறை கூருக்கால் நூன்முடிபு தெரியாதாகலின் **அறுமூன்று ஈரிரண்டானவெண்பாட்டின்** என்றது.

தனது அநுட்டான மாத்திரமன்றித் தன்னை அடைந்தவர்க்குந் தத்தம் மரபிற் கேற்ப நால்வகை நிலையுமுணர்த்தி அநுட்டிப்பித்தலின் அனைவரும் பயன் பெற்றமையான் மேன்மேலும் உண்டாகுஞ் சந்தான பரம்பரையாற் சம்பிரதாயம் நடத்துவிப்பது தோன்ற **ஒழுகு நல்லறத் தொழுகலுஞ் சிறிதும் வழுவில் கல்வியும் வாய்மையு முழுதுணர் நிலைமையு முடையோர் நின்று தாடொழுந் தலைவன்** என்றது.

[2] காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் யெவ்விடத்தும் போகமும்பொய்—மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னியென்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தோன்றுமே மெய்.

[3] பூதங் கடந்த புகழ்க்கூடற் சம்பந்தன் போதித்தசொல்
வாதங் கடந்து மனோலய மாயிந்து மண்டலம்போய்
நாதங் கடந்து நடுவெளி தாண்டி நலஞ்சிறந்த
போதங் கடந்தின்ப பூரண மாகிப் பொலிந்ததுவே.

[4] கருணைக ரன்புக ழாகர னெங்கள் கமலையில்வாழ்
திருஞான சம்பந்த தேசிகன் சொற்படி சென்றுநிற்க
ஒருநா ணிகழ்ந்தது சொல்லவற் றோநின் றுயிர்ப்பறவே
தருகாய மின்றியோ ராநந்த மெங்குந் தலைப்பட்டதே.

---

1 திருஞான தேவாரம், திருநல்லூர்ப் பெருமணம் 1. 2 சிவபோகசாரம், 10. 3 குமர குருபர சுவாமிகள், தனி. உ. வே. சா. பதிப்பு. 4 பரம்பரைத் தனிப்பாடல்.

எனவும் பிறவும் வருதலான் இவர் மாணுக்கர் நிலைமை காண்க. திருவருளே தநுவாயிருத்தலிற் றனக்கென உறுதிபயப்பப் பிறிதொன்றும் நிகழ்த்த வேண் டாமையின் பிறர்கண்டு பிழைத்தற்கு உயர்ந்த அறங்களைப் பூண்டொழுகுவது தோன்ற எம்மனோர் தம்பொருட்டாகத் துறவறம் பூண்ட தோன்றல் என்றது.

அது,

[1] உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யில்க ளோங்கிவந்தால்
தடுக்கப் பழைய வொருவேட்டி யுண்டு சகமுழுதும்
படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு பசித்துவந்தாற்
கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே.

என்பது முதலிய அவர் வாய்மொழியானும் காண்க. இவ்வாறு நின்றாராயினும் அதனைப் பொருளாக எண்ணாது ,சிவாநுபூதியே பொருளாகக்கருதி அநுட்டித் தும், அநுட்டிப்பித்தும் வருதலின் இவ்வாசிரியர் அதிவர்ணாச்சிரமியேயாம். அது,

[2] எடுத்தவுடற் கேய்ந்தகன்ம மெப்போது மூட்டும்
விடுத்துவிட்டோ மென்பர் விழலர்—விடுத்த
ததுவன்றே யைந்துமல மாறுது நீத்த
இதுவன்றோ யாந்துறவென் பேம்.

என்பதனானறிக. என்னை? சூதசங்கிதையில், முத்திகண்டத்திலே,

1. एवमात्मानमद्वन्द्वं निर्विकल्पं निरञ्जनम्।
नित्यं शुद्धं निराभासं संविन्मात्रं परामृतम्॥ (5-41)

2. यो विजानाति वेदान्तैः स्वानुभूत्या च निश्चितम्।
सोऽतिवर्णाश्रमी नाम्ना स एव गुरुरुत्तमः॥ (5-42)

என அதிவர்ணாச்சிரமி யிலக்கணங் கூறுதலின் தம்மை அடைந்த மாணுக் கரது சத்திநிபாத நிலைமை கண்டு கருணையான் அவரவர் தன்மைக்கேற்ப அநுக்கிரகம் பண்ணுமிடத்து நிகழும் அவசர பேதங்களால், இஃதின்ன அவசரம் இஃதென்ன அவசரமென அவரவரநுபவங் கண்டறிந்து கீழாய நிலை நின்றாரை மேலாய நிலைவாய்ப்ப நிறுத்தியும், மேலாயநிலை வாய்ப்பின் அதிலே அமைதிபெற வசனபூர்வமாக அறிவிக்குமாறே அறிவித்து நிறுத்தியும் அநுபவ தீக்கை பண்ணும் வல்லமை தோன்ற ஞானத்திறநெறி நிறுத்துஞ் செங்கோல் வேந்தன் என்றது. அது,

[3] அறியாமை நிற்கு மதிதத்தி லேசென் றறிவொடுநான்
அறியாமை தோன்றநின் றேனின் றளவி லவிழ்ந்துநிற்க
அறியாமை யிற்பெறு பேறிழந் தேனினி யாயினுநான்
அறியாமை தீர வருண்ஞான சம்பந்த வாரமுதே.

எனவும்;

---

1 பரம்பரைத் தனிப்பாடல். 2 சிவபோகசாரம், 77. 3 ப. தனிப்பாடல்.

1 ஆர்க்குந் தெரியாத வானந்த வின்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டு விடுகுதில்லை—யார்க்குந்
தெரியாப் பரப்பிரமஞ் சேர்த்தா யுனக்குச்
சரியார் சிதம்பரநா தா.

2 வான்பார் கமலைத் திருஞான சம்பந்த மன்னனென்கோன்
ஊன்பா ருடற்பவ நீக்கிட வேமொழி யோர்வசனம்
தேன்பாகு கற்கண் டிளநீ ரளேமுறி சீனிகன்னல்
ஆன்பா லினுந்தித்தித் தாற்றாய்ப் பெருக லதிசயமே.

எனவும் பிறவும் வருதலாற் காண்க. அன்றியும்,

3 உருவை யருவை யொளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே—மருளைப்
பிறிந்துதனைக் கண்டவிற் பின்னமற வெங்குஞ்
செறிந்தபொரு டானே சிவம்.

4 தத்துவத்தை விட்டருளிற் றன்கலந்து தன்னிழப்பின்
மெத்துஞ் சுகத்தின் மிகவழுந்திச்—சுத்தமாய்
ஒன்றாகி நின்ற வுணர்வு மொழிந்தக்கால்
அன்றே சிவபோக மாம்.

5 அறிவிழந்து நின்ற*சிவ வாநந்தத் துள்ளே
குறியிழந்து நின்று குலாவிப்—பிறியா
திருந்தாற் பிறப்பறுமோ விச்சைமால் கொண்டு
திரிந்தாற் பிறப்பறுமோ செப்பு.

என்றற் றொடக்கத்தாலுணர்த்துமாறுங் காண்க. இவ்வாறு வருவன வெல்லாம் இவ்வாசிரியர் செய்த அநுபூதிவெண்பாவிற் கண்டு கொள்க.

இவர் அவிச்சின்ன சற்சம்பிரதாயியாவது இவரடிகள் அவ்வாறு உடையராயினன்றே; அதனால் அவ்வடிகள் அவிச்சின்ன சற்சம்பிரதாயி யென்பதூஉம் தோன்ற முறைவழி மரபின் முதிர்ந்த மெய்ஞ்ஞானம் நிறைதர நிகழ்ந்த நின்மலன் கமலை உறையு ஞானப்பிரகாசன் என்ற ஒருவன் என்றது,

முறைவழி மரபின் வருவது:-

6 தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர் பரஞ்சோதி மாமுனிகள் பதியாய் வெண்ணை
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு விரவுபுக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச் சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே.

எனவருதலின், இவ்வாறுகூறும் உமாபதிசிவாசாரியரும் மச்சுச்செட்டியா (அருணமச்சிவாய)ரும் மறைஞானசம்பந்த குரவர்பால் அருள்பெற்றார். அவருள்

1 சிவபோக, 43. 2 ப. தனிப்பாடல். 3, 4, 5 சிவபோக, 17, 95, 109. * சுக வானந்த மென்பதும் பாடம். 6 சிவப்பிர-பாயிரம், 5.

மச்சுச் செட்டியார்பால் அருள்பெற்றார் காழிக்கங்கை மெய்கண்டார். அவர்பால் அருள்பெற்றார் காழிப்பழுதைகட்டிச் சிற்றம்பலநாடிபண்டாரம். அவர்பால் அருள்பெற்றார் பழுதைகட்டிச் சம்பந்தபண்டார முதலியோர். அவருள் பழுதைகட்டிச் சம்பந்த பண்டாரத்தின்பால் அருள்பெற்றார் சிவபுரம் ஞானப்பிரகாச பண்டாரம். அவர்பால் அருள்பெற்றார் சிவபுரம் தத்துவப்பிரகாச பண்டாரம். அவர்பால் அருள்பெற்றார் செட்டித்தெருப் பழுதைகட்டி ஞானப்பிரகாச பண்டாரம். அவர்பால் அருள்பெற்றார் சிதம்பரநாத மாசிலாமணி கமலைஞானப்பிரகாச பண்டாரம் முதலியோர். அவருள் சிதம்பரநாத மாசிலா மணிகமலைஞானப்பிரகாச பண்டாரத்தின்பால் அருள்பெற்றார் இந்நூல் செய்த குருஞானசம்பந்தகுரவர் என்க.

திருவாரூர்ச் செட்டித்தெருப் பழுதைகட்டி ஞானப்பிரகாச பண்டாரத்தின்பால் அருள்பெற்றார் பலருளரேனும் இவரே சமாதிநிலை சிவாகமம் முதலிய வற்றான் மிக்குத்தோன்றி அதிகாரத்திற்குரிய சிறப்புப் பெயர்பெற்று, ஞான சம்பிரதாயத்தை இந்நூலிற் செய்த குருஞானசம்பந்த குரவர்க்கருளிச் சந்தான பரம்பரையாக நடாத்துவித்தலின் அப்பெருந்தன்மை தோன்ற **ஞானப்பிரகாச னென்றொருவன்** என்றது. அது,

[1] வல்லான் கமலையின் ஞானப்ர காசன் வசனமுணர்ந்
தெல்லாம் வெறுமித்தை யென்றுகண் டேனின்ப வாரியுள்ளே
செல்லாமற் சென்றதைத் தேக்காமற் றேக்கித் தினந்தினமும்
நில்லாம னின்றுகொண் டேனிது வேமுத்தி நிச்சயமே.

எனவும்,

[2] ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவாநந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.

எனவும், பிறவும்வரும் இவ்வாசிரியர் வாய்மொழியானும்,

[3] வானத்தி லமுதுளது மதுரிக்கு மதுபருகின் மரணமணு காதென்று பூ
மண்டலத் தவரறியு மாறுபோ லோகலையில் வரைந்துபதி பசுபாச மென்
றூனத்தி லறிவதல தநுபவித் தறிதலுக் கொருமைப் படாம லவமே
உலகெலாங் குருவெனத் திரிவரவர் போதனைக் குணையொத்த குருவாவரோ
தானப்ர காசந் தவப்ரகா சம்பரம சைவசித் தாந்த நிலையிற்
சகலாக மப்பிரகா சப்ப்ரவுட கவிதைவித் தாரப்ர காச முறலான்
ஞானப்ர காசகுரு வேகுரு வெனக்கூறி நாத்தழும் பேற்று குருவே
நாதாந்த குருவேதி கந்தகுரு வேகமலை ஞானசம் பந்த குருவே.

என இவ்வாசிரியர்பாற் செய்த தமிழானும் பிறவாற்றானும் உணர்க. இவர் சற்சம்பிரதாயத்தை உபதேசிக்குஞ் சற்குரவராவது குருவாதற்கு விதியுண்டாயினன்றே; சூதசங்கிதையில்,

---

[1], [2] ப. தனிப்பாடல், [3] ஞானசம்பந்தகுரு தசமணிமாலை 4.

3. शूद्राणां च तथा स्त्रीणां न गुरुत्वं कदाचन। (முத்தி. 5-7)

எனவருதலின், இங்ஙனம் கூறும் ஞானப்பிரகாச பண்டார வழியிலுள்ளார் அனைவரும் வேளாண்மரபினராகலின் அன்னோர்க்குக் குருத்துவவிதியின்மையின் குரவரல்லராம் பிறவெனின், ஆண்டு அவ்வாறு கூறினும் வாயுசங்கிதையில்,

4. शिवशास्त्रसमायुक्ताः पशुशास्त्रपराङ्मुखाः।
ब्राह्मणादिचतुर्वर्णा आचार्यास्तु प्रकीर्तिताः॥

எனவருதலின், அது அசற்சூத்திரர்க்கே விலக்குதலின் சற்சூத்திரர்க்கு விதியுண்டாமென்க. அசற்சூத்திரர் சற்சூத்திரர் என்னும் இருவரும் புராண விதிவிலக்கு உடையராகலின். இதற்கிவ்வாறன்றி, சூத்திரர் அவரினுமுயர்ந்த மூவருக்கும் குருவாதல் இன்மை கருதி விலக்கும், அவரோடொத்த மரபினர்க்குக் குருவாதல் கருதி விதியும் நிகழ்ந்ததெனின் அசற்சூத்திரர்க்கும் குருத்துவ விதியுண்டாகலானும், ஏனைய வணிகர் அரசர்க்கும் அவ்வாறு ஒத்தலின் ஒருவழி விலக்கும் விதியும் வேண்டும் அஃதின்மையானும் பரிகாரமாகாதென்க.

அன்றி இவ்வாறு நிகழ்ந்தது புராணம்பற்றி வந்த வைதிக வசனமாதலின் அதற்குப் பரிகாரமின்றி விலக்கே வலியுடைத்தாயினும், சுப்பிரபேதத்திலே,

5. ब्राह्मणाः क्षत्रिया वैश्याश्शूद्राश्शुद्धकुलोद्भवाः।
आचार्यास्ते हि विज्ञेया नान्येषान्तु कश्चन॥

என்றற் றொடக்கத்துச் சிவாகம வசனங்களான் விதி கிடைத்தலின், இதற்கு விரோத வாக்கியமாகலின் ஈண்டு உட்கோடல் சைவர் கடனன்றென்க. என்னை? துவிசதிகாலோத்தரத்திலே,

6. ब्राह्मणाः क्षत्रिया वैश्याः शूद्राश्शुद्धास्तु साधकाः।
स्ववर्णादानुपूर्व्येण आचार्यास्तु षडानन॥

எனவருதலின், வைதிக வசனமெல்லாம் சைவத்திற்கு விரோதியாதல் நீக்கியும், அவிரோதியாதற் கூட்டியும் கொள்வாராகலின் அவையிவ்வாறாயின.

7. वैदिकं सर्वसंग्राह्यं शैववाक्याविरोधि यत्।

எனக்காமிகத்தினும்,

8. विन्ध्याद्रेर्दक्षिणे राज्ञामुत्तरे वैश्यजन्मनाम्।
सान्तानिकस्य सर्वत्र न च शूद्रस्य कीर्तनम्॥

எனச் சிவாகமத்தினும் சூத்திரர்க்குக் குருத்துவவிதியின்றென விதித்தலான் முற்காட்டிய புராணவசனம் விரோதியன்மையின் குருத்துவம் இன்றென்றே கொள்ளல்வேண்டும்; ஈண்டும் ஒருவழி விலக்கும் ஒருவழி விதியும் உண்மையின்

முற்கூறியவாறுபோல அசற்சூத்திரர்பால் வைத்துக் கூறுதற்குச் சிவாகமத்திலே,

9. अमद्यपास्तु ये शूद्राः शौचाचारक्रियादराः।
शिवभक्ताश्च वै तेषां दीक्षा कार्याऽन्यथा नहि॥

எனச் சற்சூத்திரர்க்கே தீக்கை விதித்தலின் குருத்துவ விதிப்பிரகணத்தில் அசற்சூத்திரருக்குப் பிராத்தியின்மையின் கூடாமையான். அன்றி உயர்ந்த மூவரைக் குறித்துமாத்திரம் விலக்கெனவும், ஏனையோரைக்குறித்து விதியெனவுங் கோடற்கு முற்கூறியவாறே கூடாமையின் அதுவும் பொருந்தாதாம். அதனாற் சூத்திரர்க்குக் குருத்துவமின்றென்றது சிவாகம வசனத்தால் வலியுடைத்தாயிற்றெனின், அது கூறுதும்; சூத்திரர்க்கு அவரினுமுயர்ந்த மூவர்க்கும் தொழில் செய்வதே கடனென விதிக்கும் வைதிகத்திலேயும் குருத்துவவிதியுண்டெனக் கிடைத்தால் நிருவாண தீக்கை பரியந்தம் விதித்து விசேடதீக்கை முடிந்தளவில் சிவபூசை சிவாகமசிரவண முதலியவற்றின் உரிமை கூறுஞ் சிவாகமத்திற் குருத்துவவிதி யில்லையென்றுபோகாது. போமேல் சுப்பிரபேத முதலிய சிவாகம வசனங்களில் சூத்திரர்க்கு ஆசாரியத்துவம் விதித்தது பயன்படாதாம். அதனாற் சிவாகமங்களிலே சூத்திரர்க்குக் குருத்துவம் விதித்ததற்கும் விலக்கியதற்கும் பிறிதொரு பயனுண்டென்று கூறவேண்டும். அஃதெவ்வாறெனின் சூதசங்கிதையிலே,

10. द्विजस्याश्रमधर्मत्वं चतुर्धा परिकीर्तितम्।
ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थो यतिः क्रमात्॥

11. गृहस्थाश्रमधर्मित्वं तथार्हश्च नचापरम्।
तापस्यं मा पुनस्तेषां ब्रह्मचर्यं विधीयते॥

இதனாற் சூத்திரர்க்கு நாலாச்சிரம தன்மமும் விதியாகலின் அவருட் சிலர்க்கு விதியும், சிலர்க்கு விலக்குமாய் உட்கொள்ளப் படுமென்க. ஈண்டுத்தாபசியமென்பது,

12. लोकानुग्रहकर्तारौ वनस्थतापसौ नहि।

என்பதனால் வானப்பிரத்தமே பொருளாகலின் சந்நியாசாச்சிரமங்கூடாதெனின் தாபசியமென்பதனான் மூன்றாமாச்சிரமமும் நாலாமாச்சிரமமும் பொருளாகலின், கூடுமென்க; சந்நியாசாச்சிரமத்தை யடைதனிமித்தமே வந்ததாதலாற் காரிய காரண மிரண்டும்ஒன்றென உட்கொண்டு கூறியதாகலின். அன்றி, கிருகத்தாச்சிரமதன்மம் பிரமசரியம்விட்டு நிகழாமையின், கிருகத்தாச்சிரம விதியுட் பிரமசரியம் அடங்குமாதலிற் பின்னுமொருகாற் பிரமசரியம் விதித்தது அப்பிரமசரியமன்று, துரியாச்சிரமத்தையாகலின், அதுவே துரியாச்சிரம விதியெனினுமாம். அவ்வாறுகோடல் வானப்பிரத்தத்திற்குப் பின்பு வந்ததனானுங் காண்க. இதனானே எவ்வாற்றானும் அவாந்தர சைவருக்கு நாலாச்சிரமும் உண்டென்றதாயிற்று. அன்றேல் வணிகரரசர்க்கும் அவ்வாறுபட்டுத் துரியாச்

சிரமம் இன்றென வருமென்க. அது. 'த்ரயாணும்'? என்னும் பதத்தானிகழ்தலின். அன்றி, அசிந்தியவிசுவசாதாக்கியம் முதலான சிவாகமங்களில் ஒழிந்த அநுலோமப் பிரதிலோமர்க்கும் நாலாச்சிரமமும் விதித்தலின் கைமுதிக நியாயத்தினனே அவாந்தர சைவருக்கும் கோடல் இயல்பாகலானும், அவ்வாறே கோடல்வேண்டு மென்க; என்னை? அசிந்தியவிசுவசாதாக்கியத்தில் சதுராச்சிரம விரத படலத்தில், (1 முதல் 4 சுலோ.)

13. अतः परं व्रतं वक्ष्ये दीक्षितानां हिताय वै ।
वैदिकं शैवमित्येवं व्रतं हि द्विविधं भवेत् ॥

त्रैवर्णिकानां कर्तव्यमुपनीतादि वैदिकम् ।
शिवदीक्षाप्रदानन्तु शैवमत्यन्तमुत्तमम् ॥

बाग्देवि योनिजातत्वाच्छिवपुत्रत्वकारणात् ।
विप्रादिदशवर्णानां योग्यत्वमिह जायते ॥

ब्रह्मचारी गृही चैव वानप्रस्थोऽथ भिक्षुकः ।
चतुराश्रममेवं स्याद्गोचराणां तु पञ्चकम् ॥

என்றற்றொடக்கத்து வசன முண்டாகலான். அது சூதசங்கிதையில்,

14. * कामादींश्च विरक्तानामेवं पूजा प्रकीर्तिता ।

என்பதனுனுமறிக. எனவே ஆச்சிரம பேதத்தால் அவாந்தர சைவரும் நால்வருளராகலின் அவர்களது சிறப்புவிதியான் விதியும் விலக்கும் அறியப்படும். என்னை?

15. सामान्यशास्त्रतो नूनं विशेषो बलवान्भवेत् ।

என்பது நியாயமாகலின். ஆயின் ஈண்டுச் சிறப்புவிதியாற் குருத்துவத்தை விலக்கியது யார்பானிற்குமெனின்? காமிகத்தில்,

16. शूद्रस्यापि गृहस्थस्य नित्येष्टावेव योग्यता ।
अभिषेके त्वयोग्योऽयं किंपुनः स्थापनादिषु ॥

எனவும்,

17. तत्रापि नादरहितैर्मन्त्रैरेव तु पूजयेत् ।

எனவும் சூத்திர கிருகத்தருக்கே குருத்துவ விலக்குண்மையின் முன்னர் வந்த விலக்கு இவர்பாலும், விதி ஒழிந்த மூவர்பாலும் நிற்குமென்க. **शूद्रस्यापि** என்னும் வசனத்தைப் பரார்த்த விடயமெனின் அவாந்தர சைவராயுள்ள கிருகத்தருக்குப் பரார்த்த நித்திய கர்மத்தில் அதிகாரமுண்டென்று பொருள் படுதலானும், தாபநாதி விடயங்களிலே மாத்திரம் நிடேதமெனின் ஏவகார

* அச்சிட்ட புத்தகத்தில் **विरक्तानां च शूद्राणां** என்பது பாடம் (சி. 4. சுலோ. 18)

வியவச்சேதத்தினும், அயோக்கிய பதத்தினும் கூடாமையானும் வேறு படுத்தப்படாமையின் அவ்வாறு கூறியது.

இவ்வாறாயின் இந்நூல்செய்த குரவரது குரவர் கிருகத்தராகலின் குரவரல்லரென்பது கூடுமெனின், அவரும் அவர் குரவர்முதலாயினோரும் ஞான சந்ததியாகலின் இவ்விலக்கணமிவர்க்கன்று என்க; என்னை தேவிகாலோத் தரத்தில்,

18. सर्वलक्षणहीनोऽपि ज्ञानवान्गुरुरिष्यते ।

எனவருதலின், இவ்வாறு அவாந்தர சைவராயுள்ள கிருகத்தர் ஞானவானெனவும், அஞ்ஞானவானெனவும் இருவராக விகற்பித்துக் கூறப்படுதலின்.

ஒருவர்க்கு விதியும், ஒருவர்க்கு விலக்கும் முன்னர்ச்சொன்ன சூத்திரர்க் குப் பொதுப்பட வந்தவாறுபோல, ஈண்டுஞ் சிறப்பித்துச் சூத்திர கிருகத் தருக்கு ஒரோவழி ஆசாரியத்துவவிதியும் வரவேண்டும்பிறவெனின், தேவிகா லோத்தரத்தில்,

18. सर्वलक्षणहीनोऽपि ज्ञानवान्गुरुरिष्यते ।

எனவும், காமிகத்தில்,

19. चातुर्वर्ण्यगृहस्थानामाचार्यत्वं समाचरेत् ॥

எனவும், காலோத்தரத்தில்,

20. चतुर्णामपि वर्णानां लिङ्गिनां गृहिणामपि ।
आचार्यत्वं शिवे चास्ति सिद्धान्ते प्रतिपादितम् ॥

எனவும் வந்ததனுன் அவாந்தர சைவருள் ஞானவானுயுள்ள கிருகத்தருக்குக் குருத்துவவிதி காண்க. இங்ஙனம் கூறும் அஞ்ஞானவானுயுள்ள கிருகத்தருக்கு வருங் குருத்துவ நிடேதத்தை மேருதந்திரத்தில்,

21. अत्र किंचिद्विशेषोऽस्ति क्षत्रियाद्वैश्यशूद्रयोः ।
एतेषु सर्वदा देवि दीक्षां नैव समाचरेत् ॥

क्षत्रियैर्दीक्षिताः केचित्केचिद्वैश्येन दीक्षिताः ।
केचिच्छूद्रेण देवेशि दीक्षिताश्च यमालयम् ॥

गत्वा जन्मशतं कोटि विशन्ति नरके ध्रुवम् ।

எனவும், மோட்சகாரிகையில்,

22. दीक्षायां साधकत्वे च चतुर्णां वर्णिनामिह ।
अधिकारो गुरुत्वे तु ब्राह्मणस्यैव कीर्तितः ॥ (சுலோ. 96)

எனவும் வருவது,

5. ब्राह्मणाः क्षत्रिया वैश्याश्शूद्राश्शुद्धकुलोद्भवाः ।
आचार्यास्ते हि विज्ञेया नान्येषान्तु कदाचन ॥

என்பதனுல் விலக்கப்படாமையின் சூத்திரர் முதலிய மூன்று வருணத்தாரையுங் குறித்துப் பிராமணருயர்ந்தோரென் றறிவிக்க வேண்டிவந்ததாகலின். அந் தணர்க்கு முக்கியப் பிரதிபாதநநிமித்தம் மற்ற மூவரையும் நிஷேதித்துக் கூறினமாத்திரமாக உட்கொண்டு அம்மூவருக்குங் குருத்துவம் அங்கீகரித்தற்கு மாறுபாடாகாதவாறுபோல ஈண்டும்,

19. चातुर्वर्ण्यगृहस्थानामाचार्यत्वं समाचरेत् ।

என்னும் குருத்துவவிதியான் விலக்கப்படாமையின் அவாந்தர சைவருள் அஞ் ஞானவானுயுள்ள கிருகத்தனைக் குறித்து ஒழிந்த ஞானவானை கிருகத்தரும் மற்றை விரத்தர் முதலியோரும் உயர்ந்தோரென்று அறிவிக்கவேண்டி விலக்கு வந்ததாகக் கருதியது குருத்துவவிதிக்கு மாறுபாடாகாதெனா உட்கொண்டாலோ எனின், காமிகத்தில் ஆசாரியவிலக்கணங் கூறும்வழி,

8. विन्ध्याद्रेर्दक्षिणे राज्ञामुत्तरे वैश्यजन्मनाम् ।
सान्तानिकस्य सर्वत्र न च शूद्रस्य कीर्तनम् ॥

என்பதனுன் அரசர் முதலியோரை விகற்பித்துச் சிலர்க்குக் குருத்துவம் உண் டெனவும், சிலர்க்குக் குருத்துவமில்லையெனவும் சிறப்புவிதி பெறுதலின் இவர் களைக் குறித்தே மேருதந்திர முதலியவற்றிற் கூறிய நிஷேத வசனங் கிடைத் தலின் அஃது உபசார வழக்கன்மையின், அதுபோல ஈண்டுக் கொள்ளப்படா மையானும், அர்த்தவாதமாயின், பொதுப்பட

23. अधिकारे गुरुत्वे तु ब्राह्मणस्यैव कीर्तनात् ।

என்ருற்போல வருதலன்றி,

16. शूद्रस्यापि गृहस्थस्य नित्येष्वेव योग्यता ।
अभिषेके त्वयोग्योऽयं किंपुनःस्थापनादिषु ॥

எனச் சிறப்பித்து நித்தியத்தில் விதியும், மற்றவெல்லாம் விலக்குமாகக் கூறி வாராதாகலானும், வருமெனின் இவ்வாறு வரும் பிறவும் அர்த்தவாதமா மாகலானும் காண்க.

எனவே ஒருபொருண்மேல் விலக்கும், விதியும் மாறுபடவரின் அதற்கு இவ்வாறு கூருக்கான் முழுதுணர்ந்த இறைவன் மாற்றம் அன்றென அவ் வசனம் அப்பிரமாணியமாகி உட்கொள்ளப்படாதென்க. இத்தமிழ்நாட்டின் இது பெருவழக்காதலின் ஒருவாற்ருற் கூறலாகாதோ எனின் இக்காலத்துள்ள குரவர்க்கு முதற் குரவரான அக்காலத்துள்ளா ரனைவரும் நைட்டிகராகவும், துரியாச்சிரமிகளேயாகவும் இருந்தார்களாகலின் அவர் வழியிலுள்ள பிறர் வழுவி நடத்தலிற் கூறலாகாதென்க. அற்றன்று, எவ்வாற்ருனுஞ் சூத்திர

கிருகத்தர் அஞ்ஞானவான்களாயினும், அவர்க்குக் குருத்துவம் உண்டெனக் கற்பித்தல் வேண்டுமெனின் அவ்வாறு கற்பிக்கவேண்டுவது எமக்கு மிகவும் நன்றன்றே! ஞானப்பிரகாச குரவருக்கு இவ்வாற்றானும் குருத்துவமுண்டு எனவே பிறவாற்றாற் குருவாதல் கூடாமையே பெறுதலின்; அதனால் அவ்வாறுகொள்ளும் மரபறிந்துகோடலு மொன்று. அவ்வாறு கொள்ளின் சோடசக்கிரகணநியாய விதியான் அமைக்கப்படுமென்க. सर्ववर्णगृहस्थानाम् எனப் பொதுவாகாது चातुर्वर्णगृहस्थानाम् என வரையறைதோன்ற விசேடித்தலின். எனவே எவ்வாற்றானும் குருத்துவவிதி கோடலின் ஞானப்பிரகாச குரவர் சற்சம்பிரதாய முபதேசிக்குஞ் சற்குரவராமென்க.

அஃதற்றாக, இந்நூல்செய்த திருஞானசம்பந்த தேசிகர் விரத்தராகலின் அவர்க்குக் குருத்துவம் இன்று. என்னை? சர்வஞானோத்தரத்தில்,

24. द्वावेवाश्रमिणौ शैवे गृहस्थब्रह्मचारिणौ ।
लोकानुग्रहकर्तारौ परिव्राट्तापसौ नहि ॥

எனவும், அங்ஙனமே காலோத்தரத்தில்,

25. गृहस्थः सर्ववर्णेषु श्रेष्ठो गुरुरुदाहृतः ।
नैष्ठिकस्त्वधमो ज्ञेयो भौतिकस्तु विशेषतः ॥

वानप्रस्थयतीनान्तु गुरुत्वं नेष्यते सदा ।

எனவும் வருதலின். இவ்வாறு விலக்குதலினன்றே காமிகத்தில்,

26. स्वार्थेष्टौ चललिङ्गस्य प्रतिष्ठायां त्रयस्त्विमे ।
शूद्रोऽपि शूद्रदीक्षायां स्वार्थे च चललिङ्गके ॥

बाणलिङ्गे क्षणे वापि स्थापकौ यतिनैष्ठिकौ ।
सनादाखिलमन्त्रेषु शिवज्ञाने विशेषतः ॥

என அவாந்தர சைவரான நைட்டிகருக்கே குருத்துவவிதி வந்ததாஉமெனின், அது கூறுதும்; அசிந்திய விசுவத்தில் ஆசாரியவிலக்கணபடலத்தில்,

27. आचार्यौ द्वौ समाख्यातौ विरक्तः प्रथमो भवेत् ।
भौतिकश्च द्वितीयःस्यात्प्रथमौ तु विशेषकौ ॥

आजन्मब्रह्मचारी च यतिश्च तदनन्तरः ।
एवं द्वयन्तु प्रथमे द्वितीयेऽपि द्वितीयकः ॥

गृहस्थो वानप्रस्थश्च चतुष्टयमुदीरितम् ।
जन्म वै द्विविधं प्रोक्तं दीक्षाप्रसवसंज्ञकम् ॥

नैष्ठिको नैष्ठिकांश्चैव गृहस्थान्दीक्षयेत्क्रमात् ।
भौतिकस्तु गृहस्थांश्च नान्यदीक्षां समाचरेत् ॥

எனவும், அதனிற்றுனே சதுராச்சிரமவிரத படலத்தில்,

28. विशेषः कथ्यते तत्र शृणु त्वं नन्दिकेश्वर ।
ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थोऽथ भिक्षुकः ।

चतुराश्रमवृत्तिस्तु पूर्वमेवोदिता क्रमात् ।
सन्यासाश्रममत्यन्त*मुत्तमं दीक्षितं भवेत् ॥

तस्मात्तं व्रतिनं मुक्त्वा नास्ति कैवल्यकारणम् ।

எனவும், சூதசங்கிதையில்,

29. ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थोऽथ भिक्षुकः ।
अतिवर्णाश्रमी चेति क्रमाच्छ्रेष्ठो विचक्षणः ॥

योऽतीत्य स्वाश्रमान्वर्णानात्मन्येव स्थितः पुमान् ।
सोऽतिवर्णाश्रमी प्रोक्तस्सर्ववेदार्थदर्शिभिः ॥ (முத்தி. 5)

எனவும் வருதலாற் சைவ வைதிகங்களிரண்டினும் துரியாச்சிரமிகட்குக் குருத்துவம் விதித்தலின் முன்னர் விலக்கு அக்கினிகாரிய பூர்வமாகப் பண்ணுங் கிரியா தீக்கை விடயமாதலின் ஆசாரியத்துவம் உண்டென்க. இதனுனே,

26. शूद्रोऽपि शूद्रदीक्षायां स्वार्थे च चललिङ्गके ।
बाणलिङ्गे क्षणे वापि स्थापकौ यतिनैष्ठिकौ ॥

என்பது ஆசன்மப்பிரமசாரிக்கும் சந்நியாசிக்கும் பொதுவாயிற்று; என்னை? பவுட்கரத்தில்,

30. कर्मणा मनसा वाचा श्रवणाद्दर्शनादपि ।
मातृवन्मन्यते नित्यं प्रार्थयन्तीमपि स्त्रियम् ॥ (4ம் படலம் சுலோ. 58)

तदेवं ब्रह्मचर्यं स्याच्छेषा व्रतविडंबकाः । (4ம் படலம் சுலோ. 59)

எனவரும் விரதம் இருவருக்கும் ஒத்தலின். இதனுனேயன்றே தீக்ஷாவிதியில் நைட்டிகன் நைட்டிகனுக்குங் கிருகத்தனுக்கும், கிருகத்தன் கிருகத்தனுக்கு மாத்திரம் தீக்கை பண்ணுதலன்றி மாறிப் பண்ணலாகாதென்று விதிப்புழிச் சந்நியாசியையும், நைட்டிகபதத்திலடக்கியதூஉமென்க. என்னை? காலோத்தரத்தில்,

* मुक्तिदं इति च पाठः

27. नैष्ठिको नैष्ठिकांश्चैव गृहस्थान्दीक्षयेत् क्रमात् ।
भौतिकस्तु गृहस्थांश्च नान्यदीक्षां समाचरेत् ॥

எனவருதலானும், பத்ததிகளில் நைட்டிகனையும் விரத்தனையும், ஒன்றாகக் கருதித் தீக்கையாதி கன்மங்களிலே *சங்கார முறையாகக் கன்மங்களை விதிக்குமாற்றானு முணர்க. அல்லதூஉம், சௌந்தரநாதாசாரியர் பத்ததிச் சிகாச்சேதவிதியிலே 'உலகதருமிணியினிற்கும் பௌதிக சீடனை' என்றஉதூம் 'சிவதருமிணியில் நிற்கும் நைட்டிகனுக்கு' என்றற் றொடக்கத்தாற் கூறியதூஉம், சைவசமயாசார பத்ததியில் சிவாச்சிரம விலக்கணத்திற் கூறியதூஉம் காண்க. இனிக் காமிகத்தில்,

31. आगन्तुकानां सर्वेषां नैष्ठिकानां निवासभूः ।
अन्नपानीयसंयुक्ताः केवलानां मठा मताः ॥

என்புழி, நைட்டிகபதஞ் சந்நியாசிகட்கே சிறப்பித்து வந்தது; நைட்டிகப் பிரமசாரிகட்கு அசிந்திய விசுவத்தில் சதுராச்சிரம விரதபடலத்தில்,

32. भिक्षाशी देहरक्षार्थं एककालं गुरोर्गृहे ।
गुरोःस्थाने वसेन्नित्यमन्यगेहे न च स्वपेत् ।

என்பதனல் அந்நியஸ்தானப் பிரவேசாதிகளின்மையின். இன்னும் அதனுள் பிராயச்சித்த படலத்தில்,

33. विरक्तस्य गृहस्थस्य प्रायश्चित्तं द्विधा भवेत् ।
गृहस्थाद् द्विगुणं प्रोक्तं नैष्ठिके च विशेषतः ॥

என்பதனனும் பிறவாற்றானும் அறிக. "நைட்டிகர் தாமுமந்த நாரியர்க்கிச்சை" என்பதும் அது.

இவ்வாறுயர்ந்தோராகலிற் சந்நியாசிகளும் அக்கினிகாரிய பூருவமாகப் பண்ணுந் தீக்கை பண்ணுவர்; அதனன் அந்த நிஷேதம் இதுபற்றிவந்தது. அன்றெனின் அவர் சந்நியாச காலத்தில் வெளியிலுள்ள அக்கினியை உள்ளே அடக்கிக்கொண்டாராகலின், வெளியில் அதற்கு உரிமையின்மையின் மனோ பாவனையானன்றிப் பண்ணுமையின் அது கூடாதாகலான் அதுபற்றியே வந்ததென்க. என்னை? சௌந்தரநாதாசாரியபத்ததியிலே,

34. सन्यासिनो बाह्याग्नेरुदराग्नावारोपितत्वात् अग्निकार्यं विना भावनया
दीक्षां कुर्यात् ।

என்றாராகலானும் அன்றி, அசிந்தியவிசுவசாதாக்கியத்தில் அந்தியேட்டிவிதி படலத்தில்,

* விபரீதகன்மம் முதலானவற்றை என்பதும் பாடம்.

35. लोकाग्निमुद्राग्नौ तु समारोपणतः पुरा ।
वाह्याग्निकार्याभावाच्च छादयेल्लवणैस्सह ॥

எனவும்,

36. आचार्याणां च मध्ये वै यतीनां किंचिदन्तरम् ।
परहंसयतीनां च तपःसन्यासिनां च ये* ॥

अनयोरग्निकार्येषु योग्यत्वं न विधीयते ।
होमं विना तयोरेवमभिषेको विधीयते ॥

எனவும் வருதலான் உணர்க இவ்வாறே விரத்தருக்குக் குருத்துவயோக்கியமான ஆசாரியாபிடேகம் விதித்துத் தீக்கை பண்ணவேண்டாவென நிஷேதியாராகலானும், அவ்வாறு நிஷேதிப்பின் ஒன்றுக்கொன்று மாறுபாடாய்ச் சிவாகம வசனங்கள் பிராமாணியமாகாவாகலானும், இங்ஙனம் பொருள்கூறல் பவுட்கர வியாக்கியானகாரரது அபிமதமுமாமென்பது † ஆண்டுணர்க.

இங்ஙனமன்றி அந்நிஷேதவிதி பொதுவிதியாகலின் அந்தணர் முதலிய மூவருக்குமே நின்று, அவாந்தர சைவருள் விரத்தர்க்கு இயையாதாமென்று கூறினும் அமையும். என்னை? சூத்திரர்க்குக் குருத்துவம் உண்டெனவும் இன்றெனவும் விதித்துப் பின்னர்ச் சிறப்பு விதியால் அந்தக் கிருத்தருக்கு இல்லையெனவே ஒழிந்தோர்க்குப் பாரிசேடத்தாற் கொள்ளக்கிடத்தலானும், அன்றி, **स्थापकौ यतिनैष्ठिकौ** என்ற சிறப்புவிதியான் அவாந்தர சைவராயுள்ள விரத்தருக்குக் குருத்துவ முண்டென்று கொள்ளக்கிடத்தலானும் என்க. எனவே, எவ்வாற்றானும் அவாந்தர சைவராயுள்ள விரத்தருக்குக் குருத்துவ முண்டென்பது எளிதாய்ப் பெறுதலின் இந்நூல் செய்த குரவர் குரவரேயாமென்க. அன்றியும்,

18. सर्वलक्षणहीनोऽपि ज्ञानवान्गुरुरिष्यते ।

என்பதனானும் வருமென்க. அதனானே இவ்வாசிரியர் பரமஞானியாயுள்ள அதிவன்னாச்சிரமியாகலின் அவ்வாச்சிரம விசாரத்தானே குருத்துவம் கூறலேயன்றியும் குருத்துவம் உண்டென்பதும் கொள்க. என்னை?

37. अतिवर्णाश्रमी प्रोक्तो गुरुस्सर्वाधिकारिणाम् ।
न कस्यापि भवेच्छिष्यो यथाहं पुरुषोत्तम ॥ (சூத. முத்தி. 5-14)

என்பது சூதசங்கிதை வசனமாகலின் என்க. எனவே இந்நூல்செய்த குரவரும் அவர் குரவர் முதலிய குரவரனைவரும் ஞானசந்ததியாகலானும் பிறவாற்றானும் சற்சம்பிரதாய உபதேசமுடைய சற்குரவராவரென்க.

இனி இந்நூல்செய்த குரவர் தமது குரவர் எழுந்தருளியிருந்தகாலத்து இயல்பான் வழிபடுதலேயன்றிப் பரபதமடைந்துழியுந் தினம் சிவபூசையினும் யாண்டுதோறும் திதியினும் தமது சரீரமுள்ளவளவும் வழுவாது குருபூசைசெய்து

* **तथा** என்றும் பாடம். † பவுட்காவிருத்தி பக்கம் 172-175.

மனமொழிமெய்களான் மகிழ்ந்து வழிபட்ட குருபக்தி நிலைமை தோன்ற, ஒருவன் **திருவடியே தினமிறைஞ்சுந் தருமை ஞானசம்பந்த தேசிகனே** என்றது.

வழிபாடாவது அவர் எழுந்தருளியிருந்தகாலத்து நித்தியமும் அன்றிச் சிறப்பித்துக் குருபூசை செய்தும் வழிபடுதல். அவ்வாறு சிவனைப்போலச் சந்நிகித குரவரைப் பூசைசெய்வதூஉம், குரவர் பரபதமடைந்துழிச் சந்தனுதி க்ஷணிக முதலியவற்றில் பூசைசெய்வதூஉம் எவ்வாற்றாற் பெறுதுமெனின்? காலோத்தரத்தில்,

38. गुरुयागं प्रवक्ष्यामि संक्षेपात्पार्वतीसुत ।
देवतादर्शने कार्यस्तथाऽसौ सिद्धसाधने ॥

विवाहयात्रासमये तथा दुःस्वप्नदर्शने ।
स्वप्नप्राप्तौ तथामन्त्रे यागारंभे विशेषतः ॥

सुवृत्तहस्तमात्रं तत्कमलं वर्तयेच्छुभम् ।
आसनं तत्र सङ्कल्प्य मूर्तिभूतं गुरुं न्यसेत् ॥

शिवमावाहयेत्तत्र ब्रह्माङ्गसहितं परम् ।
गन्धपुष्पादिभिःपूजां मूलमन्त्रेण कल्पयेत् ॥

शिवं साष्टशतं जप्त्वा तथा होमं समाचरेत् ।
गुरुं सदाशिवं ध्यात्वा प्रणिपत्य पुनः पुनः ॥

तदाज्ञां प्रार्थयित्वा तु कुर्याद्यागादिकं शिशुः ।
विधानमेतत्कथितं गुरौ शिवपदं गते ॥

यदि सन्निहितः सोऽपि पूर्ववत्पूजयेद्गुरुम् ।
आज्ञां गृहीत्वा यत्नेन ततः कर्म समाचरेत् ॥

என்பதனாற் பெற்றதென்க. அதனுட் கிரியா பூசாப்பிரகாரம் சதாசிவம் ஆதியாகப் பூசைசெய்து ஓமமுஞ்செய்ய விதிக்கப்படினும், அவரவர் யோக்கிதை பற்றி நிகழ்தலின் இவ்வாசிரியர் விரத்தராகலின் ஓமமின்றி ஞானபூசையாற் செய்தல் தகுதியாமென்க. என்னை? அசிந்தியவிசுவத்தில், சதுராச்சிரம விரத படலத்தில்,

39. सन्ध्यावन्दनकं चापि यतीनां ज्ञानसन्ध्यया ।

எனவருதலினானும், * "ஞானிநாலினுக்கும் உரியன்" என்பதனானும் உயர்ந்த ஞானபூசையாற் செய்யத்தக்கார் பிறவாற்றாற் செய்யாரென்க. இந்நூல்செய்த குரவர்க்கு ஊர் கமலையாகவும். தருமபுரம் ஊர் என்றது தமது குரவர் பரபதமடைந்தபின் தருமபுரத்தே யிருந்தாராகலானும், இவர்பால் அருள்பெற்ற ஆநந்தபரவசமூர்த்தி, சச்சிதாநந்தமூர்த்தி, மாசிலாமணிமூர்த்தி முதலான

* சிவஞானசித்தி 12, சூ. - அதி. 3. - பாடல் 5.

ஆசிரியர்கள் இவரது சமாதித்தானத்தில் இலிங்கப் பிரதிட்டை செய்து குருபத்தி மிகுதியான் ஆண்டே வசித்துச் சந்தான பரம்பரை நடாத்தலானும், உலகத்தார் அங்ஙனம் வழங்கு'மாற்றானும் என்க. என்னை? சித்தாந்த போதத்தில்,

40. ज्ञानिनां योगिनां चैव धर्मिनां यतिरूपिणाम् ।
जनानां देहपाते ते खननस्याभिलक्षणम् ॥

எனவும், வேறிடத்தில்,

41. एवमेव विधानेन कारयेत्खननं विधिम् ।
अग्निकार्यं न कर्तव्यं खननं यदि संभवेत् ॥

எனவும், சைவபுராணத்தில்,

42. षडध्वशुद्धिं विधिवत्प्राप्तो वा म्रियते यतिः ।
पशूनामिव तस्येह न कुर्यादौर्ध्वदेहिकम् ॥

नैवाशौचं प्रसज्येत तत्पुत्रादेर्विशेषतः ।
दग्धस्य दहनं नास्ति पक्कस्य पचनं यथा ॥

शिवाग्निदग्धबीजानां न च श्राद्धं न च क्रिया ।
अथैनमपि चोद्दिश्य कर्म चेत्कर्तुमीप्सितम् ॥

कल्याणमिव कुर्वीत शक्त्या भक्तांश्च तर्पयेत् ।

எனவும், அசிந்தியவிசுவசாதாக்கியத்தில் அந்தியேட்டிவிதி படலத்தில்,

43. खननेऽप्यवटस्यापि दैर्घ्यं वेदकरं भवेत् ॥

हस्तद्वयं तु विस्तारमधः खातं चतुष्करम् ।
अग्निकार्यं विना सर्वं पूर्ववत्कर्म चाचरेत् ॥

स्नानं तत्र न कुर्वीत नचाशौचोदकक्रिया ।
तत्र देशे च लिङ्गस्य प्रतिष्ठामपि कारयेत् ॥

यन्मूर्तिं चापि पीठं वा भित्तिचित्रमथापि वा ।
कुर्यात्प्रासादकं चापि तत्र देशे च कारयेत् ॥

எனவும், வேறிடத்தில்,

44. प्रासादमण्डपं वापि कूटं वा तत्र कारयेत् ।
शिलापक्वेष्टिकादीनां प्राकारं गोपुरं तथा ॥

परिवाराणि सर्वाणि कारयेद्विधिपूर्वकम् ।
अर्चनोक्तविधानेन नित्यार्चनमथाचरेत् ॥

बलिदानं प्रकर्तव्यं नित्याग्निं कारयेद् बुधः ।
नित्योत्सवं तु कर्तव्यं मासोत्सवं प्रकल्पयेत् ॥

अब्दोत्सवमथानेन कर्तव्यं विधिना सह ।
दीपान्यं वा हविष्यन्तं बल्यन्तं वापि पूजयेत् ॥

पवित्रारोहणं चैव नवनैवेद्यकादिकम् ।

எனவும் வரும் இத்தொடக்கத்து வசனங்களினுல் இந்நூல்செய்த திருஞான சம்பந்த தேசிகர் விரத்தராயுள்ள ஞானவானுகலிற் சமாதியே செய்து அந்தத் தானத்தில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து திருவிழாப்பரிபந்தம் பூசை செய் வித்ததென்க. விசுவசாரோத்தரத்தில்,

45. गुरुरूपं परं ब्रह्म गुरुरूपं परं शिवम् ।
गुरुरूपं परं ज्ञानं गुरुरूपं परात्परम् ॥

तस्मात्सर्वप्रयत्नेन गुरुरूपं सदा स्मरेत् ।

எனவும் திருமந்திரமாலேயுள்,

[1] தெளிவு குருவின் றிருமேனி காண்டல்
தெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் றிருநாமஞ் செப்பல்
தெளிவு குருருபஞ் சிந்தித்த ருனே.

எனவும் வருதலின் இவர் பத்திமிகுதியால் அவ்விலிங்கத்தின் சந்நிதியிலேதானே யிருந்ததென்க.

இவ்வாறு சிவாலயாபிமானம் ஒன்று உண்டாகலானும், குரவர் கற் பித்தபடி சந்தான பரம்பரை நடாத்துவித்தலானும், இக்குரவர்க்குப் பின்னிருந்த ஆநந்தபரவசமூர்த்தி, சச்சிதாநந்தமூர்த்தி, மாசிலாமணிமூர்த்தி முதலான தேசிகர் இடம் பொருளேவலுடையராகலின், அது துறவறம் பூண்டார்க்குத் தகுதியன்றெனின், இவ்வாறு கூறுவதெல்லாம் ஞானப்பியாசாவத்தையினன்றி முற்றுப்பெற நிகழ்ந்துழி இல்லையாகலான் அவர் முற்றுப்பெற்ற ஞானவான் களாகலிற் குறையன்ருகலானும், இரண்டாவதெழுந்தருளியிருந்த ஆநந்தபரவச மூர்த்திக்குக் குருவின் திருமேனிகாண்டல், பரிகலங்கோடல், திருவாக்குக் கேட் டல் முதலாயின நியமமாகலின் அதன் நிமித்தம் தமது குரவர் பூரணமானவழி இவ்வாருக வேண்டுமெனப் பத்திமிகுதியாற் சிந்தித்துச் சிவலிங்கப் பிரதிட்டை செய்தமையானும், பிறர் சேவித்துப் பிழைத்தற்கேதுவான நன்மைப்பகுதி அஃது ஆகலானும், துறவறம் பூண்டார்க்கு மிகவுஞ் செய்ய வேண்டுதலிற் குற்ற மன்று ஆகலானும், சந்தானபரம்பரை நடத்தல் குரவராணையாற் செய்ய வேண்டுதலிற் செய்யாதிருந்தாற் குரவராணைமறுத்த குற்றம் வருதலானும் அவ் வாறு செய்யவேண்டுமாகலின், அது நிமித்தமன்றிப் பிறிதொன்ருனிகழாமை

[1] இவ்வடி அச்சுப்பிரதிகளில் மூன்ருவதாக உள்ளது. திருமந்திரம் உபதேசம் 27.

யின் அவ்விடம்பொருளேவனுடைமை தகுதியேயாமென்க. இதனையன்றே சிவாகமங்களில் ஆசாரியருக்குச் சாந்தானிக பிச்சையும் விதித்துத் தனதானியங் களுண்டானால் அவர்பால் அருள்பெற்ற மாணாக்கர்க்கே கொடுக்கவென விதித் ததூஉம் என்க. என்னை? அசிந்தியவிசுவத்தில்,

46. शिष्यादिसन्ततिः शैवसन्तानं तन्निवेदितम् ।
द्रव्यं यद्गुरवे सा हि भिक्षा सान्तानिकी स्मृता ॥

अन्नादिभूमिपर्यन्ता भिक्षा सान्तानिकी स्तुता ।

எனச் சாந்தானிக பிச்சைவிதி வந்தது மென்க. காமிகத்தில்,

47. धनं तस्य भजेदल्पं शैवी चेदस्ति सन्ततिः ॥
नास्ति चेत्तच्छिवे दद्यान्न दद्यात्पशुसन्ततौ ।

என்பதனால் அவர் சம்பத்தும் அவர்பால் அருள்பெற்ற மாணாக்கர்க்குரிமை கூறியது காண்க.

இதனாற் போந்தபொருள்,

ஒழுகு நல்லறத் தொழுகலுஞ் சிறிதும்
வழுவில் கல்வியும் வாய்மையு முழுதுணர்
நிலைமையு முடையோர் நின்று தாடொழும்
தலைவ னெம்மனோர் தம்பொருட் டாகத்
துறவறம் பூண்ட தோன்றல் ஞானத்
திறநெறி நிறுத்துஞ் செங்கோல் வேந்தன்
முறைவழி மரபின் முதிர்ந்த மெய்ஞ்ஞானம்
நிறைதர நிகழ்ந்த நின்மலன் கமலை
உறையுஞா னப்பிர காசனென் றொருவன்
திருவடி யேதின மிறைஞ்சூந்
தருமை ஞானசம் பந்ததே சிகனே

என்பதனால் ஆக்கியோன்பெயரும்,

முத்திநிச்சயம் பண்ணினன்

என்பதனால் நூற்பெயரும்,

மலர்தலை யுலகி னிருள்கெடத் தோன்றும்
பலர்புகழ் கதிரெனப் பழிநெறி மேற்கொள்
சிலர்மன விருள்கெடச் சிறந்த செய்கையின்

என்பதனால் பிறர்கோள்சிதைக்குங் காரணமும்,

**அறுமூன்று ஈரிரண் டானவெண் பாட்டின்**

என்பதனால் அளவும்,

**அறிஞரு மறிதர**

என்பதனால் பிறர் கூறுமாறே மலைவாரை மலையாது நிறுத்தலிற் பயனும்,

**குறிவழி யநுபவங் குருமொழி முதனூல்**
**நெறிதிகழ்**

என்பதனால் வழியும்,

**துலங்கு மாடியி னணிபெறத் தொகையின்**

என்பதனாற் றொகுத்தியாத்தமை விளங்கலின் யாப்பும்

**அலகில ரிதுசிவா நந்தம் ஆமெனத், துணிபொருள் காண**

என்பதனால் நுதலிய பொருளும் பெறப்பட்டன. என்னை?

பண்ணிய நூற்பேர் பகர்ந்தோன்பேர் காரணமும்
மன்னு மளவும் வருபயனும்—முன்னைச்
சிறப்பா மவற்றுட் சிலவேறி னாலும்
பெறப்படுமா முன்னைப் பெயர்.

என்பதனாற் சிறப்புப்பாயிரவிலக்கணம் பெற்றவாறு காண்க. அன்றி,

ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே. (இறை. உரை. மேற். சூ. 1.)

என்பதனானும்,

காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

என்பதனானும் கொள்வன கொள்ளவேண்டினுங் கொள்க. அஃது உய்த்துணர்ச்சியாற் பிறர் கேட்கலாகாமையின் பரிபாகமுடைய தனது மாணக்கர் கேட்போரெனவும், அதனாற் களனும் அவர்களன் எனவும், காலம் கண்கட்டி மறைஞான பண்டார முள்ளகாலத்து அவர் மாறுபடக் கூறலின், அதனைச் சிதையச் செய்தலின் அவர்காலமெனவுங் கொள்க. பிறவும் விரித்து உரைத்துக்கொள்க. ஒருவாற்றாற் பாயிரப் பொழிப்புரை முற்றியது.

**சிறப்புப்பாயிரம் முற்றியது.**

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# முத்திநிச்சயப்பேருரை

## முதற்பாட்டு

சீர்மேவு மாரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன்—ஊர்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமொன்
றுவ தெனமொழிவேன் யான்.

இந்நூல் சைவசித்தாந்த முத்திநிலை இஃதென நிச்சயத்துக் கூறுங் காரணத்தான் முத்திநிச்சயம் என்னும் பெயர்த்து. அங்ஙனம் நிச்சயிப்பது மூலாகம உபாகமங்களிற் கூறியவாறே தொல்லாசிரியர் வாய்மொழி துணையாக முன்னூற்பொருள்பற்றிப் பின்னர் நிகழ்தலின் இம்முத்திநிச்சயம் வழிநூல். இவ்வாறு நிகழ்தலின்,

[1] இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

என்பதனாற் சார்புநூலாம் பிறவெனின், வழிநூலெனப்பட்ட தொல்லாசிரியர் வாய்மொழியும் முதனூற்பொருளன்றி நிகழாமையின், அதுபோல இதுவும் முதனூற் பொருள்வழி நிகழ்தலின் இரண்டும் முதனூல்வழி நடத்தலின் வழி நூல்களேயாம். இதனானே முதனூலொழிய எத்துணைநூலாயினும் அதுபற்றி நடந்த நூலெல்லாம் வழிநூலேயாய் அடங்குதலின் சார்புநூல், புடைநூல், வழி நூல் என்பன ஒருபொருட்கிளவிகளாயின. ஆகவே எல்லா நூலும் முதனூல் வழிநூலெனவே யடங்குதலிற் பிறிதொரு பகுதியின்மையின் மூன்றும் பகுதிப் பட வழங்குஞ் சார்பு நூலென்பது பொருந்தாதென்க. என்னை?

[2] மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூறா * மிருவகை யியல
முதலும் வழியுமென நுதலிய நெறியின.

என்றபின்னர்,

[3] வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

---

1 இறை, உரைமேற், சூ. 1. 2, 3 தொல். மரபு. 93, 94. * இருவகை நிலைய என்றும் பாடம்.

[1] வழியெனப் படுவ ததன்வழித் தாகும்.

எனவுங் கூறினர் தொல்காப்பியனாரும். இதற்கிவ்வாறன்றி, முதற்காலத்தோர் தாமே அறிவினாற் செய்தநூல் முதனூல்; அதன்பின் இரண்டாவது அம் முதனூல்வழிபற்றி நடந்தநூல் வழிநூல்; மூன்றாவது அவ்விரண்டனையுஞ் சார்ந்து வந்தநூல் சார்புநூல் என்றால், முதனூலைச் சார்ந்து நடத்தலின் இரண்டாவதைச் சார்புநூலெனவும், மூன்றாவதை அவற்றின்வழியே நடத்தலின் வழிநூலெனவும் மாறிக் கூறும்படி மயங்குதலானும், முதனூற்பொருளன்றி வேறுகூறின் முதனூலோடு மாறுகொளக்கூறுங் குற்றந் தங்குமென்று அப்பொருளியல்பே கூறுவராகலிற் பொருளொற்றுமையான் ஒருபகுதிப்பாற்படக் கிடப்பதை அதனுட் பகுத்துக்காட்டலேயன்றிப் பிறிதொருபகுதி கற்பித்தால் வேறுபடத் தோன்றுதலான் ஒருபயனின்றாகலானும், அன்றி எல்லாம் முதனூலையே சார்ந்து நடத்தலின், பின்னர்ச்செய்யும் நூலனைத்தும் சார்புநூலாகலின் வேறுபடத் தோன்றுதற்பொருட்டன்றே ஒன்றை வழிநூலெனவும் ஒன்றைச் சார்புநூல் எனவும் செய்ததனாற், பின்னும் ஒருநூல் செய்யின் அதனை எப்பாற்படுத்துவமென்று சார்பிற் சார்பென்பர்; அதனையுஞ் சார்ந்ததொருநூல் பிறந்தவழி அதனைச் சார்பிற் சார்பிற் சார்பென்பர். அதனையுஞ் சார்ந்ததொரு நூல் பிறந்தவழி நான்முறை யடுக்குவர். இவ்வாறே நூல் பிறக்குந்தோறும் எண்ணிகந்தோடும்படி பெயர் படைப்பராதல் வேண்டுமாற்றான் அநவத்தை யென்னுங் குற்றந் தங்குதலானும், அக்குற்றத்திற்கு அஞ்சாது சொல்வாராயினும் பிறர்க்குப் புலப்படாமையானும் அதுபொருந்தாதென்க. இரண்டாமுறைக்கண் நின்றதற்குள்ளே எல்லாம் அடக்குமாறுபோல யாம் மூன்றாம்முறைக்கண் நின்றதனுள் அடக்குவேமெனின், பின்னுமோர்பகுதி கற்பித்தல் கௌரவமாகலின், இலாகவம்பற்றி நிகழ்தலின் அதற்கே குணமும், இதற்குக் குற்றமும் உண்டாகலின் இயல்பன்றென்க. இவ்வாறியல்பல்லாததை அருணந்திதேவசிவாசாரியர்,

[2] முன்னூலும் வழிநூலுஞ் சார்பு நூலும்
மூன்றாகு மூலந்து வழங்கு நூல்கள்.

என்றது என்னெனின், அவர் வைதிகசைவவழக்கொடு மாறுகொள்வானை மறுப்புழிக் கூறினமையின், அவன் உட்கோள்கருதிப் பிறன்கோட்கூறலாக மேற்கொண்டு கூறலின் அவர் கருத்தன்றென்க. அவ்வாறுவரும் வழிநூல் தொகுத்தியாத்தல், விரித்தியாத்தல், அவ்விரண்டினும் யாத்தல், மொழிபெயர்த்து அம் முதனூற்பொருள்பட யாத்தல் என நால்வகைப்படுமாதலின், இது முன்னர்ப் பாயிரத்திற் கூறியவாறே தொகுத்தியாத்த வழிநூலாம். என்னை?

[3] தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்
ததற்பட யாத்தலோ டனைமர பினவே.

**என்றாராகலின்.**

---

1 தொல். மரபு. 95. 2 சித்தியார்-பரபக்கம், சௌத்தி, மறுதலை-10. 3 தொல். மரபு. 97.

இனி, இஃது எதிர்நூலெனினுமாம்; தன்கோணிறுத்திப் பிறர்கோள் சிதைத்தலின். என்னை?

1 தன்கோ ணிறீஇப் பிறன்கோண் மறுப்ப
தெதிர்நூ லென்ப வொருசா ரோரே.

என வருதலின், அவ்வாறு கொண்டுழி முதனூல் வழிநூல் என்னுமிரண்டனுள் ஒன்றுபற்றி நிகழாமையின், இது வழிநூற்பாற்படவந்த எதிர்நூலாம். இதனை இளம்பூரணர் முதனூற்பாற்பட வருதலன்றி வழிநூற்பாற்பட வராதென்றாராலோவெனின், அதற்குச் சூத்திரத்தானும் இலேசானும் விதிக்கும் விதியின்மையானும், வேதாகமங்களைப்பற்றிச் சாங்கியர், யோகர், சைவர், ஈசுரவைக்கிய வாதி முதலாயினோர் எதிர்நூல் செய்தலானும் அவர் கண்டிலரென்க. அஃது வடமொழியிலோ எனின், மொழிபெயர்த்தாற் றமிழின் வருதலிற் றமிழினும் அவ்வாறு நிகழும் வழிநூலுளதென்க. அது சங்கற்பநிராகரணம் முதலாயினவாம்.

அஃதற்றாக, இது நூலாயினன்றே அவ்வாறு கொள்வது. நூலேயன்று அடிவரையறைப்பட்ட வெண்பாச் செய்யுளான் நிகழ்தலின். என்னை?

2 எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியின்
அடிவரை யில்லன வாறென மொழிப.

3 அவைதாம்,
நூலி னான வுரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான.

என்றாராலோவெனின், இங்ஙனம் இவ்வாறோதினாராயினும் செய்யுளியல்புவிட்டு மரபியலிற் சூத்திரத்தியல்பு கூறும்வழி,

4 மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகி.

எனப்பொதுப்படக் கூறினமையின் வெண்பாவானும் ஆசிரியத்தானும் நூல் செய்யப்படுமெனத் தழீஇக்கொண்டாராகலானும், மாபுராணமுடையார்,

செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபும்
ஐயப்பா டின்றி யமையுமா—மைதீரொற்
றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு
குன்றுமே லொற்றளபுங் கொள்.

என வெண்பாட்டான் நூல்செய்தலின், அவர்செய்தது உடம்பொடு புணர்த்தலான் விதியாகப்பெற்றமையானும், இக்காலத்து நூல்செய்வார் அடிவரையறைப்

1 இறை, உரைமேற்,- சூ. 1. யாப்பருங்கல விருத்தி, 4-ம் பக்கம். 2, 3 தொல், செய்யுளியல், 164, 165. 4 தொல். மரபியல். 100.

பட்ட பிறபாவாற் செய்யக் கண்டமையானும் விதியுளதாகலின் இது நூலேயா மென்க. இனி,

[1] அதுவே தானு மீரிரு வகைத்தே.

[2] ஒருபொரு ளுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபி னியலு மென்ப.

என்றாராகலின், சூத்திரம் ஓத்துப் படலம் என்னும் உறுப்புக்களான் நடை பெறுமையின் நூலாகாதெனின்,

மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவரது பிண்ட மென்ப.

என்பதனாற் பிண்டத்தை யடக்கி நிற்றலான் அகத்தியம்போற் பிண்டியாதலும் அதிகாரத்தாற் றொல்காப்பியம் போற் பிண்டமாதலும், பலவோத்தாற் பன்னிரு படலம்போற் பிண்டமாதலும், பலசூத்திரந்தொக்க ஓரியலானே இறையனார் களவியல்போற் பிண்டமாதலும் உடைமையின் அம்முறையே முன்னையவிரண்டும் பெருநூல் எனவும், ஏனையிரண்டும் இடைநூல் சிறுநூல் எனவும்பட விதித்தலின் இஃது இறையனார்களவியல்போலச் சிறுநூலாகலின் நூலேயாமென்க. அவர் விதித்தது,

[3] அந்நிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப.

எனப் பாவிதியிற் பொருணியமித்தலின் வீட்டின்றன்மையன்றிக்கூறும் நூற்கே யாகலின் இது சிறுநூலன்றாமெனின், அவர் நூற்குப் பாவிதி கூறினாற்போல ஓரிலேசாற்கொண்டு வீட்டின் றன்மைகூறும் நூற்கும் பாவிதித்தாரென்க. அன்றேல், முப்பொருளென்றபாலதை மும்முதற்பொருட்கும் என்னவேண்டா வென்க. இவ்வாறு கொண்டதனானேயன்றே வாகைத்திணையுள் துறைவகுப்புழி,

[4] பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்.

என்பதனால், இளம்பூரணர் 'இரட்டுறமொழிதலான் மெய்ப்பொருளொடு புணர்ந்த பக்கம், எனவும், நச்சினார்க்கினியர் 'பக்கமென்ற மிகையான் மெய்ப்பொரு ளுணர்த்துதலுங் கொள்க' எனவும் உரை கூறியதூஉம் என்க. எனவே வீட்டின் றன்மை கூறுதலும் விதித்தலின் இது சிறுநூலா மென்க. அவர் ஆண்டு உதாகரித்தது,

[5] சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

---

1, 2, 3 தொல். செய்-167, 168, 106, 4 தொல். புறத். 21. 5 குறள். மெய். 9.

என்றாற்போலவரும் வீட்டினிமித்தங் கூறுவதையாகலின் ஈண்டைக்கேலாதாம்; அதனானேயன்றே பரிமேலழகரும் "சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின் வீட்டின் றன்மை கூறப்படாமையின் நிமித்தமேகூறினார்" என்றதூஉம், நச்சினார்க்கினியரும் "அகத்தியர், தொல்காப்பியர், திருவள்ளுவர் முதலான ஆசாரியரெல்லாம் தமிழால் வீட்டின்றன்மை கூறூர்" என்றதூஉம் எனின்; அது நிமித்தமாயினும் அதன்பாற்படவருதலின் ஏற்குமென்க. என்னே?

1 புணர்தல் பிரித லிருத்த லிரங்கல்
ஊட லிவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.

எனப் பத்தாகக் கூறினாரேனும்,

2 அவற்றுள்,
நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.

என்புழி, நிமித்தத்தையும் அவற்றுளடக்கி ஐந்திணை யென்றாராகலின். அன்றியும், வீட்டின்றன்மை கூறுவது வடமொழியாயினும், தமிழாயினும் நிமித்தமேயன்றித் தன்மைகூறாது; சிந்தையும் மொழியுஞ் செல்லாமரபினதாகலின். இதுவே கருத்தாகலின் பரிமேலழகர் கூறியதூஉம் மாறுபாடன்று.

இதனானே நச்சினார்க்கினியர் கூறியதூஉம் தன்மைநோக்கி நிற்றலிற் பொருந்துமென்க. எனவே வீட்டின்தன்மை கூறுவதெல்லாம் நிமித்தமேயாகலின் இந்நூலும் அவ்வாறுடைமையின் நூலென்பதாம்.

3 உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்.

என்பதனால் அநுபவமே யுணர்த்தக் கூடாமையின், நிமித்தங் கூறுவரெனப் பரிமேலழகர் துறவறத்தையும், நச்சினார்க்கினியர் மெய்யுணர்தலையும் உட்கொண்டவாற்றான் அஃதுணரப்படும். அன்றி இவரை முழுதுணர்ந்தாராகக் கருதி இவர் மாற்றந் தேறப்படாமையின், உட்கொள்ளாது முற்கூறிய அமைதியினிற்றலுமாம். என்னெனிற் பரிமேலழகர்,

4 அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

என்னும் முதற்குறளில் "உலகம் என்பது ஈண்டு உயிர்கண்மேனின்றது" என்றுரைத்து, பின்னர்க் "காணப்படாத கடவுளது உண்மையைக் காணப்பட்ட உலகின்மேல் வைத்துக்கூறினார்" என மாறுபடவுரைகொண்டதனானும், பிறவாற்றானும் அவரியல்புகாண்க. இனி நச்சினார்க்கினியர் மாறுபடக்கொண்டமை,

5 ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.

1, 2 தொல். அகத். 14, 2. 3 திருக்கோவையார், 9. 4 திருக்குறள் 1. 5 தொல், மொழிமரபு, 12.

என்பதனால் ஆசிரியர் ஒற்றுங் குற்றுகரமுங்கூட அலகிட்டதை அறியாமல் அலகிடல்போல்வனவாம். அது செய்யுளியலுள்,

> [1] உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ
> உயிர்த்திற மியக்க மின்மை யான
>
> [2] குற்றிய லுகரமு மற்றென மொழிப.

என்பதை நோக்கி மாறுகொளக் கூறலென்னுங் குற்றம் பரிகரித்தாரெனின் அது மாறுகோளாகாது; எழுத்ததிகாரத்தின் றன்மை நோக்கி,

> [3] எழுத்தெனப்படுப
> அகரமுதல்
> னகர விறுவாய் முப்பஃ தென்ப
> சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே.

எனக் கூறியவாறே ஓரெழுத்தொருமொழி என்பதனன் மொழியாக்குதற்குப் பயன்பட நிற்றலானும், ஆண்டுச் சீர் தளைநோக்கிப் பயன்பட நிற்றலானும், இவ்வாறு ஒரு பயன்கருதி நிற்பின் மாறுகொளக்கூறலாகாதென்பது, 'ஒரு தலையன்மை' என்னும் உத்தியாற் பெற்றதென்க. இதனனே யன்றே எழுவாயைச் சொல்லதிகாரத்துள் வேற்றுமையாகவும், எழுத்ததிகாரத்துள் அல்வழியாகவுங் கொண்டு பயன்கருதி யாண்டதூஉம். அன்றி எழுத்ததிகாரம் பொருளதிகாரம் இரண்டினும் ஒற்றும் குற்றுகரமும்அலகுபெறுதாயின் எழுத்ததிகாரத்துள், எழுத்தெனப்படுப" என்னுஞ் சூத்திரத்தில், மூதல் என்னுங் கால் 'முப்பஃது' என்று கூறியதற்குப் பயனின்மையும், "எழுத்தெனப்படுப" என்னும் இதற்கும் "ஓரெழுத்தொருமொழி" என்னுஞ் சூத்திரத்திற்கும் தம்மில் நிகழும் மாறுபாடும் பரிகாரம் பெறுவென்க. எனவே முற்கூறியவாறே மாறுபாடின்மையின் அவரறியாது அலகிட்டதேயாம். அது குற்றியலுகரப் புணரியலுள்,

> [4] ஈரெழுத் தொருமொழி யுயிர்த்தொட ரிடைத்தொடர்
> ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
> ஆயிரு மூன்றே யுகரங் குறுகிடன்.

என்புழி, ஆசிரியர் நாகு என்பதனை ஈரெழுத்தொருமொழி என்றதனனும் உணர்க. அன்றியும் நச்சினர்க்கினியர் அகத்தியரும் தொல்காப்பியரும் தமிழாற் கூறுரென்றால், தாம் தமிழாற் கூறுதலின்று; பிறர் கூறுவரெனக் கொள்ளக் கிடத்தலின் அவர்க்குப் பா விதிப்பரென்பது பெறப்படுதலின் அவர் விலக்கினர் அல்லர் எனினுமாம். அதனனே யன்றே "பக்கம் என்றதனன் மெய்ப்பொருளுணர்ந்த பக்கம்" எனப் பொருள் கொண்டதூஉம். அன்றித் தொல்காப்பியர்,

> [5] அந்நிலை மருங்கி னறமுத லாகிய
> மும்முதற் பொருட்கு முரிய வென்ப.

---

1, 5 தொல். செய்யு. 43, 106. 2 தொல். புணரியல். 3. 3 தொல். நூன்மரபு. 1.
4 தொல். குற்றிய, 1.

என்றது நூற்செய்யுட்கன்றி ஒழிந்த பாட்டு முதலிய செய்யுட்கு என்றனுமொன்று; என்னெனின், எழுத்திலக்கணமுஞ் சொல்லிலக்கணமுங் கூறும் நூற்பொருள் அம்மூன்றனையுமன்றி நிகழ்தலின். இதனானேயன்றே திருமந்திர மாலை, சிவஞானபோதம் முதலிய தமிழ் நூல்கள் வீட்டின் தன்மை கூறிய நூஉம் என்க. இதற்கு விதி, சிவதருமோத்தரத்தில்,

1. संस्कृतैः प्राकृतैर्वाक्यैर्यश्शिष्यमनुरूपतः ।
देशभाषाद्युपायैश्च बोधयेत्स गुरुः स्मृतः ॥

என்றதூஉம், அடங்கற்றிருமந்திரமாலையுள்,

[1] அவிழ்கின்ற வாறு மதுகட்டு மாறுஞ்
சிமிழ்த்தலைப் பட்டுயிர் போகின்ற வாறுந்
தமிழ்ச்சொல் வடசொ லெனுமிவ் விரண்டும்
* உமிழ்க்கின் றவனை யுணர்த்தலு மாமே.

என்றதூஉம் பிறவுமாம். அன்றி,

[2] சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமங்கற்
றூராய் வதுவட சொற்பயின் றூர்க்கெளி தம்மொழியைச்
சாரா தவருந் தத்துவ ஞானந் தலைப்படுதற்
கேரார் தமிழ்ச்செய்யு ளான்மைய நீர வெழுதுவனே.

என்பதனானும் அறிக. எனவே எவ்வாற்றானும் இது நூலாமென்க. இவ்வாறு வருவதனை நூலென்றது ஆகுபெயர். என்னெனில் [3] "குற்றங்களைந்து எஃகிய பன்னுனைப் பஞ்சுகளையெல்லாம் கைவன் மகடூஉத் தூய்மையும் நுண்மையும் உடையவாக ஓரிழைப்படுத்தினாற்போலப்" புலவர் முதலும் முடிவும் மாறு கோளின்றித் தொகையினும் வகையினும் பொருண்மைகாட்டி ஈரைங்குற்றமு மின்றி முப்பத்திருவகை யுத்தியோடு நுண்ணிதாக நிகழ்த்தலின் அதனோடொப் புமை யுடைத்தாகலான். அது,

[4] பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு.

என்பதனானும் அறிக. அவ்வாறு கூறும் பனுவலிக்கணம்,

[5] ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்.

---

1 ஆகமச்சிறப்பு, சமாசப்படிப்பு. 10. * 'உணர்த்துமவனை' என்பது அச்சிட்டபாடம்.
2 தத்துவவிளக்கம் 3. 3 இறை. உரை. சூ. 1. 4 நன்னூல். பொ. பாயிரம் 23. 5 தொல். மரபு. 98.

என்றற்றொடக்கத்ததாம். ஆயின் அவ்விலக்கணம் இந்நூற்கு வேண்டுமே எனின் அவ்வாறுடைமை கூறுதும். இதனுள், உரை விரியக் கிடந்ததை உடம்பொடு புணர்த்தலானும், பொருளமைத்தெழுதும் உத்திவகை மேல்வருமாற்றானும், உணரக்கிடத்தலான் ஈரைங்குற்றமின்றி நின்றவாறே ஈண்டுணர்த்தப்படும். பத்துவகைக் குற்றமாவன, தொல்காப்பியனார்,

[1] சிதைவெனப் படுபவை வசையற நாடிற்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதன் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கங் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினு மனங்கோ ளின்மை
அன்ன பிறவு மவற்றுவிரி யாகும்.

எனவும், பனம்பாரனார்,

[2] குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்ற நூற்கே.

எனவுங் கூறுவனவாம். இவற்றுள், கூறியது கூறலாவது முற்கூறியதனையே பயனின்றிப் பின்னுமொருகாற் கூறல். அது பரமோபதேசத்தில்,

[3] அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப னுதிமுத்தன்
அந்தச் சிவனொடிரண் டற்று.

என்றபின்னும், பயனின்றி,

[4] திளைப்பர் பரமுத்தர் தன்சித்தின் செல்வம்
ஒளித்திடுநா ளண்டன்மற்றுள் ளூன்.

என முற்கூறியதையே கூறல். இன்னும் அதனுள்,

[5] ஈசன் பிதாமாதா வாமெவ் வுயிர்க்குமெனப்
பேசினன்பே தைக்கெம் பிரான்.

[6] அநாதிமல முத்தன் பிதாவமலை யன்னை
அநாதிமல பெத்தர்க்கெ லாம்.

எனவும், பிறவும் கூறியவைகளும் இதன்பாற்படும்.

---

[1] தொல். மரபு. 108. [2] நன்னூல். பொ. பாயிரம்-11. [3, 4] பரமோபதேசம்-செய். 7, 17. [5, 6] பரமோபதேசம் 33, 34.

**மாறுகொளக்கூறலாவது,** ஒருபொருளை முன்னர்க் கூறியவாறன்றி மாறுபடக்கூறல். அஃது அதனுள்,

1 அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப னதிமுத்தன்
அந்தச் சிவனொடிரண் டற்று.

என முத்தியிலத்துவிதங் கூறி அதனைப் பின்னர்ச் சமவாதங் கூறுமுகத்தான்,

2 அநாதிசுத்த சிற்சத்தி யிற்பேரா னந்தம்
அநாதிசுத்த னேதிளைப்ப னோர்ந்து.

எனவும்,

3 திளைப்பர் பரமுத்தர் தன்சித்தின் செல்வம்
ஒளித்திடுநா ளண்டன்மற்றுள் ளன்.

எனவும் கூறிப் பேதமாக நிறுத்தல் போல்வன. இன்னும் அதனுள்,

4 சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னும்
அவசத்த மாபாத கம்.

என அவசத்தம் என்ற தாமே பின்னர்,

5 சகளசிவ னைத்திளைப்பர் சார்ந்தபர முத்தர்
அகளனரி யானவனு மாங்கு.

எனக்கூறி மாறுபடுமாறு வைத்தலும் இதன்பாற்படும். அவர் இழிவுகருதிச் சொன்னாரென்பது அவசத்தம் என்பதனானும், மேல், ஈசன் பிதாமாதா என்றற் றொடக்கத்தால் யுத்தி கூறுதலானும் பெற்றாம். ஈண்டுச் சகளசிவனை என்பது சாதாக்கியதத்துவ புவனத்துப் போகமெனின் அவர்,

6 கனியினுங் கட்டிக் கரும்பினு முத்தர்க்
கினியன் சிவனென்று ரென்.

என்பதனால்,

7 கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினுந்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.

என இலக்கியம் வந்தவாறே, சிவஞானசித்தியில்,

8 இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து

1, 2, 3, 4, 5, 6 பரமோப 7, 9, 17, 8, 16, 15. 7 அப்பர், திருவிடைமருது, குறுந். 10.
8 சிவஞானசித்தி, சு. 11. பாடல் 12.

விரும்பிப்பொன் னிணைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேனித்துத் தானெல்லாம் வேதிப்பா னுகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனக்கூறும் முத்தியிலக்கணத்திற்குப் பரிகாரந்தேடி நிட்களசிவனைச் சொன்ன தன்று; இலிங்கத்திற்றோன்றும் சதாசிவமூர்த்தி மகேசுரமூர்த்தி முதலிய இவர்களைச் சொன்னதென்று அர்த்தம் தாம் கற்பித்துச் சிவன்பாலேற்றினாராகலின் அது கூடாதென்க. அஃது அப்பரோதிய தேவாரத்தான் அவர்க்கே நிகழ்ந்தமையைப் பரிகரித்தலான் சுத்தமாயாபுவனத் துள்ளாரைச் சொன்னதன்றென வருதலானும்பெற்றும். சதாசிவமூர்த்தி முதலியோர் அவத்தையான் வேறுபடுதலின் அவர்கள் பரமசிவனன்றி வேறல்லரென எல்லாரும் அறிந்திருப்பதை இவரறியாதிருப்பரோ எனின் சற்சம்பிரதாய குரவரையடைந்து வணங்குதற்கொல்கிப் பெருமையான் அடங்கியிருந்தாராகலின் குருவருளால் அறியாமையின் இதுவும் தோன்றாது கூறியதேயாம். அன்றி, அறிந்துசொன்னார் என்றால்,

[1] கனியி னுங்கட்டிக் கரும்பினு முத்தர்க்
கினியன் சிவனென்று ரேன்.

என்பதற்கு உத்தரமாக அடுக்கவே,

[2] சகளசிவ னைத்தினைப்பர் சார்ந்தபர முத்தர்
அகளனரி யானவரு மாங்கு.

எனக்கூறியதற்கு வேறோர்பொருள் கற்பிக்கவேண்டும். அது கூடாமையின் அற்றன்றென்க. எனவே, அவர் பரிகாரமும் முடிவுபோகாமையின், சிவாநந்தாநுபவமே அவர் வாக்கினுற் சித்தித்ததாயிற்று; அவத்தாபேதமன்றிச் சகளசிவன் வேறன்மையின். அது வாதுளாகமத்தில்.

2. योगिनाञ्च यतीनाञ्च ज्ञानिनां मन्त्रिणां तथा ।
ध्यानपूजानिमित्ताय निष्कलं सकलं भवेत् ॥

என வருதலான் அறிக.

இனி, **குன்றக்கூறலாவது** முன்னதிகரித்த பொருளுட் சில கூறுதொழிதல். அது பரமததிமிரபாநுவில்,

தவத்தா ருரைமறுக்க வஞ்சிச் சமைப்பாம்
அவத்தார் மதமறுப்பெல் லாம்.

எனப் பாயிரத்துட் சித்தாந்தமொழிந்த பரமதமெல்லாம் மறுப்பாம் என அதிகரித்தவர், அருணந்திதேவசிவாசாரியர் மறுத்த சிலமதமட்டும் மறுத்து, மற்றப் பரமதநிலைமை தெரியாமையின் குறைவைத்துப் போதல்போல்வன.

1, 2 பரமோப. 15, 16.

இன்னும் மறுக்கவேண்டிய பரமதம் பலவும் பரமோட்சநிராசகாரிகையுட் கண்டு கொள்க.

3. अव्याकृतादिष्वर्वास्त्वं लय एव विकारिषु । (சுலோ-2)
महागणो महेशस्य त्वकलः सर्ववेद्यवित् ॥ ( „ 3)

என்பது முதலியன. இதனானே ஒரு காரணமுமின்றி, அருணந்திசிவாசாரியர் கூறியதையே தாமுங் கூறினராகலின், அஃது அரைத்தமாவை யரைத்தாற் போலப் பயனின்றாயிற்று. ஆகவே இப்பரமத திமிரபாநுவைப்போலப் பதிபசு பாசப்பனுவலும், சங்கற்பநிராகரணமுஞ் செய்தலின் அவையும் அவ்வாறு படு மென்க.

மிகைபடக்கூறலாவது முன்னரதிகரித்த பொருளையன்றிச் சில கூட்டி மொழிதல். அது பரமோபதேசத்தில்,

[1] முத்த னநாதிசுத்தன் றாள்வணங்கி யாதிமுத்தர்க்
குத்தமப்பே ரின்பமுரைப் போம்.

என அதிகரித்தவர்,

[2] அநாதிமல முத்தன் பிதாவமலை யன்னை
அநாதிமல பெத்தர்க் கெலாம்.

என மாதா பிதா இவரென்னும் விசாரமுங்கூட்டி மொழிதல் போல்வனவாம்.

பொருளிலமொழிதலாவது முன்னும் பின்னும் வருகின்ற பொருண்மைக் கொத்து முடிவுபோதற் கியைபில்லாத ஒன்றைக் கூறல். அது பரமோப தேசத்தில் ஆதிமுத்தன் இன்பவிசாரம் பண்ணுங்கால் இடையே ஒன்றானும் பயன்படாத ஈசன் பிதா மாதா எவ்வுயிர்க்கும் என்னும் விவகாரமும்,

[3] கற்புடையா ளைத்திளைப்பன் காணவள்காந் தன்னவளை
மற்றையர்தீண் டார்காண் மணின்.

எனக் கற்புடையாள் விசாரமும் பண்ணுதல். அஃது உண்மை வழக்காதல் பிரமாண விரோதங்களாற் கூடாமையின்,

[4] அப்பனீ யம்மைநீ யைய னுநீ
யன்புடைய மாமனு மாமி யுநீ
ஒப்புடைய மாதரு மொண்பொரு ளுநீ
யொருகுலமுஞ் சுற்றமு மோரூ ருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத் துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.

எனவும்,

---

[1, 2, 3] பரமோப. 2, 34, 12. [4] அப்பர், தனித்திருத்தாண்டகம். 1,

[1] மாதா பிதாவாகி மக்க ளாகி
மறிகடலு மால்விசும்புந் தானே யாகிக்
கோதா விரியாகிக் குமரி யாகிக்
கொல்புலித்தோ லாடைக் குழக ளுகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பறுக்கும் புனித ளுகி
யாதானு மெனநினைந்தார்க் கெளிதே யாகி
யழல்வண்ண வண்ணர்தா நின்றவாறே.

எனவும், பிறிதொரு பொருண்மைபற்றி உபசாரவழக்காற் கூறினுரேனும் மேற்கூறுமாறே நிராகரிக்கப்படுதலின் பயனின்றிநிற்றலான் என்க. அன்றி, திருமந்திரமாலையில் திரோதசத்தியதிகாரத்துள்,

இருட்டறை மூலை யிருந்த *கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தாளே.

என்பதற்கு,

[2] இருட்டறை மூலை யிருக்குமுயிர்ச் சத்தி
இருட்டறையில் லைச்சிவசத் திக்கு.

என முன்னுேடுபின் இயைபில்லாத உயிர்ச்சத்தியை யிடையிற் கூறுதல் போல்வதூஉம் இதன்பாற்படும்.

**மயங்கக்கூறலாவது** அதிகரித்தபடியன்றி முறைபிறழக் கூறுதல். அது பதிபசுபாசப் பனுவலிற் பிரமாணவியலுள்,

[3] சொல்வாம் பிரமாண மேயஞ் சுருதியுட்
சொன்னமிதி மாதிருவு நாடு.

என நிறுத்தமுறையன்றி,

[4] சமலன்சிற் சத்திறிரி வையமறின் மானம்
அமலனனுப் பாசமுமே யம்.

மிதிமான முன்பெற்ற மேயம்பின் பெற்ற
மதிமான மாதிருவான் மா.

ஒன்றனைமற் றொன்றென் றுணர்கைதிரி வையம்
ஒன்றினிரட் டுற்றவுணர் வு.

அநுபூத வாதனையா னுகு மிருதி
யதுதானு மல்லவிமா னம்.

---

[1] அப்பர், நின்ற திருத்தாண்டகம். 7. * குமரி என்பது அச்சுப்பாடம். [2] பாமோப. 23
[3] பதிபசு. பிரமாண. 21. [4] பதிபசு. பிரமாண. 22 முதல் 25 முடிய.

[1] உன்முகமா னங்கரணத் தோடுயிரம் மானத்தோ
டுன்முகமாய் வேறற் றுறும்.

காண்டலநு மானமுறை யொப்பொழிவ பாவமென்
றீண்டிருமூன் றுமான மெண்.

என்றற் றொடக்கத்துள் முன்னர்ப் பிரமாணங் கூறுவலெனா அதிகரித்தவர் பிரமாணவிலக்கணத்தை முழுதுங் கூறாது "சமலன்சிற் சத்திதிரி வையமறின் மானம்" என்று மாத்திரஞ்சொல்லிக் குறைசொல்வதற்கு முன்னே "அமல னணுப் பாசமுமேயம்" என்றற்றொடக்கத்துப் பிறிதினிலக்கணத்தை இடையிற் கூறியும், ஈண்டுணர்த்தற்பாலதை இரண்டுகுறள் இடையிட்டுப்போய் ஆண்டு "அநுபூத வாதனையானுரு மிருதி" என்றற் றொடக்கத்தாற் பின்னர்ப் பிர மாணவிலக்கணங் கூறுதலும் போல்வனவாம்.

**கேட்போர்க்கின்னாயாப்பிற்றாதலாவது** செய்த செய்யுள் சந்தவின்பமின்றி வகையுளிசெய்து நலிந்துகூறக்கிடத்தல். அது,

[2] கேளா யுபநிடற்பா கப்பிரம கீதையினு
மாளாயாய்ந் தார்க்கவர்வாக் கால்.

எனவும்,

[3] அந்தாதி யற்றசம வானுயிர்கட் கன்னவன்றன்
செந்தா மரைப்பாதஞ் சிந்தனைசெய்—தந்தாதி
யற்றசம வானு மயிக்கம் பகருவாம்
கற்றுணர்வார் கற்றவுட் கட்டு.

எனவும் வருவனவற்றான் அறிக. மறைஞானபண்டாரஞ் செய்த தமிழெல்லாம், இவற்றை நாம் படித்தால் நமக்கும் அவ்வாறு நாப்பழகிச் சந்தவின்பம்படச் சொல்லவாராதெனப் பிறர் வழங்காமை யுணர்க. இவ்வாறு அவர்செய்தன **சிவதருமோத்தரம், சைவசமயநெறி, பரமததிமிரபாநு, பதிபசுபாசப்பனுவல், சங் கற்பநிராகரணம், பரமோபதேசம், ஐக்கியவியல்** முதலான பலவுமாம்.

**பழித்தமொழியானிழுக்கங்கூறலாவது** இடக்கரடக்கற்சொல்லான் அறிய வருஞ் சொற்களை வெளிப்படையாகக் கூறுதலும், இலக்கணமுடிபில்லா வழூஉச் சொற் புணர்த்தலும்போல்வனவாம். அது,

[4] சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னும்
அவசத்த மாபாத கம்.

என்றலும், பரமததிமிரபாநுவில்,

[5] மநுநீதி மன்னவர் வாழ்க மடிக
அநுநீதி மன்னரரு ளற்று.

என்புழி அநீதி எனற்பாலதை அநுநீதி யென்றலும்,

---

1 பதிபசு. பிரமாண. 26, 27. 2, 4 பரமோப. 20, 8. 3 ஐக்கியவியல், 3. 5 பரமத திமிரபாநு.

இனமல்லா ரைக்காணி னிச்சையுறப் பார்க்கி
லொருசதமுறவேயியம்ப.

என்புழி இயம்புக எனற்பாலதை இயம்ப என்றலும், சைவசமய நெறியில்,

1 ஐந்துகூ ருக்கவத னைப்பீடத் துன்னதநான்
*கொந்துசிவ லிங்கோன் னதம்.

என்புழி ஒந்து என்னுஞ் சான்றோர் வழங்காத் திசைச் சொல்லைச் சொற்குண மறிவார் மனங்கொள்ளாவாறு புணர்த்தலும் போல்வனவாம்.

**தன்னொருபொருள்கருதிக்கூறலாவது** முன்னோரான் வழங்கப்பட்டு வருதலேயன்றித் தன்குறிப்பால் ஒருபொருள் படைத்துக்கூறல். அதுவும் அன்னதே. மூலாகமத்தில்,

4. आचार्यश्शिव एव स्यादनयोरन्तरं नहि।
यः पश्येदनयोर्भेदं सोऽधोगतिमवाप्नुयात्॥

என வசனமிருக்க,

2 சிவனைக் குரவனெனச் சிந்தியே லந்த
அவமதியா லாழ்வரவ லத்து.

என்றற் றொடக்கத்தாற் கூறல். இது சமயசங்கேதமாக உருத்திரனைப் பிரமசை தன்னியமாகக் கொண்டாற்போலப் பத்திநெறியறிந்து கொள்ளற்பாலதைக் கண்டித்தல். மறைஞானபண்டார முதலிய பிறர், சிவாகமங்களினும் தொல்லாசிரியர் வாய்மொழிகளினும் இல்லாததோர் விவகாரமான ஆன்மாநந்த முத்தி, சிவசமதாமுத்தி என்னும் இவற்றைத் தங்கள் குறிப்பாற்படைத்துப் பரமோபதேசம், சகலாகமசாரம் என்றாற்போலச் சிலநூல் செய்தலாம். இதனனே யன்றே பரமோபதேசத்தில்,

3 திளைப்பர் பரமுத்தர் தன்சித்தின் செல்வம்
ஒளித்திடுநா ளண்டன்மற்றுள் ளூன்.

என்றும், அவர் சங்கற்பநிராகரணத்துச் சைவநிராகரணத்தில்,

4 முளைப்பின்றி யான்மாத்தன் சத்தியின்முற் றின்பந்
திளைத்திருக்கை முத்தியெனத் தேறு.

என்றும், பிறவாறும் வந்தன. சகலாகமசாரத்தில்,

என்றியம்பு மட்ட குணமு மிறையருளாற்
பொன்றா துயிர்க்குறுமப் போது.

1 சைவசமய நெறி, பொதுவிலக்கணம் 111. * ஒன்று என்பது அச்சுப்புத்தக பாடம். 2 சைவசமய நெறி, மாணுக்கரிலக்கணம், 15. 3 பரமோப. 17. 4 சங்கற்பநிராகரணம். சைவ. 53.

தொன்னு ளறிவுதொழி ரேன்றுதலாற் பெற்றவின்பே
தன்னுநந் தம்பெறுத ருன்.

எனச் சமதாமுத்தி விவகாரம் வந்தவாறு. இது முற்கால வழக்கன்றென்பது, இங்ஙனங் கூறுஞ் சங்கற்பநிராகரணத்துக்கு மூலமான சங்கற்பநிராகரண முதலானவற்றி லின்மையானும், அவைசெய்த ஆசிரியர் மெய்கண்ட சந்ததியாகலின்,

[1] மெய்கண்டான் சந்தான மேவிச் சிவாநந்தங்
கைகண்டார் காணார் கரு.

என்பதனுனும் பிறவாற்றானும் பெற்றாம்.

என்னவகையினுமனங்கோளின்மையாவது எவ்வாற்றானும் பொருளறிதற் கருமையாகச்செய்தல். அது ஐக்கியவியலுள்,

[2] ஈசனுக்குண் டேகவிடை யென்போ ரயிக்கியம்வே
றீசனுக்குண் டேதுவய வேறுமெனப்—பேசுவரோ
வொன்றென்ன வொன்றிற் பிறிதிரண்டுற் றுலதனுக்
கொன்றிடுமிப் பேர்களிரண் டும்.

என்றாற்போலப் பிறர் கூறுவனவெல்லாமாம். பிறவுமன்ன. இவ்வாறுவரும் பத்துவகைக் குற்றங்களும், இவைபோல்வன பிறவும் பிறர் நூல்களிற்போல இந்நூலின்கட் காணுமையின் ஈரைங்குற்றமுமின்றி இந்நூல் இயன்றவாறும். இங்ஙனம் கூறும் குற்றமின்றாகவே,

[3] சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே.

என்னும் பத்துவகை யழகும், இவைபோல்வனபிறவும் தாமேயெய்துமென்பது சொல்லாமையே போதருமென்க. அது,

[4] **உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்திசிவன்**
**றன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே—முன்னறிஞ**
**ரோது சிவன்றேற்ற மொன்றுமே காண்பரெனும்**
**போத மறந்தாயிப் போது**

என்னும் இவ்வொன்றனுள்ளே முழுதுங்கிடந்தமை காண்க. இவ்வாறே ஏனைப் பாட்டுக்களும் வருதலின், இன்னும் உதாகரிப்பின் விரியும் என்க. எனவே,

1 துகளறுபோதம். 1. 2 ஐக்கிய-7. 3 நன்னூல், பொதுப். 12, இச்சூத்திரம் யாப்பருங்கலம் முதற் சூத்திரவுரையினும், காரிகை ஒழிபியல் 8-ம் பாடலுரையினும் காணப்படுகின்றன. 4 இந்நூல்-8ம் பாடல்.

பிறர்நூற்கு எடுத்தோதுங்குற்றமன்றி இலேசானுங் கொண்டால் அக்குற்றம் அலகிட்டு முடியாதெனவும், இந்நூற்கு எடுத்தோதுங்குணமன்றி இலேசானுங் கொண்டால் அக்குணமலகிட்டு முடியாதெனவுங் கூறியவாறு.

இவ்வாற்றான் நூலிலக்கணம் முழுதுமுடைய இம்முத்திநிச்சயம் இருபத்திரண்டு நேரிசைவெண்பாட்டான் முடிபுடைத்தாகலின் அவற்றுள், ஈண்டு முதற்கணின்ற செய்யுள் எப்பெற்றிப்பட நின்றதெனின், அது **நற்சிறப்புப் பாயிரமாக** நின்றது. என்னை? [1] தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளும் தோன்ற இந்நூல் செய்த குரவராற் செயப்படுதலின். இதனை மங்கலமென்று கூறுப.

**சீர்மேவும் ஆரூர்ச் சிதம்பரநாதன் எனும்**
**பேர்மேவும் ஞானப்பிரகாசன் — தார்மேவு**
**சேவடிகள் போற்றி**

என்பது, திருமகள் உறையுந் திருவாரூரிற் சிதம்பரநாதன் எனும் பிள்ளைத் திருநாமம் பெற்ற ஞானப்பிரகாச தேசிகரது பூந்தொடைசூழ் சிவந்த பாதங் களை வணங்கி,

**திகழ் முத்திநிச்சயம் ஒன்று**
**ஆவது என மொழிவேன் யான்**

என்பது, விளங்கும் முத்திநிச்சயமாவதென ஒன்றைச் சொல்லுவேன் யான் என்றவாறு. இதனுள், **சீர்மேவு மாரூர்ச் சிதம்பர நாதனெனும் பேர்மேவு ஞானப் பிரகாசன்—ருர்மேவு சேவடிகள் போற்றி** எனத் தெய்வவணக்கமும், **திகழ்முத்தி நிச்சயமொன்றுவதென மொழிவேன் யான்** எனச் செயப்படுபொருளும் வந்தவாறு காண்க. தொடங்குநூல் இடையூறின்றி அழகிதாய் முடிந்து நிலவுதற்பொருட்டு மங்கலமொழி முதலில்வைத்து வணங்குதற்குரிய கடவுளை வணக்கஞ் செய்ய வேண்டுதலின் மிகைபடக் கூறியதன்று. என்னை?

ஆதியு மந்தமு நடுவு மங்கலம்
ஓதிய மொழிகளா னுரைப்ப ராயிடின்
ஏதமி விருநிலக் கிழத்தி யின்புற
நீதியம் பனுவல்க ணிலவு மென்பவே.

என்றார் பிறரும். இதனை விரிய விசாரித்து உணர்த்தின் ஈண்டுப் பெருகு மாகலின், தருக்கநூன் மங்கலவாதத்திற் கண்டுகொள்க. அவ்வாறாயின், தெய்வ வணக்கமன்றே செய்யவேண்டுவது; அதனைச் செய்யாது செய்யவேண்டாத பிறிதோர் வணக்கஞ் செய்தல் குற்றமாகும். இதனானேயன்றே மறைஞான பண்டாரமும் பரமதிமிரபாநு முதலிய பெருநூல் செய்யினும், பரமோபதேசம் முதலிய சிறுநூல் செய்யினும் அவ்வாறே தெய்வவணக்கங்களே செய்து குரு வணக்கம் கூறுதொழிந்ததூஉம். அன்றியும், அத்தெய்வவணக்கத்தோடு குரு வழிபாடுங் கூடத்தான் செய்வதற்கும் விதியுண்டாயிற் செய்வரன்றே; அதற்கும்

1 தண்டியலங்காரம் உரைமேற்கோள்.

விதியின்மையினன்றே விநாயகர் முதலிய தெய்வ வணக்கங்களே மிகவும் செய்தாராகலின், ஈண்டுக் குருவணக்கஞ் செய்தது வேண்டியது ஒழித்து வேண்டாதது கூறியதேயாமெனின், அது கூறாதும்; ஈண்டுத் தெய்வவணக்கஞ் செய்வது சிவனை வணங்குதலன்றே. அச்சிவனும் குருவும் ஒன்றாகலின் அவ்வாசிரியர் வணக்கமே தெய்வ வணக்கமாமென்க. என்னை?

4. आचार्यश्शिव एव स्यादनयोरन्तरं नहि ।
यः पश्येदनयोर्भेदं सोऽधोगतिमवाप्नुयात् ॥

எனவும், காமிகத்தில்,

5. आचार्यश्शिव एवाहुश्शिव आचार्य उच्यते ।
अभेदं यो न जानाति स वर्णाच्छिन्न उच्यते ॥ *

எனவும், நிச்சுவாசத்தில்,

6. उभयोरन्तरं नास्ति देशिकस्य शिवस्य तु ।

எனவும் வரும் இவைமுதலான வசனங்களுண்டாதலான் என்க. அன்றி, விசுவசாரோத்தரத்தில்,

7. गुरुरूपं परं ब्रह्म गुरुरूपं परं शिवम् ।
गुरुरूपं परं ज्ञानं गुरुरूपं परात्परम् ॥

तस्मात्सर्वप्रयत्नेन गुरुरूपं सदा स्मरेत् ।

என்றவாறே,

[1] பரப்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்றும்
அரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று
மருட்குருவை வழிபடவே யவனிவன்றா னேயே
இரங்கியவா ரணமாமை மீனண்டஞ் சினையை
யியல்பினொடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போற்சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே

என்பதனுமறிக. இதனானேயன்றே,

8. देवालये गुरुर्यत्र तिष्ठते वै षडानन ।
गुरुं पूर्वं नमस्कृत्य पश्चाद्देवं तु वन्दयेत् ॥

எனவந்ததூஉம் என்க. இவ்வாசிரியர்க்கு இவ்வழிபாடு இயல்பாய் நிகழ்ந்தது.

* இது வீரதந்திரத்தில் ஆசாரிய லக்ஷண படலத்திலும் காணப்படுகிறது. [1] சிவஞானசித்தி, சூ. 12. பா. 7.

[1] மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குருவேயுன் குற்றேவல்செய்வேன்
நெறியே நின்னடியார் நினைக்குந்திருக் காளத்தியுள்
அறிவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே.

என ஆளுடைய நம்பிகளும்,

[2] மானு மழுவுந் திருமிடற்றில் வாழுமிரு
டானும் பிறையுந் தவழ்ந்திருக்கும்—வானவர்க்கு
வெள்ளத்தே தோன்றிக் கழுமலத்தே வீற்றிருந்தென்
உள்ளத்தே நின்ற வொளி.

எனப் பிள்ளைக்கு நிகழ்ந்தவாறே,

[3] கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுண் ஞானப்ர காச*சிதம்பரவின்
றுனக்கிச்சை யெப்படி யப்படியாக வுரைத்தருளே.

எனவே, ஆசிரியரும் தமது கருத்துக்கிசையாத ஒன்றைக் குரவர் சொல்லினும், அவராணையுட்பட்டுநின் றொழுகுவேனெனும் உள்ளம் வெளிப்படுத்திக் கூறும் காரிகைக்கவியிற் சிவனும் குருவும் ஒன்றாகத் தமது அநுபவம் நிகழ்ந்தவாறே வந்ததனானும்,

[4] கிடந்தாலு ஞானப்ர காசனென் பேன்கிடந் தேயெழுந்து
படர்ந்தாலு ஞானப்ர காசனென் பேன்பசி யோடுபிணி
அடர்ந்தாலு ஞானப்ர காசனென் பேனந்த வந்தகனார்
தொடர்ந்தாலு ஞானப்ர காசனென் பேன்பினைச் சொல்லிலையே.

என, [5] "ஞானப்பிர காசகுரு வேகுரு வெனக்கூறி நாத்தழும் பேற்று குருவே" என்று பிறர் கூறியவாறே வந்ததனானும் அறிக. இவ்வாற்றான் அசிந்திய விசுவத்தில் விரதபடலத்தில்,

9. स्वस्वातन्त्र्यादिकं हित्वा गुरुस्वातन्त्र्यसंयुतः ।
पुण्यक्षेत्रं च तीर्थं च दानकर्मादिकं तथा ॥

सर्वं च गुरुकारुण्याद्दर्शनश्च पुनः पुनः ।
गुर्वाज्ञया विहीनं तु तपोदानादि निष्फलम् ॥

तस्मात्सर्वप्रयत्नेन गुर्वाज्ञापालनं परम् ।

என்பதனானும்,

---

[1] சுந்தரர், திருக்காளத்தி. 4. [2] திருக்கழுமலமும்மணி. 5. [3] பண்டாரக்கலித்துறை.
* சிதம்பரனே என்பது பாடம். [4] குருஞானசம்பந்தர் வாக்கு. [5] குருஞானசம்பந்தர் தசமணி மாலை. 4.

[1] தெளிவு குருவின் றிருமேனி காண்டல்
தெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் றிருநாமஞ் செப்பல்
தெளிவு குருரூபஞ் சிந்தித்த லுனே.

என்பதனானும் கூறிய இயல்பும் இயல்பானிகழ்ந்தது காண்க. இவ்வாறு சிவனுங் குருவும் ஒருபொருளாகக் கருதிவழிபட விதியுண்டாயிருக்கவும் பிறர்,

[2] சிவனைக் குரவனெனச் சிந்தியே லந்த
அவமதியா லாழ்வரவ லத்து.

[3] இட்டனெனக் காண்பரவ னேவலரை யேவலரென்
றிட்டனையார் காண்பா ரியம்பு.

[4] இதுகொள்கை யல்ல விதனை விடுக
மதிநிபுணர் வேண்டிடல் வரம்.

என்று கூறியதென்னெனில், அவருக்குக் குருபக்தியின்மையின் தமது பூர்வாசிரியரை வழிபடாது அவமானம்பண்ணின குற்றத்திற்கு ஏற்க, "தன்னுளொரு பொருள் கருதிக்கூறல்" என்பதனால் ஒருவசனம் கற்பித்துக் கூறினாராகலின், அது பிரமாணமன்று என்க. என்னெனில், 'சிவனைக் குரவனெனச் சிந்தியேல் என்றால் அது சிவன்றானே குரவனாயினான் என்றுதான், குரவன்றான் சிவனாயினானென்றுதான் வரும் இருபொருளுடைத்தன்றே? அவ்விரண்டிற்கும் மூலாகமமான காமிகத்தில்,

5. आचार्यश्शिव एवाहुश्शिव आचार्य उच्यते ।
अभेदं यो न जानाति स वर्णाद्भिन्न उच्यते ॥

எனவும், விசுவசாரோத்தரத்தில்,

4. आचार्यश्शिव एव स्यादनयोरन्तरं नहि ।
यः पश्येदनयोर्भेदं सोऽधोगतिमवाप्नुयात् ॥

எனவும் வருதலிற் கற்பிதமென்றதாம். இதனானேயன்றே திருவருட்பயனுள்,

[5] பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் †காணு புவி.

என்றதூஉமென்க. இதனானே,

[6] இட்டனெனக் காண்பரவ னேவலரை யேவலரென்
றிட்டனையார் காண்பா ரியம்பு.

என்பது சேட்புலத்ததாம். அதற்கு ஆகமவசனம் உண்டேனும், பராசரத்தில்,

[1] திருமந்திரம் தந்திரம் 1. உபதேசப்பகுதி. 27. [2, 3, 4, 6] சைவசமயநெறி மாணுக்க. 15, 16, 17, 16. [5] திருவருட்பயன் அருளுரு. 5. † 'காணுர்புவி' என்று அச்சுப்புத்தகபாடம்.

10. शिवदृष्टिस्तु सर्वत्र कर्तव्या सर्वजन्तुभिः ।
राजदृष्टिर्यथामात्ये क्रियते सर्वजन्तुभिः ॥

எனவும், கூர்மத்தில்,

11. अमात्ये राजबुद्धिस्तु न दोषाय फलाय हि ।
तस्मात्सर्वमतिं कुर्यात्सर्वत्र हि न संशयः ॥

तथापि रुद्रे विप्रेन्द्राः परतत्त्वमिति स्मृतिः ।

எனவும் வரும் புராணவசனமுமுண்டாலெனின் அது சிவோகம்பாவனை நிமித்தம் கற்பிதமான ஏகான்மவாதாநுசரணத்தால் "சராசர மனைத்தையும் சிவனாகக் காண்க" என்புழிச் சிவன் இச்சராசரமானால் அவையும் சிவனுமாகலிற் கட படாதிகளை அதன்வடிவாகத்தானே சிவவடிவன்றிக் கண்டாலும் குற்றமில்லையோ என்றுவர அவ்வாறுவரின் பழைய பெத்தாவத்தையோடு பேதமில்லையாகையின் பயனின்று என்பார் அரசபுத்தியை மந்திரியிடத்துப் பண்ணுதலன்றி 'அரையனிடத்தில் மந்திரி புத்திபண்ணுதவாறுபோற் காண்க' என விலக்கினாராகலின், இவர் குருவிற்கும் சிவனுக்கும் பேதங் கூறியது இப்புராண வசனத்தினும் இல்லை என்க. அன்றிச் சிவனுக்கு ஆதிக்கமும், விண்டுவாதி தேவதைகட்கு நிகிருட்டதையும் தோன்ற அவ்விடத்திற்கு இயையும்படி ஒரு பயன்கருதிக் கூறினாராகலானும் அப்புராணவசனம் ஈண்டுச் சைவத்திற்கு உதாரணமாகாதென்க.

அவ்வாறு சிவனுக்கும் விண்டுவாதி தேவதைகட்கும் வேறுபட்ட தன்மைபோலச் சிவனுக்குங் குரவனுக்குங் கூறில் வருங்குற்றமென்னெனின், அவ்வாறு பேதஞானம் உலகத்தோரனைவர்க்கும் எளிதாய பிரத்தியக்ஷாதி பிரமாணத்தாலே வருமன்றே; அஃதன்றிக்கும் பரமசிவன்,

5. आचार्यश्शिव एव स्याच्छिव आचार्य उच्यते ।
अभेदं यो न जानाति स वर्णाद्भिन्न उच्यते ॥

எனவும்,

4. यःपश्येदनयोर्भेदं सोऽधोगतिमवाप्नुयात् ॥

எனவும் விசேடித்துக் கூறுதலின், மூலாகமவசனத்தைத் தள்ளிக்கூறுதல் "தன்னொருபொருள் கருதிக்கூறல்" என்க. அதற்கு யுக்தியும்,

12. गुरुशिवादभेद इति व्यवहर्तव्यः । समयसंकेतभक्तिमूलत्वात् ।
यथा स्त्रीपुन्नपुंसकादिसूत्रे यथा रुद्रः ब्रह्म एव इति व्यवहारः ।

அன்றேல் ஒருவனோடொருத்தி என்பதனால் உருத்திரமூர்த்தியைச் சிவனெனவே அவர் விவகரித்தது கூடாதாகவேண்டுமென்க. இது பொருள்கோட்பகுதியுள்

'ஆணைகூறல்' என்னும் தந்திரவுத்தியாற் பகுத்துவிசாரியாது, *"அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்" என்பதனுல் வறிதேபொருள்கோடல் மரபாம். இத னுனேயன்றே,

[1] அருவே யுருவன் றுருவே லருவன்
றிருவேறு மொன்றிற் கிசையா—வுருவோரில்
காணி லுயர்கடந்தைச் சம்பந்தா கண்டவுடற்
பூணுபிறைக் கென்றும் புகல்.

என அருவான ஆகாயத்தில் உருவான இடி, மின், இந்திரவில் முதலாயின தோன்றுமாபோற் றேன்றுமென உத்தரஞ் சொல்லும்படி ஒற்றுமையான் வினவியதூஉமாம். பிறவும் அன்ன. இதனுனே விண்டுவாதிகளைச் சிவசத்தி அதிட்டிக்கும்; சிவன்றுனே ஆசாரியனுயிருப்பனான்றே. விருத்தகிரிப்புராணத் தில்,

[2] பரம்பரை யாசான் பாதம் பணிந்துப தேசங் கேட்பான்
உரம்பரன் றனேயா சானே யொருமுத லாகக் காண்பான்
கரந்திரண் டாகக் காணிற் கற்பமா நரகில் வீழ்வான்
வரம்புள ஞான வானை மற்றிறை யாகக் காண்பான்.

என்பதூஉம் காண்க. இதனுனே விண்டுவாதிகளைச் சிவசக்தி அதிட்டிக்கும்; சிவன்றுனே ஆசாரியனுயிருப்பனென்றதனுனும் விண்டுவாதி தேவதைகளினும் ஆசாரியரிடத்து விசேடவழிபாடு தோன்றியதூஉம் காண்க. எனவே, ஒரு வாற்றுனும் மூலவசனம் இன்மையின் அவர் குருபத்தியின்றி நடந்ததற்கேற்பத் தன்னுெருபொருள் கருதிக்கூறல் என்பதனுற் கூறினுரென்பதாம். அன்றி,

13. श्रीमन्तं देशिकं ध्यात्वा स्वात्मज्ञानं तु बोधयेत् ।

எனச் சிவாகமார்த்தங்களைச் சொல்லுமிடத்து முதலிற் குருவழிபாடு செய்வதை விதித்தலின், அவ்விதிபற்றி வந்ததெனினும் அமையும்.

சிவனையும், குருவையும் இரண்டு பாட்டாற் றனித்தனி வழிபடுக எனின், இது சிறுநூலாதலின் பரந்துபடுமென்றும், அவர்க்கு ஒற்றுமைப்படவே அநு பவமாகலின் வேண்டாவென்றும் ஒன்றுனே அமைத்தாரென்க. அன்றிச் சிவாக மார்த்த போதனையில் குருவழிபாடே சிறப்பென விதித்தலானும், தமக்கு உணர்த்தியது குருவடிவமாகலின் அவ்வுபகாரங்கருதி அங்கே மனம்சேறலின் ஆதரவுமிகுதியான் அவ்வாறு கூறினுரெனவுமமையும். ஆகவே, இவர் தெய்வ வணக்கஞ்செய்தது வேண்டியதே கூறலின் வேண்டாதது செய்திலரென்க.

இனி, இவ்வாறு வருவதாயின், மறைஞானபண்டாரம் ஒரு நூலிலா யினும் குருக்களது சிறப்புப்பெயர்கூறி வழிபடாதது என்னையோவெனின், அது கூறுதும்; மறைஞானபண்டாரம் சிறுவயதில் திருக்காளத்தியிற் சென்றுழி, அவ்வூர்க் கண்ணப்பபண்டாரம் கருணையால் விசேடதீக்கை பரியந்தம்பண்ணி

* சிவஞானபோ. 8-ம் சூ. 2-ம் அதி. 4-வெண். [1] வினுவெண்பா-8. [2] விருத்தகிரிப்புராணம் சிவபூசாவிதி-33.

உடையவரும் எழுந்தருளப்பண்ணிக்கொடுத்துக் கல்வியுடையராதற் பொருட்டு அனுப்புவித்தலின், அவர் சோணாட்டிற்சென்று கல்வியுடையரானவழி விவேகம் உண்டாகுதலின், தாம் நைட்டிகராக நின்று ஒழுகுமாற்றால் கண்ணப்ப பண்டாரம் கிருகத்தராகலின், அவரினும் உயர்ந்தாராகத் தம்மை நன்குமதித்து, அக்கண்ணப்பபண்டாரம் தில்லையில் தம்பால் வந்துழியும் வழிபடாமை கருதி, அவர்கேட்பச் சிவலிங்கம் விடுத்தலின், பூர்வாசிரியரோடு மாறுபாடாகலானும், பின்னரொரு குரவரை அடைதற்கு அனைவரும் கிருகத்தராகலின் தமக்குக் குருவாதற்குரியார் இலரெனவும், நைட்டிகருள் தம்மில் உயர்ந்தார் இலரென வும் கருதி அடங்கியிருந்தமையின், உலகத்தார் வழிபாட்டான் உயர்ந்தாராக லின் கண்கட்டிமடத்துள்ளே இருந்தாரன்றே, அதனானும், பிறிதொருகுரவரை யடையாமையானும் குருவழிபாடு செய்திலரென்க. என்னை?

14. नैष्ठिको नैष्ठिकांश्चैव गृहस्थान्दीक्षयेत्क्रमात् ।
भौतिकस्तु गृहस्थांश्च नान्यदीक्षां समाचरेत् ॥

எனவும்,

15. शूद्रस्यापि गृहस्थस्य नित्येष्वेव योग्यता ।
अभिषेके त्वयोग्योऽयं किं पुनः स्थापनादिषु ॥

எனவும்,

16. शूद्रोऽपि शूद्रदीक्षायां स्वार्थे च चललिङ्गके ।
बाणलिङ्गे क्षणे वापि स्थापकौ यतिनैष्ठिकौ ॥

எனவும் கண்டு,

[1] சூத்திரனுந் தேசிகனு வான்மரணுந் தந்துறவி
சாத்திரத்தின் மூன்றுமுணர்ந் தால்.

எனச் சைவசமயநெறி செய்தாராகலின். அசிந்தியவிசுவத்தில் தீக்ஷாவிதி பட லத்தில்,

17. ज्ञानहीनं गुरुं प्राप्य *कुतो मुक्तिमवाप्नुयात् ।
भिन्ननावाश्रितस्त्वब्धेर्यथा पारं न गच्छति ॥

तस्मात्सर्वप्रयत्नेन संश्रयेज्ज्ञानपारगम् ।
मधुलुब्धो यथा भृङ्गः पुष्पात्पुष्पान्तरं व्रजेत् ॥

ज्ञानलुब्धस्तथा शिष्यो गुरोर्गुर्वन्तरं व्रजेत् ।
तल्लब्ध्वा विसृजेच्छिष्योऽप्यधःपतति निश्चयः ॥

என வருதலின், இவ்வாறு நிகழ்த்துங் கண்கட்டிமறைஞானபண்டாரம் எவ் வகைக் கல்வியுடையரெனவும், எவ்வாற்றாற் பூர்வகுரவரை வழிபடாத காரணத் தால் சிவலிங்கம் விடுத்ததெனவும், எவ்வாற்றான் அவர்பாற்பெற்ற விசேட

* कुतोमुक्तिस्तु देहिनां इति च पाठः

1 சைவசமயநெறி ஆசாரிலக்கணம் 37

தீக்கை மாத்திரத்தாலே சற்சம்பிரதாயவுபதேசம் இன்றாகவும் ஆகமங்கற்றாரெனவும், அவ்வுபதேசகலாபாகமன்றி ஒழிந்தநிலைமை கற்றாரெனின் ஒரு சந்தானகுரவரையும் அடையாமையின், எவர்பால் நின்றும் அந்தச் சற்சம்பிரதாய நிலைமைதான் வந்ததெனவும், இவர்க்குக் குறையுள்பட முடியாதிருக்கையினும் எவ்வாற்றாற் குரவரென உலகம் வழிபட்டதெனவும் வருவன முழுதும் யான் அறியக் கூறவேண்டும்பிறவெனின், நீ வினுயது சிவதருமோத்திரம் முதலான வடமொழியைத் தமிழ்செய்துழிப் பொருள்தெரியாமையின் மாறுபாடாகச் செய்தமையானும், மற்றைப் பரமததிமிரபாநு முதலியன ஈரைங்குற்றமு முடையவாக இருத்தலானும், திருவள்ளுவரில்,

[1] அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை

என்புழி,

[2] இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.

என்றாற்போல [3] "மெய்ந்நிலை மயக்கி னாகு நவும்" என்பதனுன் முடிவுபெற்றதைப் பொறுத்தார் எனத் திருத்தலானும், பிறவாற்றானும் வடமொழியினுந் தமிழினும் நிறைந்த கல்வியான் முதிர்ந்த அறிவின்லையென்றன்றே, எவ்வகைக் கல்வியுடையர் என்றது.

இங்ஙனங் கூறும் வசனத்தில் பூர்வாசிரியர்க்கு ஞானமின்றாயின் பிறனொரு ஞானகுரவனை யடைகவென்று மாத்திரங் கூறலிற் பூர்வகுரவர் வழிபாடொழிக என்றது. இல்லையாகலின் தாமும் சைவசமய நெறியில்,

[4] முந்திய தேசிகன்றாண் முந்திநினை பிந்திநினை
சந்திதோறு மற்றையவன் றாள்.

என,

18. गुरुमन्यं प्रपन्नोऽपि नावमन्येत पौर्विकम्।

என்னும் ஆகமவசனங்கண்டு பாடியிருக்கையினும், பூர்வகுரவரை ஏன் தான் வழிபடவில்லை என்றன்றே? பூர்வகுரவரை வழிபடாத காரணத்தான் என்றது.

19. इति वर्णाश्रमाचारान्मनसापि न लङ्घयेत्।

எனவும், ஞானபூசாகாரணத்தில்,

[5] செய்விடிற் பழுதா மென்ற பூசைக டவஞ்செ பாதி
எவ்விடத் தினுநி றைந்த விறைவனோ டினை மூந்தும்
அவ்விடத் தில்லை யென்ற தத்தனை யன்றி ஞானி
கைவிடக் கடவ னென்ற கருத்துநூல் விரித்தி டாவே.

---

1 திருக்குறள், அறன்வலியுறுத்தல். 7. 2 திருக்குறள் இல்வாழ்க்கை. 1. 3 தொல்—சொல். எச்ச, 53. 4 சைவசமயநெறி மாணக்க. 37. 5 ஞானபூசா காரணம். 9.

எனவும் வருதலான், சிவலிங்கம் விடுத்தல் முதலிய கன்மத் தியாச்சியம் பாதித்தியவேது என்றன்றே. எவ்வாற்றாற் சிவலிங்கம் விடுத்த தென்றது. இவ்வாறு நிகழ்தலானும், அவர் குரவரன்றென்றால் அவராற்பெற்ற தீக்கையும் அன்றெனவருதலின் சைவரன்றெனவருதலானும், அவ்வாறு சைவராயினும் அது விசேடதீக்கை மாத்திரமாகையான் ஆண்டுச் சமயதருமம் உபதேசிப்புழி,

20. येनासौ समयी भूत्वा क्रियासंस्कारसंहिते ।
श्रवणेऽध्ययने योग्यः पूजायां हवने तथा ॥

என்றது, கிரியாபாதவிதியைக் கற்பதும் கேட்பதுமாக விதித்தலானும், காரணத்தில்,

21. एवं समयदीक्षायां विहितायां विशेषतः ।
वह्निहोमागमज्ञाने योग्यः संजायते शिशुः ॥

என்பது கிரியாபாதத்தைக் கற்பதும் கேட்பதுமாக விதித்தலானும், விலக்கிய வாறே,

[1] திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால்......... சாற்றலாமே.

என்பதனால் ஞானபாதவிடயத்திற் சிறப்புவிதியுண்டாகலின், அதனால் ஞான சாத்திரமான சிவாகமங்கற்க அதிகாரமில்லையாதலானும்,

21. वह्निहोमागमज्ञाने योग्यः संजायते शिशुः ।

என்பதனால் பொதுப்பட விதியுள்ளதாயினும் பிரதானமாக ஆசாரியர் உபதேசிக்கும் சற்சம்பிரதாயமில்லையாயின் நூற்பொருள் பட்டுநூல் தலைகெட்டாற் போல உணரப்படாதாகலானும் கற்கப்படாமைதோன்றி யன்றே எவ்வாற்றான் அவர்பாற்பெற்ற விசேடதீக்கை மாத்திரத்தாலே சற்சம்பிரதாய உபதேசமின்றாகவும் ஆகமங்கற்றாரென்றது.

22. आगमे भरते शिल्पे ज्योतिश्शास्त्रे विचक्षणः ।
शब्दार्थं न विजानीयात्संप्रदायार्थकं सदा ॥

எனப் பிறருங் கூறுவராகலின், சிற்பாதிகள் உள்படச் சொற்பொருள் விலாசத்தால் அறிதல் அருமை என்றால் சித்தாந்தார்த்தம் எவ்வாறு தமது விவேகத்தாற் கற்கப்படும்? அவ்வாறு கற்றாராயினும்,

23. स्वयमूह्यागमांश्चैव येऽपि स्वयमुपासकाः ।
तेषामन्नं न भोक्तव्यं भुक्त्वा चान्द्रायणं चरेत् ॥

என்பதனால், சுவாயம்புவனாகிற் குற்றம் எவ்வாற்றாற் றீரவருமெனக் கருதியன்றே அவ்வுபதேச கலாபாகமன்றி ஒழிந்த நிலைமை கற்றாரெனின், ஒரு சந்தான

[1] சிவப்பிர. சு. 12, 3.

குரவரை அடையாமையின் எவர்பானின்றும் அவர்க்கு அந்தச் சம்பிரதாய நிலைமை வந்ததென்றது. முற்கூறியவாற்றானன்றி,

24. स्वसन्ततिक्रमेणैव कर्तव्यः स्वगुरुक्रमः।

என்பதனால் சிலவசனப்படி அநுட்டானம் பண்ணினும் ஒரு சந்தானத்தையுஞ் சாராது நடத்தலின் அதற்குப் பயனின்றாகலின் அதனையும் ஒழுக்கக் குறைபாடென்றே கொள்வராகலின், இவ்வாற்றானும் குரவராதல் கூடாதென்றன்றே இவர் குறையுடையராகவும் எவ்வாறு குரவரென வழிபட்டதென்றது. இவ்வினாமுழுதும் உண்மையாகலின் உத்தரமரிதாம். என்னை? 'உண்மைக்கு உத்தரமில்லை' என்பது வழக்காதலின். அன்றி, அவர்வழிநின்ற காளத்தி மறைஞானபண்டாரத்தாற்றான், அவரைப் பெரியோரென உட்கொண்டு அவர் மொழியைச் சம்மதமாக அங்கீகரிக்கும் களந்தை ஞானப்பிரகாசபண்டார முதலியோராற்றான் உணரினும் உணர்க. அவ்வாற்றான் உணர்தலும் அரிதாம். என்னெனில் இவருள் காளத்திமறைஞானபண்டாரத்துக்கு அவர் தீக்ஷாகுருவன்மையின்; ஐக்கியவியலுள்,

[1] தன்னைத்தான் பார்த்தலே தன்றுளிலங் கும்பிரமந்
தன்னையுந்தா னேக்குதலா குந்தரையில்—வன்னிமரங்
கண்டேனென்பார் தன்புறங்கண் டேட்கானு ராவியினுள்
அண்டனுமிவ் வன்னியனை யான்.

எனச் சிவன் காணப்படானெனத் திருட்டாந்த பூர்வமாக அவர் கூறியதற்குத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில்,

[2] மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணே புண்ணிடை
ஊறு முதிரப் புனலோ கூறுசெய்
திடையிடை நிற்கு மெலும்போ வெலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்
துள்ளிடை யொழுகும் வழும்போ மெள்ளநின்
றூறும் புழுவி னொழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ வுடம்பிற்குட்
பிரியா தொறுக்கும் பிணியோ தெரியா
தின்ன தியானென் றறியே னென்னை
ஏதினுந் தேடினன் யாதினுங் காணேன், முன்னம்
வரைத்தனி வில்லாற் புரத்தையழ லூட்டிக்
கண்படை யாகக் காமனை யொருநாள்
நுண்பொடி யாக நோக்கியண் டத்து
வீயா வமரர் வீயவந் தெழுந்த
தீவாய் நஞ்சைத் திருவமு தாக்கி

1 ஐக்கியவியல், 11. 2 திருவிடை, மும், 13.

இருவர் தேடி வெருவர நிமிர்ந்து
பாலனுக் காகக் காலனைக் காய்ந்து
சந்தன சரள சண்பக வகுள
நந்தன வனத்திடை ஞாயிறு வழங்காது
நவமணி முகிழ்த்த புதுவெயி லெறிப்ப
எண்ணருங் கோடி யிருடி கணங்கட்குப்
புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருவிடை மருத பொருவிடைப் பாக
மங்கை பங்க கங்கைநா யகநின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே
நின்னைக் காணா மாந்தர்
தன்னையுங் காணாத் தன்மை யோரே.

என்பதனுள்,

'நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன்'

எனவருதலானும், பிறவாற்றானும் நியாயவிரோதமும் வசனவிரோதமுங்கண்டு பதிபசுபாசக் கட்டளையுள் மாறுபாடுகூறி மறுத்தலானும், இவ்வாறே பிறிதும் மாறுபாடாக ஒரோவழிக் கூறுதலானும், இவர் உட்கோள் அவர் கொள்ளாமையானும், அவர் உட்கோள் இவர் கொள்ளாமையானும், ஒன்றற்கொன்று மாறுபாடாதலின் அவர் இயல்பு தெரியாமையானும், களந்தை ஞானப்பிரகாச பண்டாரம், அவர் செய்த சங்கற்பநிராகரணம் முதலிய நூல்களில் ஆன்மாநந்த மாவது தன்னுடைய இனிய இரதமான இன்பமென்று,

[1] முனைப்பின்றி யான்மாத்தன் சத்தியின்முற் றின்பந்
தினைத்திருக்கை முத்தியெனத் தேறு.

என்றற் றொடக்கத்தாற் கூறியதை நியாயவிரோதமும் வசன விரோதமுங் கண்டு, சகலாகமசாரம் முதலியவற்றில்,

தொன்னு ளறிவுதொழி றோன்றுதலாற் பெற்றவின்பே
தன்னுநந் தம்பெறுத னூன்.

என ஆநந்தமாவது ஞானக்கிரியாசமிருத்தியாகலின் துக்கநிவிர்த்திரூபமான அகமகிழ்ச்சி யெனக்கொண்டு மறுத்து வேறுபொருள் கூறுதலானும், இவர் சொன்னது அவர்க்கும், அவர்சொன்னது இவர்க்கும் ஆகாமையானும், பிற வாற்றானும் இவ்வகையாரனைவரும் ஒருவர் மாற்றம் போலன்றித் தனித்தனி மாறுபடக் கூறலின் என்க.

---

[1] சங்கற்ப நிரா. சைவ. 53.

அஃதற்றாக, இவ்வாறுடைய மறைஞானபண்டாரம் முதலிய பிறரைச் சற்சம்பிரதாயமுடைய இக்குரவர் எதிரிட்டுப் பரிகாரங் கூறியது குற்றமாம் பிறவெனின், சற்சம்பிரதாய குரவரான் மறுக்கப்படாதேல் அதுவும் ஒரு சற்சம்பிரதாயம்போல வழங்கி உயிர்கள் மலைதற்கேதுவா மாகலின், அது நிக்குதற்கு எதிரியாதற்கு இயல்பின்றேனும் உண்டாகக்கருதி மறுத்தது குற்றமன்றென்க. இதனானேயன்றே, அருணந்திதேவ சிவாசாரியார் முதலாயினோர் உலகாயதன் முதலியோரையும் மறுத்தது. அதனான் எவ்வாற்றானும் ஈண்டுத் தெய்வவணக்கஞ் செய்தது சிறப்புடைத்தாயிற்று; அஃது இந்நூல் இடையூறின்றி இனிது முடிந்து நிலைதலானுங் காண்க.

**திகழ்புத்தி நிச்சயமொன் றுவதென மொழிவேன் யான்** என்றது பாயிரத்திற் கூறியவாறே பின்னுங் கூறுதலின் தனக்கு உறுப்பாகிய பாயிரத் தோடும் பொருந்திற்று என்பதும் கூறியவாறு. காமிகத்தில்,

25. सिद्धान्तात्परमं ज्ञानं नेति शास्त्रस्य निश्चयः ।
अष्टाविंशतितन्त्राणि सिद्धान्तमिति कीर्तितम् ॥

எனவும், இரத்தினத்திரயத்தில்,

26. सिद्धान्त एव सिद्धान्तः पूर्वपक्षास्ततःपरे । (சுலோ. 11)

எனவும், சிவப்பிரகாசத்தில், * "வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்" எனவுங் கூறுதலின், எல்லாநூற்கும் முடிபான சித்தாந்தத்தைக்கூறுஞ் சிவாகமசித்தாந்தத்தினது உயர்ச்சிதோன்றத் **திகழ்புத்தி நிச்சயம்** என்றது. இதனானே யன்றே, ஆலாசியமான்மியத்தில்,

27. शिवज्ञानानि दिव्यानि कामिकादीनि भूसुराः ।
श्रीमद्धालास्यनाथस्य सम्भवन्त्यूर्ध्ववक्त्रतः ॥

என்றார். பிறர் பன்றி குட்டியிட்டாங்கு நூலிலக்கணமின்றிச் செய்த பல நூல்கட்கும், 'அறிவிலானை அகத்தியன்' என்றும், [1] 'பஞ்சதுட்டனைச் சாது' என்றும்பெயர் கூறுமாறு போல, பரமதநிமிரபாநு, பதிபசுபாசப்பனுவல், பரமோபதேசம் என்று சிலபெயர்கூறிச் சித்தாந்தமல்லாததை ஆமெனமயங்கிக் கொண்டு வழங்கினாரன்றே; அவ்வாறன்றிக் குஞ்சரமீன்ற கன்றென ஒன்றாய் முற்கூறிய நூலிலக்கணம் முழுதும் உடைத்தாயிருத்தலின் கதிரோனை ஆயிரங் கிரணனெனவும், சந்திரனை அமுதகிரணனெனவும், சிவனைச் சங்கரனெனவும் பெயர் கூறுமாறுபோல உள்ளகாரணத்தான் இதற்கு இதுபெயராமெனக் கண்டார்க்கு ஒத்துநிகழச் செய்தலின் **ஒன்றுவதெனமொழிவேன் யான்** என்றது. எனவே செயப்படுபொருளுஞ் சிறப்புடைத்தாயிற்று. இஃது இவ்வாறு நிகழ் தற்குக் காரணமாகலின் முன்னர்த் தெய்வவணக்கம் செய்து அதன்பின் இது கூறியது.

* பாயிர. 7-ம் பாடல். 1 சுந்தரர் தேவாரம், திருப்புகலூர், பண்-கொல்லி, 5.

28. वल्मीकेशं समाराध्य लब्ध्वा नारायणं पतिम् ॥
उपास कमलां तत्र तेनासीत्कमलालयम् ॥

என்பதனுல் சீர்மேவும் ஆரூர் என்றது.

29. काश्यान्तु मरणान्मुक्तिर्जननात्कमलालये ।

என்பதனுல் முத்திகாரணமுமாயிற்று. ஆகவே, அவ்வூர் ஞானப்பிரகாச குரவர் உத்தம இலக்கணசம்பந்நராகையால் குரவராதலேயன்றி எவ்வாற்ருனும் சிறப்புமுடையராவரென்பது பெற்ரும். அது பேர்மேவு ஞானப்பிரகாசன் என்பதனுல் விளங்கும். பேர்மேவும் என்பதற்கு வல்லமையாற் றிசைபோய புகழ் மாலை பொருந்தும் எனினுமாம்; புகழுடையாரைப் 'பேர்போயினர்' என்பராகலின். அக்குரவர்பால் அருள்பெற்ருர் பலராகலின் அவர்செய்யும் குருபூசைச் சிறப்புத் தோன்ற, தார்மேவு சேவடிகள்போற்றி என்றது; மாணுக்கர் சற்கன்மப்பிர விருத்தியிற் குருபூசைசெய்தல் விதியாதலின். அது காலோத்தரத்தில்,

30. यदि सन्निहितस्सोऽपि पूर्ववत्पूजयेद्गुरुम् ।
आज्ञां गृहीत्वा यत्नेन ततः कर्म समाचरेत् ॥

என்பது முதலானவற்ருன் அறிக. அன்றி ஞானுேபதேசகாலத்து அடியார் செய்யுங் குருபூசைச்சிறப்பு எனினும் ஆம்; அது காமிகத்தில்,

31. षोडशेनोपचारेणाभ्यर्चयेद्गुरुपादयोः ।

என்னும் இதுமுதலான வசனங்களான் உணர்க. சீர்மேவும் என்பதுமுதல் யான் என்பதுகாறும் முற்கூறியவாறே குருவருள்பெற்ற சிறப்பாற் செய்தற் கெளிமை தோன்றுதல் குறித்து நிற்றலின்.

[1] பொன்பூத் திருமணி புனலா ரணங்கடல்
செங்கதிர் திகிரி தேர்பரி யெழுத்தே
மாநிலங் கங்கை மலைபுக ழமுதம்
கார்புய லுலகங் களிறே யருந்ததி
பார்மதி நாள்சீர் *பழனஞ் செண்டுடன்
எண்ணிய சொல்லே யென்றிவை பிறவுங்
கண்ணிய மங்கலச் சொல்லெனக் காட்டினர்.

என்னும் ஒருசாரார் வழக்கம்பற்றி மங்கலமொழி கூறல்வேண்டிச் சீர்மேவும் என்றது. இதனை ஒருசாரார் வழக்கமென்றது தொல்காப்பியர் விதியாமையின். அன்றி [2] "ஒன்றவன்ருனே யிரண்டவன் ‡ றன்னருள்" என்ற திருமூலதேவ சிவாசாரியர் முதலியோர் கூருமையின் எனினும் ஆம். ஆரூர்ச் சிதம்பரநாதன் என்பது ஏழாம்வேற்றுமை பொருளொடும் தொக்க தொகைச்சொல், அது [3] "பொற்பாரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்" என்புழிப் புலியூர்ப் புனிதன்

[1] பன்னிருபாட்டியல், சொல்லியல், 132. * ஞெண்டுட னென்ன என்றும் பாடம். [2] திருமந்திரம் பாயிரம். 1. ‡ னின்னருள் என்பதும் பாடம். [3] திருக்கோவையார் 8

என்றாற்போல மிக்கு முடிந்தது. பெயரேயன்றிப் பேரும் உண்டு. அது, [1] "பேராயிரம் பரவி வானோ ரேத்தும்" என்றதனானும் அறிக. "சேவடிகள்" என்பது பண்புமாத்திரையாய்க் குறைந்தசொல்லாகலின் மருவின்பாத்தியதாய் நின்றது. அது [2] "நலம் புரிந்த துறையுஞ் சேவடி" என்றாற்போலும்.

**சேவடிகள்போற்றி** என்பது இரண்டாம்வேற்றுமைப் பொருள்பட வருதலின் [3] "ளகார விறுதி ணகார வியற்றே" என்னும் பொதுவிதி எய்தாது, [4] "மெய்பிறி தாகிடத் தியற்கை யாதலும்" என்ற சிறப்புவிதி எய்திற்று. சிதம்பரநாதன், ஞானப்பிரகாசன் முதலிய வடமொழிச் சிதைவு வந்தது [5] "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" என்பது விதியாகலின். அது,

[6] தசநான் கெய்திய பணைமரு ளோன்றாள்

[7] கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வெளவிய ஞான்றை.

என்றாற்போல வந்ததாம். முத்தி என்பது ஆகுபெயர்; முத்திநெறியினை உணர்த்தலின். பிறவும் அன்ன. யான் போற்றிமொழிவேன் எனக்கூட்டுக. செயப்படுபொருள் உணர்த்தலின் நுதலியதறிதலும், ஒருவழி ஒருசொற்கு இருபொருள் கொளவும் கிடத்தலின், இரட்டுற மொழிதலுங் கிடந்தவாறு காண்க. எனவே, குற்றமொன்று மின்றிக் குணம்பலவு முடைத்தாய்ச் [8] சில்வகை யெழுத்தின் செய்யுட்டாய், நின்று பல்வகைப் பொருளுந் தோற்று வித்தலின்,

[9] ஆடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே.

என்ற சூத்திரவிதி முழுவதும் எய்தியதூஉம் பெற்றாம். இவ்வாறு மேலும் உரைப்பிற் பெருகுமாதலின் உய்த்துணர்ந்துகொள்க.

**முதற்பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

---

1 அப்பர். புள்ளிருக்குவேளூர், திருத்தாண்டகம். 8. 2 புலம் புரிந்துறையும் ... ... சேவடி என்பது திருமுருகாற்றுப்படை. 3 தொல். எழுத். புள்ளிமயங். 101. 4 தொல். எழுத். தொகைமரபு, 15. 5 தொல். சொல். எச்ச. 6. 6 நெடுநல்வாடை, 115 7 புறநானூறு, 378. 8 தொல். பொருள். மரபியல். 100. 9 தொல். பொருள். செய்யுளியல், 169.

திருச்சிற்றம்பலம்

# இரண்டாம் பாட்டு

சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம்
நந்தாது தோற்றுவித்த நற்குரவர்—முந்தவே
எந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம்.

என்பது பாட்டு. இஃது என்னுதலிற்றோவெனின், முன்னர் முத்திநிச்சயம் பண்ணுவேம் என்றவர் அது பிரமாணபூர்வமாயிருத்தலின் பிரமாண நிச்சயம் பண்ணுவான் அதற்குரிய பிரமாணம் பலவற்றுள்ளும் தாங்கொண்ட ஆகமப் பிரமாணங்களை எடுத்தோதி அவற்றின்வழியே முத்திநிச்சயம் பண்ணுகின்றார் என்கின்றது; பிறர் பெரும்பான்மையும் ஆகமப்பிரமாணமே உட்கொண்டு கூறுவராகலின், அதனியல்பு தோன்ற எடுத்தோதாக்கால் பொருள்கொள்வழி மாறுபாடு நிகழ்தலின் முதற்கண் வரையறை கூறவேண்டுமாகலின்.

**சந்தான நற்குரவர் தக்கோர் பிறர் சமயம்**
**நந்தாது தோற்றுவித்த நற்குரவர்—முந்தவே**
**சைவத்தில் எந்த முத்தி சித்தாந்தம் என்றார்கள்**

என்பது, தொன்றுதொட்டுவரும் சந்தானநற்குரவரும், மற்றுந் தகுதியுடைய சைவசித்தாந்த ஞானவான்கள் பிறரும்; சமயங்கெடாது வளர்க்குந் தெய்வத் தன்மையுடைய சமயகுரவரும் முன்னரேலேதானே சிவாகமத்திற் கூறும் சித்தாந்த முத்தியென யாதொரு சிவாநந்தாநுபவ மாவதையே கூறினார்கள்.

**அந்த முத்தி நிச்சயிப்பேம் யாம்** என்பது, அந்தச் சிவாநந்தாநுபவமாஞ் சைவசித்தாந்த முத்தியையே யாம் நிச்சயிப்பேம் என்றவாறு.

**சந்தான நற்குரவர்** என்றது, தொன்றுதொட்டு வருதலின் ஒருவழி அசற்குரவர் உளராயின் அவரைநீக்குதற்கு. **தக்கோர்பிறர்** என்றது, சந்தான குரவர் சமயகுரவருட்படாது தாம் பிறிதோர்வகைபட்டு நிற்றலின். **நந்தாது தோற்றுவித்த நற்குரவர்** என்றது மிகுந்த தெய்வத்தன்மையுடையவரென்பதற்கு. **முந்தவே** என்றது பிறர் இடையிற் கற்பித்து வழங்கியது போலன்றி அச் சிவானந்தாநுபவம் முத்தி என்பது தொல்வரவிற்று என்பதற்கு. எந்த அந்த என்பன வினாவும் சுட்டும் திரிந்தன; [1] "எந்தநாள் வாழ்வதற்கே" எனவும், [2] "அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த பொந்தை" எனவும், பிறவும் வருதல் காண்க. யாம் என்பது ஈண்டு ஒருவரைக் கூறும் பன்மை; அது பிறர்

1 பிள்ளையார். தேவா. திருவாரூர் காந்தாரம். 2.  2 திருவாசகம். திருப்பூவல்லி. 2.

அசற்சம்பிரதாயிகள் ஆகலின் அவர்முன்னர்க் நமக்கு இயல்பான் நிகழ்ந்த பெருமை தோன்றக் கிடந்தது.

இனி, சந்தானகுரவர், கன்மசித்தாந்தகுரவர் ஞானசித்தாந்தகுரவர் என இருவகையர்; அசிந்திய விசுவத்தில் (சமயலக்ஷணவிதிபடலத்தில்,)

1. शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ।
कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्धं परं स्मृतम् ॥

எனவருதலின். இவருள் கன்மவாரண சித்தாந்த குரவரியல்பு வருமாறு; அவ் வாகமத்திலேயே சமயலக்ஷணவிதி படலத்தில்,

2. मठो वृक्षश्च गोत्रश्च गोचरश्च तथैव च ।
वृत्तिना पञ्चकं चापि कर्मावरणयुक्तके ॥

पाण्डरस्त्वनभिच्छिद्रं नासाग्रं तु नखोद्भवम् ।
एवमेते मुनीनां तु मठाश्चत्वार ईरिताः ॥

कदंबश्च तथाश्वत्थो वटश्चार्जुन एव हि ।
एवं चतुर्विधा ज्ञेया वृक्षास्ते संप्रकीर्तिताः ॥

काश्यपः कौशिकश्चैव भारद्वाजोऽथ गौतमः ।
एते चतुर्विधा गोत्रा मुनिवर्गाः प्रकीर्तिताः ॥

शिवशिखा तथा ज्योतिस्सावित्री चेति गोचराः ।
प्राजापत्यादयस्ते ये वृत्तयस्तु प्रकीर्तिताः ॥

गोचरं शिवचिह्नं हि गोत्रं स्यान्मुनिवर्गकम् ।
काश्यपादिमुनीनां तु शिवगोचरमुच्यते ॥

என்பன முதலானவற்றால் அவரியல்புகாண்க. இவ்வாறுவரும் கன்மவரண சித்தாந்த குரவருள் இக்காலம் அடுத்துநின்றார் யாரெனில் உக்கிரச்சோதி, சத்தியோசோதி, ஞானசிவாசாரியர், சோமசம்புசிவாசாரியர், திரிலோசன சிவாசாரியர், அகோரசிவாசாரியர், நாராயணகண்டர், இராமகண்டர், போச ராசர் முதலியோரென்க. இவர்களாற் பண்ணப்பட்டன அஷ்டப்பிரகரணமும், கிரியாக்கிரமமும், சித்தாந்தசாராவளியும் பிறவுமாம்.

இனி, ஞானவரணசித்தாந்த குரவரியல்பு வருமாறு; அசிந்திய விசு வத்தில், (சமயலக்ஷணவிதி படலத்தில்,)

3. शैवसिद्धान्तयुक्तस्य संज्ञां वक्ष्ये शृणुष्व तत् ।
मुखं दैवं मठश्चापि दर्शनं वासनं तथा ॥

आचारं च गुहा चापि वृक्षश्च वनमेव च ।
गोत्रगोचरसन्तानं द्वादशं ज्ञानके भवेत् ॥

ज्ञानावरणमेवन्तु तस्य नाम पृथक् पृथक् ।
मुखमीशानकं चापि दैवं शिवमिहोदितम् ॥

मठं ब्रह्म च विख्यातं सन्मार्गं दर्शनं भवेत् ।
कामिकादिकमित्याहुरावासं पर्वतं तथा ॥

मनो भवाख्यमाचारं सिद्धमन्त्रं गुहां तथा ।
जगद्वृक्षो वनं भूतं गोत्रं शुद्धसमुद्भवम् ॥

गोचरं शिवसंज्ञं तु सन्तानं नन्दिकेशकम् ।

என்பதனாலும், இவ்வாறு ஞானசித்தியில் சன்மார்க்க படலத்தில்.

4. ज्ञानमुद्राविधिः प्रोक्तस्तत्र सन्मार्गदर्शनम् ।

अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ।
द्वादशं मार्गसंबन्धं शृणु देवि वरानने ॥

मुखं पीठं मठं दैवं वर्गं दर्शनषष्ठकम् ।
आसनं गिरिश्चित्तं च गुहाचारो वर्णषष्ठकम् ॥

एतद्द्वादशसन्मार्गं प्रधानाचारमुत्तमम् ।
मूर्तिरूपं मुखं ज्ञेयं दशाधारं च पीठकम् ॥

परशक्तिर्मठं प्रोक्तं दैवं तत्र परात्परम् ।
ज्ञानिनां वर्गमाश्रित्य शुद्धशैवस्य दर्शनम् ॥

आसनं ज्ञानशक्त्यर्थं गिरिपञ्चाक्षरोलयम् ।
चित्तं बिन्दुस्वरूपश्च उपशान्तिर्गुहा च वै ॥

सर्वाचारविनिर्मुक्तो ज्ञानाचारप्रवर्तकः ।
वर्णमध्यात्मवर्णन्तु एतद्द्वादशमुच्यते ॥

என்பதனாலுங் கண்டுகொள்க. இந்நந்திகேசுர சந்தான வரலாறு,

[1] சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேச ருருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றும் பெற்ற
*நவமெழு நான்குட னந்திபெற் றுனே,

1 திருமந்திரம். ஆகமச்சிறப்பு, 6. * நவவா கமமெங்க ணந்திபெற் றுனே என்பது அச்சுப்படி

[1] பவமாம் பரிசு பலபல காட்டுந்
தவமா நெறியிற் றலைவரு மான
நவநாத சித்தரு நந்தி யருளாற்
சிவமாம் பரிசு திகழ்ந்துசென் றாரே.

எனவும்,

[2] நந்தி யருள்பெற்ற நாதரை * நன்றாரின்
நந்திக ணால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரன்
என்றிவ ரென்னுட னெண்மரு மாமே.

எனவும் வருதலான் உணர்ந்துகொள்க. இவருள், நந்திகணால்வராவார் சநகர், சநற்குமாரர், சநந்தநர் சநாதநர் என்போராவர். திருமூலதேவர்க்குச் சதாசிவமுனிகளென்றும் பெயர். இச்சந்தானம் விரிந்தவாறு, ஆதியில் சநகரால் சம்பு சந்தானமும், மலையமான் சந்தானமுமாக இரண்டாய்ப் பின் பலவாகப் பரம்பிற்று. சநற்குமாரரால் விஞ்ஞானதேவர் மெய்கண்டதேவர் சந்தானம் இரண்டாய்ப் பின் பலவாயின. அவற்றுள் மெய்கண்டசந்தானம் வருமாறு;

[3] தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணை
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
விரவுபக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே.

என்றுகூறிய உமாபதிசிவாசாரியரும், மச்சுச்செட்டியாரும், மறைஞானசம்பந்த தேசிகர்பால் அருள்பெற்றார். அவருள், மச்சுச்செட்டியார்பால் அருள்பெற்றார் காழிக்கங்கைமெய்கண்டார். அவர்பால் அருள்பெற்றார் காழிப்பழுதைகட்டிச் சிற்றம்பலநாடிபண்டார முதலியோர். அப்பழுதைகட்டிச்சிற்றம்பலநாடி பண்டாரத்தின்பால் அருள்பெற்றார் பழுதைகட்டிச் சம்பந்தபண்டாரமுதலியோர். அப்பழுதைகட்டிச் சம்பந்தபண்டாரத்தின்பால் அருள்பெற்றார் சிவபுரம் ஞானப்பிரகாசபண்டாரமுதலியோர். அச்சிவபுரம் ஞானப்பிரகாச பண்டாரத்தின்பால் அருள்பெற்றார் சிவபுரம் தத்துவப்பிரகாசபண்டாரம். அவர்பாலருள்பெற்றார் திருவாரூர்ச்செட்டித்தெருப் பழுதைகட்டி ஞானப்பிரகாசபண்டார முதலியோர். அச்செட்டித்தெருப் பழுதைகட்டி ஞானப்பிரகாசபண்டாரத்தின்பால் அருள்பெற்றார் இந்நூல்செய்த குரவர்க்குங் குரவரான சிதம்பரநாத மாசிலாமணிக் கமலை ஞானப்பிரகாசபண்டாரமுதலியோர். அச்சிதம்பரநாத மாசிலாமணிக் கமலை ஞானப்பிரகாசபண்டாரத்தின்பால் அருள்பெற்றார் இந்நூல்செய்த தருமபுரம் குருஞானசம்பந்தபண்டார முதலியோர். அந்தக் குருஞானசம்பந்த

[1] திருமந்திரம். இச்செய்யுள் அச்சுப்பிரதிகளில் காணப்படவில்லை. [2] ஷை குருபரம்பரை. 1.
* நாடிடின் என்பது அச்சுப்பாடம். [3] சிவப்பிரகாசம், பாயிரம். 5.

தேசிகர்பால் அருள்பெற்ருர் ஆநந்தபரவசமூர்த்தி, சச்சிதாநந்தமூர்த்தி முதலியோர். சச்சிதாநந்தமூர்த்திகள்பால் அருள்பெற்ருர் மாசிலாமணிமூர்த்திகள் முதலாயினேர். மாசிலாமணிதேசிகர்பால் அருள்பெற்ருர் ஞானசம்பந்தமூர்த்திகள் முதலாயினேர். ஞானசம்பந்த மூர்த்திகள்பால் அருள்பெற்ருர் திருஞானசம்பந்த மூர்த்திகள்முதலியோர். ஆதலின், இடைவிடாது இக்குருஞானசம்பந்தமூர்த்திகள் பால் அருள்பெற்றுவரும் ஆறுதலைமுறைபரியந்தம் மெய்கண்டதேவசிவாசாரியர் சந்தானம் இன்றளவும் நடந்துவருவதுங் காண்க. இச்சந்தானத்தார் தமிழாற் செய்தவை சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, உண்மைநெறிவிளக்கம், கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, சங்கற்பநிராகரணம், ஞானபூசாகாரணம், ஞானபூசை, ஞானதீக்கை, ஞானுந்தியோட்டி, போசனவிதி, துகளறுபோதம், சதமணிக்கோவை, சிவாநந்தபோதம் முதலாயின. இச்சந்தான நூல்களுக்கெல்லாம் கருத்து,

[1] பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறாங்—கதிவழங்கும்
மெய்கண்டான் சந்தான மேவிச் சிவாநந்தங்
கைகண்டார் காணுர் கரு.

என்பதனன் அறிக.

இனி, சநந்தனரால் உபமன்னியதேவர், பரமதேவர், சிவாநந்தபோதர் என மூன்ருய்ப் பின் பலவாயின. சநாதனரால் பிரமதேவர், சிங்கநாததேவர் என இரண்டாய்ப் பின் பலவாயின. சிவயோகமாமுனிகளால் வாமதேவர் சந்தானம் ஒன்ருய்ப் பின் பலவாயின. பதஞ்சலிகளால் நிறைந்தநாயனுர் சந்தானம் ஒன்ருய்ப் பின் பலவாயின. ஞானமிர்தம் இவர்செய்த நூல்போலும். வியாக்கிரபாதரால் சத்தியோசாதர்சந்தானம் ஒன்ருய்ப் பின் பலவாயின. திருமூலதேவரால் எழுவகைச் சந்தானமாகிப் பரம்பின. அது திருமந்திரமாலையுள்,

[2] மந்திரம் * வந்த வழிமுறை மாலாங்கன்
† இந்திர னேடு பிரம னுருத்திரன்
கந்துருக் ‡ காலாங்கன் கஞ்ச மலையமான்
இந்த வெழுவரு மென்வழி யாமே.

என்பதனல் பிரமதேவர், இந்திரதேவர், விட்டுணுதேவர், உருத்திரதேவர், கந்துருமகாவிருடிகள், காலாக்கினியுருத்திரர், கஞ்சனுர் மலையமான் என்னும் எழுவரையும் அறிக. இவர்வழி அளவின்றிப் பரம்பிற்ருதலின் ஈண்டு எழுதிற் பெருகும். அது § **சந்தானவரலாற்றிற் காண்க.** இவருள், திருமூலதேவர்சந்தான நூலாக இக்காலத்தும் அடுத்துவழங்குவது திருமந்திரமாலையாம். இக்காலம் அடுத்து

[1] துகளறு போதம். 1. [2] குருபரம்பரை 5. * பெற்ற எ-ம். † இந்திரன் சோமன் எ-ம் ‡ காலாங்கி கஞ்சமலையனெடு எ-ம் அச்சுப்பிரதிப் பாடங்கள். § இந்நூல் இப்பொழுது இருப்பதாகத்தெரியவில்லை.

வழங்காது இறந்தன ஆதிமெய்ஞ்ஞானம், பழுதறுமெய்ஞ்ஞானம், ஒளிவிளங்கு மெஞ்ஞானம், சிவாநந்தவிளக்கம், நாதாந்தம், அறிவாநந்தம், தற்பிரகாசம், பதியோகமாலை, சிவாநந்தநிலயம், அத்துவசித்தி, பிராசாதசித்தி, ஞானசித்தி, சிவாநந்தசித்தி, தத்துவசித்தி, அவத்தாசித்தி, சாம்பவசித்தி, போதசாரம், அதிசயமாலை, சிவஞானதிட்டி, சிவாநந்தசதகம், போதவமுதம், ஞானசூளாமணி, ஈரடிக்குறள், பரமார்த்தசதகம், சந்தானவகவல், உண்மைமும்மணி முதலாயின சைவநூல்களும், மெய்ந்நெறிவிளக்கம், பொருணெறிவிளக்கம், மயேச்சுரர்யாப்பு, அணியியல் முதலான கருவிநூல்களும், திருவாவடுதுறைமும்மணிக்கோவை, நான்மணிமாலை, குடந்தைக்கோவை, குடந்தைக்கலம்பகம், ஆளுடையபிள்ளையார் ஒலிய(ல)ந்தாதி முதலாயின பிரபந்தங்களுமாம். இவற்றுள், ஒலிய(ல)ந்தாதி வழங்குவதுபோலும். இவ்வாறே ஞானவரணசித்தாந்த குரவர் இயல்பு வந்தவாறு காண்க.

இவ்வாறு சமயம் ஒன்றாகவும் சந்தானம் பலவாக வருதலாற் பயன் என்னையோவெனின், ஏனைச்சமயங்கட்கு இஃதின்மையின் சிறப்புண்டாகலானும், ஆகமம் பலவாதலின் விதியும் விலக்கும் முத்திநிலைகளும் பலவாகலின் அவ்வனைத்தும் அநுட்டித்து முடியாதாகலின், ஒன்றுபற்றியே நடத்தற்பொருட்டு அவரவர் சந்தானத்திற்குரிய ஆகமவழியே நடந்தொழுகவேண்டுதலானும் பயனுண்டென்க. என்னை?

5. चिह्नेन विहिताश्शैवाश्शेषाः पाषण्डिनो मताः ।

என்னுங் காலோத்தர வசனத்தாற் சிறப்புடைமைகாண்க. அவ்வாகமத்திற்றானே,

6. आगमानां बहुत्वे तु विधानानि बहूनि च ।
स्वसन्ततिक्रमेणैव कर्तव्यं च यथोचितम् ॥

என்பதனுள் ஆகமம் பலவாகலின் விதானங்களும் பலவானமையான் ஒருவழியாய் வரும் தனதுசந்தானவழி அநுட்டானமே பண்ணவேண்டுமென்பது அறிக. இவ்வாறு கன்மவிதிகளன்றி முத்திநிலைகளும் வேறுபடவருவது காமிகத்தில்,

7. शैवभेदं प्रवक्ष्यामि ऐक्यपाषाणवादिनौ ।
भेदवादी समवादी संक्रान्ती चाविकारवान् ॥

परिणामी च शैवश्च सिद्धान्ती पर ईरितः ।

எனவும், அசிந்தியவிசுவத்தில் (சமயலக்ஷணவிதிபடலத்தில்,)

1. शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ।
कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं परं स्मृतम् ॥

எனவும் பிறவும் வருமாற்றானுணர்க. இனி, ஆகமங்கள் சந்தானந்தோறும் வேறுபடவருமாறு காரணத்தில்,

8. * गोत्रगोचरसन्तानं मठागमसमन्वतः ।
गुरुस्थानञ्च सूत्रञ्च मूर्तीनामग्निसंयुतम् ॥

आदिशैवेषु चिह्नानि दर्शते पञ्च भेदतः ।
कौशिकश्शिवमूर्त्या तु पौण्ड्रकश्च मठो भवेत् ॥

शिखा गोचरमित्युक्तं वर्ममन्त्रेण बुद्धिमान् ।
कामिकाद्यजितान्तं च आगमाश्च प्रकीर्तिताः ॥

सूत्रं बोधायनं प्रोक्तमामर्दस्सत्वसंधयोः ।
अग्निश्च गार्हपत्यस्तु गुरुर्नाम सहस्रतः ॥ ?

कश्यपाय महीच्छत्रं मठो मूर्तिः शिवस्य तु ।
शिवगोचरसान्निध्यं गुह्यमन्त्रेण संयुतम् ॥

दीप्तादिसुप्रभेदान्त आगमश्च प्रकीर्तितः ।
सत्वसन्धानसंयुक्तमापस्तम्बसमन्वितम् ॥

अग्निराहवनीयस्तु सात्विकस्थानमेव च ।
भारद्वाजो मुनिश्चैव मठो नागोद्भवो भवेत् ॥

ईशानस्य मुखाद्दीक्षा ज्योतिर्गोचरमुच्यते ।
पुरुषस्य च मन्त्रेण अग्निर्दक्षिणतो भवेत् ॥

विजयादौ रौरवान्तः सत्वसन्तानसम्भवम् ।
आश्वलायनं सूत्रञ्च गुरुस्थानं च कौशलम् ॥

गौतमो ब्रह्ममूर्तिश्च सावित्री गोचरं तथा ।
नागरीकमठोपेतं बहुरूपं च मन्त्रकम् ॥

मन्त्रादि ? ललितान्तं च यौवनाग्निः प्रकल्पितः ।
शुद्धसन्धानसूत्रं च सत्याषाढमिहोच्यते ॥

गुरुस्थानं च दिव्यांभो दशमं परिकीर्तितम् ।
अगस्त्यो गोत्रकिमठो गुरुश्च व्योमगोचरः ॥

सद्यमन्त्रसमोपेतं सिद्धादिर्वातुलान्तकः ।
अग्निर्वेक्तिश्च सूत्रञ्च द्राह्यायणमिति स्मृतम् ॥

सन्तानं निमलोद्भेदं मूर्तीनां पुरुषस्य तु ।

என்னும் இவை முதலியனவாக ஆகமாதி சின்னவிலக்கணங்களை வேறுவேறு

* இவை அச்சிட்ட காரணாகமத்தில் காணப்படவில்லை.

பகுத்தோதுதலாற் காண்க. பிறவும் அன்ன. ஆயின் ஞானசித்தாந்த குரவர்க்கு ஆகமபேதம் இல்லையோவெனின் ஆதியில் நந்திகேசுரர்சந்தானம் ஒன்றேயாகலின்; அவர் சித்தாந்த ஆகமம் இருபத்தெட்டுங் கேட்டு மாறுபாடின்றி உண்மைமுத்தியே உட்கொண்டாராகலான் சந்தானபேதமின்மையின் ஆகமபேதங்களும் இல்லையென்க. அல்லதூஉம், ஞானத்தில் அக்கினி. சூத்திரம், விருத்தி முதலாயின வேண்டாவாயினும், ஞானபாதத்தில் வேறுபாடின்றாகலானும் பேதமின்றென்க. இதனையன்றே அசிந்திய விசுவத்தில் ஞானசித்தாந்த குரவரியல்பு கூறும்வழி,

9. मठं ब्रह्म च विख्यातं सन्मार्गं दर्शनं भवेत्।
कामिकादिकमित्याहुरावासं पर्वतं तथा॥

எனவும், திருமந்திரமாலையுள்; [1]"நவமெழு நான்குடன் நந்திபெற் றனே" எனவும் வந்தன.

அன்றி, இவ்வாறு கன்மாவரணசித்தாந்த குரவர்க்குப்போல ஞானாவரணசித்தாந்த குரவர்க்குப் பகுத்தோதாமையின் சித்தாந்தமான சன்மார்காகமம் இருபத்தெட்டும் கொண்டதென யுத்தியின்றி விதிநிலையாற் கொள்ளினும் ஆம். ஆயினும் அவற்றுட் கூறிய மந்திரபேதங்கள் எவ்வாற்றான் மாறுபாடு இன்றாமெனின், சித்தாந்தமுத்தி இஃதெனவும், பூர்வபக்கமுத்தி இஃதெனவும் விதந்து கூறலின், அவைகளைப் பூர்வபக்கமாக உட்கொண்டு சித்தாந்த முத்தி நிலையிற் றெளிந்துநிற்கலாமாகலின் மாறுபாடு உண்டாகாதென்க. அன்றியும், மெய்கண்டசிவாசாரியர், அருணந்திதேவசிவாசாரியர் முதலியோர் கூறும் நூல்கள் சித்தாந்தமுத்தியையே பிரதிபாதிக்கலானும் உணர்ந்துகொள்ளலாமென்க. இவ்வாறாயின் பூர்வபக்கமுடையோரும் சித்தாந்தமுத்தியறிந்துகொள்வர் எனின் அவ்வாறு காணினும் வேதத்திற்கு அவரவர் பொருள் வேறுகொண்டாங்கு வேறுபொருளே கோடலின் அவர்க்குப் பரிபாகமின்மையின் கொள்ளப்படாதென்க. அது பரமோக்ஷநிராசகாரிகையில்,

10. महागमो महेशस्य त्वकर्ता सर्ववेद्यवित्। (சு. 3.)

என்றற்றொடக்கத்தாற்கூறும் மதவாதிகள் ஆகமத்திற்கு வேறுபொருள் கூறுமாறு ஆண்டுணர்க. இவ்வாறாயின் ஒருகுரவரை அடைந்தோர் மற்றொரு குரவரைப் பின் அடையலாகாதோ எனின், அவர் ஞானாசிரியராயின் சித்தாந்த முத்தி உபதேசம் பண்ணுவராகலான் அவரை விட்டுப்போயின் குற்றமாம். அவ்வாறு ஞானாசிரியரல்லராயின் அக்கன்மாசிரியரைவிட்டு ஞானாசிரியரை அடையலாமென்க. என்னை? அசிந்திய விசுவத்தில், (சமயதீக்ஷாவிதி படலத்தில்)

11. दीक्षाशतसहस्रं तु * प्राणिनां कृतवानपि।
शिवज्ञानमलब्धं चेज्ज्ञानाचार्यं समाश्रयेत्॥

---

[1] ஆகமச்சிறப்பு, 4. * पापानामिति च पाठः

ज्ञानहीनं गुरुं प्राप्य कुतो मुक्तिस्तु देहिनाम् ।
भिन्ननावाश्रितस्त्वब्धेर्यथा पारं न गच्छति ॥

तस्मात्सर्वप्रयत्नेन संश्रयेज्ज्ञानपारगम् ।
मधुलुब्धो यथा भृङ्गः पुष्पात्पुष्पान्तरं वने ॥

ज्ञानलुब्धस्तथा शिष्यो गुरोर्गुर्वन्तरं व्रजेत् ।
तल्लब्ध्वा विसृजेच्छिष्योऽप्यधः पतति निश्चयः ॥

எனவருதலின். எனவே கன்மசித்தாந்தகுரவர்பால் அடைந்தார் ஞானசித்தாந்த குரவரையடையலாம். ஞானசித்தாந்தகுரவரையடைந்தார் பின்னும் பிறரை யடைந்தால் நரகம்விதித்தலின் கன்மசித்தாந்த குரவரினும் ஞானசித்தாந்த குரவர் உயர்ந்தோர் என்றதாயிற்று. ஈண்டும் அகோரசிவாசாரியர் முதலியோர்தாமும் ஞானவரணசித்தாந்திகளாம் பிறவெனின்,

12. आदिशैवेषु चिह्नानि दर्शिते पञ्च भेदतः ।

எனவந்தவாறே அவர் அந்தக் கோத்திரகோசராதி இலக்கணங்களையே உட்கொண்டு கூறுவராகலானும், இந்த ஞானவரணசம்பிரதாய சின்னமுடைய ரன்மையானும் அவர் ஞானகுரவரல்லர். அதனனே ஞானவரண சின்னமுடைய சந்தானகுரவர் சிலர் வேண்டுமன்றே அவர் திருமூலர், மெய்கண்டதேவர் முதலியோராக எண்ணப்படுபவர், அந்தக் கன்மசித்தாந்த குரவரும் நந்திகேசுர பரம்பரையால் சநகாதிபூர்வம் சொல்லிக்கோடலின் அவரும் ஞானகுரவராவ ராலோவெனின், இரண்டுவிதமான ஞானவரண கன்மாவரணங்களும் ஒருவருக்கே உடைமையானல் இருவகைப்படுத்தி ஆகமங் கூறியதற்குப் பயனில்லை; ஒன்று தலே அமையும். அதனன் வேறுவேறு கற்பிக்கவேண்டுமென்றே இருவகைப் படுத்தினது. அவருள், கன்மாவரணசின்னம் அகோரசிவாசாரியர் சொல்லிக் கொள்ளக் கண்டாமன்றே. அதுபோல ஞானவரண சின்னத்திற்கும் ஒருவர் வேண்டுமே அவர் மெய்கண்டதேவர் முதலியோரென்க. ஆயின் நந்திகேசுரப் பிரவர்த்தகம் இருவருக்கும் சரியானதென்னெனில், அவர் இருவகைக்கும் பிர வர்த்தகராகலின்.

அன்றியும், அவ்வாறு எவ்விடத்துங் கூறாது கால் பாதிகளையே கூறி ஏகதேசத்திற் கூறினமையானும் குற்றமன்று. சநகாதிகள் பூர்வமாகக் கன் மாந்த குரவருக்கும் சித்தாந்த சாராவளியிற் சொன்னதனன் மற்றதெல்லாம் ஒவ்வாமையின் வேறுதானே. அஃதெப்படி எனின், சிவகோசரம், கன்மம் ஞானம் இரண்டிற்கும் ஒத்ததேனும் சந்தானம் ஒன்றாகாதவாறுபோல ஆதியில் சநகாதிகள் ஒத்தாலும் மடவிருக்ஷாதிகள் ஒவ்வாதென்க. சநகாதிகள் வைதி கத்தும் பிரவர்த்தகராயிருப்பதுபோல, ஈண்டும் இரண்டுசந்தானத்திற்குங் காரணரானலும் வேறுபாடுண்டென்க. அந்தச் சநகாதிகளும் சைவவைதிகத் தான் இருவேறுவகைப்படுவரெனின், ஈண்டும் கன்மாவரண சித்தாந்தப் பிரவர்த்தக சநகாதிகளும் வேறே; ஞானவரண சித்தாந்த சநகாதிகளும் வேறே என்க. எனவே எவ்வாற்றானும் இருவகைப்பட்டு வரவேண்டலின் கன்மா

வரணம் ஆதிசைவருக்காகக் காணலின், மற்ற ஞானாவரணம் ஒருவருக்கு உரிமையாக வேண்டலின் அது மெய்கண்டதேவர் சந்ததி என்பதாயிற்று. இதனானே யன்றே கிரியாமார்க்கத்தைத்தானே அநுசரித்து அகோரசிவாசாரியார் முதலியோர் பரார்த்த ஆன்மார்த்த கன்மங்களும் தீக்கை முதலான கன்மங்களும் அநுட்டித்ததூஉம், மெய்கண்டதேவசிவாசாரியார், திருமூலசிவாசாரியார் முதலியோர் ஆன்மார்த்தமுள்பட ஞானாநுட்டானமாகச் செய்தும், தீக்கைகளும் சாம்பவாதிகளாற்செய்தும், அவ்வாறு பிறர் செய்வதற்கு ஞானதீக்ஷாக்கிரமத்தைத் தமிழ்செய்தும் வந்ததூஉம் என்க.

இங்ஙனம் கூறும் ஞானாசாரியர் சமயவிசேடதீக்கை பண்ணவல்லாரல்லர்; நிருவாணதீக்கை ஸ்தானமான சாம்பவதீக்கை ஒன்றே யுடையராகலின்; எனின், [1] 'ஞானி நாலினுக்கும் உரியன்' என்பதனால் அவ்வாறு பரிபாகவினர் வந்துழிக் கிரியாதீக்கையாற் பண்ணுவாரென்க. அந்த ஞானசித்தாந்தகுரவர் விரத்தராயிருந்தால் அந்தக் கிரியாதீக்கையில் அதிகாரமின்மையின் அவர்க்குக் கூடாதெனின் அவர் அந்தக் கிரியாதீக்கையை அக்கினிகாரியமின்றி மனோபாவனையாற் பண்ணுவராகலின் அவ்வாறு வரும் ஞானதீக்கையாற் பண்ணுவரென்க. என்னை? அனந்தர சைவபத்ததியில்,

13. [2] बाह्याग्नेरुदराग्नावारोपितत्वात् अग्निकार्यं विना मनोभावनया दीक्षां कुर्यात् ।

எனவிதித்தவாற்றானும், [3] சைவசந்நியாசபத்ததியில் அக்கினிகாரியம் தள்ளி எழுதி அறிவித்துப் பண்ணுதற்கெளிதாகச் செய்தமையானும் கண்டுகொள்க. இதனானேயன்றே அசிந்தியவிசுவத்தில், (அந்தியேட்டிவிதி படலத்தில்)

14. लोकाग्निमुदराग्नौ तु समारोपणतः पुरा ।
बाह्याग्निकार्यभावाच्च छादयेल्लवणैस्सह ॥

எனவும்,

15. आचार्याणाञ्च मध्ये वै यतीनां किञ्चिदन्तरम् ।
परहंसयतीनां च तपस्सन्यासिनां च ये * ॥

अनयोरग्निकार्येषु योग्यत्वं न विधीयते ।
होमं विना तयोरेवमभिषेको विधीयते ॥

எனவும் வந்ததூஉமென்க. இவ்வாறு தீக்கையுண்டென்பது வருணபத்ததியில்,

16. ज्ञानदीक्षा भवत्येका क्रियावत्यपरा स्मृता ।
विनेज्यानलकर्मादि मनोव्यापारमात्रतः ॥

दीक्षा ज्ञानवती प्रोक्ता सम्यक्तत्त्वावबोधिका ।
इज्यानलवती या तु क्रिया कौशलसम्भवा ॥

எனவும், சிவஞானசித்தியில்,

1 சிவஞானசித்தி சூ. 12. 5-ம் பாடல். 2 கிரியாதீபிகை படல. 4, பக். 215 3 6-வது படலம், தீக்ஷாவிதி. * तथा என்பதும் பாடம்.

[1] பலவிதமா சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிச வாசகமா னதமும்
அலகில்சாத் திரம்யோக மௌத்தி ராதி
யனேகமுள வவற்றினவுத் திரியிரண்டு திறனும்
இலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தா
லியற்றுவது கிரியையெழிற் குண்டமண்ட லாதி
நிறுவித்துச் செய்தல்கிரி யாவதிதா னின்று
நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகி நிகழும்.

எனவும், சிவப்பிரகாசத்தினும்,

[2] ... ... ... அவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்புமாறே.

எனவும் வருவன காண்க. எனவே விரக்தாசிரியர் ஞானவானாயின் சாம்பவதீக்கையாலாயினும் ஞானதீக்கையாலாயினும் தீக்ஷிப்பர். அவர் ஞானவானன்றேல் இந்த ஞானதீக்கை ஒன்றுமே சமய விசேட நிருவாணமும் பண்ணுவரென்க. கிருகத்த குரவரும் ஞானவானாயின் கிரியாதீக்கை, ஞானதீக்கை, சாம்பவதீக்கை மூன்றும் தகுதியறிந்து முடிப்பரென்க. இதனை, ஞானசித்தி தந்திராவதாரப் பிரகரணத்தில்,

17. शुद्धशैवागमो द्वेधा मूलभेदान्यतन्त्रतः ।
कामिकं योगजं चिन्त्यं कारणं त्वजितं तथा ॥

दीप्तं सूक्ष्मं सहस्रं च अंशुमान्सुप्रभेदकम् ।
विजयं चैव निश्वासं स्वायंभुवमथानलम् ॥

वीरञ्च रौरवं चैव मकुटं विमलं तथा ।
चन्द्रज्ञानं च बिम्बञ्च प्रोद्गीतं ललितं तथा ॥

सिद्धं सन्तानशर्वोक्तं पारमेश्वरमेव च ।
किरणं वातुलं चैव अष्टाविंशतिसंहिताः ॥

कामिकादि तथा पञ्च सद्योजाताननोद्भवम् ।
दीप्तादि पञ्चमो भेदो वामदेवाननोद्भवः ॥

विजयादि पञ्चतन्त्रमघोराननसम्भवम् ।
रौरवादि तथा पञ्च तत्पुरुषाननोदितम् ॥

प्रोद्गीताद्यष्टमं भेदमीशानाननसम्भवम् ।
इत्यष्टाविंशतिर्भेदाः शैवसिद्धान्तकल्पनाः ॥

---

1 சிவஞானசித்தி. சூ. 8. செ. 3. 2 சிவப்பிரகாசம் பாயிரம். 9.

नन्दिकेशं परं गुह्यं योगज्ञानप्रवर्तकम् ।
ज्ञानसांख्यं योगसाख्यं शैवसांख्यमथ त्रयम् ॥

निर्वाणसारसांख्यैकं ज्ञानसारं द्वितीयकम् ।
तत्वसारं त्रिधाभेदं द्विविधं नश्वरं गुह ॥

कारणं भार्गवं शुद्धं कालकञ्च तथाधिकम् ।
शैवभेदा मता इत्थं लेशाद्भेदाः प्रकीर्तिताः ॥

तद्भेदादागमश्चैव शिवधर्मोत्तरं द्विधा ।
नानाचारप्रवृत्त्यर्थाः नानासिद्धान्तभेदकाः ॥

पौष्करा योगसांख्यार्थास्तत्वसारादि भेदकाः ।
अनेकार्थागमास्सांख्याश्चतुष्पादाः शैवनिर्णयाः ॥

देविकालोत्तरस्कन्दकालोत्तर [द्वि] शतोत्तराः ।
सर्वज्ञानोत्तरस्सांख्या इत्यादिज्ञानसांख्यकाः ॥

नानाशैवप्रवृत्त्यर्थं नानाशैवागमोदिताः ।

எனவரும் வசனங்களால் அறிக. இதனையன்றே அகோரசிவாசாரியரும்,

18. * श्रीमदङ्गादिशास्त्रेषु विद्यापादार्थसंग्रहम् ।
सर्वविद्येशिनी नाम्ना निर्ममे यस्तदुक्तिभिः ॥

எனத் தமக்குப் பழக்கமான மூலாகம மின்மையின் அந்த மதங்காதிபேத சித்தாந்தத்தையே எடுத்தாராகலின் அவரும் அன்னோர் பிறருங் கூறுவனவெல்லாம் இந்தச் சாங்கியமதபிரக்கிரியைகளென்றறிக. இவ்வாறுயின் விரத்தராகிய ஞானவானும் கிரியாதீக்கையாலும் செய்கவெனின் எளிதாய ஞானதீக்கையின் இலகுவாய் முடிவதைக் கஷ்டமாக்கிரியா தீக்கையிற் கௌரவமாயிருக்கையில் பிரவர்த்தியார். அன்றியும் சந்நியாசம் பண்ணின பின்பு ஞானம் நிகழ்தலின் அக்கினிகாரியத்தில் விதியின்மையின்,

19. इति वर्णाश्रमाचारान्मनसापि न लङ्घयेत् ।

என்பதனன் மரியாதையின் நிற்கவேண்டுதலானும் செய்யாரென்க. அஃதற்றுக; இவ்விரத்தாசாரியர் ஞானதீக்கையான் நிருவாணமாத்திரம் பண்ணுக எனின், நைட்டிகனுயிருப்பவன் குறைந்த பரிபாகியாகில் அவனுக்குக் கிருகத்தர் குருவாக விதியின்மையின் சமயவிசேடம் பண்ணவேண்டுமென்க. என்னை அசிந்திய விசுவத்தில், (படலம். 2.)

20. नैष्ठिको नैष्ठिकांश्चैव गृहस्थान्दीक्षयेत्क्रमात् ।
भौतिकस्तु गृहस्थांश्च नान्यदीक्षां समाचरेत् ॥

* இது கிரியாக்கிரமத்யோதிகை நித்தியகர்மவிதியின் முடிவிலுள்ளது.

என்பது விதியாகலின். அன்றி ஞானநிருவாணத்தினும் சமயவிசேடம் பண்ண வேண்டுதலின் தனித்தும் அவ்விரண்டும் பண்ணப்படுமென்க. எனவே, ஞான சித்தாந்தகுரவர் கிருகத்தராயினும் விரத்தராயினும் எல்லாத் தீக்கையும் பண்ண வேண்டுமாற்றான் அவர் பரிபாகத்திற்கு ஏற்க அநுக்கிரகம் பண்ணுமிடத்து அவர்களுக்கு உசிதமான தீக்கையால் சமயவிசேடமும் பண்ணுவரென்க. எனவே கன்மசித்தாந்த குரவர்க்கு இவ்வாறின்மையின், அவரினும் ஞான சித்தாந்த குரவர் உயர்ந்தோரென்பதூஉம் ஆயிற்று. இதனானே யன்றே, அசிந்தியவிசுவ சமயலக்ஷணவிதி படலத்தில்,

1. कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं परं स्मृतम्।

21. चर्या चैव क्रिया योगः कर्मिणां साधनं भवेत्।
चर्याक्रियायोगयुक्तं ज्ञानं चैव भवेत्तथा॥

எனவந்ததூஉம் என்க. இதனுள் ஞானசித்தாந்தகுரவருக்குச் சரியை முதன் மூன்றும் கூறியது, 'ஞானி நாலினுக்கும் உரியன்' என்றாற்போல உரிமைபற்றி வந்ததேயாம். அது கிரியாசாரியருக்கு ஞானபாதத்தில் உரிமையின்றென்றதனாலும் பெறும்.

இத்துணையுங் கன்மசித்தாந்தகுரவர், ஞானசித்தாந்தகுரவரான சந்தான குரவரியல்பு கூறியது. "தக்கோர் பிறர்" என்றது பட்டினத்துப்பிள்ளை முதலியோரை, இவர் சிவன்றானே முன்னின்றருள அருள்பெற்றவராகலின் இக்காலத்துப் பரம்பரையான் அருள்பெற்றுவந்த சந்தான குரவரினும் உயர்ந் தோரென்க. இவராற்செய்யப்பட்டன கோயினான்மணிமாலை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை முதலாயின. சமயகுரவர் திருஞானசம்பந்தமூர்த்தி, திரு நாவுக்கரசுமூர்த்தி சுந்தரப்பெருமாண்மூர்த்தி, மாணிக்கவாசகமூர்த்தி என்னும் நால்வருமாம். இவர்கள், 22. ज्ञानशक्तिः ....। अतीतानागतार्थज्ञा नराब्धपरिमोहिनी என்று காமி காகமங் கூறியபடி எக்காலத்தும் எவ்விடத்துமுள்ள எவ்வெப்பொருள்களையும் ஒருங்கே அறிகின்ற பரிபூரண ஞானசத்தியையுடைய பரமேசுரனால் அருளிச் செய்யப்பட்ட சிவாகமங்களிலும் பிரதிபாதிக்கப்படுகின்றவர்கள். அது,

23. श्रीमद्वातपुरे जातं भक्तं देव्या गृहेऽपि वा।
देवाग्रे वा विशेषेण हस्ते पुस्तकसंयुतम्॥

नववस्त्रेण संवेष्ट्य न्यसेत्कौतुकबन्धनम्।

எனவரும் சூக்குமாகம பத்தோற்சவபடல வசனத்தானும்,

24. सम्बन्धः सुन्दरश्चैव पितृनामा त्रयस्तथा।
भक्तयागं त्रिकालं च द्वादशं परिकीर्तितम्॥

எனவரும் பூர்வகாரணம் மகோற்சவபடல வசனத்தானும் அறியப்படும். அன்றியும் இவர்களுக்கும் ஏனைய திருமுறை ஆசிரியர்களுக்கும் திருத்தொண்டத் தொகையும், நம்பியாண்டார்நம்பியந்தாதியும், திருத்தொண்டர்புராணமும்,

பிறவும் பிரமாணமாகலின் இவர் தெய்வத்தன்மை யவற்றானும் விளங்கும். இவருள் முதலிற்கூறிய நால்வரும் எல்லோரினும் உயர்ந்தவர்; சிவன்றன்னாலே அருள்பெற்றுத் தெய்வத்தன்மையுடையராய்ச் சைவசமயத்தாபனம் பண்ணினா ராதலின் என்க.

இவராற்செய்யப்பட்டன தேவாரம், திருவாசகம், திருக்கோவையார் என்பனவாம். திருவிசைப்பாச்செய்த கருவூர்த்தேவர் திருமாளிகைத்தேவர் முதலாயினோர் யாரெனின் அவரும் போகநாத சித்தர் சம்பிரதாயிகளாகலின் சந்தானவரலாற்றிற் கூறியவாறே ஞானசித்தாந்த குரவரான சந்தான குரவரா மென்க. இவ்வாசிரியர்களான் உட்கொண்ட சிவாகமம், மூலாகமம் உபாகமம் என இருவகைப்படும். அவற்றுள் மூலாகமம் இருபத்தெட்டாம். உபாகமம் பலவாம். அவையாவன,

17. कामिकं योगजं चिन्त्यं कारणं त्वजितं तथा ।
दीप्तं सूक्ष्मं सहस्रञ्च अंशुमान्सुप्रभेदकम् ॥

विजयश्चैव निश्वासं स्वायम्भुवमथानलम् ।
वीरञ्च रौरवं चैव मकुटं विमलं तथा ॥

चन्द्रज्ञानं च बिंबञ्च प्रोद्गीतं ललितं तथा ।
सिद्धं सन्तानशर्वोक्तं पारमेश्वरमेव च ॥

किरणं वातुलं चैव अष्टाविंशतिसंहिताः ।
25. मूलभेदमिति ख्यातमसंख्यमुपभेदकम् ॥

என்பனவாம். இக்காலத்து வழங்கும் மதங்கம், பௌஷ்கரம், மிருகேந்திரம், சருவஞானோத்தரம், கந்தகாலோத்தரம் முதலாயின உபாகமபேதமென்க. அன்றிச் சித்தாந்தசேகரத்தில் நித்தியகாண்டத்தில், (பரிச்சே-4-சுலோ-47)

26. सप्तार्चिर्भूतषड्भिर्मुनिजलनिधिभिर्नन्दशीतांशुदिग्भि
स्तिग्मार्चिःसोमभोगैर्द्विरदहुतवहैर्युग्मकामर्तुनेत्रैः ।
पश्चात्साकं कलाभिर्मनुदिवसकलावह्निना चाब्धिधातु
बाणैर्लोकैः सरन्ध्रैस्तपनसुगुणितैरागमानां विभेदाः ॥

என்பதனால் உபாகமம் இருநூற்றேழென்பதும் ஒருவழக்கு. இவ்வாற்றாற் போந்தது கன்மசித்தாந்த குரவரான சத்தியோசோதி, அகோரசிவாசாரியர், நாராயணகண்டர், ராமகண்டர் முதலியோர் வாய்மொழியினும், ஞானசித்தாந்த குரவரான திருமூலதேவர், மெய்கண்டதேவசிவாசாரியர், அருணந்திதேவ சிவாசாரியர் முதலியோர் வாய்மொழி வலியுடைத்து. அவ்வாய்மொழியினும் பட்டினத்துப்பிள்ளை முதலியோர் வாய்மொழி வலியுடைத்து. அதனினுஞ் சம்பந்தமூர்த்தி முதலிய சமயகுரவர் முதலியோர் வாய்மொழி வலியுடைத்து. அதனினும் உபாகம வசனம் வலியுடைத்து. அதனினும் மூலாகமவசனமு

வலியுடைத்தென்பதாம். என்னெனின் சந்தான குரவருள் கன்மசித்தாந்த குரவரினும் ஞானசித்தாந்த குரவர் உயர்ந்தோரென்பது,

1. कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं परं स्मृतम्।

என்பதனானும், * அவர்பெரும்பான்மையும் ஞானாதிகாரிகளன்றியிருத்தலானும், தாம் கற்றறிதலன்றி மெய்கண்டதேசிகர் முதலான இவர்போல் தெய்வத் தன்மையானுணரும் உணர்வினரல்லராகலானும் என்க. அவரினும் பட்டினத்துப் பிள்ளை முதலியோர் உயர்ந்தோரென்பது அவர்போற் பரம்பரையானன்றிச் சிவன்றனே அருளுந்தெய்வத்தன்மையானும் பிறவாற்றானும் என்க. அவரினும் சமயகுரவர் உயர்ந்தோரென்பது சிவன்றன்றனே அருள்பெற்றதேயன்றிச் சமயபரிபாலனம் பண்ணுகையானும் பரமசிவன் எளிதின் எஞ்ஞான்றும் வெளிப்படுதலானும், நிக்கிரகாநுக்கிரகம் உடைமையானும் பிறவாற்றானும் என்க. இதனையன்றே சமயாசாரியரைச் சிவாலயத்தும் பூசைசெய்வதூஉம் என்க. இதுபற்றியன்றே,

**“சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம் நந்தாது தோற்றுவித்த நற்குரவர்”** என அவருயர்வு தகுதியிற்றோன்றக் கூறியதூஉமென்க. இனி, உபாகமத்தினும் மூலாகமம் வலியுடைத்தென்றது வழிநூலும் முதனூலுமாகையால். இவ்வாறுகொளல் வேண்டியது, பவுட்கரத்தில், (பிரமாண-சு. 75-76.)

27. न चापि पौरुषैर्वाक्यैः ऋषिभिर्दैविकं तथा।
न दैवैर्ब्रह्मणो वाक्यं वैष्णवं पद्मजन्मना॥

तथा रौद्रं न हरिणा न रुद्रेण शिवात्मकम्।
बाध्यमूर्ध्वोर्ध्ववैशिष्ट्यादधोधो बाध्यमूर्ध्वतः॥

எனவருதலின். [1] “மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின், மொழியாத தனையு முட்டின்று முடித்தல்” என்பதனால் ஈண்டைக்கு வேண்டும் பிரமாணம் பிறவுங் கொள்க. என்னை?

[2] அளவை காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப் பாறென்பர்
அளவை மேலு மொழிபுண்மை யைதி கத்தோ டியல்பெனநான்
களவை காண்ப ரவையிற்றின் மேலு மறைவ ரவையெல்லா
மளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே.

என்றாராகலின். எனவே இவ்வாற்றாற் பலரானும் பலபிரமாணங்களானும் நிச்சயிக்கப்பட்டது சிவாநந்தாநுபவமாவதே முத்தி என்பதூஉம், அதுவே மீண்டு நிச்சயிக்கப்படுமென்பதூஉம் கூறியவாறாயிற்று. அங்ஙனம் நிச்சயிக்கப் பட்டதையும் பிறர் மாறுபாடாகக் கூறுவர். அது மேல்விளங்கும்.

இரண்டாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

1 தொல். மரபு. 110. 2 சிவஞானசித்தியார், அளவை. 1. * அவரென்றது கன்மசித்தாந்த குரவரை.

திருச்சிற்றம்பலம்

# மூன்றும் பாட்டு

அந்நிலையா னும்பிறவு மான்மாநந் தத்திறமாம்
என்னிலையே சித்திக்கு மென்றியம்பில்—உன்னிலைதான்
இல்லதென வேநீ யியம்பு மளவைமுதற்
சொல்லுமது கேளாய் துணிந்து.

இதுமுதற் பிறர்கோள் சிதைக்குமாறு தொடங்கின ராகலின் ஆன்மாநந்தவாதியை நிராகரிக்கவே சிவசமவாதி தானே யொழிவானாதலின் முன்னர் ஆன்மாநந்தவாதி உட்கோள்கூறி ஒருவாற்றான் நிராகரிக்கின்றது.

**அந்நிலையானும் பிறவும் ஆன்மாநந்தத்திறமாம்**
**என் நிலையே சித்திக்கும் என்று இயம்பில்**

என்பது, முதற்கூறியவாறே கன்மசித்தாந்தகுரவர், ஞானசித்தாந்தகுரவர், பட்டினத்துப்பிள்ளை முதலியோர், சமயகுரவர் ஆகிய தொல்லாசிரியர் மொழியும், உபாகம மூலாகம வசனங்களுமாகிய இவைகளோடே இவற்றிற்கியைந்த ஞானசித்தியாகம முதலிய சமானதந்திர வசனமும், வைதிகவசனமுமாகிய ஆகமப்பிரமாணமும், பின்னும் ஈண்டைக்குவேண்டுவனவாகத் தழுவப்பட்ட பிற பிரமாணங்களுமாகிய அனைத்தும் எனது உட்கோளாகிய ஆன்மாநந்தாநுபவமாவதே சைவசித்தாந்த முத்தியென்னுமதனையே உணர்த்துமெனில்,

**இல்லது எனவே நீ இயம்பும் அளவைமுதல்**
**சொல்லும் அது கேளாய் துணிந்து.**

என்பது, அஃது உனதுகுரவர் காலந்தொடங்கி மாத்திரம் நிகழ்தலின், முன்னில்லாத கற்பிதமாகலின் எவ்வாற்றானும் இல்லதெனவேவரும்; அதனை யாம் கூறுதும். நினைவோடுந்துணிந்து கேட்பாயாக என்றவாறு.

**"அந்நிலையானும்"** என்புழி ஆனுருபு ஒடு உருபின் பொருளில் வந்தது. பிறவும் என்றதனால் சமானதந்திரமும், வைதிகநூலும் தழுவப்பட்டன; ஏனைப் பிரமாணங்கள் முற்கூறியவாறே அந்நிலையானும் என்பதனால் கோடலின். யாம் பலவகைப் பிரமாணங்கள் கொண்டதன்றியும், சில வசனப்பிரமாணம் மிகைபடக்கொண்டும் எல்லாஅளவைகளானும் உனதுஉட்கோள் சிதைவுபடுமாறே நிகழ்தலின் இல்லையென்பதை யாம் கூறவேண்டுவதில்லை; அவைகளே கூறும் என்பார், **"எனவே நீ யியம்பும் அளவைமுதற் சொல்லும்"** என்றார். எனவே அவர்கூட்டிக்கொண்ட பிரமாணமும் உட்கொண்டதாயிற்று.

அவ்வாறே பிறர் ஆன்மாநந்தமே சித்திக்குமென்பது வருமாறு; ஆன்மாநந்தமாவது ஆன்மகுணமான இனிய இரதம். இரதமெனினும், சுவை எனினும், இன்பமெனினும், சுகமெனினும், ஆநந்தமெனினும் ஒக்கும். அது,

[1] தேனுக்கு வின்பஞ் சிவப்போ கறுப்போ.

என்பதனல் தேனது சுவையாகிய இரதத்தை இன்பமென்றதனுலும்,

இரத முடைய நடாா டுடையவர்.

என்பதனுள் இரதமென்றது சுவையை யன்று கட்கினிமை என உரை கூறிய தனுலும், ?

[2] சுகத்தைச் சொல்லென்ருற் சொல்லுமா றெங்ஙனே

எனவும்,

[2] அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்.

எனவும் இவ்வாறே வரும் பிறவற்றானும் அறிக. இவ்வாறு கூறும் ஆநந்தம் ஆன்மகுணமேயாமென்பது,

[3] ஆவி யிருவகை யாண்பெண்ண தாகி
மேவி யிருவர் விருப்புறு மாறுபோல்
தேவியுந் தேவனுஞ் சேர்ந்தின்ப ருபகம்
ஆவிக்கும் வேறே யாநந்த மாமே.

எனவும்,

[2] முகத்துக் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு * பார்ப்பதே யாநந்தம்
மகட்குத் † தாய்தன் மணளனெ டாடிய
சுகத்தைச் சொல்லென்ருற் சொல்லுமா றெங்ஙனே.

எனவும் பிறவும் வருமாற்ருனும் உணர்க. இப்பேரின்பத்தைச் சொல்லுதற்கு உலகில் வழங்குஞ் சுவைப்பொருண் முதலியவற்றின் குணத்தினை உணர்த்துஞ் சொல்லன்றியின்மையின், அவ்வாறு வரும் சுகமுதலிய சொல்லாற் சொல்லி வழங்குப. இங்ஙனங் கூறும் ஆன்மாநந்தஞ் சிவாநந்தம்போல்வ தாகலின் அவ்வாறு ஆன்மகுணமான வினிய விரதமென்றது. சிவாநந்த மென்பதும் அவர்குணமான இனிய இரதம்போலுமொன்ருய் வாக்குமனதீதகோசரமாதலின் சொல்லப்படாததாம்; அவ்வாருயினும் வழங்குதற்பொருட்டு விடயாநந்தம் பிரமாநந்த மென்ருற்போல அடைகொடுத்து மற்றுந் தேன்பாலமுது முதலிய சுவைப்பொருளையும், சிற்றின்பத்தையும் உவமையாய்க் கூறியும் வருவராகலின். இவ்வாருயின்,

[4] உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை.

---

[1] திருமந்திரமாலை, அச்சுப்படிகளில் இல்லை. [2] திருமந்திரமாலை, மோனசமாதி 9. [3] திருமந்திரமாலை, இதுவும் அச்சில் இல்லை. * காண்பதே. † தாயர் என்பதும்பாடம். [4] தொல். பொருள். உவம. 3.

என்பதனால் இழிந்த சுவைப்பொருளை உவமையாகக் கூறல் குற்றமாம்பிற வெனின், வேறோர் சொல்லின்மையானும்,

பொருளது புணர்வே புணர்ப்போன் குறிப்பின்
மருள வரூஉம் மரபிற் றென்ப.

என்பது ஒத்தாதலானும் குற்றமின்றென்க. இவ்வாநந்தம் ஆன்மாவினது ஞானக் கிரியைபோல்வதாகலின் அது பெத்தாவத்தையின் மலத்தான் மறைப்புண்டு முத்தியிற் சிவனால் வெளிப்படுதலின் சிவாநந்தமெனவும் படும். இங்ஙனங் கூறும் ஆன்மாநந்தமென்பது,

1. *मुत्प्रीतिः प्रमदो हर्षः प्रमोदामोदसंमदाः ।
स्यादानन्दथुरानन्दःशर्मशातसुखानि च ॥

எனவும்,

1 ஆநந்த மென்ப தகமகிழ்ச்சி யேயாகும்.

எனவும் வருதலின் ஆன்மாவினது மகிழ்ச்சி என்றால் என்னையோ எனின், அது துக்கநிவர்த்தியிற்றான் சுகலாபத்திற்றான் பிறப்பது நியாயமாகலின் ஆன்ம குணமென்பது கூடாமையிற் கொண்டிலமென்க. ஆன்மாநந்தம் என்பது இவ்வாறு பொருள்படுவது பிரமாண பூர்வமாயினன்றே. ஆதலின் அதற்குப் பிரமாணம் வருமாறு. காமிகத்தில் வித்தியாபாதத்து ஏழாவது படலத்தில்,

2. शिववत्सर्वकर्तृत्वे सर्वज्ञत्वे च सत्यपि ।
न करोति न जानाति भृशं मुह्यति बालवत् ॥

यदानुगृह्यते सोऽयं गुरुणा करुणाब्धिना ।
तदास्य पुद्गलस्यैषा ज्ञानशक्तिः प्रसर्पति ॥

देशकालाऽनवच्छिन्ना निरवद्या निरर्गला ।
तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ॥

निजानंदमहांभोधौ यस्मिन्मज्जेदनाकुलः ।
सा मुक्तिस्तत्तु निर्वाणं तदेव परमं पदम् ॥

मृग्यते ऋषिभिस्सर्वैर्योगिभिश्च द्विजोत्तमाः ।

எனவும், அசிந்தியவிசுவ சாதக்கியத்தில் சமயநிர்ணய படலத்தில்,

3. शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ।
कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं परं स्मृतम ॥

---

* அமரகோசம், காலவர்க்கம்.

1 உரிச்சொனிகண்டு பண்புப்பெயர். பா. 7.

चर्या चैव क्रियायोगः कर्मिणां साधनं भवेत् ।
चर्याक्रियायोगयुक्तं ज्ञानं चैव भवेत्तथा ॥

शक्तिश्शिवश्च सादाख्यं मन्त्रप्राधानिकात्मकम् ।
समासकल्पत्वं च मुक्तिस्तत्रैव चोच्यते ॥

कर्मावरणमेवं स्यात्तस्योर्ध्वे तु निरावृतम् ।
बिन्दुर्नादश्च शक्तिश्च परं चैव परात्परम् ॥

ब्रह्मप्राप्त्यवधिश्चैव चात्मानन्दसुखं भवेत् ।
निरावरणमेवन्तु शैव भेदमिति स्मृतम् ॥

எனவும், சிவஞானபோதத்தில், (சூ. 10.)

4. शिवेनैक्यं गतस्सिद्धस्तदधीनस्ववृत्तिकः ।
मलमायाद्यसंस्पृष्टो भवति स्वानुभूतिमान् ॥

எனவும், மிருகேந்திரத்தில், (அத்துவப். 175.)

5. येऽपि तत्पदमापन्नाःशैवसाधनयोगतः ।
ते तत् स्थित्यन्तमाह्लादं प्राप्य यान्ति परं पदम् ॥

எனவும், இரத்தினத்திரயத்தில், (சு. 313.)

6. तस्यां पतितमात्रायां निर्धूतघनसंवृतिः ।
प्रशान्तमलकालुष्यमात्मानमनुपश्यति ॥

எனவும், சித்தாந்த சாராவளியில், (கிரியா. சு. 2.)

7. स्वाम्नायज्ञानसिद्धाचरणमविकलं चाचरन्विश्रुतीत
श्चिष्कृत्याढ्यो मृतोऽन्ते शिवनिहितमनास्त्वन्त्ययागाच्छिधत्वम् ।
लब्ध्वा व्याप्त्यासविश्वः परमशिवसमोऽनीशिता तेन शश्वतो
नैजाह्लादैकपूर्णो निखिलपरिवृतश्शंकरप्रीतिरास्ते ॥

எனவும், சமானதந்திரத்தில் ஞானசித்தியில்,

8. शिवानन्दमयं प्रोक्तं स्वानुभूतिस्थितं भवेत् ।

என்பது முதலியனவும், சூதசங்கிதையில்,

9. आत्मन्येव रतिक्रीडां शुद्धात्मा कुरुते सदा ।
आनन्दमयमात्मा च ततोऽन्यश्चान्तरो यतः ॥

எனவும், ஆத்மபோதத்தில், (சு. 40.)

10. रूपवर्णादिकं सर्वं विहाय परमार्थवित् ।
परिपूर्णचिदानन्दस्वरूपेणावतिष्ठते ॥

எனவும், ஞாதுருப்பிரகரணத்தின் யோகாநந்தாக்கியத்தில், (சு. 104.)

11. यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥

எனவும், அதில் ஆன்மாநந்தாக்கியத்தில், (சு. 1-2.)

12. वेत्तु योगी निजानन्दं मूढस्यात्रास्ति का गतिः ।
धर्माधर्मवशादेव जायतां म्रियतामपि ॥

எனவும் வரும் இத்தொடக்கத்தனவாம். திருமந்திரமாலையில் திரோதசத்தி யதிகாரத்துள்,

[1] இருட்டறை மூலை யிருந்த *கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம் †புணர்ந் தாளே.

இதன்பொருள், பரமோபதேசத்தில்,

[2] இருட்டறை மூலை யெனுமியலான் மூலன்
தெருட்டினன்முத் தான்மாச்சீர் தேறு.

[3] இருட்டறை மூலை யிருக்குமுயிர்ச் சத்தி
இருட்டறையில் லைச்சிவசத் திக்கு.

என்பவற்றான் உணர்க. திருமந்திரமாலையில்,

[4] ஆவி யிருவகை யாண்பெண்ண தாகி
மேவி யிருவர் விருப்புறு மாறுபோல்
தேவியுந் தேவனுஞ் சேர்ந்தின்ப ரூபகம்
ஆவிக்கும் வேறே யாநந்த மாமே.

எனவும், சிவஞானபோதத்தில்,

[5] அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

எனவும்,

சிவனடி யடைந்துதன் சத்தியைத் திளைக்கும் ?

எனவும், சித்தியாரில்,

1 திருமந்திரம் - சத்திநிபாதம். 1. *'இருந்த குமரி' என்றும், † 'மணம்புரிந்தாளே' என்றும் அச்சுப்பாடம். 2, 3 பரமோபதேசம். 22, 23. 4 திருமந்திரம். 5 சிவஞானபோதம். சூ. 10.

1 சூக்கும மாங்க ருள்ளோர் சோதியா யழிவ தின்றி
யாக்கிடு மதிகா ரத்திற் கழிவினை தன்னைக் கண்டால்
நீக்கமி லறிவா னந்த முதன்மைநித் தியமு டைத்தாய்ப்
போக்கொடு வரவி ளைப்பும் விகாரமும் புருட னின்றாம்.

2 காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுங்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
விசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
ஆயுமறி வுடையனு யன்பு செய்ய
வந்நிலைமை யிந்நிலையி லடைந்த முறையாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத சிவானுபவ மருவிக்கொண்டே.

3 இந்நிலைதா னிந்நிலையே யெல்லா மீச
விடத்தினிலு மீசனெல்லா விடத்தினுநின் று
அந்நிலையை யறிந்துதக் கரணங்க ளடக்கி
யறிவதொரு குறிகுருவி னருளினா லறிந்து
மன்னுசிவன் றனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனிற் றுரியா தீதந்
தோன்றமுயல் சிவானுபவஞ் சுவானுபூ திகமாம்.

எனவும், சிவப்பிரகாசத்தில் பதியிலக்கணங் கூறும்வழி,

4 பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதான்
நிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமா யேகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

என்பதனுள் "ஆநந்தவுருவா யன்றிச் செலவரிதாய்" எனவும், பிள்ளையார் தேவாரத்தில்,

5 கோல மாகரி யுரித்தவ ரரவொடு மேனக்கொம் பிளமாமை
சாலப் பூண்டுதண் மதியது சூடிய சங்கர னார்தம்மைப்
போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர் பொருகடல் விடமுண்ட
நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந் தொழவினை யில்லாவே.

எனவும், திருவாசகத்தில் திருப்பாண்டித் திருவிருத்தத்தில்,

---

1 சிவஞானசித்தி. சூ. 1. அதி. 1. பா. 23. 2 சிவஞானசித்தி. சூ. 11. பா. 1. 3 சிவஞானசித்தி. சூ. 8. அதி. 2. பா. 34. 4 சிவப்பிரகாசம். சூ. 1. பா. 1. 5 சம்பந்தர் தேவாரம், திருச்சிரபுரம். 2.

[1] செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் றென்னனன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக் காலமெக் காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வா ளுறைகழித் தானந்தமாக் கடவி
எறியும் பிறப்பை யெதிர்ந்தார் புரள விருநிலத்தே.

எனவும், பொன்வண்ணத் தந்தாதியுள்,

[2] பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே.

எனவும், மூலாகம உபாகமவசனங்களும், வைதிகவசனங்களும், கன்மசித்தாந்த குரவர், ஞானசித்தாந்தகுரவர், சமயகுரவர், சேரமான்பெருமாளுயனார் முதலிய தொல்லாசிரியர் வசனங்களும் பிரமாணமானவாறு காண்க. இதனானேயன்றே எமது குரவரும் பரமோபதேசத்தில்,

[3] இளைப்பர் பரமுத்தர் தன்சித்தின் செல்வம்
ஒளித்திடுநா ளண்டன்மற் றுள்ளான்.

எனவும், சங்கற்பநிராகரணத்துள்,

[4] இளைப்பின்றி யான்மாத்தன் சத்தியின்முற் றின்பந்
திளைத்திருக்கை முத்தியெனத் தேறு.

எனவும், பரமோபதேசத்தில்,

[5] பரிபாகத் தின்மலத்தைப் பாற்றியுயிர்ச் சத்திக்
கருளா லிலக்குவனின் பார்ந்து.

அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப றதிமுத்தன்
அந்தச் சிவனொடிரண் டற்று.

எனவும், பிறவுங் கூறியதூஉமாம். இவ்வாறு ஆன்மாவிற்கு ஆநந்தம் உண்டென்பதற்கு ஞாபகமேதென்னில், நிச்சுவாசத்தில்,

13. सर्वज्ञः सर्वलोकेशः शिवतुल्यः प्रजायते ।

எனவும், சர்வஞானோத்தரத்தில், (பிர. 2 - சு. 61)

14. शिववच्छाश्वतश्शुद्धः सृष्टिधर्मविवर्जितः ।

எனவும், மதங்கத்தில், (தர்மா. - சு. 72)

15. अक्षोऽसौ शिववद्भाति शिव एव तनुक्षये ।

எனவும், சிவதருமோத்தரத்தில்,

---

1 திருவாசகம் - திருப்பாண்டித் திருவிருத்தம். 4. 2 பொன்வண்ணத் - 1. 3 பரமோப - 17.
4 சங்கற்பநிரா. சைவசங். 22. 5 பரமோ. 6-7.

16. संसारसागरान्मुक्तः शिवतुल्यः प्रजायते ।

எனவும், தத்துவப் பிரகாசத்தில், (சு - 36)

17. चिदचिदनुग्रहोऽयं किल यो मोक्षश्शिवसमानतारूपः ।

எனவும், மோட்சகாரிகையில், (சு - 117)

18. प्राप्नुतः शिवतुल्यत्वं तन्वन्ते गुरुदीक्षितौ ।

எனவும், சிவஞானசித்தியில்,

[1] புண்ணியமே னேக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்
புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னுலே
நண்ணியஞா னத்தி னுலிரண்டினையு மறுத்து
ஞாலமொடு கீழ்மேலு நண்ணு னுகி
எண்ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்ரு
னெங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்
கண்ணுதற னிறைவதனிற் கலந்து காயங்
கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போ னிற்பன்.

எனவும், பிறவும்வருஞ் சிவசமவசனப்பிரமாணத்தால் ஆன்மா ஆநந்த ரூபனுக வேண்டுமென்றது; சிவனும் ஆநந்த ரூபனுகலின். என்னை? காமிகத்தில்,

19. शिवं वै शाश्वतं नित्यं ज्ञानानन्दस्वरूपकम् ।
व्यापकं सर्वतत्वानामप्रमेयमनौपमम् ॥

எனவும், அசிதத்தில்,

20. सच्चिदानन्दरूपी यः सदसद्व्यक्तिवर्जितः ।
स एव सर्वगः सद्भिर्ब्रह्मशब्देन शब्दितः ॥

எனவும், அசிந்திய விசுவசாதாக்கியத்தில்,

21. सुखानन्दस्वरूपत्वाच्छिवता च शिवस्य वै ।

எனவும், சித்தாந்தரகசியத்தில்,

22. स्वान्यप्रकाशतेजस्वी सच्चिदानन्दलक्षणः ।

எனவும் வரும் இத்தொடக்கத்து வசனங்களால் சிவனைச் சச்சிதானந்த ரூபனுகக் கூறலின் ஆன்மாவுஞ் சச்சிதானந்த ரூபியாக வேண்டுமென வருதலின். இவ்வாறு முழுதுஞ் சிவனெடு சமதை கூறின் முத்தியின் அபேதமே சித்தித்தலின்,

4. शिवेनैक्यं गतस्सिद्धस्तदधीनस्ववृत्तिकः ॥

[1] சிவஞானசித்தி. சூ. 8 அ. 2 பா. 31.

என்றற்றொடக்கத்தியலும் அத்துவித வசனங்கட்கு மாறுபாடாம் பிறவெனின், அது மாறுபாடாகாதவாறு கூறுதும். என்னெனில் அங்ஙனங் கூறுஞ் சிவ சீவவைக்கியம் சந்திரபிம்பமும் பிரதிபிம்பமும் போல நிருபசரிதவைக்கியமோ, தாணுவும் புருடனும் போல வாதைப்படுமைக்கியமோ, கனகமுங் குண்டலமும் போலப் பரிணாமவைக்கியமோ, நீலமும் உற்பலமும்போலச் சமவாயவைக்கியமோ, அக்கினியும் இரும்பும்போல அந்நியோந்நிய தருமங்களாலைக்கியமோ, நதிநீரும் சமுத்திர நீரும் போலவும் உப்பிற்கும் சாகமுதலானவற்றிற்கும் அக்கினியா லுண்டான தன்மைபோலவுஞ் சையோகவைக்கியமோ, எள்ளும் எண்ணெயும் போல அநாதிசையோகவைக்கியமோ, கலுழனும் மாந்திரிகனும்போலத் தாதான் மியவைக்கியமோ, காய்ந்த இரும்பும் அஃதுண்ட நீரும்போல நாசவசத்தானிகழு மைக்கியமோ, மரித்தபிதிருவும் தேவபிதிருவும் போலப் பிண்டத்தைக் கூட்டு மாற்றாலொன்றாகக்கருதும் விகிதயோசன கன்மவைக்கியமோ, காட்டமும் அக் கினியும் போல [1] அநபிவியத்தாவத்திதியைக்கியமோ, தீபாலோகமுஞ் சௌரா லோகமும்போல அபிபவவசத்தாலைக்கியமோ, காமுகனுங் காமினியும் போல ஆநந்தாநுபவவசத்தா லைக்கியமோ, நட்புடையிருவர்க்குப்போல நிகழும் நட்புடையைக்கியமோ எனப் பதினான்கு பிரகாரமாக விகற்பித்துக் கேட்டளவில் நீ கூறுமாற்றால் முதலது மாயாவாத மதப்பிரவேச மாதலானும், இரண்டாவது சீவனுக்குத்தான் சிவனுக்குத்தான் பாதகமுண்டாகலானும், மூன்றாவது சித் தாந்தத்திற் பரிணாமமங்கீகரியாமையானும், நாலாவது சிவாகமத்தினிருவர்க்குஞ் சமவாய சம்பந்தங் கூறாமையானும், ஐந்தாவது தன்மசங்கிரமமாகலிற் குண சங்கிராந்தவாதமாய்ச் சித்தாந்தமன்றாகலானும், ஆறாவது இருவருங் கிரியாவா னன்மையிற் சையோகங் கூடாமையானும், ஏழாவது ஒருகாலத்துப்பிறிதலானும், எட்டாவதும் அதுபோலப் பிறிதோர்காலத்துப் பிறிதலுண்டாகையானும், அது அசத்தியமாயுள்ளவைக்கிய ஞானமாதலிற் தத்துவஞானமன்மையின் புரு டார்த்தம் பண்ணமாட்டாமையின் சிவசரீரவைக்கியப்பிரமமும் மோக்ஷவேது வாதல் வேண்டுமாகலானும், ஒன்பதாவது இருவருள் ஒருவர்க்குநாசம் அவர் ஆகமங்கள் கூறாமையானும், பத்தாவது சம்யோசனகன்மத்தாற் பிதிர்தேவதை யாகக்கருதும் சுவாமியாபக்கமுடையதானலும் அப்பிதிர்தேவதாவைக்கிய வாபாதகங் கூடாமையானும், நித்தியசம்பந்தியாயுள்ள இருவர்க்குச் சம்யோசனங் கூடாமையானும், பதினொன்றாவது அநபிவியத்தவக்கிநிகரம் மேனிகழும் அபி வியத்திமாத்திரத்தாற் காட்டத்தொடுமைக்கியம் அங்கீகரித்தால், தொட்டா லபிவியத்தியாம் கிணற்று நீருக்கும் பூமிக்கும் ஐக்கியங் கூடுமாகலானும், காட் டத்தில் அக்கினிக்குப்போலச் சிவனுக்குச் சிறிதெனினும் பிரகாசலோபாபத்தி வேண்டுமாதலானும், பன்னிரண்டாவது சிவசீவனிருவருஞ்சமனாகையான் ஒன்றனுளொன்றடங்கும் அபிபவங் கூடாமையானும், பதின்மூன்றாவது ஆநந் தாநுபவமாத்திரத்தான் மிகவுந் தோன்றக்கிடந்த பேதமுடையோருக்கு ஐக்கியங் கூறுதல் பொருந்தாமையானும், சதாவாநந்தாநுபவமுடைய சிவனிடத்திலே ஒருகாலத்து நிகழ்வதைத் திட்டாந்தங்கூறின் அது விபரீததிட்டாந்தமாக விருத்தலானும், பதினான்காவது பேதம் மிகவும் விளங்குகையானும் சராசர மனைத்தினுமெப்பொழுதுஞ் சிநேகமாயிருக்கிற பரமசிவனுக்கு ஒருகாலத்தின்

[1] வெளிப்படாதிருக்கை.

நட்புச் செய்கையாற் கூறுந்திட்டாந்தங் கூடாமையானும் பொருந்தாதென்க.

இனி, ஐக்கியமாவது யாதெனின் பசுத்தானே இந்தக்கெவயம் என்பது போலச் சிவன்றானே இந்தச்சீவன் எனச் சிவசீவவைக்கியம் கொள்வதென்க. எனவே, சாதிருசியவைக்கியமே ஈண்டு ஐக்கியமென்பதாம். கோவிற்குங் கவயத்திற்கும் உபமானோபமேயத்தாற் பேதநிகழ்வதுபோல ஈண்டு ஆதிமுத்தன் அநாதிமுத்தன் என்பதே பேதமென்க. சமாதிகாலத்துத் தோன்றும் இன்பம் என்னிடமாகவே காரணமின் எனதாதல் வேண்டுமெனச் சுவாநுபவமொத்தது. இவ்வாறு கருதியன்றே எமது குரவரும்,

[1] அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப னாதிமுத்த
னந்தச் சிவனெடிரண் டற்று.

என்றார். எனவே எல்லாப் பிரமாணங்களானும் ஆன்மாநந்தமாவதே சித்தாந்தமென்பது பழுதின்றி முடிவுபோயிற்றென்பதாம். இனி இவ்வாறன்றிச் சிவாநந்தானுபவமாவதே சைவசித்தாந்தமென்பது பொருந்தாதாம்; என்னெனில் சிவாநந்தமாவது சிவாநுபவமாகலின் சிவனையநுபவிக்கவே சிவசத்தியும் அநுபவிக்கப்படுதலின் பிதாமாதாவாகவே அவர்களை நூல்கள் கூறுதலான் மாதாபிதாக்களைப் புதல்வர் புணர்ந்த மாபாதகம் வருதலின். என்னை? பரமோபதேசத்தில்,

[2] அநாதிமல முத்தன் பிதாவமலை யன்னை
அநாதிமல பெத்தர்க்கெல் லாம்

மைந்த ரநுபவிப்பர் மாதாத் தனையென்னும்
நிந்தனைநீ சொன்னவழு நீக்கு.

சிவசத்தி யைத்திளைப்பர் * சீவன்முத்த ரென்னும்
அவசத்த மாபாத கம்.

என எமது குரவர் கூறுவராகலின். அவர் கூறுவது, [3] "பேய்கள் பாடப் பல் பூதங்கள் துதிசெயப் பிணமிடு சுடுகாட்டில்" என்பதனுள், "தாய்களாயினார் பல்லுயிர்க்கும்" என்றலின்,

[4] தாயுமா னார்பல் லுயிர்க்குமெனுஞ் சம்பந்தர்
வாயிலங்கு பாடன் மதி.

எனவும், [5] "தாயவன்கா ணுலகிற்குத் தன்னொப்பில்லாத் தத்துவன்காண்" என்றற் றொடக்கத்ததாய் வருதலின்,

[6] தாயவன் கா ணுலகிற் கென்றனர் தற்பரனைப்
பாயபுகழ் நாவரையர் பார்.

---

[1] பரமோ. 7. [2] பரமோப. 34, 35, 8. * ஆதிமுத்தர் என்றும் பாடம். [3] சம்பந்தர் திருச்சிரபுரம். 7.
[4] பரமோப. 24 [5] அப்பர் திருக்கச்சி, 4. [6] பரமோப 25.

எனவும், [1] "காயும் புலியி னதளுடையர்" என்பதனுள், "தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமேயாய தலைவனார்" என்றலின்,

> [2] தந்தைதாய் பல்லுயிர்க்குந் தாமேயென் றூர்கடவூர்
> நந்திதனைச் சுந்தரரு நாடு.

எனவும், [3] "தாயாய் முலையைத் தருவானே" என்பதனுள், "தாயே யென்றுன் றாளடைந்தேன் றயாநீ யென்பா லில்லையேல்" என்றலின்,

> [4] தாயே யெனவுஞ் சரணடைந்தே னென்றனர்தம்
> வாயான் மணிவா சகர்.

எனவும், பிறவும் எமது குரவர் பரமோபதேசத்திற் கூறியவாறே வருவனவாம். அன்றியும், முத்தான்மாக்கள் பற்றற்றவர்களாதலின் சிவசத்தியையும் சிவனையுந் திளையாராகலானும், அவர் திளைப்பரெனினும் ஸ்ரீமதங்கத்தில், (ப. 3 சுலோ. 2-3)

> 23. काष्ठा सैव परा सूक्ष्मा सर्वेदिक्काऽमृतात्मिका।
> प्रध्वस्ताऽऽचरणा शान्ता वस्तुमात्रातिलालसा॥
>
> आद्यन्तोपरता साध्वी मूर्तित्वेनापचर्यते।

என்பதனால் சிவசத்தி பதிவிரதையாகலின் அது கூடாதாகலானும், அநுபவத்தினும் தன்னைக் காண்பதேயன்றிச் சிவனைக் காணுமையானும் பொருந்தாதென்க; என்னை? பதிபசுபாசப்பனுவலுள் போதகவியலுள்,

> [5] திளைப்பா ரலர்சிவன்சிற் சத்தியைப்பற் றற்றார்
> திளைப்பா ரலர்சிவனை யும்.

எனவும், பரமோபதேசத்தில்,

> [6] சாத்துவி யென்றுபரா சத்திதனைச் சாற்றுமிய
> லார்த்த மதங்கத்து ளாய்.
>
> சாத்துவி யென்றபெயர் தான்கற் புடையளுக்கு
> வாய்த்தபெய ரென்றே மதி.
>
> கற்புடையா ளைத்திளைப்பன் காணவள்காந் தன்னவனை
> மற்றையர்தீண் டார்காண் மணின்.
>
> கண்ணாகைதன் றேளையவள் காந்தன் கலந்தணைவன்
> நண்ணவல்லார் மற்றார் நவில்.
>
> அணைவன் வசிட்ட னருந்ததி தன்னை
> யணையவல்லார் மற்றார்சொல் லாய்.

எனவும், ஐக்கியவியலுள்,

---

[1] சுந்தரர் திருக்கடவூர் மயானம், 3. [2] பரமோப, 26. [3] திருவாசகம் ஆனந்தமாலை. 5. [4] பரமோப, 2. [5] பதிபசு - போதக, 15. 'திளைப்பன் சிவன்பரா சத்தியைப் பற்றற்றார், திளைப்பா ரலர்சிவனை யும்' எனவும் பாடம். [6] பரமோப, 10, 11, 12, 13, 14.

[1] தன்னைத்தான் பார்த்தலே தன்னுளிலங் கும்பிரமந்
தன்னைத்தா னோக்குதலா ருந்தரையுள்—வன்னிமரங்
கண்டேனென்பார் தன்புறங்கண் டுட்காணா ராவியினுள்
அண்டனாமிவ் வன்னியனை யான்.

உடலுயிர் கூடி யொருவ னவனான்
உடல்கண் டதனுளுயிர் காணான்—படர்வழியிற்
கண்டே னொருவனை யென்பா னவனைப்போற்
கண்டானுட் பேருயிர்கண் டான்.

எனவும் பிறவும் வருதலான். அன்றியுஞ் சுபாவவிமல ரூபமாயுள்ள சிவசத்தி யாநந்தத்தை அவ்வாறநாதி யியல்பான விமலனை சிவனே அநுபவிக்க யோக்கியன். மலபெத்தமுத்தி சிவசத்தி யாநந்தத்தை அவ்வாறு மலபெத்த முத்த சிவனே அநுபவிக்க யோக்கியன் என்பதனானும் பொருந்தாதாம். அது பரமோபதேசத்தில்,

[2] அநாதிசுத்த சிற்சத்தி யிற்பேரா நந்தம்
அநாதிசுத்த னேதிளைப்ப னோர்ந்து.

[3] திளைப்பர்பர முத்தர் தன்சித்தின் செல்வம்
ஒளித்திடுநா ளண்டன்மற் றுள்ளான்.

என்பதனானுமறிக. முத்தனாயுள்ளவளவில் சிவசமதையாற் சுத்தனாகலின் கூடுமெனின் தனது அகண்டாகாரமான ஆநந்தாநுபவரசமான முத்தியினும் சிவன் பிறராநந்தாநுபவத்திற் பிரவிருத்தியின்மையின் கூடாதென்க. அன்றியுஞ் சிவாநந்தாநுபவ முண்டெனின் ஒழிந்த முத்தான்மாக்களும் ஆநந்தரூபர்களாகலின் அவர்களின்பமும் அநுபவிக்கவேண்டும். அது கூடாமையானும் இன்றென்றேகொள்க. அவ்வாறு கொள்ளின் பெத்த சிவாநந்தாநுபவப் பிராத்தியுமுண்டாம். அஃதுண்டாகவே, அவனது துக்காநுபவப்பிராத்தியும் பெறவரும். அதனானும் பொருந்தாதாம். இன்னும் புருடார்த்தமாவது தனது விருத்திசுக சாக்ஷாத்காரமாகலிற் சிவாநந்தாநுபவம் பிறிதாகலாற் புருடார்த்த மன்மையானும், முத்தியில் அத்தியந்த சையோகநிலை உண்டாகலான் சீவசிவ யோகத்தில் ஆநந்தாநுபவந்தானே நிகழும்; உலகிற் புணர்வோர்க்குப் போலவெனின் அவ்வாறு வசனம் அத்தியந்தசையோகநிலை கூறாது பிள்ளைப் பூச்சியுஞ் சேறும் போலவும், கழற்கொடிக்காயுந் திருநீறும் போலவும், புளியம் பழமுந் தோடும் போலவும், தாமரையிலையுந் தண்ணீரும் போலவும், **अन्यस्सन्व्याप्तितोऽनन्यः** எனவும், **तिले तैलमिवस्थितः** எனவும் வேறுபடப் பிறிந்து நிற்குந் தன்மை தோன்ற வருதலின் அவ்வாறு நிகழாது. அவ்வாறு நிகழினும் ஆண்பெண்ணிருவர்க்கும் புணர்ச்சிக்காலத்து நிகழ்ந்த வின்பம் அவரவரதானாற் போல ஈண்டும் ஆன்மாநந்தமே யாகலின் சிவாநந்தாநுபவமென்பது கூடாதென்க. அன்றியும் உலகில் தனது செல்வமிருக்கவுமநுபவியாது பிறர் செல்வத்தை அநுபவிப்பின் அவனைப் பழிக்குமாறுபோல் தனதாநந்தமிருக்கப் பிறராநந்தத்தைப் புசிப்பின் பழிக்கப்படுமாதலானும் பிறவாற்றானும்

[1] ஐக்கிய. 11, 12. [2], [3]. பரமோப. 9, 17.

பொருந்ாதென்க. இவ்வாறு சிவானந்தாநுபவமாவது சைவசித்தாந்தமுத்தி யென்பது பொருந்தாமையை எமது குரவர்,

> [1] முத்தர்க் கநுபூதி முன்னான்கு ருத்திரத்துட்
> பத்தாஞ் சுலோகத்தைப் பார்.

என்பதனானுமறிக. இவ்வாறாயின் பிள்ளையார் தேவாரத்தில்,

> [2] தேனுமாயமுதுமாய்த் தெய்வமுந்தானாய்த்
> தீயொடுநீருடன் வாயுவாந்தெரியில்.

எனவும்,

> [3] தேனினுமினியர் பாலனநீற்றர்
> தீங்கரும்பனையர்தந் திருவடிதொழுவார்
> ஊனயந்துருக வுவகைகடருவார்.

எனவும், அப்பர் தேவாரத்தில்,

> [4] கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
> பனிம லர்க்குழற் பாவைநல் லாரினுந்
> தனிமு டிகவித் தாளு மரசினும்
> இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.

எனவும், தனித்திருநேரிசையில்,

> [5] ஆயிர மரவ மார்த்த வமுதனே யமுத மொத்து
> நீயுமென் னெஞ்சி னுள்ளே நிலாவினாய்.

எனவும்,

> [6] வள்ளத்தேன் போல நுன்னை வாய்மடுத் துண்டி டாமே.

எனவும், சுந்தரமூர்த்தி தேவாரத்தில்,

> [7] தேனங்கத் தமுதாகி யுள்ளூறுந் தேசனை.

எனவும், திருவாசகத்தில்,

> [8] கோற்றேனெனக் கென்கோகுரை கடல்வாயமு தென்கோ.

எனவும், பிறவும் இவ்வாறு வருஞ்செய்யுட் கெல்லாம் எவ்வாறு பொருள் கொள்வதெனின் இயல்பால் சிவன் சச்சிதானந்தரூபியாகலிற் பாலுந் தேனும் பிறவுமாகிய இனியபொருள்களை இனியவெனா அவற்றின் குணத்தை யியல்பாற் கூறினாற்போல உண்மை கூறியதென்க. அன்றி உவப்பு, சிறப்பு, காதல் முதலானவற்றான்,

---

[1] பரமோப, 21. [2] சம்பந்தர் திரு இலம்பையங் கோட்டூர், 5. [3] சம்பந்தர் அச்சிறுபாக்கம், 2. [4] அப்பர் திருவிடைமருது, குறுந், 10. [5, 6] அப்பர் தனித்திருநேரிசை, 6, 7. [7] சுந்தரர் திருவலிவலம், 1. [8] திருவாசகம் உயிருண்ணிப்பத்து, 8.

[1] அணியு மமிழ்துமென் னாவியு மானவன் றில்லைச்சிந்தா
மணியும்ப ராரறி யாமறையோன்.

எனவும்,

[2] தேமல ரங்கட் டிருவே புகுதுக...... காமன் புகுதுக காளை புகுதுக.

எனவும், என்றனைவந்தது, பாவைவந்தது, மணிவந்தது எனவும் பிறவும் வழங்குமாறே பொருள் கோடலுமாம். என்னை?

[3] குடிமை யாண்மை யிளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை யரசே மகவே குழவி
தன்மை திரிபெய ருறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்
றாவறு மூன்று முளப்படத் தொகைஇ
யன்ன பிறவு மவற்றொடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லாம்
உயர்திணை மருங்கி னிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

என்பது ஒத்தாகலின். அன்றி இங்ஙனங்கூறும் பெருந்தன்மையோரான சம்பந்தமூர்த்தி, மாணிக்கவாசகமூர்த்தி முதலாயினோர்க்கு மாத்திரஞ் சகளீகரித்துக் காட்சி கொடுப்பராகலின் அகளனான பரமசிவனேயன்றி அச்சகள சிவனைத் தினைத்தவர் அவ்வாறு கூறியதெனினுமாம். என்னை?

[4] கனியினுங் கட்டிக் கரும்பினு முத்தர்க்
கினியன் சிவனென்று ரேன்.

[5] சகளசிவ னைத்தினைப்பர் சார்ந்தபர முத்தர்
அகளனரி யானவனு மாங்கு.

எனப் பரமோபதேசத்தில் வருதலானென்க.

எனவே எவ்வாற்றானும் ஆன்மானந்த மாவதே சைவசித்தாந்த முத்தி; மற்றது அம்முத்தியன்றெனப் பெறுதலினன்றே எமது குரவர் பரமோபதேசத்தில்,

[6] எழுநான்கு நான்கதுமூன் றென்பவற்று மில்லை
வழுவான நின்கொள்கை வாக்கு.

[7] பெருநூலி லில்லாப் பிழைபிதற்றும் பித்தர்
ஒருவார் நிரயத்து ளூற்று.

[8] ஆதலினின் கொள்கை யவலத் தினையகற்றிக்
கோதறுமென் கொள்கையினைக் கொள்.

எனவும் பிறவும் கூறுவாராயினர் என்க.

1 திருக்கோவை, 5. 2 சீவகசிந்-மண்மக, பா. 20. 3 தொல் - சொல். கிளவி, 56.
4, 5, 6, 7, 8 பரமோப, 15, 16, 36, 37, 38.

இவ்வாறு பிறர் பல பிரமாணங்களானும் ஆன்மாநந்தாநுபமாவது சித்தாந்தமுத்தியெனக் கூறிய சொற்பொருள் பொருந்தாமையானும், யுத்தி முழுதுங் குற்றப்படுதலானும் அவர் ஆன்மாநந்தமாமாறு கூறியது பொருந் தாது; எவ்வாறெனின், உன்னிலைதா, னில்லதெனவே நீ யியம்பு மளவைமுதற், சொல்லுமது கேளாய் துணிந்து என்றமையின். மேல்வருமாற்றானுமுணர்க.

மூன்றும் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்

# நான்காம் பாட்டு

ஈசன் றனதுசத்தி யின்பருந்து மீசனல்
ஆசறத்தன் சத்தியிலின் பான்மாவு—நேச
முடனருந்து மென்னின்முத்தி யொவ்வாது பாசம்
விடவதுவாய் நிற்பதுவா மே.

எ-து பாட்டு. எ-னின், சில வசனப் பிரமாணங்களால் ஆன்மாநந்த முண்டென்பதை நிராகரிக்கின்றது; பிறவசனங்களானும் நியாயங்களானும் விரோதங்காணலின்.

**ஈசன் தனது சத்தி இன்பு அருந்தும் ஈசனல்**
**ஆசுஅறத் தன் சத்தியில் இன்பு ஆன்மாவும் நேசமுடன்**
**அருந்தும் என்னின்**

என்பது, சிவன் தனது ஆநந்தத்தை அநுபவிப்பன். அதுபோல ஆன்மாவும் சிவனைன் மலமகலத் தன் சத்திரூபமான ஆநந்தத்தை முன்னர்ப்பெறவேண்டு மென்றிருந்த ஆசையால் அநுபவிப்பனெனின்,

**முத்தி ஒவ்வாது பாசம் விட அதுவாய் நிற்பதுவாமே.**

என்பது சிவன் தனது சத்தியை அநுபவியானென்று கூறும் வசனங்கட்கும், சிவனும் ஆன்மாவும் பிரிந்து நிற்றலிற் சாயுச்சியமென்னும் முத்திநிலை கூறும் வசனங்கட்கும், தம்மைத் தாமநுபவித்தல் கிரியாவிரோதமாகலின் நியாயத்திற்கு மொவ்வாது. எவ்வாறெனில், **பாசம் விட அதுவாய் நிற்பதுவாமே** என்பது, ஆன்மாப் பாசமது அகல ஞானாநந்த ரூபனான சிவன் அநுபவமாய்த் தோன்ற அச்சிவனோடு ஒன்றுமிரண்டுமன்றி அத்துவிதமாய் நிற்றலே சித்தாந்த முத்தியாமென்றவாறு. எனவே, ஈண்டு அவ்விரோதமின்று என்பதாயிற்று. **நேசமுடன் அருந்தும்** என்றது, சுகாநுபவ மெல்லாம் விருப்பமின்றி நிகழாமை நியாயமாகலின் **அதனானே** ஈண்டுத் தன்னைத்தான் ஆசைப்படுதலும் கூடாமையின், **தன்னை** அநுபவித்தலுங் கூடாதென்பதற்கு ஞாபகமுமாற்று.

பிறர் "ஈசன் தனதுசத்தியின்பு அருந்தும்" என்றது. காமிகத்தில்,

1. शिवं वै शाश्वतं नित्यं ज्ञानानन्दस्वरूपकम् ।
व्यापकं सर्वतत्वानामप्रमेयमनौपमम् ॥

எனவும், அசிதத்தில்,

2. सच्चिदानन्दरूपी यः सदसद्व्यक्तिवर्जितः ।
स एव सर्वगस्सद्भिर्ब्रह्मशब்देन शब्दितः ॥

எனவும், அசிந்தியவிசுவசாதாக்கியத்தில்,

3. सुखानन्दस्वरूपत्वाच्छिवता च शिवस्य वै ।

எனவும், சித்தாந்தரகசியத்தில்,

4. स्वान्यप्रकाशतेजस्वी सच्चिदानन्दलक्षणः ।

எனவும் பிறவும் வருதலின்.

5. व्यक्तोऽसौ शिववद्भाति शिव एव तनुक्षये । (மதங்க-தர்ம-72.)

என்றற்றொடக்கத்துச் சிவசமதாவிவகாரங்களால் ஆன்மாவும் தனது சத்தியின்பு அருந்து மென்றது; காமிகத்தில்,

6. निजानन्दमहांभोधौ यस्मिन्मज्जेदनाकुलः ।

எனவும், சிவஞானபோதத்தில்,

7. मलमायाद्यसंस्पृष्टो भवति स्वानुभूतिमान् । (சூ. 10)

எனவும் பிறவும் வருதலின். அவ்வாறு இருவருமநுபவிப்பது, திருமந்திர மாலையில்,

[1] ஆவி யிருவகை யாண்பெண்ண தாகி
மேவி யிருவர் விருப்புறு மாறுபோல்
தேவியுந் தேவனுஞ் சேர்ந்தின்ப ரூபகம்
ஆவிக்கும் வேறே யானந்த மாமே.

[2] இருட்டறை மூலை யிருந்த கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புணர்ந் தாளே.

எனவும் பிறவும் வருமாற்றானும் அறியப்படுமென்பது கருத்து. என்னை? புணர்ச்சிக்காலத்து இருவரிடத்து நிகழ்ந்த இன்பமும் அவரவராறு ஆனாற்போலச் சிவனுக்குஞ் சிவசத்திக்கும், ஆன்மாவுக்கும் ஆன்மசத்திக்கும் உவமை கூறுதலின் என்க. அதனானே யன்றே, பரமோபதேசத்தில்,

[3] அநாதிசுத்த சிற்சத்தி யிற்பேரா நந்தம்
அநாதிசுத்த னேதிளைப்ப னோர்ந்து.

1 இப்பாடல் அச்சுப்புத்தகத்தில் இல்லை. 2 சத்திநிபாதம் 1. 3 பரமோப, 9.

1 பரிபாகத் தின்மலத்தைப் பாற்றியுயிர்ச் சத்திக்
கருளா லிலக்குவனின் பார்ந்து.

2 அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப தாகிமுத்தன்
அந்தச் சிவனொடீ ரண்டற்று.

எனவும், சங்கற்ப நிராகரணத்துள்,

3 முனைப்பின்றி யான்மாத்தன் சத்தியின்முற் றின்பந்
திளைத்திருக்கை முத்தியெனத் தேறு.

எனவும், பதிபசுபாசப்பனுவலுள்,

4 திளைப்பார்தஞ் சித்திலிலங் கின்பமுல கெல்லாம்
ஒளித்திடும்போ துள்ளா சொழித்து.

எனவும், ஐக்கியவியலுள்,

5 பார்ப்பாரே தம்முணர்வின் பம்.

எனவும் பிறவும் அன்னோர் கூறியவாறும். அது பொருந்தாது; என்னெனில், அங்ஙனம் கூறும் வசனம் "சச்சிதானந்தரூபீய:" என்றே வருதலின், அஃது இலக்கண வசனமாகலான், சத்தெனின் முப்பொருட்கும் பொதுவாயினும் பாசத்திற்கும், சத்சித்தெனின் இருபொருட்கும் பொதுவாயினும் ஆன்மாவிற்கும், சச்சிதானந்தமெனில் சிவனுக்கே சிறப்பியல்பாகவும் நிற்றலின் என்க. அதனானே சொரூப வியல்பு கூறினதன்றி அச்சிவன் தனது ஆநந்தத்தை அநுபவிப்பனென்று கூறியதன்றாயிற்றென்க. இவ்வாறு சிவன தியல்புகூறின தென்பது சச்சிதாநந்த விலக்கண மென்பதனானும் அறியக்கிடந்தது காண்க. அவ்வாறு சிவன் தனது சத்திரூபமான இன்பத்தைத் தானநுபவிப்பனென்றால் வரும் குற்றம் என்னையெனில்? அவ்வாறு ஆகமவசன மின்மையானும், "[6] பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னியாகும்" என்னும் அநுபவநிஷேதவசன முண்மையானும், உலகில் இரதமுடைப்பொருளெல்லாம் தனக்கினிமையாகாது பிறர்க்கே யினிமை பயத்தலானும், எத்துணை வல்லமையுடைய நாடகியாயினும் தன்கழுத்திற்றானேறி நடிக்கமாட்டாமையின் கிரியாவிரோதம் நிகழ்தலானும் அது கூடாதென்பதாம். என்னை? ஆன்மாத்தன்னை அறியாதிருக்கின்றான் என்பதற்கும், தன்னைக் காணமாட்டான் சிவனையேகாண்பா னென்பதற்கும் திருமந்திரமாலையில்,

7 அதீதந்து ளாகி யகன்றவ னந்தி
அதீதத்து ளாகி யறிவிலோ னன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே.

---

1, 2 பரமோப, 6, 7. 3 சங்கற்ப - சைவசங், 22. 4 பதிபசு, போதக, 14.
5 ஐக்கியவியல், 10. 6 சிவஞானசித்தி, சு 2; பா, 77. 7 பரலட்சணம், 1.

[1] ஆதியு மந்தமு மில்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றுமையின்
நீதிய தாய்நிற்கு நிமய வப்பர
போத முணர்ந்தவர் புண்ணியத் தோர்களே.

எனவும், சிவாநந்தத்திற்கு,

[2] பரம்பர மான் பதிபாசம் பற்றுப்
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே.

[3] சத்திய ஞானத் தனிப்பொரு ளானந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
* உய்த்த துரியத் துறுபே ரொளியே.

[4] கண்டறி வாரில்லை காயத்தி னந்தியை
எண்டிசை யோரு மிறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த வளவிலா வானந்தத்
தொண்டர் முகந்த ‖ துறையறி வோமே.

எனவும், துகளறுபோதத்தில்,

[5] பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
உருகியடி யேனருந்த வூட்டுங்—குருவே
அழியாத வின்ப மருந்தா னென்னும்
வழியேது சொல்வாய் மகிழ்ந்து.

[6] சர்க்கரைதா னர்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்கால்—சர்க்கரைக்கின்
றின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ
இன்புருவ மேயிறைக்கு மென்.

எனவும், மோட்சகாரிகையில்,

8. सुतीव्रा अपि नोपायाः स्वात्मविच्छेदकारकाः ।
असिधारा सुतीक्ष्णापि न स्वात्मच्छेदिका यतः ॥ (சு-67)

எனவும், வந்ததூஉம், சங்கற்பநிராகரணத்துள்,

[7] தன்னிற் றன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே.

எனவும்,

---

1 பாலட்சணம், , 2. 2 முப்பரம், 5. 3 சிவசொரூபதரிசனம், 5. * 'உய்த்து' எனவும் பாடம். 4 மோனசமாதி, 7. ‖ 'துறை யறியோமே' எனவும் பாடம். 5, 6 துகளறு, 72, 73 7 மாயாவாதி நிராகரணம் வரி, 195-196.

[1] தன்னல மதனைத் தானே நுகரும்
என்னின் முன்னல மெய்தா திருந்ததென்
கட்டு போலெனக் கதறினை யின்பம்வந்
தொட்டிடும் வித்தை யுடையையா யிடினே.

எனவும் பிறவுங் கூறி உமாபதிசிவாசாரியர் மாயாவாதியை மறுத்ததூஉமாம். அன்றேல் * அவனை மறுத்திலராவரென்க. எனவே "ஆவியிருவகை" என்னும் செய்யுட்கும் இவ்வாறே பொருள்கோடல் பொருந்திற்றும்; அன்றேல், "தேவனுந் தேவியுஞ் சேர்ந்தின்ப மார்குவர்" என்பரன்றே! அவ்வாறு கூறாது இன்பரூபக மென்றதனால் விளங்குதலின். அவ்வாறாயின் மேவியிருவர் விருப்புறுமின்பத்தை உவமை கூறியது என்னையெனின்? அஃதொருபுடையொப்புமையால் புணர்ச்சி நிலைக்கன்றி அவர்பானிகழும் ஓரின்பங்கருதி எடுத்துக்காட்டாற் கூறியதென்க. அது,

[2] மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினாற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்.

எனவும்,

[3] உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே.

எனவும்,

[4] கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.

எனவும் பிறவும் வருமாற்றானுணர்க,

இவ்வாறாயின் "[5] உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங்காலை" என்பதனால் இழிந்த சிற்றின்பங்களை உயர்ந்த சிவனின்பத்திற்கு உவமை கூறுதல் குற்றமாம் பிறவெனின்? அவ்வின்பம் வாக்குமனாதீத கோசரமாகையால் அதுசொல்லப் படாமையானும், யாதேனுமோரெடுத்துக்காட்டால் அறிவிக்கவேண்டுமாதலானும் உலகில் வழங்கும் பொருட்கு இயைந்தசொல்லாற் சொல்லி உலகினுளுயர்ந்ததை எடுத்துக்காட்டாகக் கூறல் குற்றமன்றென்க. என்னை?

பொருளது புணர்வே புணர்ப்போன் குறிப்பென
மருள வருஉ மரபிற் றென்ப.

எனவும்,

[6] மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும்
பான்மாறு படுதலும் பாகுபா டுடைய.

---

1 மாயாவாதி நிராகரணம் வரி, 197-200. * அவனை என்றது மாயாவாதியை. 2 சிவஞான சித்தி, சூ 8, பா 36. 3 திருக்கோவையார், 9. 4 அப்பர், திருவிடைமருது, குறுந். 10. 5 தொல், பொருள் உவம, 3. 6 தண்டியலங்காரம், 33.

எனவும் வருவன ஒத்தாகலினென்க. அன்றி, "உயர்ந்ததன் மேற்றே" என்பது எடுத்துக்காட்டுவமை யல்லாத பிறிதினிலக்கணமாதலானும் குற்றமன்றென்க. எனவே "ஆவிக்கும் வேறே ஆநந்தமாமே" என்பது அச்சிவனது சொரூபம் இன்பமாகலான் அவ்வாருகாது, வேறே அதனை அநுபவித்தலானிகழும் அகமகிழ்ச்சியுண்டா மென்பதும் பெறக்கிடந்தவாறு காண்க; [1]"ஆநந்தமென்பது அகமகிழ்ச்சியாகும்" என்பது உரிச்சொற்சூத்திரமாகலின். அன்றேற் புணர்ச்சி கருதிப் பொருள்கூறின் தேவனும் தேவியும் வேறுபட்ட பேதமுடைமை நிகழ்தலானும் கூடாதென்க. இவ்வாறே "இருட்டறை மூலை" என்பதற்குங் கொள்ளப்படும். இதனைவிரித்து மேற்கூறுமாற்றானும் அறிக. எனவே மேற்கூறுமாற்றால் ஆன்மாவிற்கு முற்றுஞ் சமதை கூடாதென மறுக்குமாறே ஏகதேசத்தாற் சமதை கூறலின் ஆன்மாவிற்கு ஆநந்தமின்மையானும், உண்டாயினும் தனக்கு அநுபவமாகாதெனச் சிவனதியல்பு கூறியவாறு கூறி மறுக்கப்படுமாதலானும், ஆன்மாத் தனது ஆநந்தாநுபவ முடையனென்பது பொருந்தாதாயிற்று. ஆகவே, ஆன்மாவிற்கு முத்தியில் ஆநந்தமுண்டென்பது துக்கநிவிர்த்தி புருடார்த்தமன்மையின் அதிசய லாப*மொன்று கொண்டே அகமகிழ்ச்சி கூறவேண்டுதலினால் இன்பரூபமான சிவனைப்பெற்றால் அவனை யநுபவித்தலால் ஆன்மா மகிழ்ச்சியடைதல் ஆன்மாநந்தமெனப் பெறுதலான் நியாய விரோதமும் வசன விரோதமுமின்றி நிகழ்ந்தவாறு காண்க. இதனானேயன்றே இரௌரவத்தில்,

9. शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ।

எனவும், பஞ்சதசியில் (யோகா-சு. 2)

10. रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा ।

எனவும், திருமந்திரமாலையில்,

[2]பண்டங்க ளெண்பத்து நான்குநா றாயிரம்
துண்டஞ்செய் யாரைத் தொடர்ந்துயி ராய்நிற்குங்
கண்டவை தன்னிற் கலந்துண்ணே றனென்
றுண்டியு மாகி யொருங்கிநின் றானே.

[3]அன்புள் ளுருகி யழுவ னரற்றுவன்
என்பு முருகி விராப்பக லேத்துவன்
என்பொன் மணியை யிறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் †றிருத்தலு மாமே.

[4]தேனுக்கு ளின்பஞ் சிவப்போ கறுப்போ
வானுக்கு ளீசனைத் தேடு மதியிலீர்
தேனுக்கு ளின்பஞ் செறிந்திருந் தாற்போல்
ஊனுக்கு ளீச னொளித்திருந் தானே.

[1] உரிச்சொனிகண்டு, பண்பு-பா. 7, "அகமலர்ச்சி யாகந்தமாகும்" என்பது அச்சுப்பாடம். * மென்று என்பதும் பாடம். [2], [4] அச்சுப்புத்தகத்திலில்லை. [3] அணைந்தோர் தன்மை 24. † திருத்துவன்றனே என்று அச்சுப்பாடம்.

[1]பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போலே யுணரவல்லார்கட்கு §
நாவி ‡ யணைந்த நடுதறி யாமே.

[2]முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

[3]மாயனு மாகி மலரோ னிறையுமாய்க்
காயநன் னாட்டுக் கருமுத லானவன்
சேய னணியன் றித்திக்குந் தீங்கரும்
பாயமு தாகிநின் றண்ணிக்கின் றானே.

[4]ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
ஆறந்த *மேய மடங்கிடு ஞானுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் சிவானந்த மாமே.

எனவருமிவற்றுள் "ஆவியிருவகை" என்பதற்குச் சிவானந்தம் பொருளாகக் கிடந்ததுங் காண்க. சித்தியாரில்,

[5]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும், திருவருட்பயனில்,

[6]இன்பதனை யெய்துவார்க் கீயு † மவனுருவ
மின்பகன மாதலினா லில்.

எனவும், உண்மைவிளக்கத்தில்,

[7]முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பங் கொடுத்தலிறை யித்தைவினை வித்தன்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா.

எனவும், துகளறுபோதத்தில்,

---

[1]யோகம் 3. § உணர்ந்தறிவாளர்க்கு என்பது அச்சுப்பாடம். ‡ நாவியளைந்த என்றும் பாடம். [2]மோனசமாதி 9. [3]அறிவுதயம் 11. [4]ஆறந்தம் 13, * ஞேயம் என்பது அச்சுப்பாடம். [5]சிவஞான சித்தி சு 11, பா 12. [6]இன்புறுநிலை 3, † அவர்க்குருவம் என்றும் பாடம். [7]உண்மைவிளக்கம் 50

[1]நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத *மருந்துமோ—வோவாப்
பரமசுக முன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன்.

எனவும்,

[2]இருந்தாலு மைம்புல ஞென்றுபெற் றாலுன்னை யின்றியொன்று
மருந்தா துனக்குமிங் கப்படி நாமந்த வின்ப துன்பம்
பொருந்தா தெமையருட் பேரின்ப நாம் புசிக்கின்றவனி
வருந்தாகொ ளென்றனன் புத்தூர் வருமறை ஞானமன்னே.

எனவும் பிறவுஞ் சித்தாந்த வேதாந்த வசனங்களுஞ் சற்சம்பிரதாய முடைய தொல்லாசிரியர் வாய்மொழியு மிவ்வாறு வந்ததூஉமென்க. எனவே அவர் கூறிய வசனங்கட்கெல்லாம் இவ்வாறே பொருள்கோடலின் ஆன்மாநந்தத் திற்கு வசனமின்றென்பதூஉ மாயிற்று. ஆகவே ஆன்மாநந்தமென்பதன் பொருள் ஆன்மாவினது மகிழ்ச்சியென் றாயிற்று; அங்ஙனம் பெறும் மகிழ்ச்சி சிவானந்தாநுபவத்தானன்றிப் பிறிதொன்றாற் கற்பித்தற்கோர் அவகாச மின்மையின். அது சிவனும் ஆன்மாவும் இரண்டறநின்றாலொழியக் கூடா மையின் அத்துவிதசித்தியு முண்டாயிற்று; என்னை? அவர் சாதிருசிய ஐக்கியங் கூறியது நிருபசரிதங் கூடாமையின் ஒருபுடை ஒப்புமையாற் கூறலின் அவரான் நிராகரிக்கப்பட்ட நட்புடையாரிருவரும், காமிகளிருவரும்போல மிகவும் பேதந் தோற்றுவித்தலானும்,

[3]விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட் டுணர்வு கயிற்றினன்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

என்றற்றொடக்கத்து வசனங்கட்கு விரோதமாகலானும். அன்றியும் அவ்வாறே கொள்ளின் வண்ணத்தான் மேகமுங் கூந்தலும், வடிவாற் றுடியும் இடையும், விருப்பு வெறுப்பின்மையின் அவைபோலச் சிவத்தொடு சீவனும் ஐக்கியங் கூட வேண்டுமாத லானும், பிறவாற்றானும் பொருந்தாமையினென்க. இனி ஆண்டுக் கொள்ளப்படும் ஐக்கியம் எவ்வாறு கொள்ளவேண்டுமெனின் அது கூறுதும்; இரௌரவத்தில்,

11. एवं शैवाध्वरं प्राप्य दीक्षामन्त्रसमुद्भवम् ।
न पुनर्जन्मतां याति दीक्षितो मनुजोत्तमः ।
एवं वै देहभिन्नात्मा शिवमेवाधिगच्छति ।

எனவும்,

12. भिन्ने देहे शिवो भूत्वा शिवधर्मैःसमन्वितः ।
शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ॥
जलं सामुद्रमासाद्य नदी ह्यंबुवाहिनी ।
क्षारतोयत्वमायाति प्रभावाद्धि महोदधेः ॥

எனவும்,

[1]துகளறு 74. * 'அறியுமோ' என்றும் பாடம். [2]சம்பிரதாயச்செய்யுள். [3]திருநாவுக்கரசு சுவாமிகள் பொது-தனிக்குறுந்தொகை 10.

13. एवं दीक्षाविशुद्धात्मा देहस्थोऽपि न देहभाक् ।
निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः ॥

देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।
न पुनर्भेदमायाति सरित्तोयमिवांबुधौ ॥

எனவும், சுப்பிரபேதத்தில், (யோகபாதம்-பட. 3. சு. 98 - 100)

14. सालोक्यं चैव सामीप्यं सारूप्यं सायुज्यं † तथा ।
ध्यानाल्लोकं तु संप्राप्य सालोक्यं तद्विधीयते ॥

तद्देवस्य समीपत्वात् सामीप्यमिति चोच्यते ।
तत्तद्रूपं तु*लब्धं स्यात्सारूप्यमिति च स्मृतम् ॥

शिवे संयोजितं रूपं सायुज्यमिति कथ्यते ।
ज्ञानात्सायुज्यमेवं तु तोये तोयं यथा तथा ॥

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

15. रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ।
चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ॥

एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।

எனவும், வாதுளத்தில்,

16. पुरुषश्च शिवे चैव लीयते चायसाग्निवत् ॥

எனவும், சிவஞானபோதத்தில்,

17. अन्यस्सन्व्याप्तितोऽनन्यः कर्ता कर्मानुसारतः । (சூ-2)

எனவும்,

18. शिवेनैक्यं गतस्सिद्धस्तदधीनस्ववृत्तिकः । (சூ-10)

எனவும், திருமந்திரமாலையில்,

[1]சைவஞ் சிவத்துடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் *சிவமன்றிச் சாரាம வீவுதல்
சைவஞ் சிவாநந்தஞ் சாயுச்சிய மாமே.

எனவும், சிவஞானபோதத்தில்,

† सायुज्यकं तथा, * लब्ध्वा तत् } इति मुद्रितकोशे

[1]சாயுச்சியம், 1.

* சிவந்தனை என அச்சுப்பாடம்.

[1]பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணருள்
அத்துவித மாத லருமறைக ளொன்றென்று
தத்துவித மென்றறையு மாங்கு.

எனவும்,

[2]சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

எனவும், தேவாரத்தில்,

[3]விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

எனவும், சிவஞானசித்தியில்,

[4]இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும், திருவருட்பயனில்,

[5]தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலை நீ ஏகமெனக் கொள்.

எனவும் பிறவும் வருமாற்றால் அவர் விகற்பவிருத்திப் பிரமாணத்திற்கு இடமின்மையானும், இவ்வசனப்பிரமாணங்களால் அவ்விகற்பவிருத்திப் பிரமாணத்தாற் கூறியது வாதிக்கப்படுதலானும் இவ்வாறே கொள்க. இவ்வாறு அத்துவித நிலை கொள்ளாக்கால், அசிந்தியவிசுவத்தில் கர்ம நிர்வாணதீக்ஷா படலத்தில்,

19. अनुभूय च तत्सर्वं द्वादशान्तेऽपि तत्क्षणात् ।
निर्गुणे निर्मले शुद्धे वाच्यवाचकवर्जिते ॥

नित्यानन्दमये सूक्ष्मे भावाभावविवर्जिते ।
कैवल्ये चिद्घने शान्ते शिवे तु परिभावयेत् ॥

---

[1, 2]சிவஞானபோ, சூ, 2. பா, 3. சூ, 8. பா, 7. [3]அப்பர் தனிக்குறுந், 10. [4]சிவஞானசித்தி சூ, 11. பா, 12. [5]திருவருட், இன்புறுநிலை 4.

शिष्यात्मानं च तत्रैव लीयमानं विभावयेत् ।
आज्यधारां च जुहुयाज्ज्वालान्तेऽपि परे शिवे ॥

सायुज्यस्य स्थिरत्वाय मूलेन जुहुयात्तदा ।

4. स्वान्यप्रकाशतेजस्वी सच्चिदानन्दलक्षणः ॥

என்றற்றொடக்கத்து வசனங்களாற் கர்ம நிருவாண தீக்ஷாக்கிரம யோசனை கூடாதென்க. இதனாற் கிரியா விரோதமும், பேதவாதி நிராகரணமுங் கூற, "ஆயின் இவ்வாறுதாகுக" என்று உடன்படின் பிரதிஞ்ஞாஹாநி என்னுந் தோல்வித்தானமாம். இன்னும் ஆன்மாவே ஆநந்த வடிவனுயின் சிவனதியல்பு கூறும்வழி,

4. § स्वान्यप्रकाशतेजस्वी सच्चिदानन्दलक्षणः

என்றற்றொடக்கத்தால் கூறுமாறுபோல் கூறவேண்டும். அங்ஙனங் கூறுது ஞானக்கிரியாசத்தி மாத்திரமுடையனெனவே பெத்த முத்திகட்குப் பொதுப் பட இலக்கணங் கூறும்வழி விரோதமும் அபிவியத்தியுங் கூறலானும் ஆன்மாநந்தமென்பது இல்வழக்காம். அது,

20. शिववत्सर्वेकर्तृत्वे सर्वज्ञत्वे च सत्यपि ।
न करोति न जानाति भृशं मुह्यति बालवत् ॥

எனப் பெத்தாவத்தையினியல்புகூறி, முத்தியவத்தையியல்பு கூறும்வழி,

21. यदानुगृह्यते सोऽयं गुरुणा करुणाब्धिना ।
तदास्य पुद्गलस्यैषा ज्ञानशक्तिःप्रसर्पति ॥

देशकालानवच्छिन्ना निरवद्या निरर्गळा ।

என முத்தான்மாக்கள் கிருத்தியம் பண்ணுமையின் கிரியாசத்தி விவகாரம் வேண்டாமையின் சருவஞ்ஞராயிருக்கிற சிவனை அறிதற்குரிய சருவஞ்ஞத்துவ சத்திமாத்திரம் வேண்டும் என ஞானசத்தி விவகாரங்கூறிப் பின்னர்,

22. तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ।
निजानन्दमहाबोधौ यस्मिन्मज्जेद्नाकुलः ॥

என்பதனாற் சிவனையறிந்து சந்தோஷிக்கின்றான்; அந்தச் சந்தோஷமாகிய ஆநந்தமே அவனது எனவும் கூறிவருதலானும், அசிதத்தில்,

23. अथात्मापि विभुर्नित्यो मलबद्धस्वदक्रियः ।

எனவும், சுவாயம்புவத்தில்,

§ அசிந்திய விசுவம்.

24. अथात्मापि मलैर्बद्धः पुनर्मुक्तश्च दीक्षया ।
विज्ञेयः स क्रियावस्थः केवलःसकलोऽकलः ॥

चेतनश्च विभुर्नित्यो गुणहीनोऽक्रियोऽप्रभुः ।

எனவும், மிருகேந்திரத்தில், (பரமோட்ச-சு. 5.)

25. चैतन्यं दृक्क्रियारूपं तदस्त्यात्मनि सर्वदा ।

எனவும், சிவஞானபோதத்தில்,

26. अवस्थापञ्चकस्थः स्यान्मलरुद्धस्वदृक्क्रियः । (சூ-4)

எனவும், சர்வஞானோத்தரத்தில், (பிர-5 சு-16)

27. आत्मा जन्तुः पुमान्देही पुरुषः पुद्गली तथा ।
जीवः कपाली क्षेत्रज्ञःपर्याया एवमादयः ॥

எனவும், காலோத்தரத்தில்,

28. पुरुषः पुद्गलो धीमान्पशुर्ज्ञः पञ्चविंशकः ।
क्षेत्रज्ञो भोगभोक्ता च चेतनो देहिलिङ्गकः ॥

எனவும், அசிந்தியாகமத்தில்,

29. अणुरात्मा च जीवश्च पशुः पुद्गल एव च ।
क्षेत्रज्ञः पुरुषश्चैव पञ्चविंशक इत्यपि ॥

எனவும், சிவஞானசித்தியாரில்,

[1]உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதா யுற்றுச்
செயிருறு மிச்சா ஞானச் செய்திக ளுடைய தாகிப்
பயில்வுறு மின்பத் துன்பப் பலங்களு நுகரும் பார்க்கிற்
றுயிலொடு மஞ்ச வத்தைப் படுமுண்மை துரியா தீதம்.

எனவும்,

[2]ஆயவா ணவம கன்ற வறிவொடு தொழிலே யார்க்கும்.

எனவும்,

[3]விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[4]எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கிடான யாக்கை

[1], [2], [3]சிவஞானசித்தி, சூ, 3. பா, 1. சூ, 1. பா, 41. சூ, 5. பா. 8. [4]சிவப்பிர, சூ, 2. பா, 1.

அண்ணலரு ளானண்ணி யவையவரா யதனு
லலகினிகழ் போகங்க ளருந்து மாற்றுற்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளால்
உண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத
முற்றிடுநற் பசுவருக்க மெனவுரைப்ப ருணர்ந்தோர்.

எனவும் பிறவும் வருதலானும் ஒரிடத்திஞயினும் ஆன்மா ஆநந்தவடிவனெனக் கூறுமையானும் தெளியப்படும்.

இவ்வாற்றுன் இங்ஙனம் கூறும் ஆன்மாநந்தவாதி பெரும்பான்மையும் ஆகமப்பிரமாணமன்றித் தனக்குப் பிறிது உபகரியாதென்பன்; அவ்வாகமப் பிரமாணந்தானும் சிறிதும் கிடைத்திலதென்பதாம். ஆகவே அவன் முற்கூறியனவெல்லாம் சிவாநந்தாநுபவமென்றே பொருள் தந்தனவாயின. அதனுன் அவன் பாடந்திரித்துச் சில கூறியதூஉம் அழிவழக்காயிற்று. பிறவுமன்ன.

நான்காம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்

# ஐந்தாம் பாட்டு

சிற்றின்பம் பேரின்பஞ் சிவகுண மென்றனை நீ
உற்றின் பிரண்டு முணர்ந்திலையோ—சிற்றின்பம்
நாடிற் கருமபல நாதனுருப் பேரின்பம்
நீடிப் படிகம்போ னீ.

எ-து பாட்டு. எ-னின், இது முற்கூறியவாறே இன்றெனினும் சுவாநுபவப்பிரமாணத்தால் ஆன்மாநந்தமுண்டென்பதனை நிராகரிக்கின்றது.

**சிற்றின்பம் பேரின்பம் சிவகுணம் என்றனை நீ**

என்பது, சமாதிக்காலத்து என்னிடத்து ஓரின்பம் நிகழ்தலின், புணர்ச்சிக் காலத்து இருவரிடத்தும் நிகழ்ந்த இன்பம் அவரவரதானாற்போலச் சமாதிக் காலத்து என்னிடத்து நிகழ்ந்த இன்பமும் எனதாதல் வேண்டுமாற்றான் அவ் விரண்டுஞ் சிவகுணமென்றனை நீ.

**உற்று இன்பு இரண்டும் உணர்ந்திலையோ—சிற்றின்பம்**
**நாடின் கருமபலம் நாதன் உரு பேரின்பம்**

என்பது, அவ்விரண்டின்பவியலும் அறிந்தாயல்லை; அஃதறியும்படி கூறுதும். சிற்றின்பத்தை ஆராயின் அது சூக்குமகன்மமான புண்ணியப் பயனும்; சிவகுணமன்று. அதுபோலச் சமாதிக்காலத்து உன்னிடத்தில் தோன்று மின்பமும் உன்னாலநுபவிக்கப்படுதலின் உனக்கு வேறாய்நின்ற சிவரூபமான பேரின்பமாம். அஃது உன் குணமன்று.

**நீடிப் படிகம் போல் நீ**

என்பது, இவ்விரண்டும் சார்ந்து நின்ற நீ சார்ந்ததன் வண்ணமாகும் படிகம் போல்வை ஆதலின் உனது குணம்போலத் தோன்றிற்று. அங்ஙனம் தோன் றினும் அவ்வாறு கொள்ளற்க என்றவாறு. எனவே சுவாநுபவத்தைப் பகுத் தறியமாட்டாமையின் மயங்கியுணர்ந்தனை என்றபடி. என்னை? காமிகத்தில்,

1. **सुखदुःखमोहरूपेण गुणत्रयसमन्विता ।**
**सा विद्या चात्मनो भोग्या बुद्धिसंज्ञा भवेत्तदा ॥**

எனவும், மதங்கத்தில், (பட-6)

2. **तदुद्दलितवीर्येण भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ॥** (சு - 104)

प्रोक्तः पुमानीश्वरच्चोदितो बलाद्भुङ्क्ते गुणान् कर्मविपाकसंभवान् । (சு - 105)

எனவும், சுவாயம்புவத்தில்,

3. कर्मेदं सर्वमेवेदं सुखदुःखात्मकं फलम् ॥

எனவும், சித்தியாரில்,

[1]தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து
நன்மைதீ மையினு மின்பத் துன்பினு நாடிக் காண
முன்னமே யான்மா வின்றன் மும்மலத் தொன்ற தாகிக்
கன்மமு மூலங் காட்டிக் கான்மிய மலமாய் நிற்கும்.

எனவும் பிறவும் வருமாற்றாற் கன்மபலமாதலின் சிற்றின்பம் ஆன்மகுணமன்றென்பது கண்டுகொள்க.

4. भोगोऽस्य वेदना पुंसः सुखदुःखादिलक्षणा ॥

என்பதனால் அறிதலே போகமாதலின் ஆன்மகுணமாம் பிறவெனின், ஈண்டு வேதனை என்றது புத்திநிட்டமான சாத்துவிகாதிகுண பரிணதியில் ஆன்ம சிற்சத்திபதிதலாகலின் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க. என்னை? போககாரிகையில்,

5. साधनैः साध्यते भोगो बुद्धिवृत्त्यनुरञ्जनः । (சு - 4)

सत्वं रजस्तमोयुक्तं विषयेष्वनुरञ्जकम् ।
बुद्धावभ्युदितं पुंसस्तस्मादन्यो निरर्थकः ॥ (சு - 90)

तन्मलावुदितं भोग्यं तस्मिन्योऽस्यानुरञ्जकः । (சு - 91)

भोक्तुर्भोगश्चितेर्व्यक्ति भोग्यच्छायानुरञ्जिता ।
अचित्तचितिसंबन्धाद्भोग्यमाभाति चेतनम् ॥ (சு - 73)

भोग्यद्वारेण पाशानां पशूनां च परस्परम् ।
चेतनाचेतनच्छायानुषङ्गो भासते भृशम् ॥ (சு - 74)

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[2]செறிந்திடு முடலுண் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
அறிந்ததி லழுந்து மொன்று மறிந்திடா தறியுந் தன்மை
பிறிந்தடை யஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
உறுந்தனி யதீத முண்மை யுயிர்க்கென வுணர்த்து மன்றே.

எனவும் வருதலின். இங்ஙன மன்றாயின் துக்கமோகங்களுங் குணமாதல்வேண்டு

[1]சிவஞானசித். சூ. 2, பா. 39. [2]சிவப்பிர, சூ 3. பா 1,

மாகலின் முத்தியின்றாமென்க. சிவயோகத்தால் அவனுக்கு இன்பம் அநுபவமாமாறு, சித்தியாரில்,

[1]இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத
மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு
மலமறுப்போ ரான்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்
தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன் றன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே.

எனவும், இதனாலே அசிந்தியவிசுவத்தில்,

6. आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ।
निस्तत्वे निष्कलीभूते विन्दत्यात्मनि तत्सुखम् ॥
निर्विकल्पमचिन्त्यं च हेतुदृष्टान्तवर्जितम् ।
तत्सुखं परमं ज्ञेयमनाद्यन्तमनौपमम् ।
आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति ॥

எனவும்,

[2]அந்தமொன் றில்லா வாநந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பால்,

எனவும் பிறவும் வருமாற்றால் உணர்க. எனவே சமாதியின்பம் சிவாநந்தமாமென்பது கண்டுகொள்க. இவ்விரண்டையுஞ் சார்ந்து நிற்றலின் தனதெனத் தோன்றுதற்குரிய படிகம்போல்வதோர் தன்மை ஆன்மாவிற்குண்டென்றதனை, சுப்பிரபேதத்தில், (ஞானபாத-பட. 2. சு. 18-19.)

7. श्यामरागादिसम्बन्धात्स्फटिकं तद्वदेव हि ॥
त्यक्त्वैतानि प्रयत्नेन शुद्धस्फटिकवद्भवेत् ।

எனவும், சித்தியாரில்,

[3]பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம்
பலபுலன்க ணிறங்காட்டும் பரிசு பார்த்திட்
டிந்நிறங்க ளென்னிறமன் றென்று தன்ற
னெழினிறங்கண் டருளினாலிந் நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிறமைம் புலனிறங்கள் பொய்யெனமெய் கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னை
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

---
[1] சிவஞானசித் சூ 9. பா 12. [2] திருவாசகம் - கோயிற்திருப்பதிகம் 10. [3] சிவஞானசித் சூ. 8. பா. 37

[1]பன்னிறங் கவரும் தொன்மைப் படிகநீ டொளியும் பன்மை
மன்னிலங் கியல்புந் தந்த வளரொளி போல வையந்
தன்னகம் பயிலு நற்சிற் சடங்களின் றன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞானமென்பர்.

எனவும் பிறவும் வருதலாற் கண்டுகொள்க. எனவே உன்குணமன்றெனினும் உன்குணம் போலத் தோன்றுதலிற் கூறினய். அதனை யீண்டுக் கூறியவாறே கொண்டு, சமாதிக்காலத் தநுபவித்தாலுஞ் சிவாநந்தமாவதே முத்தியென்பது கண்டுகொள்க. * சீவன்முத்தியியல்பே பரமுத்திக்கு மொத்தலின்,

[2]நீக்கமி லதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகும்
ஊக்கமி லிரண்டுங் கூடா தொழியவோர் நிலையி னீடுஞ்
சாக்கிரா தீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே.

**ஐந்தாம் பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

---

[1] சிவப்பிர சு. 7. பா. 1. * இப்பகுதி இப்பாட்டுரை யிறுதியில் எழுதப்பெற்றுள்ளது. பொருத்தம் ஆராயத்தக்கது. [2] சிவப்பிர சு, 4: பா, 3.

திருச்சிற்றம்பலம்

# ஆறும் பாட்டு

பெறுவானும் பேறுநான் பெம்மானுள் ளுண்டேல்
அறிவாயோ வாநந்த மன்றி — யறிவேனுன்
ஆநந்தங் காட்டி யகத்திருப்ப னாகிலநு
மானந்தான் கண்டறியாய் மற்று.

எ-து பாட்டு. எ-னின், இதுவுமது; தன்னிடத்திற்றோன்றுமின்பம் தன்குணமென்றால் சிவசாக்ஷாத்காரங் கிடையாதென மறுக்கின்ற தாகலின்.

**பெறுவானும் பேறும்நான் பெம்மானுள் உண்டேல்**
**அறிவாயோ ஆநந்தம் அன்றி**

என்பது, நின்பாற்றோன்றிய ஆநந்தம் நீயே யாகலான் பெறுவானும் பேறும் நான் என்றே சொல்லுமாற்றால் சிவனெங்குளன் என்னில் உள்ளே உளன் என்பாய். அவனை ஆநந்தாநுபவத்தானன்றி எவ்வாற்றானுளனென்று அறிவதெனில்,

**—அறிவேன் நான்**
**ஆநந்தம் காட்டி அகத்திருப்பன் ஆகில் அநு**
**மானந்தான் கண்டறியாய் மற்று**

என்பது, எனதாநந்தத்தை எனக்கே அநுபவமாக்கி வெளிப்படுத்துமாற்றான் உள்ளே யிருப்பனென நான் அறிவேன் என்றால் அது அநுமான ஞானத்தானறிந்ததன்றிச் சாக்ஷாத்காரமாகக் கண்டாயில்லையாமென்றவாறு. மற்று அசை நிலை. ஈண்டநுமானமென்றாரெனினும் 'ஒன்றெனு முடித்தலான்' ஆகமத்தானும் அறியப்படுமென்க. எனவே, [1]"**அளவை காண்டல் கருதலுரை** * * * **யென்றிம் மூன்றி னடங்கிடுமே**" என்பதனாற் சைவர் கொண்ட பிரமாண மூன்றில் ஆகமத்தானும் அநுமானத்தானும் பெத்தாவத்தையின் அறிந்ததேபோல முத்தியவத்தையினும் அறிந்ததேயன்றிக் கண்கூடாக அறியக் கிடையாமையின் இவனும் பெத்தனென்றே சொல்லப்படுவானென்பதாம். அவ்வாநந்தமே சிவனைப் பிரகாசிப்பித்தலின் அதனானன்றி அறியப்படாது. ஞானசித்தியில்,

1. **शिवप्रद शिवानन्द शिवयोगिन् महेश्वर ।**

எனவும் பிறவும் வருமாற்றானுணர்க. அன்றியும் அசிந்தியவிசுவத்தில்,

[1] சிவஞானசித், அளவை—பா, 7.

2. आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिबर्हणम् ।

எனவும்,

3. आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ।

எனவும் பிறவும் வருதலாற் பாவிக்கப்பட்ட ஆநந்தரூபமான சிவனே சாக்ஷாத்காரமாவனென்ன நிகழ்தலானும் பொருந்தாதாம். அன்றேல் தன் ஆநந்தத்தைப் பாவிக்கச் சர்வ கிலேசபாசங்களைத் தள்ளுமென்றால், சரியை கிரியா யோக முதலிய அநுட்டானம் நிரர்த்தகமாகலானும், ஆன்மாத்தானே பதியாக வேண்டுமாகலானும், பிறவாற்றானும் நியாயவிரோதமும் வசன விரோதமும் இனைத்தென அளவின்றிப் பெருகுமென்க. அவ்வாறன்மை,

आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ।

என்பதனானும் விளங்கியவாறு. இன்னும் ஆநந்தம் பராநந்தம், அபராநந்தம் என இரண்டாக வகுத்து விடயாநந்தமான அபராநந்தத்தை இருபத்தைந்து விதமாகவும், பராநந்தமான சிவாநந்தத்தை மூன்றுவிதமாகவும் பகுத்துக் கூறியதேயன்றி ஆன்மாவிற்கும் ஓராநந்தம் உண்டெனக் கூறாமையானும் சமாதிக்காலத்திற்றோன்றிய இன்பம் சிவாநந்தமேயாம். அவ்வாறு வருவது அசிந்தியவிசுவத்தில் சாமாதிராச படலத்தில்,

4. पञ्चविंशतिरानन्दमपरानन्दजं भवेत् ॥
एवं बुद्ध्यस्व नन्दीश परानन्दमथोच्यते ॥

என வருதலான் உணர்க. ஈண்டுப்பராநந்தமென்றது ஆன்மாநந்தமாம் பிறவெனின்? அதைப்பாவிக்கச் சொல்லாராதலானும், சிவனுக்கு ஆநந்தம் இன்றாகவேண்டுமாதலானும், आनन्दमेव ब्रह्म எனவும், அசிதத்தில்,

5. सच्चिदानन्दरूपी यःसदसव्द्यक्तिवर्जितः ।
स एव सर्वगस्सद्भिर्ब्रह्मशब्देन शब्दितः ।

எனவும், காமிகத்தில்,

6. शिवं वै शाश्वतं नित्यं ज्ञानानन्दस्वरूपकम् ॥

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

7. लक्ष्यलक्षणरूपित्वाच्छिवता च शिवस्य वै ॥

எனவும் இத்தொடக்கத்தவாகிய ஆகமவாக்கியங்கட்கு அப்பிராமாண்யம் நிகழ்தலானும் பொருந்ாதென்க. அன்றியும் அந்தச் சமாதிராசபடலத்தில்,

8. एवं बुद्ध्यस्व नन्दीश परानन्दमथोच्यते ।
त्रिविधं तत्परानन्दं गौरवं ज्ञानयोगजे ॥

एतत्त्रयं परानन्दं मोक्षकारणकं भवेत् ।
आगमश्रवणाज्ज्ञानां गुरोःस्तुतिपरं तथा ॥

गुरोःप्रियवचःश्रावमुपदेशशतं तथा ।
एवं पञ्चकसंयुक्तं श्रवणानन्दजं भवेत् ॥

लिङ्गस्य स्पर्शनं चैव भूत्यादिस्पर्शनं तथा ।
गुरुपादांबुजं स्पृष्ट्वा गुरोःसंस्पर्शनं तथा ॥

ज्ञानदेशस्य संस्पृष्टं स्पर्शपञ्चकमीरितम् ।
दर्शनं शिवलिङ्गस्य शिवयज्ञादिदर्शनम् ॥

*     *     *

योगदृष्ट्यावलोकश्च रूपपञ्चकसंबवम् ॥

गुरुप्रसादभक्ष्यादि गुरुपादाब्जजं जलम् ।
योगामृतरसास्वादस्त्रिविधं रसमुच्यते ॥

योगात्समुत्थितं गन्धं दिव्यगन्धमनूपमम् ।
ब्रह्मेन्द्रादिसुराणां च सर्वेषां जन्मकोटिभिः ॥

अलब्धं मोक्षदं दिव्यं बोधानन्दमवाच्यकम् ।
कदा किञ्चन्न कस्यापि दत्तवान्विदिशःस्थितम् ? ॥

तत्स्मृत्वा जननी व्याळी परमानन्दजं परम् ।
एवं परात्परं ज्ञेयं वर्जनातीतभोजनम् ॥

*ब्रह्मरूपं परं गुह्यं ग्राह्यग्राहकवर्जितम् ।
रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ॥

चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ।
एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ॥

गुरुवक्त्रेण तत्सिद्धिरानन्दस्तु न संशयः ।
आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिवर्हणम् ॥

எனவருமாற்றால் சிவாநந்தமென்றே பெறுதலாலும் கூடாதென்க. அன்றியும், சிவஞானபோதத்தில்,

[1]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்.

எனவும், சித்தியாரில்,

* परात्परतरं इति पाठः

[1] சிவஞானபோ சூ, 11. பா, 2.

[1]கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற் காணூர்
  காணுதார் கன்னிகைதான் காமரதங் காணுள்
மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
  வாயினுற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்
உருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலைகாண் சிவனை
  யுணராதா ருணர்வினு லுணர்வதுகற் பனைகாண்
அருள்பெறினவ் விருவரையு மறிவிறந்தங் கறிவ
  ரறியாரேற் பிறப்பும்விடா தாணவமு மறுதே.

எனவும் வருமாற்றுல் சிவனைக்கண்டறியாதார் தன்னையுங்காணூர் என்றதூஉ மாயிற்று. இதனுனேயன்றே,

[2]நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னுலே தன்னையுங் கண்டு தமைக்காணூர்
என்னு மெனவறிவா ரின்று.

எனவந்ததூஉமென்க. பிறவுமன்ன.

**ஆறும் பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

---

[1] சிவஞாசித் சூ, 8. பா, 36. [2] சிவஞானபோ சூ, 9. பா, 1.

திருச்சிற்றம்பலம்

# ஏழாம் பாட்டு

வேதாக மத்தின் விதித்தமுத்தி தானன்றி
நீதானே யின்பமென்ற னீதியோ—பேதாய்
பெறுவானீ யாநந்தம் பேறென் றுரைத்த
தறியா திருந்தனை நீ யாம்.

எ-து. பாட்டு. எ-னின், இதுவுமது; முற்கூறியவாறே ஆன்மாநந்தங் கொண்டானை இன்னுமொருவாற்றான், வேதாகமப்பிரமாணங்களாற் பெறுவானும் பேறுமுண்டு என்பதற்கு விரோதமாகலின் அதுகூடாதென நிராகரிக்கின்றமையின். அன்றி, முன்னர்க்கூறிய தொல்லாசிரியர் வாய்மொழியும் முதனூல் வழியாகலின் அது வேண்டுமென்பார்க்கெடுத்துக் கூறுகின்றதெனினுமாம்.

**வேதாகமத்தின் விதித்த முத்தி தான் அன்றி**
**நீ தானே இன்பம் என்றல் நீதியோ**

என்பது, வேதாகமங்களிற் பெறுவானும் பேறும் பிறிதாகவே முத்தியிலக்கணங் கூறுதலின் அஃதகற்றி நீதானே தானாய் நின்று நினதின்பங் கண்டறிதல் முத்தியென்பது மரபன்று.

**பேதாய்**

என்பது, முற்காலங்களிலே குருவழிபாடு செய்து உண்மையை யுணராமுன்னம் பெருமை மேற்கொண்டு அறியும்பகுதி யறியாது தானே சில கற்பித்துக் கூறு மறிவில்லாதாய் !

**பெறுவான் நீ ஆநந்தம் பேறு என்று உரைத்தது**
**அறியாது இருந்தனை நீ ஆம்**

என்பது, ஆன்மா பெறுபவன் ஆநந்தம் பேறு என்றுவரும் பிரமாணங்களை யறியாது மறந்தனையாதல் வேண்டும்; அன்றேல் இவ்வாறு கூறா யன்றே என்றவாறு.

"அறுவாய் மறந்தனை" என்று பாடமாயின் "இறுவாய்" என்றாற் போற் கொள்க. முன் அறிஞரோதும் உதாரணம் எடுத்ததனுன் அமையவும், ஈண்டுக் கூறியது பெரும்பான்மையுஞ் சித்தாந்த வேதாந்த வசனங்களும் நியாய விரோதமுங் கண்டு உடன்படக்கிடக்கவும் அதனையறியாது கூறினமையின் பேதாய் என்றார்.

நீயோ என்றது, அறிவானும் அறியப்படுவதும் என இரண்டாய்த் தோன்றவும் இவனுக்கது சிறிதுந் தோன்றாது மடமை மேற்கொண்டமை தோன்றுதற்கு என்க. அவ்வசனங்கள் வருமாறு. காமிகத்தில்,

1. तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ।

எனவும், இரௌரவத்தில்,

2. शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ।
देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ॥

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

3. निस्तत्त्वे निष्कळीभूते विन्दत्यात्मनि तत्सुखम् ।
आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति ॥

एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।

எனவும், சர்வஞானோத்தரத்தில் (பட, 2. சு-61)

4. शिवज्ञानामृतं पीत्वा विचरन्स्वयमेव हि ।

எனவும், சிவதருமோத்தரத்தில்,

5. धर्मरज्ज्वा व्रजेदूर्ध्वं पापरज्ज्वा व्रजत्यधः ।
द्वयं ज्ञानासिना छित्वा विदेहं शान्तिमृच्छति ॥

ज्ञानामृतरसो येन सकृदास्वादितो भवेत् ।
स सर्वकर्माण्युत्सृज्य तत्रैव परिधावति ॥

(இதனுட் புண்ணிய பாவச்சேதம் பண்ணுவது சிவசத்தியாகலினவ்வாறு வெளிப் படக்கிடந்தது.) எனவும், ஞானசித்தியில்,

6. अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ।
शिवानन्दमयं प्रोक्तं चानुभूतिस्थितं भवेत् ॥

எனவும், இன்னும் அதனில் ஞானசாரவிவேகத்தில்,

7. शिवप्रद शिवानन्द शिवयोगिन् महेश्वर ।

எனவும், அதனிற் பரதந்திர விவேகத்தில்,

8. शिवयोगं शिवानन्दं शिवमन्त्रस्वरूपकम् ।

எனவும், சன்மார்க்கசம்பந்தவிவேகத்தில்,

9. शिवानन्दपदप्राप्तं ज्ञानं त्रैलोक्यदुर्लभम् ।

எனவும், வேதாந்தபஞ்சதசிப்பிரகரணத்தில் (யோக-சு-2.)

10. रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा ।

என்வும், ஸ்காந்தபுராண சுவேதாரண்ணிய மான்மியத்தில்,

11. शिवानन्दार्णवे मग्नो न च सस्मार वै जगत् ।
ममज्ज सुचिरं कालं शिवानन्दमहाम्बुधौ ॥

उन्ममज्ज पुनस्तस्माच्छिवानन्दमहाम्बुधेः ।

எனவும், திருமந்திரத்தில்,

[1]அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளி லழிந்திளைப் பாற்றி மறைந்திட்
டருளான வாநந்தத் தாரமு தூட்டி
யருளாலென் னந்தி யகம்புகுந் தானே.

[2]அருளா லமுதப் பெருங்கட லாட்டி
அருளா லடிபுனைந் தார்வமுந் தந்திட்
டருளான வாநந்தத் தாரமு தூட்டி
யருளா லென்னந்தி யகம்புகுந் தானே.

எனவும் வருவன காண்க. இனி, ஆன்மாத் தன்னைக் காணமாட்டான் சிவனையே காண்பானென்பதற்குத் திருமந்திரத்துள்,

[3]அதீதத்து ளாகி யகன்றவ னந்தி
யதீதத்து ளாகி யறிவிலோ னான்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே.

[4]ஆதியு மந்தமு மில்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றுமையின்
நீதிய தாய்நிற்கு நீடிய வப்பரம்
போத முணர்ந்தவர் புண்ணியத் தோர்களே.

எனவும், இன்னும் அதிலேதானே சிவாநந்தத்துக்கு,

[5]பரம்பர மான பதிபாசம் பற்றுப்
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா நந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே.

---

[1], [2], திருவருள்வைப்பு 9, 10. [3], [4], பரலக்ஷணம் 1, 2. [5] முப்பரம் 5.

சத்திய ஞானத் தனிப்பொரு ளாநந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவாநந்தப் பேரொளி
சுத்தப் பிரமந் துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே.

[2]கண்டறி வாரில்லை காயத்தி னந்திபை
யெண்டிசை யோரு மிறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த வளவிலா வாநந்தத்
தொண்டர் முகந்த துறையறி வோமே.

எனவும், சிவஞானபோதத்தில்,

[3]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்.

எனவும், சிவஞானசித்தியில்

[4]ஞானப் பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

எனவும்,

[5]மாறுத சிவானுபவ மருவிக் கொண்டே.

எனவும்,

[6]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும், திருவருட்பயனில்,

[7]இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவ
மின்பகன மாதலினா லில்.

எனவும், துகளறுபோதத்தில்,

[8]பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
உருகியடி யேனருந்த வூட்டுங்—குருவே
அழியாத வின்ப மரனருந்தா னென்னும்
வழியேது சொல்வாய் மகிழ்ந்து.

[9]சர்க்கரைதா னுர்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்கால்—சர்க்கரைக்கின்
றின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ
இன்புருவ மேயிறைக்கு மென்.

[1]சிவசொரூபதரிசனம் 5. [2]மோனசமாதி 7. [3]சிவஞானபோ சூ, 11. பா, 2. [4]சிவஞானசித் சூ, 8. பா, 22. [5]சிவஞானசித் சூ, 11. பா, 1. [6]சிவஞானசித் சூ, 11. பா, 12. [7]திருவருட்-இன்புறுநிலை 3. [8], [9]துகளறு 72, 73,

[1]நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத மருந்துமோ—வோவாப்
பரமசுக முன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன்.

எனவும், பிள்ளையார் தேவாரத்தில்,

[2]தேனினு மினியர் பாலன நீற்றர்
தீங்கரும் பனையர்தந் திருவடி தொழுவார்
ஊனயந் துருக வுவகைக டருவா
ருச்சிமே லுறைபவ ரொன்றலா தூரார்
வானக மிறந்து வையகம் வணங்க
வயங்கொள நிற்பதோர் வடிவினை யுடையார்
ஆனையி னுரிவை போர்த்தவெம் மடிக
ளச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே.

[3]பத்திப்பேர் வித்திட்டே பரந்தவைம் புலன்கள் வாய்ப்
பாலே போகா மேகாவாப் பகையறும் வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய்
மூடா வூடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார் தாமே தானாகச் செயுமவ னுறையுமிடம்
கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலே யோவா தார்மேவுங் கழுமல வளநகரே.

எனவும் வருவன காண்க. இதனுள் ‘சேர்வார் தாமே தானாகச் செயுமவன்’ என்பதனால் தானே தானாய் நிற்பதே முத்தியென்பதை, [4]**உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்தி என மேற்கூறுமாற்றான் விலக்குதலுங் காண்க.**

[5]கனியினுங் கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினுந்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.

என அப்பரும்,

[6]ஊனங் கத்துயிர்ப் பா*யுயிர்க் கெல்லா
மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கத்தவர்க் குமளப் பரிய
வள்ள லையடி யார்கடம் முள்ளத்

[1]துகளறு 74. [2]அச்சிறுபாக்கம் 2. [3]திருக்கழுமலம், திருத்தாளச்சதி 7. [4]முத்திநிச், 8.
[5]திருவிடைமருது; குறுந், 10. [6]திருவலிவலம், 1. * “புலகெல்லா” என்பது அச்சுப்பாடம்.

தேனங் கத்தமு தாகியுள் ளூறுந்
தேசனைத் தினைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.

எனச் சுந்தரரும்,

[1]வன்புலால் வேலு மஞ்சேன்
வளைக்கையார் கடைக்க ணஞ்சேன்
என்பெலா முருக நோக்கி
யம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை யேத்தி
யினிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டா
லம்மநா மஞ்சு மாறே.

எனத்திருவாசகமுடையாரும் கூறுதல் காண்க. இவற்றுள் சிவன்பாலன்பு அவனை அநுபவித்தற்கேதுவாதல் கூறினமையின் சிவன்பா லன்புடையா ரவனைப் பெறாது தன்னைப் பெறுவரென்றால் தண்ணீர் வேட்டான் எண்ணெய் பெற்றாங்கு வேண்டாதது நிகழும் ஆகலின் இதனானும் பொருந்தா தென்க. இதனன்றே யன்றே திருமந்திரமாலையில்,

[2]அன்பு சிவமென் றறியா ரிரண்டென்பர்
அன்பு சிவமென் றறிவார்க் கிரண்டில்லை
யன்பு சிவமென் றறிவா லறிந்தபின்
அன்பே சிவமாய் அறிந்துகொண் டேனே.

[3]அன்பு ளுருகி யழுவ னரற்றுவன்
என்பு முருகி யிராப்பக லேத்துவன்
என்பொன் மணியை யிறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் றிருத்தலு மாமே.

[4]ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
யாறந்த மேய மடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் சிவாநந்த மாமே.

எனவும் பிறவும் வந்ததூஉம் என்க. அன்றி,

[5]பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

எனவும்,

[1] அச்சப்பத்து 3. [2] இது அச்சுப்படியில் இல்லை. [3] அணைந்தோர்தன்மை 24. [4] ஆறந்தம் 13. இப்பாடலில் அச்சுப்பிரதிகளில் பாடபேதமுண்டு. [5] சிவஞானசித் சு, 9. பா, 6.

[1]இன்பி லினிதென்ற லின்றுண்டே லின்புண்டா
மன்பி னிலையே யது.

எனவும் கூறுமாற்று னுமுணர்க. அன்றியும்

[2]தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா வாநந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
றிருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா வுடலிடங் கொண்டா
யானிதற் கிலனோர்கைம் மாறே.

எனவும்,

[3]பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமா யதற்கோர்
வித்துமா யாரூ ராதியாய் வீதி
விடங்கராய் நடங்குலா வினரே.

எனவும்,

[4]ஒளிவந்த வாபொய் மனத்திரு ணீங்கவென் னுள்ளவெள்ளந்
தெளிவந்த வாவந்து தித்தித்த வாசித்தி யாததொரு
களிவந்த வாவன்பு கைவந்த வாகடை சாரவையோ
எளிவந்த வாநங் கழுமல வாணர்த மின்னருளே.

எனவும் பிறவும் வருமாற்றாற் கண்டுகொள்க. இது "சிறப்புடைப் பொருளைத் தானெடுத்து மொழிதல்" என்னுந் தந்திரவுத்தி பற்றிவந்தது. வேதாகமங்களை யெடுத்தோதி அவற்றின் வழியான பிறவுங்கோடலின் என்க.

**ஏழாம் பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்

---

[1]திருவருட்—இன்புறுநிலை 10. [2]திருவாசகம் கோயிற்றிருப்பதிகம் 10. [3]திருவிசைப்பா-பூந்துருத்தி நம்பிகாடவநம்பி-திருவாரூர் 2. [4]திருக்கழுமலமும், 6,

# எட்டாம் பாட்டு

உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்திசிவன்
றன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே—முன்னறிஞர்
ஓது சிவன்றோற்ற மொன்றுமே காண்பரெனும்
போத மறந்தனையிப் போது.

எ-து. பாட்டு. எ-னின், இதுவுமது; அவ்வேதாகமங்களறிதற்குப் புத்தியின்றாயினும் எளிதாய் நாமறிதற்குச் செய்த தொல்லாசிரியர் வாய்மொழியானும் அறியப் படுமென்றலின்.

**உன் உருவம் கண்டிருப்பதோ கெட்டேன் முத்தி**

என்பது, நின்பாற் றோன்றிய இன்பம் நின்குணமாதலாற் குணகுணிகள் வேறன்மையின் அது நீயே யாகலின் நின்னைத்தானே கண்டிருப்பது முத்தியன்று. இனி யெவ்வாறிருப்பது முத்தியெனின்.

**சிவன் தன் உருவம் கண்டிருக்கத் தக்கதே**

என்பது, சிவனுருவத்தைப் பார்த்தநுபவிப்பதே முத்தியாம். அதற்குப் பிரமாணமென்னையெனில்,

**முன் அறிஞர் ஓது சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர் எனும் போதம் மறந்தனை இப்போது**

என்பது, அது மேற்கூறியவாறே வேதாகமங்களில் அறியலாம். அஃதறியப் புத்தியின்றாயினும் நீ யறியுமாறு கூறுதும். எளிதில் நாமறியத் தொல்லாசிரியர், முத்தியிற் பேறாகச் சொல்லப்படுஞ் சிவனது தோற்ற மொன்றையுமே காண்பரெனக் கூறுமதனை இப்போது மறவாது காண்பாயாக என்றவாறு.

கெட்டேன் என்பது பழிப்பின்கட் குறிப்பு. அஃது, உலகாயதனுந் தன்னின் வேறாய் நிகழுமோரின்பம் முத்தியென்பான், அவனினுங் கெட்டவனென்பது கருதி நின்றது; இவனுக் கின்பமே ரூபமாகலின் அநுபவங் கூடாமையினென்க. ஆயின் நையாயிக முத்தி போலக் கொள்ளலாமெனின் அவன் துக்க நிவிருத்தி மாத்திரமன்றிச் சுகங்கூறானாகலின் அவன் போலவும் பற்றா னென்க. எனவே தன்னானந்தம் பெறுதலே முத்தியாயிற் றன்னைப் பெறுதலன்றிச் சிவனைப்பெறுவது முத்தியென்பதை விலக்கலின், அசிந்திய விசுவத்தில்,

1. शाश्वतं तुर्यरहितमानन्दं परमं पदम् ।
ज्ञातृज्ञानज्ञेयत्वैश्च विहीनं तत्परं पदम् ? ॥

एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।

எனவும், சிவஞானபோதத்தில்,

2. स्थित्वा सहेन्द्रियव्याधैस्त्वं न वेत्सीति बोधितः ।
मुक्त्वैतान् गुरुणानन्यो धन्यः प्राप्नोति तत्पदम् ॥ (சூத்-8)

எனவும்,

[1]சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதுருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

எனவும் பிறவும் வரும் மூதனூல்களொடு மாறு கொளக் கூறலெனுங் குற்றந் தங்கிற்றென்க. அவ்வாறு மாறுகொள்ளாது, சிவன் றன்னுருவங் கண்டிருப்பதே முத்தி யென்பதனை,

[2]மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்திநி பாத
மேவுதலு ஞானம்விளைந் தோர்குருவி னருளாற்
புக்கனுட்டித் தேகிட்டை புரிந்து ளோர்கள்
*பூதலத்தே புகழ்சிவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டிற்
றமனியத்திற் சமபுத்தி பண்ணிச்சங் கரனே
டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே
யுடைந்தையாய்ச் சிவன்றேற்ற மொன்றுமே காண்பர்.

என்பதனுணறிக. இதனுனேயன்றே,

3. एवं दीक्षाविशुद्धात्मा देहस्थोऽपि न देहभाक् ।
निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः ॥

देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।

எனவந்தவாறே,

---

1, 2சிவஞானசித், சு, 8, பா, 22, 29. *'பூதலத்திற்புகழ்' எனவும் பாடம்.

[1]செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்ல
னற்குளிகை போலவர னாகுமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு
மக்குளிகை தானும்பொன் னாகா தாகும்
உம்பர்பிரா னற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே.

[2]பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வைந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞா துருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞான
மாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

எனவும் பிறவும் வருவதூஉம் காண்க. இங்ஙனம் வந்தவற்றுள் ஒன்றுமே எனவும், சிவமே எனவும் ஏகாரத்தானும், ஒன்றினுக்கும் என முற்றும்மையானும், **एकधीः, एकरसताम्** என ஏக பதத்தானும் ஆன்மாநந்த மில்லையெனவும் சிவாநந்த முண்டெனவும் விதித்ததூஉங் கண்டுகொள்க. இங்ஙனம் **உன்னுருவங் கண்டிருப்பதோ** எனும் இப்பாட்டை [3]**வேதாகமத்தின்** என்னும் பாட்டின்பின்வைத்தது, அவைக ளளவின்றிப் பெருகிப் பரம்பிக் கிடக்குமாகலிற் சமுத்திரத்திற் கிடக்கும் மணியை அதன்கட் பயிற்சியுடையானொருவனே யறிந்தெடுத்துத் தரவேண்டுமாறுபோல, அவ்வேதாகமங்களின் பொருளை நீ அறிய மாட்டாயாயினும் யாவரும் எளிதினுணரத் தொல்லாசிரியர் அவற்றை யெடுத்துக் கோத்துச்செய்த இவைகளிலறியலாமன்றே; ஈண்டுமறியும் அறிவில்லாதாய்; நீயா யறியமாட்டா யாயினும் யாமறிந்து கூறியதையாயினுங் கொள்க, என்று அவனை இழித்துச் சொல்லுதற்கு என்க.

**எட்டாம் பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

[1], [2]சிவஞானசித் சு, 11. பா, 10, 2. [3]முத்திநிச் பா, 7.

உ
திருச்சிற்றம்பலம்

# ஒன்பதாம் பாட்டு

ஈசனையே காண வெனத்தவமுன் செய்ததெலா
மோசமாய் வந்து முடிந்ததே — பாச
வினையகன்ற போதும் விமலனே நின்று
டனையறியா மூடர்க்குத் தான்.

எ-து பாட்டு. எ-னின், இதுவுமது; முற்கூறியவாறே கூறும் ஆன்மாநந்தவாதியைச் சாதன சாத்திய விரோதம் நிகழ்ந்தமை காட்டி நிராகரிக்கின்றமையின்.

**விமலனே பாசவினை அகன்ற போதும்**
**நின் தாள்தனை அறியா மூடர்க்குத் தான்**

என்பது, பரமசிவனே ! மும்மலமகன்றபோதும் நின்னை யறியாமையின் மற்றைப் பெத்தரினுமுயர்ந்த மூடர்க்கு.

**ஈசனையே காண என தவம் முன் செய்தது எலாம்**
**மோசமாய் வந்து முடிந்ததே**

என்பது, ஈசனுயுள்ள நின்னையே காணவேண்டும் காணவேண்டு மென்றே முன்னர்த் தவஞ் செய்ததெல்லாம் இப்பொழுது மோசமாய் வந்து முடிந்ததா மென்றவாறு.

**ஈசனையே** என்ற ஏகாரம் பிரிநிலை; முப்பொருளினுள்ளும் முத்தியிற் கண்டநுப வித்தற்கு விடயமாதல் சிவனிடத்த தாகலின். வேண்டும் என்பது அவாய்நிலையான் வந்தது. அன்றி, **என** என்பதை இடைச்சொல்லாக்கிக் காணும் படியெனக் கிரியாவிசேடணமாக்கினுமாம்; [1]"பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்கு" என்றாற்போல. அன்றி, **என** என்பதற்கு என்பதைக்கருதி எனப்பொரு ளுரைப்பினுமமையும். **காண** என்பது [2]"சுடச் சுடரும் பொன் போல்" என்றாற்போல *இருமுறைப்பட நின்றது அதன் விருப்பமிகுதி தோன்றற்கு. ஈண்டு **மோசம்** என்றது பயனின்மை குறித்து நின்றது ; என்னை ? முத்தியிற் சிவனைக் காணுமையின், அதனை யுத்தேசித்துச் செய்தவெல்லாம் பயன் றராமையின். எனவே, [3]"கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்ந்த"

---

[1] திருமுருகாற்றுப்படை திருப்பரங். வரி, 45. கலங்க என்பதற்குக், கலங்கும்படி என உரை கூறுவ நச்சினார்க்கினியர். [2] குறள், தவம், 7. *இருமுறைப்பட - அடுக்குத்தொடர்பட. [3] சிவஞானசித் பரபக்கம், பாயிரம் 8.

வாருயிற்று. ஆகவே தான்பெற்ற சாதனங்கள் சாத்தியத்தை உண்டாக்க மாட்டாமையின், முன்னெடு பின் மலைவுமுண்டாயிற்றென்பதாம்.

வினையகன்றபோதும் என்புழி நின்ற உம்மை பாசமகலாத முன்னமன்றே அநுமாணுதிகளாற் சிவன் அறியப்படுவன், இப்போதும் அறியேன் என்றல் அதிசயமாகலின் அவ்வறியாமையின் மிகுதி தோன்ற நிற்றலின் இழிவு சிறப்பும்மை. இதனுனே முத்தனுனபின்பு பெத்தரினும் அதிக மூடம் பெற்றமையான், இவர்போல முத்தனுதலினும் பழைய பெத்த னுதலே சிறப்புடைத் தென்பதூஉந் தானே போந்தது.

**விமலனே !** என்ற விளி உலகியல்போலப் பிறர் தடுமாற்றங்கருதி இரங்கினமை குறித்து நின்றது. **நின்றுடனே** என்றது நின்னை என்னும் பொருட்டு ;

> [1]முடிகொண்ட மத்தமு முக்கண்ணி னேக்கு முறுவலிப்புந்
> துடிகொண்ட கையுந் துதைந்தவெண் ணீறுஞ் சுரிகுழலாள்
> படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென் பாவிநெஞ்சிற்
> குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே.

என்றாற்போல. முன்னுளிற் றவமாவது புறச்சமயங்களிற் சென்றும் அகச் சமயங்களில் வந்துங் கற்பனகற்றநுட்டித்தல். அவையனைத்தும் அவாந்தரப் பிரயோசனம், மகாப்பிரயோசனமாகிய இரண்டையும் உடையனவாகலின் லோகாந்தரப்பிராத்தி முதலிய அவாந்தரப் பிரயோசனமானபின்பு சித்தாந் தத்திற் கூறும் பரம முத்தி மகாப்பிரயோசனமாக வேண்டுதலின் அது ஞான மின்றி நிகழாமையின் அவைமுழுவதும் ஞானேற்பத்தி நிமித்தமாம். என்னை ? காமிகத்தில்,

> 1. **सा मुक्तिस्तत्तु निर्वाणं तदेव परमं पदम् ।**
> **मृग्यते ऋषिभिः सर्वैर्योगिभिश्च द्विजोत्तमाः ॥**
>
> **एतद्रूपस्य लाभार्थं तप्यते हि तपो महत् ।**
> **व्रतानि दानयज्ञाश्च नियमाश्चाप्यनेकशः ॥**
>
> **वर्णाश्रमप्रवृत्ताश्च नित्यनैमित्तिका अपि ।**
> **अभिव्यक्तात्मनि फलानि पर्यवस्यन्ति चात्र वै ॥ ?**

எனவும், தேவிகாலோத்தரத்தில்,

> 2. **ज्ञानोत्पत्तिनिमित्तं तु क्रियाचर्याः प्रकीर्तिताः ।**

எனவும், சுப்பிரபேதத்தில்,

> 3. **योगाज्ज्ञानं समादाय ज्ञानतत्त्वं सदाभ्यसेत् ।**

எனவும், சிவப்பிரகாசத்தில்,

---
[1]அப்பர், கோயில், திருவிருத்தம் 7.

[1]கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும்.

எனவும், சித்தியாரில்,

[2]புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

எனவும், வருதலான் என்க.

அற்றேல், ஞானமாவது தன்னையறித லாகலானும், சிவனை யூகத்தானன்றி அநுபவத்தாலறியலாகாமையானும் யாம் முன்னஞ் செய்த தவம் பயன்பட நிகழ்தலின் சாதன சாத்திய விரோதங் கூறுவது பொருந்தாது. என்னை? ஐக்கியவியலுள்,

[3]தன்னைத்தான் பார்த்தலே தன்னுளிலங் கும்பிரமந்
தன்னையுந்தா னேக்குதலா குந்தரையில்—வன்னிமரங்
கண்டேனென்பார் தன்புறங்கண் டுட்காணு ராவியினுள்
அண்டனுமிவ் வன்னியனை யான்.

[4]உடலுயிர் கூடி யொருவ னவனுன்
உடல்கண் டதனுளுயிர் காணுன்—படர்வழியிற்
கண்டே னொருவனை யென்பா னவனைப்போற்
கண்டானுட் பேருயிர்கண் டான்.

எனவும் வருதலின். இவ்வாறு தன்னையறிதலே அநுபவமாதல் ஆன்மாநந்த மென்பது கண்டு,

[5]மூளைப்பின்றி யான்மாத்தன் சத்தியின்முற் றின்பந்
திளைத்திருக்கை முத்தியெனத் தேறு.

எனவும்,

[6]பரிபாகத் தின்மலத்தைப் பாற்றியுயிர்ச் சத்திக்
கருளா லிலக்குவனின் பார்ந்து.

[7]அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப னுதிமுத்தன்
அந்தச் சிவனெடிரண் டற்று.

எனவும்,

---

[1]சிவப்பிர, பாயிரம், 10. [2]சிவஞானசித் சு. 8. பா, 11. [3], [4]ஐக்கிய, பா, 11. 12. [5]மறைஞா-சங்கற்ப-சைவசங்கற்பம் 22. [6], [7]பரமோப 6. 7.

[1]அமல னனாதி யநந்தசம வாயன்
சமலர்க்கு முந்தயிக்கி யன்றான்—றமலத்தைத்
தீர்ப்பாரா யிந்தமிலே தன்னைத் தெரிசித்தார்
பார்ப்பாரே தம்முணர்வின் பம்.

எனவும் சிவனை யநுபவித்தறிதல் கூடாமையிற் சிவாநந்தாநுபவமாவது கூடாதென்பது கண்டு,

[2]கருத்தின் களிப்பினைக் கண்காணு காணு
தொருத்தன்பே ரின்பமுயி ரும்.

எனவும் பிறவுங் கூறிய வாற்றாற் சாதனங்களானிகழும் பயனடைதலின் குற்றமின்றாம் பிறவெனின் அது கூறுதும். முற்கூறியவாறே தன்னைத் தானறிதல் கிரியாவிரோதமாதலிற் கூடாதென நியாயத்தினானும், அவ்வாறாயின் மாயாவாதி நிராகரணமே நிராகரணமாகத் தள்ளப்படுதலான் அது சம்பிரதாயமன்றென வசனப் பிரமாணத்தானு மொப்பித்தலானும், சிவனை அநுபவித்தறிதல் ஆமென மேற்கூறுமாற்றான் கொள்ளக்கிடத்தலானும் அது பொருந்தாது. என்னெனில் சிவனை அநுபவித்தறிந்தாலன்றித் தன்னை யறிதல் கூடாதென்பது நியாய மாதலின் சிவனை யறிந்தாரே தன்னையறிந்தார்; அவனையறியார் தன்னையும் அறியாரென்பது பெறப்படுதலின் என்க. அது,

[3]நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்
என்னு மெனவறிவா ரின்று.

எனவும்,

[4]கண்டிடுங்கண் டனைக்காணு கரணங் காணு
கரணங்க டமைக்காணு வுயிருங் காணு
வுண்டியம ருயிர்தானுந் தன்னைக் காணு
துயிர்க்குயிரா மொருவனையுங் காணு தாகும்
கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங் காட்டிக்
கண்ணாகிக் கரணங்கள் காணும னிற்பன்
கொண்டரனை யுளத்திற்கண் டடிகூடிற் பாசங்
கூடாது கூடிடினுங் குறித்தடியி னிறுத்தே.

எனவும், சிவதருமோத்தரத்தில்,

4. शिवमात्मनि पश्यन्ति प्रतिमासु न योगिनः ।

எனவும், வேறிடத்தில்,

---

[1]ஐக்கியவியல் 10. [2]பரமேய 18. [3]சிவஞானபோ சூ, 9. பா, 1. [4]சிவஞானசித் சூ, 9. பா, 5.

5. चक्षुरग्रे स्फुरन्नित्यं स्फुरते यो मणिर्यथा।
तं दृष्ट्वा व्यापकं शम्भुं भवबन्धाद्विमुच्यते॥

எனவும்,

[1]சிவனை யவன் றிருவடிஞா னத்தாற் சேரச்
செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்
அவனையனு காவென்று மாத லானு
மவனடியவ் வொளிஞான மாத லானும்
இவனுமியான் றுவக்குதிர மிறைச்சி மேதை
யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ
அவமகல வெனையறியே னெனுமைய மகல
வடிகாட்டி யான்மாவைக் காட்ட லானும்.

எனவும்,

[2]கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற் காணார்
காணுதார் கன்னிகைதான் காமரதங் காணுள்
மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினுற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்
உருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலைகாண் சிவனை
யுணராதா ருணர்வினு லுணர்வதுகற் பனைகாண்
அருள்பெறினவ் விருவரையு மறிவிறந்தங் கறிவ
ரறியாரேற் பிறப்பும்விடா தாணவமு மருதே.

எனவும் வருமாற்றுற் சிவாநுபவத்தானன்றித் தன்னையறியப்படாமை கண்டு கொள்க. சிவஞானபோதத்தில்,

6. चिद्दृशात्मनि दृष्ट्वेशं त्यक्त्वा वृत्तिं मरीचिकाम्। (சூ-9)

எனவும், சித்தாந்த ரகசியத்தில்,

7. परमेशार्ककिरणप्रकाशीकृतचक्षुषा।
मुक्तात्मनाऽक्षिवत् शम्भुर्ज्ञायते शिवतेजसा॥

எனவும், மோக்ஷகாரிகையில்,

8. शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा।
शिवं शक्त्यादिभिः सार्धं पश्यत्यात्मा गतावृतिः॥ (சு-111)

எனவும் வருவனவற்றுன் அறிக. இன்னும் பட்டினத்துப்பிள்ளை,

[3]மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்
* * * * *
மங்கை பங்க கங்கைநா யகநின்

[1]சிவஞானசித், சூ, 9. பா, 4. [2]சிவஞானசித் சூ, 8. பா, 36. [3]திருவிடைமருதூர்-மும்மணி பா, 13, இச்செய்யுள் முழுதும் இந்நூல் 49ம் பக்கம் காண்க,

தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே
நின்னைக் காணு மாந்தர்
தன்னையுங் காணுத் தன்மை யோரே.

என்பதனு மறிக.

இதனானேயன்றே காளத்தி மறைஞானபண்டாரம் பதிபசுபாசக் கட்டளையுள் உடன்பட்டுச் சிவனைக் கண்டாலன்றி யான்மாவுங் காணப்படா தென்றதூஉம் என்க. இதனானே குரவரும் மாணுக்கருஞ் சம்பிரதாயத்தா ரொருவராகலின் முன்னர்க் காணப்படாதென்றவன் நாம் கூறியவழிக் காணப்படுமென்றலின் இது பிரதிஞ்ஞாசந்நியாச மென்னுந் தோல்வித்தான மாம். எனவே சிவாநந்தாநுபவமாதலே சித்தாந்தமுத்தி யென்பதூஉம், ஆன்மா சிவாநுபவ முகத்தானன்றி யறியப்படாமையி னான்மாநந்தமென்றது முயற்கோடு போல இல்வழக்கென்பதூஉம் காளத்தி மறைஞானபண்டாரத் திற்குங் கருத்தாயிற்று. ஆகவே அவ்வான்மாநந்தவாதம்முற்றும் மேற்கொண் டிருந்தாராகலின் இது அவசித்தாந்தமென்னுந் தோல்வித்தானமுமாம்; தன்னையறியப்பெருமை யுடன்படவே ஆன்மாநந்த மின்றெனவருதலின் என்க. இஃதன்றி முன்னர் ஞானமென்றது தன்னை யநுபவித்தலே யென்றதூஉம் இதுபோல அறியாது கூறியதேயாம். என்னெனில் ஞானம் பரஞானமும் அபரஞானமுமென விருவகைப்படும். அவற்றுள் அபரஞானஞ் சிவாகம ஞானம். பரஞானஞ் சிவனையறியுஞ் சிவஞான மென்றே வருதலானும், இவ்விரண்டுமன்றித் தன்னையநுபவிக்கும் ஞானமொன் றின்மையானும் பிரமாணமுடையதன்றாகலான் என்க. அது காமிகத்தில்,

9. आदावभूद्द्विधा ज्ञानमधिकारविभेदकम् ।
परापरविभागेन परिपक्वार्थदर्शकम् ॥

शिवप्रकाशकं ज्ञानं शिवज्ञानं परं स्मृतम् ।
वेदाद्यपरविज्ञानं पशुपाशार्थदर्शकम् ॥

எனவும்,

1* * * உயர்ஞான மிரண்டா மாறு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே.

எனவும் வருமாற்றானுணர்க. இதனானேயன்றே

[1] சிவப்பிர, பாயிரம், 10,

[1]சிவனையவன் றிருவடிஞா னத்தாற் சேரச் செப்புவது.

என்றதூஉம் என்க. எனவே,

2. ज्ञानोत्पत्तिनिमित्तं तु क्रियाचर्याः प्रकीर्तिताः।
3. योगाज्ज्ञानं समादाय ज्ञानतत्त्वं सदाभ्यसेत्॥

என்பதற்குச் சிவனையறியுஞ் சிவஞானமென்றே பொருளாயிற்று. ஆகவே அது பெருமையின் ஈண்டு முற்செய்தவம் பயன்படாமையின் மோசமாய் வந்து முடிந்ததென்றது. எனவே அவர் அவ்வாறுகூறுதல் பொருந்தாமையின்

இதிற் சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

என்றவாறே சிவனை யநுபவித்தறிதலே முத்தி யென்பதாம். இதனுனேயன்றே

10. स्थित्वा सहेन्द्रियव्याधैस्त्वां न वेत्सीति बोधितः।
मुक्त्वैतान् गुरुणानन्यो धन्यः प्राप्नोति तत्पदम्॥

எனவும்,

11. एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः।
निस्तत्त्वे निष्कलीभूते विन्दत्यात्मनि तत्सुखम्॥

आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति।

எனவும் பிறவும் வருவனவாமென்க. பிறவுமன்ன.

ஒன்பதாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

[1]சிவஞானசித் சு, 9. பா, 4. [2]சிவஞானசித் சு, 8. பா, 11.

திருச்சிற்றம்பலம்

# பத்தாம் பாட்டு

*தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதா நந்தனைநீ*
*யானென் குணமென் னிடும்பென்றே—வூனநீ*
*ஞானகுணம் பெற்றின்னு நானு னென நவிலும்*
*ஈனகுணம் போனதிலை யே.*

ஏ-து பாட்டு. எ-னின், இதுவுமது; முற்கூறியவாறே ஆன்மாநந்த முண்டென்பானைக் குறிவழியுபாய நிலையால் நிராகரிக்கின்றமையின்.

**தான் அன்றி நிற்க எழும் சச்சிதாநந்தனை நீ**
**யான் என் குணம் என் இடும்பு என்றே**

என்பது, தன்னியல்பு தோன்றாது மழுங்க அவிழ்ச்சி கொடுத்துக் குழைந் திருக்கப் பெற்றாற் பெறப்படுஞ் சச்சிதாநந்த ரூபனாதலால் அவ்வுபாய நிலையானே சாட்சாத்காரம் பெற்றுழித் தான் முழுதுந் தோன்றாது அவனே புலப்படத் தோன்றக் கண்டிருந்தும் என்ன காரணத்தால் அவனை யான் என்றும் என் குணமென்றுங் கூறும் முரண் உண்டானது?

ஊன நீ
**ஞானகுணம் பெற்று இன்னும் நான்நான் என நவிலும்**
**ஈனகுணம் போனது இலையே**

என்பது, அநாதியே பெத்தனான நீ சிவகருணையான் ஒரோவழிச் சிவஞானம் பெற்றபின்பும் முன்போல நான்நானென நவிலும் முரணுண்டா யிருத்தலான் நீ ஞானம் பெற்றதும் இல்லை; அதனானே மலபெந்தம் நிவர்த்தியானதும் இல்லையாதல் வேண்டு மென்றவாறு.

**நவிலும் ஈனகுணம்** என்பது நவிலுதற்குக்காரணமான ஈனகுண மெனக் காரணப் பொருளில்வந்த பெயரெச்சம். அங்ஙனங் கூறும் சமாதி யுபாயமாவது சிவஞானசித்தியாரில்,

[1]அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்

[1]சிவஞானசித் சூ, 8. பா, 30.

பிறியாத சிவன்றனே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானுய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னுயே.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[1]தத்துவ மான வற்றின் றன்மைக ளுணருங் காலை
உய்த்தறிந் திடவு திப்ப தொளிவளர் ஞான மாகும்
அத்தன்மை யறியு மாறு மகன்றிட வதுவா யான்மா
சுத்தமாஞ் சுத்த ஞானத் தொருமுத ரேன்று மன்றே.

எனவும், திருவுந்தியாரில்,

[2]அவிழ விருக்கு மறிவுட னின்றவர்க்
கவிழுமிவ் வல்லலென் றுந்தீபற
அன்றி யவிழாதென் றுந்தீபற.

[3]பெண்டிர் பிடிபோல வாண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணுதார் காணுரென் றுந்தீபற.

எனவும், திருக்களிற்றுப்படியில்,

[4]அறிவறிவாய் நிற்கி லறிவுபல வாமென்
றறிவி னறிவவிழ்த்துக் கொண்ட—வறிவினராய்
வாழ்ந்திருப்பர் *நீத்தவர்கண் மானுடரின் மாணவகா
தாழ்ந்தமணி நாவேபோற் ருன்.

எனவும், சிவாநந்தமாலையில்,

[5]உன்னை யழித்தெழுந்த வுண்மைக்கு நீயார்மற்
றன்னியமி லுண்மை யதற்கதுவா—ரென்னுமிலே
தீரத் தெளிந்து சிவமுத்தி முற்றவிளைந்
தாரைப் பொருளென் றறி.

[6]தன்னிற் றனியருளாற் சங்கரனைப் பெற்றுனு
முன்னிலுனை யொன்றவொணு துற்றுக்கே—ளுன்னையுநற்
காலங்க ளெட்டாத கள்வனையு மெண்ணிலிரு
காலம்போ லுன்னிலே காண்.

[7]கட்டறுமா நந்தக் கரைபுரண்டு மேன்மேலு
மட்டறவே நிட்டைவர மாய்ந்துவிடுஞ்—சிட்டாய
தெய்வச் சிவாநந்தச் சின்மயமா முண்மையிலே
யைவர்க்குச் சாதலிடும் பை.

---

[1]சிவப்பிர சு, 8. பா, 3. [2], [3]திருவுந்தி பா, 27, 35. [4]திருக்களிற்றுப் பா, 32. *நீத்தோர்கள் என்றும் பாடம். [5], [6], [7]சிவானந்தமாலை பா, 173, 174, 175.

எனவும், பிறவும் வருமாற்றானுணர்க. அவ்வுபாயத்தாற் சாட்சாத்காரம் பெற்றுழிநிகழ்வது, சிவாநந்தமாலையில்,

[1]மூடிப்பார் மும்மலமே முன்புபோ லென்னையுநீ
தேடிப்பார் காணாய் சிவனறிய—வோடிப்போ
வெட்டரிய மெய்ஞ்ஞான வின்பபரி பூரணத்தி
விட்டையிலே நட்டமா னேன்.

[2]இந்தா வெனதுருவ மிப்படிகேண் மாணவகா
வந்தேறி யெல்லாம் வகுத்தகற்றி—நந்தாத
ஞானத்து ஞாதுரு தயமான நற்பரத்தி
னுனற்ற பூரணமே நான்.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[3]பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற
சிற்பர மதனு ளுள்ளச் செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

எனவும், வினாவெண்பாவில்,

[4]சிற்றறிவு முற்சிதையிற் சேர்வாரின் றுஞ்சிறிது
மற்றதனி னிற்கிலருண் மன்னுவார்—துற்றமுகின்
மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா
வென்கொண்டு காண்பே னியான்.

என்றதன்றி,

[5]காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை
காண்பார்க ணன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்.

எனவும், உண்மைநெறிவிளக்கத்தில்,

[6]பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறான் றின்றித்
தரைமுதலிற் போகாது நிலையினினில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமாநந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தரிசனமாய்ச் செப்பு நூலே.

எனவும், பிறவும் வந்தவாறே திருவாசகத்தில்,

---

[1], [2]சிவானந்தமாலை பா, 221, 228. [3]சிவப்பிர சூ, 10, பா, 1. [4], [5]வினாவெண்பா பா, 6, 11.
[6]உண்மைநெறி பா, 4.

> [1]வான்கெட்டு மாருத மாய்ந்தழனீர் மண்கெடினுந்
> தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
> கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டெ னுள்ளமும்போய்
> நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

எனவும் பிறவும் வருமாற்றானுணர்க. இதனானேயன்றே அசிந்தியவிசுவத்தில்,

1. शाश्वतं तुर्यरहितमानन्दं परमं पदम्।
ज्ञातृज्ञानज्ञेयत्वैश्च विहीनं तत्परं पदम्॥

என வருவதூஉமென்க. பிறவுமன்ன. அங்ஙனஞ் சிவமொன்றே புலப்படத் தோன்றுவது இரௌரவத்தில்,

2. निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः।

எனவும் பிறவும் வருவதான் உணர்க. எனவே இவ்வாறுபடும் உபாயநிலையின் உண்மையைப் பெற்றிருந்தால் இவ்வாறே கூறுதலன்றிப் பிறவாறு கூறார். அவ்வாறு கூறுங்காரியத்தால் ஓர் காரணங் கற்பிக்கவேண்டும். அது யாதெனில் அங்ஙனம் யானெனவும் எனதுகுண மெனவுங் கூறும் முரணுகிய ஈனகுணத்திற்கு மூலம் மலபந்தமாகலின் அது போகவில்லையென்றதாம். உயர்ந்த வீடு பெற்றார் இங்ஙனம் யான் எனதெனக் கூறாரென்பது திருவள்ளுவரும்,

> [2]யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
> குயர்ந்த வுலகம் புகும்.

எனக் கூறுதலின், இவனது இழிவு தோன்ற ஈனகுணம் போனதிலையே என்றது. பிறவுமன்ன.

**பத்தாம் பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

---

[1] திருவாசகம், திருத்தெள்ளேணம் பா, 18. [2] குறள், துறவு 6.

திருச்சிற்றம்பலம்

# பதினொன்றும் பாட்டு

தோன்றுபர மாநந்தச் சோதியன்றி நின்னறிவிற்
றோன்றுசுக முண்டென்றாய் சுத்தப்பொய்—தோன்றுமின்பம்
ஈச னுயிரறிவ தீதன்றி வேறுண்டேற்
பாசமலா தேதுண்டு பார்.

ஈ-து பாட்டு. ஈ-னின், இதுவுமது; சுவாநுபவப் பிரமாண சித்த மான ஆநந்தத்தை இருவகைப்படவுங் கருதுமாற்றால் ஆன்மாநந்த முண் டென்பதனை நிராகரித்தலின்.

**தோன்று பரமாநந்தச் சோதி அன்றி நின் அறிவில்**
**தோன்று சுகம் உண்டு என்றாய் சுத்தப்பொய்**

என்பது, சமாதிக்காலத்து என்னிடத்திற் றோன்றும் இன்பமொன்றேயென் றவினன்றே அது சிவாநந்தமாகலின் ஆன்மாவிற்கு ஆநந்தமின்றாயிற்று. அற்றன்று; எனதிடத்திற் றோன்றுஞ் சிவாநந்தச் சோதியேயன்றி அதனோடு ஆன்மசுகங்கூட இருவகைப்பட்டுத் தோன்றிற்று. அதனாற் சிவனுக்கு ஆநந்த முண்டாமாறுபோல ஆன்மாவிற்கும் ஆநந்தமுண்டாகவேண்டுமென்றால் அவ்வாநந்தம் பாலினதின்பமுங் காமவின்பமுமென்னு மிருபொருளிரதமும் அநுபவிப்பார்க்கு வேறுபடத் தோன்றினாற்போல் இருவராநந்தமும் வேறுபடத் தோன்றாமையிற் சுத்தப்பொய்யேயாம். அவ்வாறு தோன்றாமையின் ஒன்றே யென்னின்,

**தோன்றும் இன்பம்**
**ஈசன் உயிர் அறிவது ஈது அன்றி வேறு உண்டேல்**
**பாசம் அலாது ஏது உண்டு பார்**

என்பது, அங்ஙனந் தோன்றிய இன்பமே ஆன்மாவிற்குத் தனதநுபவத் தான் அகமகிழ்ச்சியைச் செனிப்பிக்குஞ்சிவம். அதனை யறிவதே உயிர். இவ்வாறறிவதொன்றும் அறியப்படுவதொன்றுமாகிய ஆன்மாவுஞ் சிவனுமாகிய இரண்டுமன்றி வேறொன்றுமில்லையன்றே. அன்றி உண்டெனில் ஒரோவழித் திருவருள் சாரச்செல்வுழித் தெரிசனமாகும் மலமன்றி யின்மையின் அஃது ஈண்டைக்கு வேண்டியதோ? பாலுந் தேனுங் கூடக் கலந்துழி வேறுபட்டுத் தோன்றாததுபோலச் சிவாநந்தமும் ஆன்மாநந்தமுங் கூட அநுபவிக்கப்படு மெனின் தன்னின்பந்தோன்றல் கிரியாவிரோத மாகலானும், ஆன்மாவால் சிவாநந்தம் அநுபவிக்கப் படாதென்று கூறுவையாயின் உனக்கு அவசித்

தாந்தமாம். அன்றியும் முத்தியிற் பேதவாதமுமாம். ஆகலிற் பிறிந்து நின்று மியும் அவ்வின்பம் தோன்றவேண்டும். அஃதின்மையின் அத்துவிதமுங் கொள்ளவேண்டுமென்றாற் கற்பித்தல் கூடாமையில் அங்ஙனங் கூறியதனாற் பயனின்றாம். ஆகலான் அதனைத் தேர்ந்துகொள்வாயாக என்றவாறு. பிறர் கூறியது, [1]"சிவானுபவஞ் சுவானுபூதிகமாம்" என்றதனை உம்மைத் தொகைச் சொல்லாய்க்கொண்டு இரண்டாக்கப்படினும் படுமென்றன்றே. அநுபவம் அநுபூதி யென்பன அழுந்தியறிதற்பொருளவாகலின் தன்னைத்தானறிதல் விரோதமாகலிற் சிவானுபவத்தாற் சுவானுபூதியுண்டாமென்றே பொருள் தந்த தென்க.

அன்றியும் இரண்டாநந்தம் எனக்குத் தோன்றுமென்றது, 'தரும பேதத்தானன்றே தருமிபேத' மெனும் நியாயம் பற்றித்தோன்று மாநந்தத்தில் தேன்பாலிரதங்கள் போலத் தருமபேத மின்மையிற் சுகமொன்றேயாதல் வேண்டுமாற்றான் முற்கூறியவாறே சிவனைக் காணுதிருக்கின்றே னென்பது கூடாமையின் அவனை யாநந்தமன்றிக் காணப்படாமையின் அவ்வாநந்தஞ் சிவமேயாமென்பது போதரலின் இங்ஙனம் பிறிதொருவாற்றாற் கற்பித்துக் கூறிக் காண்பேனெனக் கற்பித்ததூஉஞ் சத்தெதி ரசத்து நில்லாதென்பதனுன் மிகவுஞ் சேட்புலத்ததாயிற் றென்பதாம். ஆகவே "சிவானுபவஞ் சுவானுபூதிகமா" மென்பது முற்கூறியவாறே வலியுடைத் தென்பதுஉமாயிற்று. நீ கூறியவாறு உண்டாயின்

[2]அந்தமொன் றில்லா வாநந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பால்.

எனக் கூறவேண்டாமையுமறிக.

அன்றியும், ஆகம முதலியன ஆநந்தபேதங் கூறும்வழி அபரா நந்தம் பராநந்தமென விடயாநந்தத்தையும் பரமாநந்தத்தையுமே கூறியதன்றி ஆன்மாவிற்கும் ஆநந்தமுண்டெனப் பேரின்பத்தை இரண்டாகப் பகுத்துக் கூறாமையானும் ஆன்மாவிற்கு ஆநந்தமின்றென்பதே கொள்ளப்படுமென்க. அது அசிந்தியவிசுவத்தில் சமாதிராஜ படலத்தில்,

1. पञ्चविंशतिरानन्दमपरानन्दजं भवेत् ।
एवं बुध्यस्व नन्दीश परानन्दमथोच्यते ॥

त्रिविधं तत्परानन्दं गौरवं ज्ञानयोगजे ।

என்பதனாற் கண்டுகொள்க. இவ்வாறாயின் ஆன்மாநந்தமென்னும் விவகாரம் ஒரோவழி யுண்டாயிருப்ப தெவ்வாறெனின் சிவன் ஆநந்தரூப னாகலின் அவனை யொருவ னநுபவித்தறியவேண்டும், பாசஞ் சடமாகையா லான்மாவே யநுபவித்து அறிவன் அதனால் அவனுக்கு அநுபவ உரிமை உளதாதல் பற்றிச் சிவன் கொடுப்பதும் அவன் பெறுவதுமாகக் கூறும் விவகாரத்தால்

[1]சிவஞானசித், சூ, 8. பா, 34. [2]திருவாசகம், கோயிற்றிருப்பதிகம் பா, 10.

ஆன்மாநந்தமென்று வழங்கப்படும். என்னை? சர்வஞானோத்தரத்தில் (சுவாத்ம சாக்ஷாத்காரோபதேச படலத்தில்,)

2. निस्तत्त्वे निष्कलीभूते विन्दत्यात्मनि तत्सुखम्। (சு-38)

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

3. आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति।

எனவும், பிறவும் வருமாற்றானுணர்க. இவ்வாறுயிற் சிவகுணம் ஆன்மாவினிடத்தில் வருதலின் குணசங்கிராந்த வாதமாம் பிறவெனின்; அது கொடுப்பதும் வாங்குவதுமாகக் கூறியதுபசாரம். அறிவானு மறியப்படுவது மென்பதே பரமார்த்தமாகலிற் குணசங்கிராந்தவாதம் என்பது சிறிதும் இன்றென்க. அன்றியும் முற்கூறியவாறுபோலக் காமிகத்தின் வித்தியாபாதத்து முதற் படலத்தில் இருடிகள் வினவுவனவாகவரும்,

4. नमस्ते परमानन्दप्रदाय विमलात्मने।

என்றற்றொடக்கத்து வசனங்களும் பலவாக வருதலின் மதங்கத்தில், (பதிபட-சு-59-60)

5. *पत्युर्दानं तदेवोक्तं न स्वयं व्यज्यते पशोः।
दानं नाम स्वसत्त्वैव या सा ज्ञानक्रियात्मिका॥

என ஞானக்கிரியாவியத்தியே தானமாகக் கூறப்படுமென்றலின் ஈண்டும் ஆன்ம சொரூபாநந்தாபிவித்தியைத் தானமாகக் கூறியதென்னோமோவெனின் இத்துணையும் ஆன்மாவிற்குச் சொரூபாநந்த முண்டென்பது கூடாதென நிராகரித்தது கண்டுஞ் "செவியுணர் வில்லான் முன்னர் வரிவளை முழக்கம் போலச்" சிறிது மறிந்தாயல்லையன்றே. அதனான் இனிமேற் கூறுமாற்றானும் முன்னர்க்கூறியவற்றானும் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க. பிறவும் அன்ன.

[1]சிற்றின்பம் பேரின்பம் என்பது முதலாக இத்துணையுங் கூறிய ஏழு செய்யுள்களானு மிருவர்க்குமொத்த சுவாநுபவப் பிரமாணத்தாற் சமாதிக் காலத்திற் றோன்றியதோரின்பம் ஆன்மாவினிடமாகவே நிகழ்தலின தன்குணமாகவேண்டுமென்றனைப் பொருந்தாமை காட்டி நிராகரித்தவாறு. அது முற்கூறியவாறே,

6. आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिबर्हणम्।
आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत्॥

एवं ज्ञात्वा विशेषेण समाधिं कारयेद्बुधः।

---

*प्रत्युत्थानं इति मुद्रितपुस्तके

[1]முத்திநிச் பா, 5.

என்றற் றொடக்கத்தாற் றன்னைத்தான் பாவிக்கின் மலம் போகாமையிற் சிவனைப் பாவிக்கக் கூறலில் அங்ஙனம் பாவிக்கப்பட்ட ஆநந்தமன்றிப் பிறிதொன்று சாட்சாத்காரப்படுதலாகாமையானும் பிறவாற்றானும் மிகநனி விளங்குதலான் என்க.

பதினொன்றாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்

# பன்னிரண்டாம் பாட்டு

அண்ணலைப்போ லாநந்த மான்மாவிற் குண்டாகில்
எண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ—கண்ணிருளை
ஓட்டாதோ வாதவனுக் கொத்தவொளி யுண்டாகிற்
கேட்டாயோ கேட்டிலையேற் கேள்.

எ-து பாட்டு. எ-னின், முற்கூறியவாறேயன்றி ஆகமப்பொருள் கோடலும், சுவாநுபவ விவேகமும் யுத்தி பூர்வமன்றிக் கூடாமையின் நியாயாநுசாரத்தினானுண்டாம் யுத்தி வகையால் இன்னும் ஆன்மாநந்த நிராகரணம் பண்ணுகின்றது.

**அண்ணலைப்போல் ஆநந்தம் ஆன்மாவிற்கு உண்டு ஆகில்**
**எண்ணில் பிறப்பு இறப்பை எய்துமோ**

என்பது, நெடுங்காலஞ் தவஞ்செய்து சாட்சாத்காரம் பெற்றுழி முத்தான்மாக்களாலநுபவிக்கத்தக்கதன்றே பதியினது குணரூபமாயுள்ள ஆநந்தம். அதுபோல் அவனாற் செய்யப்படும் ஐந்தொழிலிற்பட்டுழலும் ஆன்மாவிற்கும் உண்டென்றால் அவ்வாநந்தமும் பிறராற் றவஞ்செய்து பெறவேண்டு மாற்றாற் (அவ்வான்மாவும்) பதியேயாமாகலின் அளவிறந்த பிறப்பிறப்பையடைய வேண்டுவதில்லையன்றே! அங்ஙனம் அடைதலாற் பதியன்மையின் அவனது குணம்போல வாநந்தமுமின்று.

**கண் இருளை**
**ஓட்டாதோ ஆதவனுக்கு ஒத்த ஒளி உண்டாகில்**
**கேட்டாயோ கேட்டிலையேல் கேள்**

என்பது, சித்துருவத்தா னிருவருமொத்திருக்கவும் ஒத்தவாநந்தமில்லாதது எவ்வாறெனின் தேசோரூபத்தானொத்திருக்கவும் கண் கதிரோனைப்போல இருளைத் துரக்குந் தன்மையிலதானாற்போல் ஆன்மாச் சிவனொடுஞ் சித்துருவத்தாலொத்திருப்பினும் ஆநந்தத்தாலொத்தநிலைமை யிலன். அது நீ சற்குருவை வழிபட்டுக் கேட்டாயோ? இல்லையோ? கேளாமையினன்றே இவ்வாறு மயங்குவது; இனியாயினுஞ் சென்று கேட்பாயாக என்றவாறு. ஈண்டு நெடுங்காலஞ்செய்த தவமாவது முற்கூறியவாறே,

1. **ज्ञानोत्पत्तिनिमित्तं तु क्रियाचर्याः प्रकीर्तिताः।** (தேவிகாலோத்தரம்)

[1]கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தம்.

என்றற் றொடக்கத்தாற் கூறப்பட்டதாம். அவனாற் செய்யும் படைப்பு முதலியவற்றிற்படுதலும் என்றது ஆண்டவனும் அடிமையுமாதல் தோன்று மாற்றானும் உயர்வும் இழிவுங்கண்டு சமதா விவகாரமொழிதற்கென்க. குண குணிகட்குப் பேதமின்மையிற் பதிகுணம்போற் குணமுண்டாயின் இவனும் பதியாக வேண்டுமென்றது, எனவே முத்தான்மாக்களானபோதும் அவரொழிந் தோரால் வந்தியரல்லரென்பதுமாயிற்று. என்னெனில் இரௌரவத்தில்,

2. द्विधा सचित्स्वरूपो हि ज्ञत्वकर्तृत्वभिन्नतः।
तस्मादेकोऽपि पूज्यो हि नान्यश्च इति कथ्यते॥

எனவும், மிருகேந்திரத்தில்,

3. दृक्क्रियात्मकमैश्वर्यं यस्य तद्दातृपूर्वकम्।
ईश्वरः सोऽत्र मन्तव्यः शक्तिद्वययुतः प्रभुः॥

எனவும், சர்வஞானோத்தரசாரசங்கிரகத்தில்,

4. येन येन हि रूपेण साधकः संस्मरेत् सदा।
तस्य तन्मयतां याति चिन्तामणिरिवेश्वरः॥

எனவும், பிறவும் வருதலின் என்க. இங்ஙனங் கூறுமாற்றால்ஆன்மாநந்தம் நிராகரிக்கப்படுவது முத்தான்மாக்கள் சிவனை யநுபவிப்பது சித்தமாயி னன்றே அதுகூறல் வேண்டும். அங்ஙனங் கூறுவது முற்கூறியவாறன்றி நமது சமயகுரவர்கள் முத்தான்மாக்களெனச் சிவாகம புராணங்களிற் பிர சித்தர்களா யனைவரானும் வந்தியராயிருந்து சிவாநந்தாநுபவம் பெற்று வீடடைந்தார்களென அவர்பால் வைத்துக்கூறின் அவ்வாறே ஏனையோர்க்கு முண்டெனக் கொள்ளலாமன்றே. அவ்வாறு கூறுகவெனின் அது கூறுதும். சூட்சுமாகமத்தில் பத்தோற்சவபடலத்தில்,

5. व्रतारम्भदिने रात्रौ विघ्नेशं पूजयेत्तदा।
श्रीमद्वातपुरे जातं भक्तं देव्याः गृहेऽपि वा॥

देवाग्रे वा विशेषेण हस्ते पुस्तकसंयुतम्।
नववस्त्रेण संवेष्ट्य न्यसेत्कौतुकबन्धनम्॥

எனவும், பூர்வகாரணத்தில்,

6. संबन्धः सुन्दरश्चैव पितृनामा त्रयस्तथा।
भक्तयागं त्रिकालं च द्वादशं परिकीर्तितम्॥

எனவும் வருதலின் இவர்கள் சிவாநுபவமுடையவர்களென்பது பெறப்படும்.

[1]சிவப்பிர, பாயிரம் பா, 10.

[1]உரையா லறிவினள வுணர்தல் கருத லனுமானம்.

என்பதனைவர்கள் கூறிய வாய்மொழிகளானறியப்படும். அவற்றுள் தாலீ புலாக நியாயம்பற்றி ஒன்றுகாட்டுதும். அதுவருமாறு,

[2]உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே.

இதனுள் அநுபவித்தார்க்குஞ் சொல்லப்படாத சிவாநந்தந் தானே வெளிப் பட்டாற்போலென உருவகப்படுத்தினமையின் அவரநுபவித்தவாறு காண்க. அன்றி; சிற்சத்திமுழுங்க வழுந்திலைன்றிச் சிவபோகம் முதிராமையின் காண் பானுங் காட்டுவதுங் காண்பதுவுமின்றி யுணர்தல் கருதிநின்ற தெனினுமாம். இதற்கிவ்வாறு பொருள் கூறாது சேனவரையரும் பேராசிரியரு மொருகாற் றன்னை நினைந்தார்க்குப் பின்னுணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியு மொடுங்குதலான் மீட்டும் "உணர்வரியோன்" எனவுந் தவத்தானுந் தியானத் தானு மெல்லாப்பொருளையுமுணர்ந்தார்க்கு முணர்வரியோ னெனவுங் கூறியது என்னெனில் அவனையறிதற்குச் சித்தவிருத்தி கருவியன்றென்பதூஉந், தவத் தானுந் தியானத்தானு மெல்லாப்பொருளு முணர்ந்தார்க்கு முணரப்படானுகில் அவைகளை யியற்றுதல் பயனின்றெனவும் அவனுஞ் சூனியமாகப்போவ னெனவு மறியாமையின் 'உரையெழுதவந்த நாம் அறியாதேபோகலாகாது' என வொன் றைக் கூறிவைத்தாராகலி னது பொருளன்றென்க. உணர்ந்தாலன்றிச் சொல் லப்படாமையி னிண்டுணர்தல் சொல்லுதற் றொழிலின் மேனின்றது; காரணத்தைக் காரியமாகவும் உபசரித்தல் மரபாகலின். இதனேயன்றே வாதுளோத்தரத்தில்,

7. सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगं च तदेव परमं सुखम् ॥

எனவும், சிவஞானசித்தியில்,

[3]மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினாற் பேசரிது மணர்ந்தவர்தா முணர்வர்.

எனவும், தேவிகாலோத்தரத்தில்.

1. ज्ञानोत्पत्तिनिमित्तं तु क्रियाचर्याः प्रकीर्तिताः ।

எனவும், சிவஞானபோதத்தில்,

8. अदृश्यं चेदसद्भावो दृश्यं चेज्जडिमा भवेत् ।
शम्भोस्तद्व्यतिरेकेण ज्ञेयं रूपं विदुर्बुधाः ॥ (சூ-6)

---

[1]சிவஞானசித், அளவை பா, 12. [2]திருக்கோவையார், பா, 9. உரையும், விசேடவுரையும்.
[3]சிவஞானசித், சூ 8, பா, 36.

எனவும், வருவதூஉமென்க. இது தலைவன்மேல் வைத்துக்கூறியதாகலின் நமதநுபவத்தாற் கூறியதன்று எனவும்படுமாகலான் வேறு கூறுகவெனின், திருவாசகத்தில்,

[1]கோற்றேனெனக் கென்கோகுரை கடல்வாயமு தென்கோ
ஆற்றேனெங்க ளரனேயரு மருந்தேயென தரசே
சேற்றார்வயல் புடைசூழ்தரு திருப்பெருந்துறை யுறையும்
நீற்றார்தரு திருமேனிநின் மலனேயுனை யானே.

[2]ஊனா யுயிரா யுணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா வறிவா யளவிறந்த பல்லுயிர்க்குங்
கோனாகி நின்றவா கூறுதுங்கா ணம்மானாய்.

என்றற் றொடக்கத்தா னவரநுபவ மறிக. முற்கூறியது தலைவன் கூற்றாகலின் இவரது மெய்ப்பாட்டானிகழ்ந்தமை கூறப்படாமையின் ஈண்டிவர் மெய்ப்பாட்டான் நிகழ்ச்சி கூறுதல் பொருந்துமென்றலின், 'எனக்குத் தேன் எனக்கமுது' எனவும், 'வானோ ரறியா வழியெமக்கு' எனவும் கூறுமாற்றான் அவர் குறிவழிநின் றநுபவித்தமை தோன்றுமென்றன்றே யிஃதெடுத்துக் காட்டியது. இதுவும்,

[3]காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்.

என்பதனானைப்பின்றாகவுங் காதலால் அழகில்லாளொருத்தியைப் பாவை யெனக்கூறுமாறுபோற் கூறினாரெனினுமமையும். அது,

[4]அரனே யருமருந்தே யெனதரசே.

என்பவற்றானும் அறியவருமாதலின் இதுவும் அநுபவம் பிறந்து சொன்ன தன்றெனின் அது கூறுதும். இங்ஙனந் தேன் அமுது என்றாற் போலப் பலவும் உயர்திணையான சிவனுக் கஃறிணைப்பெயராய் வந்ததென்னெனி னஃதாகுபெய ரெனின் அது,

[5]முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்
சினையிற் கூறு முதலறி கிளவியும்.

என்பதனால் ஓர் காரணமின்றி நிகழாமையின் எவ்வாறாகுபெயராய தெனின் ஒப்பினாற் பாவை போல்வாளைப் பாவை யெனவும், யானை போல்வானை யானை யெனவும் வருமாறுபோலக் கூறின் அநுபவசித்தி கிடைக்குமாகலா னதனை நீக்குதற்கன்றே.

---

1, 4 திருவாசகம், உயிருண்ணிப்பத்து பா, 8. 2 திருவாசகம், திருவம்மானை பா, 16. 3 தொல்-சொல்-கிளவி 56. 5 தொல்-சொல்-வேற்றுமைமயங் 31.

[1]குடிமை யாண்மை யிளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை யரசே மகவே குழவி
தன்மை திரிபெய ருறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்
றுவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவு மவற்றொடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லாம்
உயர்திணை மருங்கி னிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

என்பதனாற் காதல்பற்றி யொப்பின்றாகவும் வந்ததெனின் அது பொருந்தாது. என்னெனில் அவ்வாறு தேனோடு சுவையாற் சிவனுக்கொப்புமை யின்றாகவே சிவனுக்கு மாநந்தமின்றென நிகழ்தலி னதனானே யான்மாவிற்கு மின்றென நிகழ்ந்து உனக்கு அவசித்தாந்தமாக முடிதலின். அன்றியும் ஒருத்தியைக் காதலாற் பாவை யென்புழி யவளிடத்துப் பாவையினழகு போலு மோரழகில்லை யென்பது கண்கூடாகக் காண்டலிற் பிரத்தியட்சப் பிரமாண விரோதங் கண்டன்றே யவ்வாறு கற்பித்தது; உபசார வழக்கெல் லாஞ் சம்பந்தாநுபபத்தி யுடையவாகவிருத்தல் நியாயமாகலின். ஈண்டவ்வாறு ஓர் பிரமாண விரோதமுமின்றி,

[2]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனக்கூறும் முத்தியிலக்கணத்திற் கியைந்த விலக்கியமாகவே நிகழ்தலி னதனால் அஃதாகுபெயராதலே அமைதலிற் சுவைகருதி யொப்புமைபற்றி வந்ததாகலின் அநுபவித்தே கூறியதென்க. அன்றேல்,

9. शिवज्ञानामृतं पीत्वा विचरस्व यथासुखम् ।

என்றற்றொடக்கத் தாகமவசனங் கூடாதென்க. எனவே ஈண்டு மாயா காரியரூபமான வஃறிணையாயுள்ள தேன் சிவனுதல் கூடாமையி னநுபபத்தியு முத்தியிலக்கணத்தாற் சிறிதொப்புமை யுண்டாகலிற் சம்பந்தமும் பெற்றதூஉ மாயிற்று. அவ்வாறாகுபெயர்கோடற்கு,

[3]முதலிற் கூறுஞ் சினையறி கிளவியுஞ்
சினையிற் கூறு முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெயரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
யனைய மரபின வாகுபெயர்க் கிளவி.

என்பதனான் விதியின்மையிற் கூடாதெனின் அங்ஙனமின்றாயினும்,

[1]தொல்-சொல்-கிளவி 56. [2]சிவஞானசித் சூ, 11. பா, 12. [1]தொல்-சொல்-வேற்றுமைமயங் சூ, 31.

[1]கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே.

என்பதனால் யானை பாவையென்னு முவமைப்பெயர் யானை வந்தான் பாவை வந்தாள் என்றுவமிக்கப்படும் பொருண்மே னிற்குமென்றலி னவ்விதியாற் கூடுமென்க. எனவே இவ்வாறு பிரமாணவிரோதமின்மையி னொழிந்த சிறப்பு உவப்பு உயர்வு முதலியவற்றான் ஒரு பொருண்மை கற்பித்தல் கூடாதென் பதூஉங் கூடாதாயிற்று. அன்றிக் காதல்பற்றி வரினும்,

[2]இன்பி லினிதென்ற லின்புண்டே லின்புண்டா
மன்பி னிலையே யது.

[3]பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே,

[4]அன்பே சிவமா யறிந்துகொண் டேனே.

எனவும் பிறவும் வருவனவற்று னநுபவங்குறித்தே வருமென்க. அன்றி உவகைபற்றிவந்ததெனி னங்ஙனம் உவகையு மநுபவித்தபின்னர் நிகழ்தலின்,

[5]தேனினுமினியர் பாலனநீற்றர்
தீங்கரும்பனையர்தந் திருவடிதொழுவார்
ஊனயந்துருக வுவகைகடருவார்.

என்பதனு னின்டைக்குப் பொருந்துதலானுஞ் சிறப்புயர்வுபற்றி இவ்வாறு பொருள்படும் பொருள்களைக்கூறூர். கூறினு மவ்வாறே அநுபவங்குறித்து வருதலானும் பொருந்துமென்க. எனவே,

[6]அணியு மமிழ்துமென் னாவியு மாயவன் றில்லைச் சிந்தாமணி.

என்புழிக்கிடந்தவாறுபோல யாதானுமொரு பண்பின்றி உவப்பு உயர்வு காதல் சிறப்பு முதலியவும் நிகழாமையின் அதனைத் தெரியின் இதுவாயே முடிதலின் எவ்வாற்றானு மவரநுபவித்தவாறு விளங்கிற்றென்பதாம். அஃதற்றாயினும் வேற்றோரியல்புபற்றியு முவமை வருதலிற் 'பால்போலினியமொழி' யென்றாற் போல வுவமைக்கு முவமேயத்திற்குமுள்ள பண்பு விரிந்துகிடந்த வாய்மொழி வேண்டுமெனின்.

[7]நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே.

---

[1]தொல்-சொல்-வேற்றுமைமயங், சூ, 35. [2]திருவருட்-இன்புறுநிலை பா, 10. [3]சிவஞானசித் சூ, 9, பா, 6. [4]திருமந்திரம், இது அச்சுப்படியில் இல்லை. [5]சம்பந்தர் அச்சிறுபாக்கம், பா, 2. [6]திருக்கோவையார் பா, 5. [7]திருவாசகம் திருவேசறவு, பா, 10.

என்றற் றொடக்கத்தானுணர்க. அற்றன்று அவர்க்கினிமை யுண்டாயன்றி யுவமையானு மறியப்படும்; அதனாலவர்க்கினிமை யுண்டென்பதூஉம் அது மற்றத் தேன்முதலியபோல் ஆமாயின் உருவகப் பிரயோகமுண்டாயின் வலி யுடைத்தாதலி னதுவும்படவருவது கூறவேண்டுமெனின்,

[1]உருத்தெரியாக் காலத்தே யுள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
அருத்தியினா னாயடியே னணிகொடில்லை கண்டேனே.

[2]பானினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
யுலப்பிலா வானந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.

[3]கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டி
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான் கொண்டாண்டவா பாடுதுங்கா ணம்மானாய்.

[4]எந்தையெந்தாய் சுற்றமற்று மெல்லா மென்னுடைய
பந்த மறுத்தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ.

எனவருமாற்றாற் காண்க. அற்றன்று அம்மை,

[5]நினையா தொழிதிகண் டாய்நெஞ்ச மேயிங்கொர் தஞ்சமென்னும்
மனையா ளையுமக்க டம்மையுந் தேறியோ ராறுபுக்கு
நனையாச் சடைமுடி நம்பனந் தாதைநொந் தாதசெந்தீ
யனையா னமரர் பிரானண்ட வாண னடித்தலமே.

என்றாற்போலவும் பால் சர்க்கரையை அநுபவியாது சத்தாமாத்திரமாய்க் கண்டோரு மவ்வாறன்றிக் கேட்டோரு மிவ்வாறநுபவித்தார் போலச் சொல் லுதல் கூடுதலின் அவரநுபவித்தே னென்பது தோன்றக் கூறவேண்டுமெனின் இவ்வாறாயி னுனது வாய்மொழியானேதானே அவரிரதமுடைய பொருளாகலி னொருவரநுபவிப்பாருளர்; அன்றே லவ்வினிமை யுண்டென்பதற்குப் பிரமாண

[1] திருவாசகம், கண்டபத்து, பா, 3. [2] திருவாசகம், பிடித்தபத்து, பா, 9. [3] திருவாசகம், திருவம்மானை, பா, 6. [4] திருவாசகம், திருப்பூவல்லி, பா, 2. [5] திருவிரட்டைமணிமாலை, பா, 13.

மின்றென நிகழ்தலி னிவரன்றிப் பிறராயினும் அநுபவித்தாருளரென வருதலின் அவ்வாறே ஈண்டுங்கொள்வாயாக. அவ்வாறாயினும் இவர்போல் அவருயர்ந் தோரன்மையின் இவர்மொழியே வேண்டுமெனின்,

[1]வான நாட்டரு மறியொ ணாதநீ
 மறையி லீறுமுன் றொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
 யென்னை யின்னிதா யாண்டு கொண்டவா
ஊனை நாடக மாடு வித்தவா
 வுருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
 நைய வையகத் துடைய விச்சையே.

எனவும்,

[2]அளித்து வந்தெனக் காவவென் றருளி
 யச்சந் தீர்த்தநின் னருட்பெருங் கடலில்
திளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்
 றிருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவ னறியா
 வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
 கயிலை மாமலை மேவிய கடலே.

எனவும்,

[3]வழங்குகின் றாய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை யேனென் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே.

எனவும்,

[4]வன்புலால் வேலு மஞ்சேன் வளைக்கையார் கடைக்க ணஞ்சேன்
என்பெலா முருக நோக்கி யம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை யேத்தி யினிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே.

எனவும், பிறவும் வருமிவற்றுள் அநுபவித்ததும் அநுபவிப்புழி யிடையூறு நிகழ்ந்ததும் பிறரநுபவித்தற் கேற்ற அன்புசெய்யாராயி னஞ்சப்படுவா ரெனவும் பலவாற்றானு நிகழ்ந்தது காண்க. இதனானே சிவன்பாலன்பு செய் வதூஉம் அநுபவவேதுவாகலின் இவ்வாறன்புசெய்ய வுடன்பட்டுச் சிவாநுபவ மில்லையென்றால் அவ்வன்பிற்குப் பயனில்லை யென்பதூஉமாயிற்று. இவ்வன் பிற்குச் சிவனைப்பெறுதலே பயனாயின் இன்றியமையாமை கூறல்வேண்டும் பிறவெனின் அது,

---

[1]திருவாசகம், திருச்சதகம், பா, 95. [2]திருவாசகம், செத்திலாப், பா, 10. [3]திருவாசகம், அடைக் கலப், பா, 10. [4]திருவாசகம், அச்சப்பத்து, பா, 3.

[1]அன்பு சிவமென் றறியா ரிரண்டென்பர்
அன்பு சிவமென் றறிவார்க் கிரண்டில்லை
அன்பு சிவமென் றறிவா லறிந்தபின்
அன்பே சிவமா யறிந்துகொண் டேனே.

என இன்றியமையாமை நிகழுங் காரிய காரண வசத்தா னொற்றுமைப்படக் கூறுமாற்றானும்,

[2]இன்பி லினிதென்ற லின்புண்டே லின்புண்டாம்
அன்பி னிலையே யது.

என உண்டாதற்குபாயமாகக் கூறுமாற்றானும்,

[3]பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

எனவும், பெரியபுராணத்தில்,

[4]பெருமையாற் றம்மை யொப்பார் பேணலா லெம்மைப் பெற்றார்
ஒருமையா னுலகை வெல்வா ரூனமே லொன்று மில்லார்
அருமையா நிலையி னின்றா ரன்பினா லின்ப மார்வார்
இருமையுங் கடந்து நின்றா ரிவரைநீ யடைவா யென்று.

எனவும், பிறவும் வருமாற்றான் உணர்க. இவ்வாறன்றேற் றெண்ணீர்வேட்டா னெண்ணெய் குடித்தாற்போலாம். ஈண்டான்மாநந்த மென்பதொன்றின்மையின் அதுதானு மில்லையென்பதாம்.

இவ்வாறவரநுபவித்ததுண்டாயினும் அது,

[5]கனியினுங் கட்டிக் கரும்பினு முத்தர்க்
கினியன் சிவனென்று ரென்.

என்றதற் குத்தரம்,

[6]சகளசிவ னைத்திளைப்பர் சார்ந்தபர முத்தர்
அகளனரி யானவனு மாங்கு.

என எமது குரவர் சமயாசாரியர்க்குமாத்திரம் அவ்வாறு தாங்கொண்ட இலிங்கமூர்த்தியிற் றோன்றுமென்று கருதிக் கூறியது சகளசிவனையாகலிற் பரசிவாநுபவ மன்றெனில் திருமந்திரமாலையுள்,

[7]பண்டங்க ளெண்பத்து நான்குநூ றாயிரம்
துண்டஞ்செய் யாரைத் தொடர்ந்துயி ராய்நிற்குங்
கண்டவை தன்னிற் கலந்துண்ணே ஞ்னென்
றுண்டியு மாகி யொருங்கிநின் றானே.

---

[1]திருமந்திரம் இது அச்சுப்படியில்லை. [2]திருவருட், இன்புறுநிலை பா, 10. [3]சிவஞானசித், சூ, 9. பா, 6. [4]பெரிய, தடுத்தாட், பா, 196. [5], [6]பரமோப, பா, 15, 16. [7]அச்சுப்பிரதியில் இல்லை.

[1]அன்புள் ளுருகி யழுவ னரற்றுவன்
என்பு முருகி யிராப்பக லேத்துவன்
என்பொன் மணியை யிறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் றிருத்தலு மாமே.

[2]தேனுக்கு ளின்பஞ் சிவப்போ கறுப்போ
வானுக்கு ளீசனைத் தேடு மதியிலீர்
தேனுக்கு ளின்பஞ் செறிந்திருந் தாற்போல்
ஊனுக்கு ளீச னொளித்திருந் தானே.

எனவும், சிவஞானபோதத்தில்,

[3]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினான்.

எனவும், சிவஞானசித்தியில்,

[4]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும் பிறவுஞ் சந்தானகுரவர், ஒருமூர்த்திபாற் சார்த்திக்கூறுந் தேவாரம் திருவிசைப்பா முதலியனபோலன்றிச் சாத்திரத்திற் பொதுப்பட முத்தியிலக்கணங்கூறியவாறே கூறலிற் சகளசிவனைச் சொல்லியதன்று. இதனானே சமயாசாரியருக்குமாத்திரங் கொண்டவிலிங்கத்திற் றோன்றியகுணம் அவர்களுக்குமாத்திர மநுபவமென்றதூஉம் போயிற்று. என்னை ?

[5]செங்கையோ டுலகி லரசுவீற் றிருந்து திளைப்பதுஞ் சிவனருட் கடலே.

என எல்லார்க்கு முண்டென்றே பலசுருதி வருதலானும்,

[6]திருவடிதொழுவார், ஊனயந்துருக வுவகைகடருவார்.

எனப் பிறர்க்கு மொப்பக் கூறலானும், அம்மை,

[7]நினையா தொழிதிகண் டாய்நெஞ்ச மேயிங்கோர் தஞ்சமென்று, மனையாளையும்.

எனப் பொதுப்படக் கூறலானும் என்க. ஆயின் பரமசிவனையும் ஒழிந்த இத்தன்மை யுடையாரையு மொற்றுமைப்படக்கூறிய தென்னெனில்,

10. अस्ति कर्ता स हत्वैतत् सृजत्यस्मात्प्रभुर्हरः ।

எனவும்,

[1]அணைந்தோர்தன்மை 24. [2]அச்சுப்பிரதியில் இல்லை. [3]சிவஞானபோ. சூ, 11, பா, 2. [4]சிவஞானசித் சூ, 11, பா, 12. [5]திருவிசைப்பா, கங்கைகொண்ட, பா, 10 [6]சம்பந்தர், அச்சிறுபாக்கம், பா, 2. [7]திருவிரட்டைமணி, பா, 13.

[1]அண்ட மாகிரு ளூடுக டந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வாரறி வாரெலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே.

எனவும் வருஞ் சமயசங்கேத வழக்கென்க. அன்றியுஞ் சிவாலயத்திற் பூசையும் பரமசிவனுக்கேயாகலி னவர்க்குச் சகளவடிவு சாதகர் நிமித்தங் கற்பிதமாக லின் அவ்வாறு திருமேனியாக வொன்றின்மையி னுகமசம்பிரதாயந் தெரியாமற் கூறியதேயாம். என்னை? வாதுளத்தில்,

11. योगिनां च यतीनां च ज्ञानिनां मन्त्रिणां तथा।
ध्यानपूजानिमित्ताय निष्कलं सकलं भवेत्॥

எனவும், பூர்வகாரணத்தில்,

12. हृदयाद्यङ्गसंपूर्णो ध्याने सकलरूपधृत्।
निष्कलस्तदभावे तु तस्मात्सकलनिष्कलः॥ (பட-2-சு. 6-7)

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

13. स्थावरं जङ्गमं चेति द्विविधं शिवपूजनम्।

எனவும், பவுட்கரத்தில்,

14. साधकस्य तु लक्ष्यार्थं तस्य रूपमिदं स्मृतम्॥

எனவும் பிறவும் வருதலின் என்க. அன்றியும் இவர் கரணங்கடந்தறியும் ஞானவான்களாகலிற் கரணவிடயமான இவ்வடிவியல்லை,

[2]கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினுந்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன்.

எனக்கூறுமாறே போற்கூறி வருவதற்குப் பயனின்மையாற் கூறுரெனினு மாம். இவ்வாறன்றிப் பிறிதொருவாற்றான்,

[3]சகளசிவ னைத்தினைப்பர் சார்ந்தபர முத்தர்.

என்றால் "கனியினுங் கட்டி பட்ட" என்பதன் பின் சொல்லலிற் பிரகிருத மன்மையின் அத்தாந்தரம் என்னும் நிக்கிரகத்தானமாம். இவ்வாறன்றிப் பிறிதொரு பயனுண்டெனில் அது,

[1]அப்பர், சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை, பா, 2. [2]அப்பர், திருவிடைமருது, குறுந், பா, 10.
[3]பரமோப, பா, 16.

[1]திருவடிதொழுவார், ஊனயந்துருக வுவகைகடருவார்.

எனப் பிறர்க்கு மொப்பக் கூறுதலானும், அம்மையும்,

[2]நினையா தொழிதிகண் டாய்நெஞ்ச மேயிங்கோர் தஞ்சமென்று, மனையாளையும்.

எனப் பொதுப்படக் கூறலானும், இங்ஙனம் இரண்டு மூன்று பிரகாரங் கூறவுந் தோன்றுமையின் அவிக்ஞாதார்த்தம் என்னும் நிக்கிரகத்தானமாம். அஃதற்றாக; ஈண்டு உதாகரித்தவற்றுள், 'பருகுவன் விழுங்குவன்' என்றாற் போல வருதலின் அகண்டாகாரசச்சிதானந்தரூபனிடத்தில் அது பொருந்தாமையின் அநுபவங் கூடாதெனின் அது,

[3]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

என்புழி அவ்வாநந்தத்தைச் சொல்ல வேறோர் சொல்லின்மையின் இழிந்த இதனின்பத்தை உயர்ந்த அதற்குவமையாய்க் கூறி அச்சொல்லான் வழங்குமாறுபோல் அவ்வநுபவத்திற்கும் வேறோர் சொல்லின்மையின் இவ்வுலகத்துப் பொருளினநுபவச் சொல்லாற் சொல்லியதென்க. அவ்வாறாயின் அதற்கும்,

பொருள்து புணர்வே புணர்ப்போன் குறிப்பே
மருள வரூஉ மரபிற் றென்ப.

எனவோரிலக்கண முண்டானவாறுபோல ஈண்டும் வேண்டுமெனின்,

15. भोगोऽस्य वेदना पुंसः सुखदुःखादिलक्षणः।

என்பதனால் ஈண்டநுபவமென்பது அறிதலாகலின் அதனை ஒற்றுமைப்பட்டு அழுந்தியறிந்தமை தோன்றவரும். அறிதல் வினைச்சொல்லாகலிற் பருகுதல் முதலாயின நீலம் பற்றிய துகிலை நீலமுண்டதுகி லென்றாற்போல வரும் வழக்காதலின்,

[4]வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின வெனக்கூ றுதலும்
அன்னவை யெல்லா மவற்றவற் றியல்பான்
இன்ன வென்னுங் குறிப்புரை யாகும்.

என்பதனான் ஒன்றென முடித்தலாற் கூறப்படுமென்க. அன்றி,

[5]உண்டற் குரிய வல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலு மரபே.

என்பதனான் என்னுயிரை விழுங்கினான் பருகினான் தின்றான் உண்டான் என்றற் றொடக்கத்தை யொருசாரா ரடக்கியவாறே யடக்கினுமாம். ஈண்டுக்

[1]சம்பந்தர், அச்சிறுபாக்கம், பா, 2. [2]திருவிரட்டைமணி, பா, 13. [3]சிவஞானசித், சு, 11, பா, 12.
[4]தொல்-சொல்-எச்ச, சூ, 26. [5]தொல்-பொருளதி-பொருள், சூ, 19.

காதல் சிறப்பு முதலியவற்றி னென்று னமைதிகூறலாகாதோவெனின் அது பெயர்ச்சொல் விதியாகலிற் கூடாதென்க.

[1]ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தாநந்தக் கனியே
யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

[2]பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமா யதற்கோர்
வித்துமா யாரூ ராதியாய் வீதி
விடங்கராய் நடங்குலா வினரே.

[3]பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவற்
படிவழி சென்றுசென் றேறிச்
சிந்தையுந் தானுங் கலந்ததோர் கலவி
தெரியினுந் தெரிவுறு வண்ணம்
எந்தையுந் தாயு மியானுமென் றிங்க
னெண்ணில்பல் லூழிக ளுடனாய்
வந்தணு காது நுணிகியுள் கலந்தோன்
மருவிடந் திருவிடை மருதே.

[4]ஏகநா யகனை யிமையவர்க் கரசை
யென்னுயிர்க் கமுதினை யெதிரில்
போகநா யகனைப் புயல்வணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநா யகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்
யோகநா யகனை யன்றிமற் றொன்று
முண்டென வுணர்கிலேன் யானே.

[5]எண்ணில்பல் கோடி சேவடி முடிக
ளெண்ணில்பல் கோடிதிண் டோள்கள்
எண்ணில்பல் கோடி திருவுரு நாம
மேர்கொண்முக் கண்முக மியல்பும்

[1] திருவிசைப்பா, கோயில், திருமாளிகைத் 1. [2] திருவிசைப்பா, திருவாரூர், பூந்துருத்தி நம்பிகாட, பா, 2. [3] திருவிசைப்பா, திருவிடைமருது, கருவூர்த்தேவ, பா, 5. [4], [5] திருவிசைப்பா, திருவீழி, சேந்தனர், பா, 1, 9.

எண்ணில்பல் கோடி யெல்லைக்கப் பாலாய்
நின்றைஞ் ஞூற் றந்தண ரேத்தும்
எண்ணில்பல் கோடி குணத்தரேர் வீழி
யிவர்நம்மை யாளுடை யாரே.

எனவும் பிறவும் வரும். இவ்வாறாயினும் சிவாநந்தமும் ஆன்மாநந்தமுங்கூட அநுபவித்தாரெனக் கூறுதற்கும் பொருந்துதலின் அதனைவிட்டுச் சிவாநந்த மொன்றனையே யநுபவித்தாரென்பது எற்றாற் பெறுதுமெனின், அது இரௌரவத்தில்,

16. एवं दीक्षा विशुद्धात्मा देहस्थोऽपि न देहभाक्।
निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः॥
देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत्।

என வருமாற்றானுணர்க. இங்ஙனங் கூறியதனுள் **शिवैकधीः** என்பது சிவனொருவனையே யறியுமறிவுடையனென்று ஆம். ஆகையால் சிவைகரசமான சிவாநுபவ மொன்றையே விடயீகரித்தமை புலப்படக்கிடந்தவாறு காண்க. அது,

[1]செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்
நற்குளிகை போலவர னணுகுமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு
மக்குளிகை தானும்பொன் னாகா தாகும்
உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே.

என்பதனானுமறிக.

அஃதற்றாக; ஈண்டு இம் மாணிக்கவாசகமூர்த்தி வாய்மொழியாற் புலப்பட எனக்கு ஆநந்த மில்லை உனதாநந்தம் பெற்றேனென வேண்டும்; இங்ஙனம் இவ்வாறுகூறியனவெல்லா முடன்படாயாகில் அதனானும் உடன்பாடா யாம்; அதனாற் கூறவேண்டுவதில்லென் றொழியற்பாற்றன்று; கூறுகவெனின், அது கூறுதும்.

[2]தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா வுடலிடங் கொண்டா
யானிதற் கிலனொர்கைம் மாறே.

[1]சிவஞானசித், சு, 11, பா, 10. [2]திருவாசகம் கோயிற்றிருப்பதிகம், பா, 10.

என்பதனாற் கண்டுகொள்க. இதனுள் "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னை" என்பதனானிருவருக்கும் நிகழ்ந்த வைக்கியமும் பெற்றாம். அது,

[1]இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே
னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே.

எனவருதலாற் புலப்படுகின்றது.

அத்துவிதம் இரண்டு மொன்று மன்றித் தன்பா லொற்றுமைப் பட்ட தன்மை எனவும், மற்றப் பிரபஞ்சத்தோடே தோய்ந்துந் தோயாமலும் நின்ற தன்மையெனவும் பெறக் கிடந்தவாறு முணர்க. இவ்வொற்றுமையன்றே சிவானந்தாநுபவவேது. அன்றேல் அநுபவஞானங் கிடையாமையிற் சத்தா மாத்திரமாயறியும் ஊகஞானமுடையானுக்கு அநுபவங் கிடையாதாம். அது பெத்தாவத்தையில் இன்பாநுபவ முதலியவும் ஆன்மாவினேடொற்றுமைப் பட்டாற்போல நிகழ்ந்ததென்க. இதனைப் பாலைச் சத்தாமாத்திரமாகவறியும் ஊகஞானத்தான் இன்பங் கிடையாமையானுமறிக. இவ்வாறிவர் சிவாநந் தாநுபவியாதல் பெற்றாமன்றே. அஃதிவ ரியல்புகூறும் புராணத்தினு முண்டாகவேண்டும் பிறவெனின் அதுகூறுதும். ஆலவாய் மான்மியத்தின் அறுபத்துநான்கு திருவிளையாடலுள் மண்சுமந்த படலத்தில் அகத்தியர் கூற்றாக,

17. निद्रां त्यक्त्वा निराहारः शिवानन्दामृतं पिबन् ।
सुमुक्तवत्सुखेनैव सञ्चचार सदा मुदा ॥

எனவரும். இது மாணிக்கவாசகமூர்த்தி சிதம்பரத்தில் வந்தபின்னர் அவரிருக்கு மியல்புகூறும்வழிக் கூறியது. இதனுமறிக. இம்மாணிக்கவாசகமூர்த்தி முதலியோர் மிகவுமாப்தரென்பது முற்கூறிய ஆகமவாக்கியங்களால் உணர்க. இனி இவ்வாறே சம்பந்தமூர்த்தி தேவாரத்தில்,

[2]தேனுமா யமுதுமாய்த் தெய்வமுந் தானாய்த்
தீயொடு நீருடன் வாயுவாந் தெரியில்.

எனவும்,

[3]தேனினு மினியர் பாலன நீற்றர்.

எனவும்,

[1]திருவாசகம் கோயிற்றிருப்பதிகம், பா, 7. [2]சம்பந்தர், இலம்பையங்கோட்டூர், பா, 5. [3]சம்பந்தர், அச்சிறுபாக்கம், பா, 2.

[1]எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலா யெனையு மாள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே.

எனவும் வருமிவற்றுள், முத்தனை'யின்பும் அடிமைத்திற முண்டெனவும்வந்தது.

[2]தன்னடைந்தார்க் கின்பங்க டருவானைத் தத்துவனை.

எனவருவதூஉம், 'பத்திப்பேர் வித்திட்டே' என்பதனுள்,

[3]சேர்வார் தாமே தானாகச் செயுமவ னுறையுமிடம்.

என்னும் இதனுள் அத்துவிதம் வந்ததூஉங் காண்க. பிறவும் வருமாறே அவரியல்பு கூறுதும். ஆலவாய் மான்மியத்தில்,

18. तत्र हालाहलहरं हालास्याधिपतिं शिवम् ।
आलोक्यानन्दवशतो निश्चलोऽभूत्कृताञ्जलिः ॥
अनुभूय शिवानन्दं वाङ्मनोऽतीतगोचरम् ।
सानन्दजलपूर्णाक्षः पुलकाङ्ककलेवरः ॥

எனவருமாற்றானுணர்க. இது சமணழித்த திருவிளையாடற் புராணத்தில் சம்பந்தமூர்த்தி சொக்கநாத சுவாமியைச் சேவிப்புழி நிகழ்ந்தது. இவ்வாறே அப்பர் தேவாரம்,

[4]கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.

எனவும்,

[5]பெருக லாந்தவம் பேதமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே.

எனவும்,

[6]விள்ளத்தா னொன்றுமாட்டேன் விருப்பெனும் வேட்கையாலே
வள்ளத்தேன் போலநுன்னை வாய்மடுத் துண்டிடாமே
உள்ளத்தே நிற்றியேனு முயிர்ப்புளே வருதியேனும்
கள்ளத்தே நிற்றியம்மா வெங்ஙனங் காணுமாறே.

எனவும் பிறவும் வருமாறே பெரியபுராணம் அவரியல்பு கூறும்.

[1]சம்பந்தர், திருமணஞ்சேரி, பா, 3. [2]சம்பந்தர், திருப்பிரமபுரம், பா, 11. [3]சம்பந்தர், திருக்கழுமலம், திருத்தாளச்சதி, பா, 7. [4]அப்பர், திருவிடைமருது, குறுந் பா, 10. [5]அப்பர், திருமருகல், பா, 1. [6]அப்பர், பொது, தனித்திருநேரிசை, பா, 7.

[1]ஆனந்த வெள்ளத்தி னிடைமூழ்கி யம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெய்தி
ஊனந்தா னிலராகி யுவந்திருந்தார் தம்மைக்கண்
டீனந்தங் கியதிலதா மென்னவதி சயமென்றார்.

இது நீற்றறையிலிருந்துழி நிகழ்ந்தது கூறியது. இதனானேயன்றே,

[2]நரகம் புகினு மெள்ளேன் றிருவருளாலே யிருக்கப்பெறின்.

என்றதூஉம் என்க. அவ்வழியறிவு அங்கே யத்துவிதமாகப் பற்றிக் கிடத்தலிற் பிறிதோரநுபவ நிகழாதாம். அன்றியும், அப்பர் திருப்புகலூரி லடைந்துழி நிகழ்ந்தது,

[3]மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவாநந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர *செய்தினர்.

எனவும் பிறவும் வருமாற்றானுணர்க. இவ்வாறே சுந்தரமூர்த்தி தேவாரம்,

[4]மருக லுறைவாய் மாகா ளத்தாய் மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல வகல வருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே
பருகப் பணியா யடியார்க் குன்னைப் பவளப் படியானே.

எனவும்,

[5]ஊனங் கத்துயிர்ப் பாயுயிர்க் கெல்லா
மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கத்தவர்க் கும்மளப் பரிய
வள்ள லையடி யார்கடம் முள்ளத்
தேனங் கத்தமு தாகியுள் ளூறுந்
தேச னைத்தினைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.

எனவும் வருமாறே யவரியல்புகூறும் பெரியபுராணத்தில் திருவாரூரில் வன்மீகநாதரைச் சேவித்துழி நிகழ்ந்ததாக,

[6]விழுந்து மெழுந்தும் பலமுறையான் மேவிப் பணிந்து மிகப்பரவி
எழுந்த களிப்பி னுலாடிப் பாடி யின்ப வெள்ளத்தில்
அழுந்தி யிரண்டு கண்ணுலு மம்பொற் புற்றி னிடையெழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார்.

எனவருமாற்றானுமுணர்க.

1,3பெரிய, நாவுக், பா, 101, 427. 2திருவாசகம், திருச்சதகம், பா, 2. *'சமர்ந்திருந்தார்' என்பதும் பாடம். 4சுந்தரர், ஊர்த்தொகை பா, 5. 5சுந்தரர், வலிவலம், பா, 1. 6பெரிய, ஏயர்கோன், பா, 311.

இவ்வாறே சேரமான் பெருமாணுயஞர் பொன்வண்ணத் தந்தாதியில்,

[1]மாயனன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
ஆயின தொண்ட *ரவனரு ளாத லரிதலவே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே.

எனவும், சிவஞானசித்தியில்,

[2]சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித்து.

எனவும், பட்டினத்துப்பிள்ளை திருக்கழுமல மும்மணிக்கோவையில்,

[3]ஒளிவந்த வாபொய் மனத்திரு ளீங்கவென் னுள்ளவெள்ளந்
தெளிவந்த வாவந்து தித்தித்த வாசிந்தி யாததொரு
களிவந்த வாவன்பு கைவந்த வாகடை சாரமையத்
தெளிவந்த வாநங் கழுமல வாணர்த மின்னருளே.

எனவும், திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில்,

[4]உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
கழப்பின் வாராக் கையற வுளவோ அதனுல்
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய்
தன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சிநேர் நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
பட்டி யஞ்சினுக் கஞ்சியுட் சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை யிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி
மெய்ம்மயிர்ப் புளக முகிழ்த்திட் டம்மெனக்
கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணிய
அஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொரு மூன்றும்
தோளொரு நான்குஞ் சுடர்முக மைந்தும்
பவள நிறம்பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை யதனினு முறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி

---

[1]பொன்வண்ணத்தந்தாதி, பா, 100. *'துறக்கம்பெறுவதுசொல்லுடைத்தே' என்பது அச்சுப்பாடம். [2]சிவஞானசித், சூ, 11, பா, 11. [3]திருக்கழுமலமும்மணி, பா, 6. [4]திருவிடைமருதூர்மும்மணி, பா, 10.

பையப் பையப் பழுத்துக் கைவர
எம்ம னோர்க ளினிதி னருந்திச்
செம்மாந் திருப்பச் சிலரிதின் வாராது
மனமெனும் புனத்தை வறும்பா றாக்கிக்
காமக் காடு மூடித் தீமைசெய்
ஐம்புல வேட ராறலைத் தொழுக
இன்பப் பேய்த்தே ரெட்டா தோடக்
கல்லா வுணர்வெனும் புல்வா யலமர
விச்சைவித் துகுத்துழி யானெனப் பெயரிய
நச்சு மாமர நனிமிக முளைத்துப்
பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்
பாவப் பல்தழை பரப்பிப் பூவெனக்
கொடுமை யரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கு முதவா
திமைப்பிற் கழியு மியற்கையோ ருடைத்தே.

என்பதனாற் பலவாற்றானும் பாகு படுத்தியதூஉம்.

[1]அடிசார்ந் தவர்க்கு முடியா வின்பம்
நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வம்.

எனவும் பிறவும் வருவதூஉ மவரநுபவித்தவாறே கூறியது காண்க. திருமந்திரமாலையுள்,

[2]ஒன்றுகண் டீருல கிற்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீருல குக்குயி ராவது
நன்றுகண் டீரினி நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே.

[3]ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
ஆறந்த மேய மடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் சிவானந்த மாமே.

[4]தின்பன் கடிப்பன் றிருத்தலு மாமே.

எனவும் பிறவும் நிகழ்தலானும் திருவிசைப்பாவில்,

[5]ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்குந் தேனே

[1] திருவிடைமருதூர், மும்மணி, பா, 22. [2] அணைந்தோர்தன்மை, பா, 6. [3] ஆறந்தம், பா, 13. [4] அணைந்தோர்தன்மை, பா, 24 [5] திருவிசைப்பா, கோயில், திருமாளிகைத், பா, 1.

அளிவளா ருள்ளத் தானந்தக் கனியே
யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

[1]பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்.

எனவும், (இங்ஙனந் திருவிசைப்பாச் செய்தாரும் போகநாதர் முதலிய சித்த சம்பிரதாயிகளாகலின் ஞானசந்தான குரவர்பாற் படலின் ஈண்டுத் திருமூல தேவ சிவாசாரியர்க்குப்பின்னா ரவர்மொழிவைத்தது என்க.) சிவஞான போதத்தில்,

[2]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்.

எனவும், சிவஞானசித்தியில்,

[3]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும், துகளறுபோதத்தில்,

[4]மெய்கண்டான் சந்தான மேவிச் சிவாநந்தங்
கைகண்டார் காணார் கரு.

எனவும், மோக்ஷகாரிகையில்,

19. शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्त्यादिभिः सार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥ (சு-111)

எனவும் இவ்வாறு பிறவும் வருதலான் அம்மாணிக்கவாசகமூர்த்திபோல ஏனைச்சமய குரவரும், பட்டினத்துபிள்ளை முதலிய தொல்லாசிரியரும், ஞான சித்தாந்த குரவர் கன்மசித்தாந்த குரவருஞ் சிவாநந்தாநுபவமுடையராதல் கண்டுகொள்க. இவ்வாறாயினு மனைவர்க்கும் பரமகுரு தேவர்பிரானை கயிலை யங் கடவுளாதலின் அவருமிவ்வாறுடைய ரென்பதூஉம் அவர்பால் அருள் பெற்ற தேவரினுயர்ந்த வொருவர்க்கும் இவ்வாறு சிவாநந்தாநுபவ முண்டென் பதூஉங் கூறவேண்டுமெனின் நீ கூறியவாறெல்லா முட்கொண்டு கூறுக்கால் உன்னிடத்துவைத்த கருணையா னல்செய்யவில்லையென நிகழினு நிகழுமாகலி னுடன்படற்கொரு வசனமும் ஒரு யுத்தியுஞ் சானுமாகலி னவ்வாறாகவும் மீள மீளப் பேதமையான் வினவுகின்றா யாயினும் நின்பால்வைத்த கருணையாற் கூறப்படும். அது ஞானசித்தியில்,

[1]திருவிசைப்பா, திருவாரூர், பூந்துருத்திநம்பிகாடவநம்பி, பா, 2. [2]சிவஞானபோ, சூ, 11, பா, 2.
[3]சிவஞானசித், சூ, 11, பா, 12. [4]துகளறுபோதம், பா, 1.

20. देवदेव जगन्नाथ शिवानन्द महेश्वर।
शिवप्रद शिवानन्द शिवयोगिन् महेश्वर॥

எனத் தேவிகூற்முக வருவதனுற் கயிலையங்கடவுணிலைமை கண்டுகொள்க. மகாபுராணத்தில் ஸ்காந்தத்து அரியரசம்வாதத்தில், சுவேதாரணிய மான்மி யத்தில்,

21. शिवानन्दार्णवे मग्नो न च सस्मार वै जगत्।
ममज्ज सुचिरं कालं शिवानन्दमहाम्बुधौ॥

என்றற் ருெடக்கத்தாற் றிருமாலே சிவாநந்தாநுபவம் பெற்றவாறும் காண்க. அத்திருமால் சிவாநந்தாநுபவியாகலினன்றே அவர்பாலருள்பெற்ற ஆழ்வாரும்,

> [1]யானுந் தானு யொழிந்தானை யாதும் யவர்க்கு முன்னேனை
> தானும் சிவனும் பிரமனு மாகிப் பணைத்த தனிமுதலை
> தேனும் பாலுங் கன்னலு மமுது மாகித் தித்தித்தென்
> ஊனி லுயிரி லுணர்வினி னின்றவொன்றை யுணர்ந் தேனே.

என்ருர். இவ்வாறு கன்மசித்தாந்த குரவர் முதலாகக் கயிலையங் கடவுளீருக மனிதராயும் வானவராயுமுள்ள முத்தான்மாக்க ளனைவரும் பரமசிவாநுபவ முடைமை எல்லாப் பிரமாணங்களானுந் தெளியக் கிடத்தலிற் பதியினதா நந்தம் முத்தர்க்கநுபவ விடயமென்றது. எனவே ஆன்மாவிற்குத் தனதாநந்தாநு பவமில்லை யென்பது பெறுதலானுந் தனதாநந்தந் தனக்கநுபவமாகாவிடினும் உண்டென்பதற்குப் பிரமாணமாகப் பிறரொருத்தரநுபவிக்க வேண்டு மாற்ருற் பெத்தராயினு முத்தராயினு மொருவராநந்த மொருவரநுபவிக்க வேண்டுமென நிகழ்தலானும், அவ்வாற்ருற் சிவனுங்கூட வான்மாநந்தத்தை யநுபவிக்கப் பெறுவரென நிகழ்தலானுமன்றிப் பெத்தாவத்தையி லான்மாவிற் காநந்தமில்லை முத்தியிலே யான்மாநந்தமுண்டெனக் கூறுதலி னவ்வான்மசிற்சத்தி பின்னர் ஆநந்த ரூபமாமெனிற் சிற்சத்தி யழிந்தமையி னறியப்படா தெனவும் அதனுற் சேடபாவமுடைய னென நிகழ்தலானும், அன்றிப் பால் தயிரானுற்போலச் சித்துருவம் ஆநந்த ரூபமாயிற் றென்ருற் பரிணுமாதி குற்றமுடைத்தாக லானும் பிறவாற்ருனும் ஆன்மாவிற்குஞ் சொரூபநிலையானவின்ப மில்லையென்றது பிரமாணவத்தாயிற்று. இன்னுந் தனக்கென வான்மா ஆநந்தமுடையனுகின் அஃதான்மாவின் குணரூபமாகையால்,

> [2]அந்தப்பே ரின்பந் திளைத்திருப்ப னுதிமுத்தன்.

என வநுபவிக்கப்படு மென்று நீ கூறு நியாயத்தானும் பிறர்க்கநுபவமாகா தேனும் நீயாயினு மநுபவிக்கலாமன்றே யவ்வாறநுபவியாது சிற்றின்பமான விடயாநந்தங்களை யிச்சித்துப் போசிக்குமாற்ரு னளவிறந்த கன்மங்களைத்தேடிக் கொண்டு சிவனுண்டானகாலந் தொடங்கி நீயும் உளையாகலி னிற்றைவரையும் பிறந்திறந்து வருந்துமாறென்னை யதனுனுங் கூடாதென்பதாம். அது மல திரோதத்தான் எனக்கு அநுபவிக்கப்படாதிருந்த தெனின் மலமிடையிட்டு

[1]நம்மாழ்வார், 8-ம் பத்து, 8-ந்திருவாய்மொழி, பா, 4. [2]பரமோப, பா, 7.

மறைக்கக் கிடந்து உனது வடிவாயிருத்தலி னது தடைப் படுத்தமாட்டாதாகலா னநுபவத்திற்கு வருமென்க. அற்றன்று. ஆன்மா வறிவே வடிவனுக இருக்கையினும் அதனை மறைத்தாற் போல் மறைக்குமெனின் அவ்வாறுயின் அதுவுங் கலாதிகளால் வெளிப்பட்டுக் கர்த்துருத்துவ முதலிய நிகழ்த்து மாறு போல் இதுவும் வெளிப்பட நிகழ்ந் தநுபவத்திற்கு வரவேண்டும். ஞானக்கிரியா சத்திக ளிரண்டென விவகரிக்கப்பட்டாலு முண்மையாயுள்ள தொன்றுபோல அந்தச் சிற்சத்தியே யாநந்தரூபமாக விருக்குமென்பது.

[1]பார்ப்பாரே தம்முணர்வின் பம்.

என்றற் றொடக்கத்தானே பெறுதலி னவ்வாறு கூடாமையானும் ஆன்மாநந்த மில்லை யென்பதாம்.

அன்றி ஆன்மா ஆநந்தமுடையனுக வேண்டும் சித்துருவமுடையனு கையான் சிவனைப்போல என்றற்குக் கண்ணையுஞ் சூரியனையு மெடுத்துக்காட்டி நிராகரித்தல் பொருந்தாதாம். கட்புலனுகாதவற்றிற்குக் கட்புலனு மிவைக ளெடுத்துக்காட்டாகாமையானும், மதங்கத்தில் (தர்மபட—சுலோ 72)

22. व्यक्तोऽसौ शिववद्भाति शिव एव तनुक्षये ।

எனவும், சிவதருமோத்தரத்தில்

23. संसारसागरान्मुक्तः शिवतुल्यः प्रजायते ।

எனவும் பிறவும் வருதலி ஞன்மாச் சிவனேடு சரியெனச் சமதை கூறுமாற்றுல் இவையும்,

[2]பொன்வாண் முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோல்.

எனச் சூரியன் போலக்கூறுதலானும் எனின்; அது கூறுதும். இங்ஙனம் எடுத்துக் காட்டியவற்றுள் சூரியனன்றி விழி கட்புலனுகாமையிற் பொருந்தும் அஃதாயினுமொழிக.

இங்ஙனங் கூறுமநுமானம் அன்வய வியாத்திரூபமுடையதாகக் கூறின மையின் அதனை விசாரிக்கிற் பலவகைப்பட்ட குற்றந் தங்கும். என்னெனில் 'சாத்தன் பொருணனி யுடையன் அதனேதுவாயுள்ள ஊழ்வினையுடைய னுகை யான் கொற்றனைப் போல' என்புழி அதனேதுவாயுள்ள ஊழ்வினை இந்திரிய கோசரமின்றி நின்றுங்குச் சிற்சத்தியினிற்றலின் ஏது அஞ்ஞான சித்தமுடைய தாகலானும், 'அனைத்துங் கணத்தினழி வுடைத்து சத்துவமுடைமையான் நீர்க் குமிழி போல' என்புழி வியாத்திக் கிரகணமின்றி நின்றுங்கு ஆனந்தமுஞ் சிற் சத்தியு நிற்றலின் வியாப்பியத்துவாசித்த வேதுவாகலானும், 'அறநெறிகள் வானுலக சாதனங்க ளல்ல கிரியாரூப முடைமையான் விளையாடன் முதலாயின

[1] ஐக்கியவியல், பா, 10. [2] சிவஞானபோ, சூ, 11, பா, 6.

போல' என்புழிப் பரலோக சாதனமன்றென்பதை ஆகமம் விலக்குமாறுபோல ஈண்டும்,

[1]சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித்து.

எனவும் 'சிவாநந்த மநுப்பிராப்பியம்' எனவும் பிறவும் வரும் ஆகமம் ஆநந்த மின்றெனா விலக்குதலானும், 'ஆன்மா வாநந்த ரூப னல்லன் ஒருவரானு மநுபவிக்கப்படாமையின் ஆகாசம் போல; யாதொன்றினிய பொருள் அஃதொருவரா னநுபவிக்கப்படும் கரும்புபோல' அவ்வாறின்மையின் ஆன்மா ஆநந்தரூப னல்லன். ஆன்மாத் தன்னைத் தானே அநுபவித்துக் கொள்வனெனின் அது கிரியா விரோத மாகையானும், அப்படி யொருபொருளு முலகிலின்மையானும், மாயாவாதப் பிரவேசமாகலானுஞ் சிவனுன்மாவை யநுபவிப்பன்.

[2]இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டாம்
ஒருவ னொருத்தி யுறின்.

என நிகழ்தலின் எனின்; அது ஞானத்தைவிட்டு ஞேயத்தழுந்திற் பேரின்பு ஆன்மாவிற் குண்டா மென்றதன்றிச் சிவனுன்மாவை அநுபவிப்ப னெனக் கூறாமை யானும், அவற்குந் தம்மைத்தாமநுபவிப்பின் முற்கூறிய குற்றம் வருதலின் தம்மையும் பிறரையும் ஊகத்தானே யறிதலான் அநுபவ ஞானம் ஓரிடத்துமின்மையானும், அநுபவஞானமுண்டாயி னுன்மாவைப் போலச் சுக துக்க பந்தமுடையனாதல் வேண்டுமாகையானும், ஒழிந்த பாசமநுபவிக்குமெனின் அது சடமாகையானும், ஒழிந்த முத்தரநுபவிப்பர் எனின் பெத்தான் மாக்களது சுகதுக்க முற்றும்வரை யடைதலானும் முத்தர் முத்தரை யநுபவிப் பரெனின் பெத்தர்க்கு ஆநந்தம் இன்றென வருமாற்றான் முத்தியினும் ஆன்ம குணமான வின்பமில்லை யென்றே வருதலானும், அவ்வாறு வசனங்க ளின்மை யான் முத்தான்மாக்களே பெறுகையாற் கர்த்தாவாக வேண்டுமாதலானும், இவரவனை யநுபவிப்ப ரெனவே அவனிவரையு மநுபவிக்கக் கூடுமாற்றான் வைபரீத்தியம் நிகழு மாதலானும் பிறவாற்றானு மொருவரானும் ஆன்மா நந்தம் அநுபவிக்கப்படாமை காண்க. மேற்கூறிய அநுமானம் ஆன்மாவிற்கு ஆனந்தமின்றெனா விலக்குதலான் நீ கூறிய அநுமானம் பிரகரண சமனுத லுடைமையானும், அக்கினி குளிர்ச்சியுடைத்து பதார்த்தத்துவ முடைமையால் என்புழிப் பிரத்தியட்சப் பிரமாணத்தான் பாதிக்கப்பட்டாற்போலச் சுவாநு பவப் பிரத்தியட்சப் பிரமாண முண்டாக வேண்டுமன்றே அவ்வாறு காணுமை யின் பிரத்தியட்சப் பிரமாணத்தான் பாதிக்கப் படுதலாற் பாதித விடயவேது வாகலானும், உலகம் எஞ்ஞான்றும் உளதாயிருக்கும் வத்துரூப மாகையா னென்புழி வத்துத்துவஞ் சாத்திய நிச்சயம் பண்ணமாட்டாதவாறுபோல ஈண்டும்,

24. सच्चिदानन्दरूपी यः सदसद्व्यक्तिवर्जितः ।

எனவும் பிறவுஞ் சிற்சத்தி சாதனமாக ஆநந்தஞ் சாத்தியமாக வேறுபடுத்திக் கூறாது இரண்டு மொன்றுமாறு சொரூபதன்மமாகவே கூறுதலான் ஈண்டுஞ்

[1]சிவஞானசித், சூ, 11, பா, 11. [2]திருவருட். இன்புறுநிலை, பா, 2.

சிற்சத்தியானந்த முண்மையைச் சாதன சாத்திய பேதமாக நின்று நிச்சயிக்க மாட்டாமையின் அனத்தியவசாய வேதுவாகலானும், பிறவாற்றானும் பல வகைப்பட்ட குற்றந்தங்கும் என்க. இங்ஙனம் அன்றாயின் சர்வஞ்ஞத்துவ சத்தி சத்தா ஞாபகத்தாற் சிவன் சர்வகர்த்தாவல்லன் சர்வஞ்ஞத்துவ சத்தி யுடைமையான் முத்தான்மாக்களைப் போல வெனவும் வருமென்க. மிருகேந் திரத்தில், (பிர-அத்வ-சுலோக-176)

25. न च सृष्ट्यादि कुर्वन्ति स्वार्थनिष्ठा हि ते यतः।

என்பதனன் முத்தான்மாக்கள் கிருத்தியம் பண்ணுமையறிக. இனிச் சிவனோடு முற்றுஞ் சமதை கூறின் அவனுஞ் சச்சிதானந்தரூபன் இவனுஞ் சச்சிதா நந்தரூபனென்றாற் றருமபேதமின்மையிற் றருமிபேதமு மின்றாமாற்றான் ஏகான்மவாதமே சித்திக்குமாகலா னதுபொருந்தாது. என்னை? சூதசங்கிதை யில் யக்ஞ வைபவகண்டத்தில், (அத்தி-39.)

26. केनचित्साधनेनैव मुक्तः शिवसमो भवेत्।
इत्येवं केचिदिच्छन्ति वादिनो मुनिपुङ्गवाः॥ 45

वार्तामात्रमिदं प्रोक्तं सर्वथा न तदर्थवत्।
एकदेशेन वा जीवः किं वा सर्वात्मना समः॥ 46

एकदेशेन चेत्सर्वे शिवाः संसारवर्तिनः।
एकदेशेन सर्वेषामस्ति साम्यं शिवेन हि॥ 47

सर्वात्मना चेत्साम्यं तत्सर्वथा शिव एव सः।
भेदकारणशून्यत्वाद्भेदाभावाच्च वस्तुनः॥ 48

तस्माज्जीवः स्वतः साक्षाच्छिवः सत्यादिलक्षणः॥ 50

எனவருதலின்என்க. இதனேயன்றே இரௌரவத்தில்,

2. द्विधा सच्चित्स्वरूपो हि ज्ञत्वकर्तृत्वभिन्नतः।
तस्मादेकोऽपि पूज्यो हि नान्यश्च इति कथ्यते॥

எனவும், சிவஞானசித்தியில்,

[1]சிவனுயிர்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்
ஆவனென் றிடின நாதி மலமிவற் றினைம றைக்குங்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் றுகும்.

எனவும்,

---

[1]சிவஞானசித். சூ. 1. பா. 64.

[1]சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
அவன்றானே யறியுஞ்சித் தாதலினு லிரண்டு
மனைத்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கும்.

எனவும் பிறவும் வருவதூஉம் என்க. இதனுள் 'அருட்சித்து' என்பது ஆநந்த ரூபமாயுள்ள சித்து என்பதாம். என்னை? (சர்வஞான-பட-2-சு-61)

9. शिवज्ञानामृतं पीत्वा विचरन्स्वयमेव हि ।

எனவும்,

[2]அருளா ரமுதத்தை வாரிக்கொண்டு.

எனவும்,

[3]தன்கருணைத் தேன் காட்டி.

எனவும்,

[4]ஒளிவந்த வாபொய் மனத்திரு ணீங்கவென் னுள்ள வெள்ளந்
தெளிவந்த வாவந்து தித்தித்த வாசிந்தி யாத தொரு
களிவந்த வாவன்பு கைவந்த வாகடை சார வையோ
எளிவந்த வாநங் கழுமல வாணர்தம் மின்னருளே.

எனவும் அருளை யினிமையுடைத்தாகக் கூறலின். அஃது ஆசிரியரால்,

[5]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனக் கூறப்படுதலானும் பெற்றும். இவ்வாற்றான் முற்றுஞ் சமதை கூடாமையிற் பிறிதொவ்வொரு நிலைமைபற்றி யொருபுடை யொப்புமையாற் சமதை கூறியதாகலின் ஆன்மாவையுஞ் சூரியனையும் போல ஒருவழி உவமை கூறுதலாற் சிவனொடு முற்றுஞ் சமதை கூறப்படாதென்க. அங்ஙனங் கூறியது ஆன்மாவினது இச்சாஞானக்கிரியைகளை மலமறைத்தற்கே யாகலின் அதனானே யாநந்தநிலை யொப்புமை கொள்ளப்படாதென்க. எனவே எவ்வாற்றானும் பிறர்க்கறிவிக்கவேண்டி யிருத்தலான் ஒருதருமங்கொண்டு ஏனையவுமொக்கு மென ஆன்மாவிற்குஞ் சிவனுக்குஞ் சமதை கூறுவானை மறுத்தற்கு உலகிற் காணப்படாதபொருளை யெடுத்துக்காட்டின் உணர்தற்கருமை கருதிக் காணப் பட்ட கதிரோனையும் பெரும்பான்மையு மனைவர்க்கும் புலப்படுங் கண்ணையு மெடுத்துக்காட்டிக் கூறுதல் உலகில் அனைவர்க்குமொப்ப முடிந்ததாகலிற் குற்றமின்றென்பதாம். இதனானேயன்றே சித்தாந்த சங்கிரகத்தில்,

[1]சிவஞானசித். சு. 11. பா. 11. [2]திருவாசகம், அடைக்கலப்பத்து. பா. 10. [3]திருவாசகம், அம்மானை, பா. 6. [4]திருக்கழுமலமும்மணி, பா. 6. [5]சிவஞானசித். சு. 11. பா. 12.

27. परमेशार्ककिरणप्रकाशीकृतचक्षुषा ।
मुक्तात्मनाऽक्षिवच्छम्भुर्ज्ञायते शिवतेजसा ॥

எனவும், மோக்ஷகாரிகையில் (சு-111)

19. शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्त्यादिभिः सार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥

எனவும் பிறவும் வருவதூஉமென்க. இதனானே முன்னர்,

[1]உடலுயிர் கூடி யொருவ னவனூன்
உடல்கண் டதனுளுயிர் காணன்—படர்வழியிற்
கண்டே னொருவனை யென்பா னவனைப்போற்
கண்டானுட் பேருயிர்கண் டான்.

எனப்பிறர் கூறியது பொருந்தாதென்பதை மிகவும் வற்புறுத்தியதூஉமாயிற்று. ஆகவே கண்ணுங் கதிருந் தேசோரூபத்தானொத்தவாயினும் வேறுபாடுடையன வாதல் போலச் சித்துருவத்தாற் பிறிதொரு நிலைமைபற்றி யொத்ததாயினும் ஆநந்தத்தா னெவ்வாதென்பது வலியுடைத்தென்பதாம். இவ்வாறாகவும் பிறர்மயங்கக் கூறுதலினன்றே கேட்டாயோ கேட்டிலேயேற் கேள் என்றார். இதனாற் பிறர் பிரதிஞ்ஞாந்தரமென்னும் நிக்கிரகத்தானத்தாலும் நிராகரிக் கப்பட்டார்; ஒருபுடை யொப்புமையாற் சமதையென்னும் விசேடணஞ் சொன்ன வாறே கூடியுடன்படலின். பிறவுமன்ன.

பன்னிரண்டாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

[1]ஐக்கியவியல், பா. 12.

உ

திருச்சிற்றம்பலம்

# பதின்மூன்றும் பாட்டு

ஓரின்ப மில்லா துறுமலங்கள் போக்கியிடும்
பேரின்ப நின்குணமென் பேதாய்கேள் — பேரின்ப
நின்குணம்போற் றோன்றுமது நீயாகை யானிரும்பு
தன்குணமோ தீயியல்பு தான்.

எ-து பாட்டு. எ-ன், இது முன்னர் ஆன்மாநந்தமுண்டென்பதை ஆகமம் சுவாநுபவம் அநுமானம் என்னும் மூவகைப் பிரமாணங்களானும் நிராகரித்தமையின் உடன்பட்டு நின்றவனுக்கு அவன்பாற் றோன்றியவின்பம் அவனோடொற்றுமைபெறத் தோன்றியதைத் திட்டாந்த பூர்வமாக இதுவென இன்னுமொருவாற்றான் உணர்த்துகின்றது; முன்னுமுணர்த்தப்பட்டிருத்தலின்.

ஓர்இன்பம் இல்லாது உறுமலங்கள் போக்கியிடும்
பேர்இன்பம் நின்குணம்என் பேதாய்கேள்

என்பது, ஒப்பற்ற இன்பவடிவான சிவரூபத்தை அறியவொட்டாது மறைக்கும் மலங்களைப் போக்கியிடும் அப்பேரின்பம் இப்பொழுதுன்பால் நிகழ்ந்தது கொண்டு உன் குணமென்றே கூறிக்கிடந்த மடவோய்! அதனிலை உணர்த்துதுங்கேள்.

பேரின்பம்
நின்குணம்போல் தோன்றும்அது நீயாகையான் இரும்பு
தன்குணமோ தீஇயல்பு தான்.

என்பது, அங்ஙனந் தோன்றும் பேரின்பந்தானே நீயாய் இரண்டற நிற்றலின் உன்குணம்போற் றோன்றும்; அஃதெவ்வாறெனின் இரும்பைச் சேர்ந்த தீயின்குணம் இரும்பின்குணமாகவே தோன்றுமாறு போலென்றவாறு.

அங்ஙன மறியப்படாத சிவரூபமான வாநந்தமே உபாசனையான் மலபந்த நிவர்த்திசெய்து முத்திதசையிற் றோன்றிற்றென்பது,

1. आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिबर्हणम् ।
आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ॥

என்றற் றொடக்கத்தானறிக.

இவ்வாறுயிற் சங்கிராந்தமதப் பிரவேசமுண்டாம் பிறவெனின் அவனைப்போற் சிவகுணமான ஆநந்தம் ஆன்மாவிற்குக் குணமாய் வருமென்

ஞது தருமிரூபமான சிவன் அவ்வாற்று ஞன்மாவினிடத்து ஐக்கியந்தோன்ற மாத்திர நிற்பனென்றலின் அது கூடாதென்க. அம்மதப் பிரவேசம் ஆன்மாநந்த வாதிக்காயிற் கூடும், உண்மையாற் சிவனுக்காநந்தமின்மையின் அது சிவகுணமாதலின் அதனை யான்மகுணமாகக் கூறுதலின். என்னை ?

[1]இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத
மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு
மலமறுப்போ ரான்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனைசெய் தர்ச்சிக்க சிவனுளத்தே தோன்றித்
தீயிரும்பைச் செய்வதுபோற் சிவன் றன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் றுருவப்
பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே.

எனவும், சிவஞானபோதத்தில்,

2. शिवेनैक्यं गतः सिद्धस्तदधीनस्ववृत्तिकः । (சூ-10)

எனவும், திருமந்திரத்தில்,

[2]ஒன்றின் றுள்ளே யுணர்ந்தேன் பராபரம்
ஒன்றின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
ஒன்றின் றுள்ளே யுணர்ந்தே னுணர்வினை
ஒன்றின் றேபல வூழிகண் டேனே.

எனவும் பிறவும் வருதலின். இதனாற் சித்திக்கும் அத்துவிதத்தைப் பதி ஞன்கு பிரகாரமாக விகற்ப விருத்திப் பிரமாணத்தான் விகற்பித்துச் சாதிரிசியத்தானைக்கியமின்றிக் கூடாதென்றது எவ்வாறுமெனின் அது கூறுதும்.

ஈண்டத்துவித மென்றது ஒன்றுமிரண்டுமன்றி நின்றவோர் நிலைமையே யாகலின் அஃது அவ்விகற்ப விருத்திப் பிரமாணத்தானிராகரிக்கப்படாமை யானும் அன்றியாகமவசனப் பிரமாணத்தானவர் விகற்ப விருத்திப் பிரமாணம் வாதிக்கப்படுகையானும் அவர் கூறியது பொருந்தாதென்க. என்னெனில் சந்திர பிம்பமும் பிரதிபிம்பமும்போல நிருபசரித வைக்கியமும், தாணுவும் புருடனும்போல வாதைப்படு மைக்கியமும், கனகமுங் குண்டலமும் போலப் பரிணமைவைக்கியமும், நீலமும் உற்பலமும் போலச் சமவாய வைக்கியமுங், கலுழனும் மாந்திரிகனும் போலத் தாதான்மியவைக்கியமும், காய்ந்த விரும்பும் உண்ட நீரும்போல நாசவசத்தானைக்கியமும், மரித்த பிதிருவுந் தேவபிதிருவும் போல விகிதயோசனை கன்மத்தானைக்கியமும், காமுகனுங் காமினியும் போல ஆநந்தவசத்தானைக்கியமும், நட்புடையா ரிருவரதுபோல நட்புடமையானைக் கியமும், ஈண்டுக்கொள்ளாமையான் இவ்வொன்பதும் போக ஒழிந்த ஐவகை யாற் கொள்ளினுங் குற்றமின்றாகலின் நீரும் நீரும்போலக் கொள்வது ஆற்று

[1]சிவஞானசித், சூ. 9. பா. 12. [2]மோனசமாதி, பா. 18.

நீருங் கடனீரு மிருபொருளாயிருந்த அவ்விரண்டும் ஒன்றுபோலக் கலந்து உவர்நீராய்த் தோன்றுதற்கே கோடலானும் எள்ளுமெண்ணெயும்போலக் கொள்ளுவது வியாபக வியாப்பிய பாவத்திற்கே கோடலானும் காட்டமு மக்கினியும் போலக் கொள்வது மலமறுத்தற்கு மாத்திரமே கோடலானும் தீபாலோக சௌராலோகத்தி னதபிபவவசத்தானைக்கியஞ் சிவசமதை வாதைப்படுமாற்றாற் கொள்ளினுங் கொள்ளப்படுமாதலானும் அக்கினியுமிரும் பும்போலக் கொள்வது இவனைத் தானாக்குதன் மாத்திரத்திற்கே கோடலானும் நீ கூறியவாறன்றி வேறோராற்றான் நிகழ்தலின் என்க.

இவ்வாறன்றிச் சாதிரிசியவசத்தானைக்கியங் கூறின் முற்றுஞ் சமதை கூடாதென முற்கூறியவாறே நிராகரிக்கப்படுதலானும் நிருபசரித வைக்கியங் கொள்ளின் மாயாவாதப் பிரவேசமாகலானு மொருபுடையொப்புமையானன்றிக் கொள்ளப்படாமையி னவ்வாறு கொள்ளின் உன்னால் நிராகரிக்கப்பட்ட நட்புடையாரைக்கியமுங் காமுககாமினியைக்கியமும் போல மிகவும் பேதந் தோன்றுதலானும் அவ்வாறு கொள்ளின் வண்ணத்தான் மேகமுங் கூந்தலும் வடிவாற் றுடியு மிடையும் போல்வன பிறவுமொன்றிற்கொன் றைக்கியங் கொள்ளக் கிடத்தலானும், அன்றி விருப்பு வெறுப்பின்மையிற் சித்தொடு சிவனுமொன்றெனக் கூறவும் படுதலானுஞ் சிவாநந்தாநுபவங் கிடையாமை யான் ஒழிந்த பெத்தர்போல முத்தரும் இருப்பாரென வருதலானும் ஆகமப் பிரமாணவாதிதமுடைமையானும் பொருந்தாதென்க. அவையாமாறு சீவ சிவ வைக்கியத்தாற் சம்பவித்தலேயன்றிப் பிறிதொன்றானுஞ் சிவாநந்தஞ் சம்பவியாதென்பதற்கு ஞானசித்தியில்,

3. शिवानन्दमयं प्रोक्तं स्वानुभूतिस्थितं भवेत् ।

मूकस्वप्नमिवाहुर्निरतिशयात्मविज्ञानम् ।
सत्संप्रदायसिद्धं सन्ततजातप्रकाशसद्भावः ॥

तस्मात्स्वरूपं सर्वत्र प्रकाशानन्दविग्रहम् ।
तत्प्राप्तिस्तत्परा मुक्तिः शिवजीवैक्यसंभवा ॥

எனவும், இரௌரவத்தில்,

4. एवं शैवाध्वरं प्राप्य दीक्षामन्त्रसमुद्भवम् ।
न पुनर्जन्मतां याति दीक्षितो मनुजोत्तमः ॥

भिन्ने देहे शिवो भूत्वा शिवधर्मैः समन्वितः ।
शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ॥

जलं सामुद्रमासाद्य नदीह्रद्याम्बुवाहिनी ।
क्षारतोयत्वमायाति प्रभावाद्धि महोदधेः ॥

एवं वै देहभिन्नात्मा शिवमेवाधिगच्छति ।

எனவும், அதிலேயே,

5. एवं दीक्षा विशुद्धात्मा देहस्थोऽपि न देहभाक् ।
निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः ॥

देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।
न पुनर्भेदमायाति सरित्तोयमिवाम्बुधौ ॥

எனவும், சுப்பிரபேதத்தில், (யோக-பட 3.)

6. सालोक्यं चैव सामीप्यं सारूप्यं सायुज्यं तथा ।
ध्यानाल्लोकं तु संप्राप्य सालोक्यं तद्विधीयते ॥ 98

तद्देवस्य समीपत्वात् सामीप्यमिति चोच्यते ।
तत्तद्रूपं तु लब्धं स्यात् सारूप्यमिति च स्मृतम् ॥ 99

शिवे संयोजितं रूपं सायुज्यमिति कथ्यते ।
ज्ञानात्सायुज्यमेवं तु तोये तोयं यथा तथा ॥ 100

எனவும், வாதுளத்தில்,

7. पुरुषश्च शिवे चैव लीयते चायसाग्निवत् ।
यथा ताम्रं रसं विध्येद्दोषयुक्तं पुरातनम् ॥

तथा चात्मा शिवे लीनो *जलेन लवणे न तु ॥

अविशेषं भवेत्तद्वदात्मा तु परमात्मनि ।
एवं शिवामृतं प्रोक्तमप्रकाश्यमिदं गुह ॥

எனவும், அசிந்தியவிசுவத்தில் சமாதிராசபடலத்திலே,

8. रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ।
चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ॥

एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।
गुरुवक्त्रेण तत्सिद्धिरानन्दस्तु न संशयः ॥

எனவும், கிரணத்தில்,

तथात्मशिवयोः सन्धिरयस्कान्ते व उच्यते ।

எனவும், சர்வ ஞானோத்தரத்தில்,

9. ताम्रस्यैव तु हेमत्वमन्तर्लीनं यथा स्थितम् ।
अन्तर्लीनं तथा ज्ञेयं शिवत्वं पुद्गलस्य तु ॥ (பட-1. சு-5)

रसविद्धं यथा ताम्रं हेमत्वं प्रतिपद्यते ।
तथात्मा ज्ञानसम्बन्धाच्छिवत्वं प्रतिपद्यते ॥ (பட-1, சு-6)

रसेन्द्रेणेव लोहानां कालिकास्पर्शवेदिना ।
हारितामग्निसंयोगाद्धेमत्वं प्रतिपद्यते ॥

हारितं परमेशे तु पशूनां पाशकालितम् ।
स्वकारणगुणवशाद्धेमत्वं प्रतिपद्यते ॥ (சு-2)

எனவும், சிவஞானபோதத்தில்,

10. अन्यः सन् व्याप्तितोऽनन्यः कर्ता कर्मानुसारतः ।

எனவும்,

[1]பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணருள்
அத்துவித மாத லருமறைக ளொன்றென்னு
தத்துவித மென்றறையு மாங்கு.

[2]அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போல்
உருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப னின்று.

[3]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினு—னேகமாய்
உள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
உள்ளத்தாற் காணுனே வுற்று.

[4]சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

எனவும், சிவஞானசித்தியில்,

[5]இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன வழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

---

[1],[2]சிவஞானபோ. சூ. 2. பா. 3, 4. [3]சிவஞானபோ. சூ. 11. பா. 2. [4]சிவஞானபோ சூ. 8. பா. 7. [5]சிவஞானசித். சூ. 11. பா. 12.

[1]* * உடலுயிர்கண் ணருக்க
னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகும்.

எனவும்,

[2]ஒன்றிரண் டாகி யொன்றி னொருமையா மிருமை யாகி
ஒன்றிலொன் றழியு மொன்று தென்னி னொன் றாகா தீயின்
ஒன்றிரும் புறழி னின்று முயிரிணைந் தொழிலும் வேண்டும்
ஒன்றிநின் றுணரு முண்மைக் குவமையா வைத்தொ டொன்றே.

எனவும், திருவருட்பயனில்,

[3]தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள்.

எனவும், பிள்ளையார்தேவாரத்தில்,

[4]சேர்வார் தாமே தானகச் செய்யுமவ னுறையுமிடம்.

எனவும், திருவாசகத்தில்,

[5]தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே.

எனவும் பிறவும் வருமாற்றா னத்துவிதமாமாறுகாண்க. இவ்வாறே திருமந்திர மாலை, ஞானசித்தியாகம முதலியனவற்றுள் வருவனவும் வேண்டுமேற்கொள்க. இரௌரவத்தில்,

11. द्विधा सच्चित्स्वरूपो हि ज्ञत्वकर्तृत्वभिन्नतः ।
तस्मादेकोऽपि पूज्यो हि नान्यश्च इति कथ्यते ॥

எனவும்,

[6]சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
அவன்றனே யறியுஞ்சித் தாதலினா லிரண்டு
மணைந்தாலு மொன்றாகா தநியமா யிருக்கும்.

எனவும், ஞானசித்தியில்,

12. अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ।
ज्ञानात्सायुज्यमाप्नोति शुद्धात्मा शिवसङ्गमम् ॥

---

[1]சிவப்பிர. பாயிரம். பா, 7. [2]சிவப்பிர. சூ. 10. பா, 8. [3]திருவருட். இன்புறு. பா. 4. [4]சம்பந்தர். திருக்கழுமல. பா. 7. [5]திருவாசகம். கோயிற்றிருப், பா. 7. [6]சிவஞானசித். சூ. 11, பா. 11.

*எனவும் பிறவும் வருமாற்றாற் சாதிரிசிய வைக்கியங் கூடாமை யுணர்க. இவ்வா றத்துவிதங்கொள்ளாக்கால் அசிந்திய விசுவத்தில் கருமநிருவாண தீக்ஷாபடலத்தில்*

13. शिष्यात्मानं च तत्रैव लीयमानं विभावयेत्।

*எனவும், கிரியாக்கிரம பத்ததியிலும்,* (பக்கம் 354)

14. शिष्यचैतन्यं शुद्धस्फटिकमणिप्रख्यं सञ्चिन्त्य गुरूपदिष्टमार्गेण मन्त्रमुच्चरन् हृत्कण्ठतालुभ्रूमध्यब्रह्मरन्ध्राब्जनिवासिनः कारणेशान् क्रमेण त्यजन् प्रशान्तलीनः शक्तिकालौ स्मरन् सर्पिषो धारां विमुञ्चन् सप्तमे शक्त्यतीते द्वादशान्ते ज्वालान्तेऽपि परमानन्दस्वरूपे मनोऽतीते भावशून्ये नित्यगुणोदये शिवे संयोजयेत्।

*எனக்கூறும் யோசனையுந் தசகாரியத்துள் சிவயோக சிவபோக முதலானவுங் கூடாதென்க. எனவே* நின்குணம்போற் றேன்றுமது நீயாகையா னிரும்பு தன்குணமோ தீ யியல்புதான் *என்றது மிகவும் வலியுடைத்தாயிற்று. பிறவு மன்ன.*

**பதின்மூன்றும் பாட்டுரை முற்றியது.**

*திருச்சிற்றம்பலம்.*

உ
திருச்சிற்றம்பலம்

# பதினான்காம் பாட்டு

ஆசகற்றி நின்னறிவி லாநந்த மாஞ்சிவனைக்
கூசகற்றி யுன்றன் குணமென்று — பேசியிடும்
பேயாவா திக்கேது பேசிடினீ தானந்த
மாயாவா திக்கே மகன்.

எ-து பாட்டு. எ-னின், முற்கூறியவாறே பிரமாண விரோதங்கண்டும் ஆன்மாநந்த முண்டென்பானை இச்சமயத்திற்குப் புறனாகத் தள்ளுமாறு கூறுகின்றது.

**ஆசு அகற்றி நின் அறிவில் ஆநந்தம் ஆம் சிவனைக்**
**கூசு அகற்றி உன்றன் குணம் என்று — பேசியிடும்**
**பேயா ! வா**

என்பது, மலமகற்றி நின்னறிவின் மகிழ்ச்சியுமுண்டாதற்குக் காரணமாயுள்ள சிவாநந்தரூபமான இரதத்தைக் கூச்சமில்லாம லுன்றன் குணமென்று கூறும் பேயா! வா.

**திக்கு ஏது பேசிடின் நீதான் அந்த**
**மாயாவாதிக்கே மகன்**

என்பது நீ கூறுமாறு போல் ஒருமதவாதிகளுங் கூறாமையின் அதனானே யொருநூல்வசனமாயினு மின்மையின் உனக்கு வேறோர் புகலிடமில்லையன்றே. ஆயினு மொருவழி சொல்லுதுங்கேள். நீதான் அந்த மாயாவாத மடைதற்குரிமை யின்மையின் அவன் மகனென வொருபெயர் புதிதாகப்பெற்றுத் திரிவாய் என்றவாறு.

**ஆசு** என்றது மலம்; அது காரியவாகு பெயர். **அகற்றி** என்றது தனதாநந்தமாயின் மலமகற்றல் கூடாமையின், இதனானுஞ் சிவரூபமென்பதறிவித்தற்கு. **ஆநந்தம்** என்பது [1]'ஆநந்த மென்ப தகமகிழ்ச்சி யேயாகும்' என்பதனான் மகிழ்ச்சியாயிற்று.

**கூசு** என்பது பேசு பூசு என்றாற்போல முதனிலை வினைச்சொல் ஈண்டுத் தொழிற்பெயராய் நின்றது. 'கூசாரம் பூண்ட' என்றாற்போலும். **கூசகற்றி** என்றது பலவாற்றானுந் தோல்வித்தானம் பெற்றிருக்கையினும் நாணின்றி முன்னர்க்கூறியவாறே கூறிநிற்பது கருதி. அன்றி அடிமையாயினார் ஆண்டவனைத் தன்னியல்பி னடங்கியதாகக் கூறுவது கேட்பிற் பிறர் நகுவராகலிற் பதியைத் தனதியல்பினடக்கிக் கூறினு மந்நகைவருமாற்றா னதற்கஞ்சாமை கருதிநின்ற தெனினுமாம்.

---

[1]உரிச்சொனிகண்டு. பண்பு. பா. 7.

**பேயா வா** என்றது ஒருவனென்றிற்கும் பற்றுனயினும் ஒரோவழி வலிய பேயேறியவழி அவன்பாலுள்ள சந்தத மொழியுமளவு மவன் வார்த்தை கேட்ப ராகலினதுபோல ஈண்டும் ஒருவாற்றானும் பெருமையிலராதலி னவர்வார்த்தை கேட்கத்தக்கதன்றெனினுஞ் சித்தாந்தியெனப் பெயர் படைத்துக்கொண்டு சிவாகமவசனங்களுட் சிலகூறுதலி னங்ஙனங் கூறுவது முழுதுங் கேட்க வேண்டுமாதலா னவ்வளவுங் கேட்டும் பயன் படாமை கருதியொழிதலின் இவரை நோக்கியுஞ் சில சங்கோத்தரமாகக் கூறவேண்டிற்றென்பது தோன்ற நின்றது. மாயாவாதிக்கே மகன் என்றது

1. **आत्मन्येव रतिक्रीडां शुद्धात्मा कुरुते सदा ।**

எனவும்,

2. **आत्मा ज्ञातव्यः**

எனவும், பிறவுங் கூறியதை,

3. **सुतीव्रा अपि नोपाया स्वात्मविच्छेदकारकाः ।**
**असिधारा सुतीक्ष्णाऽपि न स्वात्मच्छेदिका यतः ॥** (மோட்ச. 67.)

எனவும்,

[1]தன்னிற் றன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே.

எனவும், பிறவு நியாய விரோதங்காட்டி மறுக்கவும், அஃதுட்கொண்டு முற் கூறியதொழியாது பின்னும் பிதற்றுவானாகலின் அவ்வாறே இவ்வான்மாநந்த வாதிக்கு மொத்தலின். ஆயின் அவன்றானேயாக வென்னாது மகனென்ற தென்னையெனின் அவனைப்போலே ஏகான்மவாதங் கூறாத தொன்று குறை யாகலின். அன்றியும் முத்தியிலே அவன் தருமிபேத மில்லையென்பன் இவன் றருமபேத மில்லையென்பன்; அச்சச்சிதானந்த தருமஞ் சிவனுக்குஞ் சீவனுக்கு மொக்கும். அதனானே அவன் மதானுகூலமாகவே கூறுதலி னுரிமைபற்றி யவனுக்கு மகனென்றதெனினுமாம். இதனானேயன்றே பிதாவினுடைமை பிள்ளை பெற்றாங்கு அவன் கூறும் பிரமகீதை வசன மிவனுட்கொண்டு உதாகரிப்ப தூஉமென்க. மாயாவாதிக்கேஎன்ற ஏகார மென்னைகருதியதெனின் பிறரை நீக்குதலிற் பிரிநிலை ஏகாரம்; இத்துணையுஞ் சைவனென வந்தவனைப் பலர்க் கும் புதல்வனெனக் கூறாமையின். அன்றி யவ்வாறிவனியல்புக்குச் சிறிதொப் புமை பற்றி நின்றமதமே பிறிதுண்டெனினு மதனை நீக்கியதெனினுமாம். அஃதியாதெனின் மேற்கூறுமாற்றான் விளங்கும். பிரதிவாதி நிக்கிரக யோக்கிய மானதைச் சொல்லியிருக்கவும் அதை யறிந்தேயாத லறியாதேயாத னிக்கிர கித்துப் பரிகாசம் பண்ணாதிருப்பது 'பரியநுயோச்சியோபேக்ஷணம்' என்னும் நிக்கிரகத்தான மென்பராகலின் ஈண்டு **மாயாவாதிக்கே மகன்** என்றது இப் பொழுது யாதானுமொரு சமயத்தின்பாற் படுத்தவேண்டுமென்றிரப்ப வதன்பாற் படுத்தலின் என்க.

**பதினொன்காம் பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

---

[1]உமா. சங்கற்பநிரா. மாயாவாதிநிராகரணம். வரி, 195, 196.

திருச்சிற்றம்பலம்

# பதினைந்தாம் பாட்டு

என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்
துன்றுசிவ போகமெனச் சொல்லாமல் – உன்றன்
நலம்போக மென்றுரைத்தாய் நாமறிவோ நீயு
மலம்போக முத்தியென்ப வன்.

எ-து பாட்டு. எ-னின், இதுவுமது.

**என்றும் பிரியா இருள் அருளால் நீங்க இன்பாய்த்**
**துன்று சிவபோகம் எனச் சொல்லாமல்**

என்பது, அநாதியே நீங்கா விருள் அருளால் இன்று நீங்க ஓரின்ப வடிவாய் வந்து கலந்துகோடலின் அதனைச் சிவபோகமென்றே சொல்ல வேண்டும் அவ்வாறு சொல்லாமல்.

**உன்றன்**
**நலம் போகம் என்று உரைத்தாய் நாம் அறிவோம் நீயும்**
**மலம்போக முத்தி என்பவன்**

என்பது, உன்ற னினியகுண முனக்குப்போகமாய் விளைந்த தென்றாய்; அதனு னுன்னை யாமறிவோம். யாராகவறிவீரெனின் மலம்போக முத்தியென்பவனாக வறிவோம் என்றவாறு.

இருள்போக வேண்டிப் பாவிக்கப்பட்ட வாநந்தமே வெளிப்படலின் அவ்வாநந்தத்தான் இருள்போகக் கண்டிருக்கவும் அதனைப் போக்கமாட்டாப் பிறிதொன்று தனக்கு வெளிப்பட்டதென்பது நினைத்ததொன்று நிகழ்ந்த தொன்றென்றாற்போல வருநியாயவிரோதமாகலின் அது தோன்றற்கு **என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்** என்றது. என்னை?

1 **आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिवर्हणम्।**
**एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः॥**

என வருதலின் இதனுள் ஆநந்தத்தைப் பாவிக்கச் சொன்னதூஉம் அந்த வாநந்தம் பெற்றபிறகே மலநிவர்த்தி வருமென்றலின் அஃததனை நிவர்த்தி பண்ணவல்லதென்பதூஉம் ஆன்மாநந்தமாமாயின் இவ்வாறு கூடாதென்ப தூஉம் கண்டுகொள்க. இந்த இன்பே சிவபோக மென்பது வாதுளோத்தரத்தில்,

2 सद्भोगं वाङ्मनोतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगं च तदेव परमं सुखम् ॥

எனவும் பிறவும் வருமாற்றானுணர்க. இங்ஙனம் பரமோட்சநிராசகாரிகையுள்,

3 *प्रमाणाग्नेयकर्तृत्वविशिखामलंकारकाः ।

என வுத்தேசித்தவாறே

4 आधिक्यं परमेशानां निर्मलत्वं च केवलम् । (4)

எனச் சங்கற்பிக்கப்பட்டவனன்றே அவன் பிறிதொருவாற்றாற் கூறுதலே யன்றி இவ்வாறு நந்தாபிவியத்தி கூறுமையின் இவன் அவனன்றாம் பிற வெனின் இதனையேயன்றே முன்னரிவன் ஒரு மதத்துப்பிரவேசமுங் கிடையா தவனென்றதூஉம் அதனானியு மலம்போக முத்தியென்பவனெனவே அவன் போல வொருவனென்றே பெறக் கிடத்தலி னவனன்மை இயல்பே யாமென்க. ஆயின் வேறொன்றன்பாற்படுத்தா திதன்பாற்படுத்தவேண்டிய தென்னை யெனின் முன்னர்க்கூறுஞ் சிலநியாயங்களா னிருவருக்கு மலம்போக முத்தி யென்பது வெளிப்படமிற்றலி னிதன்பாற் படுத்தியதென்க.

அவன் கூறுவதொருவாற்றான் அறிவுடைமைகூறி மலநிவர்த்தி முத்தி யென்பது இவனும் ஒருவாற்றான் அறிவுடைமை கூறுவதனோ டாநந்தமுங் கூறலின் மலநிவர்த்தி முத்தியென்பது. இவரிருவருக்கும் பேதம் இதுவே என்க. பிறவுமன்ன.

பதினைந்தாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

* இது இரௌரவகுத்திரத்திலுள்ளது.

# பதினாறும் பாட்டு

தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூல்
இன்பமுயிர்க் குண்டென் றியம்பியதேல் - இன்பஞ்சீ
வான்மாவிற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம்.

எ-து பாட்டு. எ-னின், இஃது அங்ஙனம் நிராகரிக்கப்பட்ட ஆன்மாநந்தவாதி தனக்கு இயைந்தனபோலக்கருதி வசனப்பிரமாண மெடுத்தானன்றே; அதுவும் அவன் கருதற்கியையாது சிவாநந்தானுகூலமாயே முடிந்தது என்பதை யுணர்த்துகின்றது.

**தன் பிரமகீதை வேதாந்தஞ் சிவாகமநூல்
இன்பம் உயிர்க்கு உண்டு என்று இயம்பியதேல்**

என்பது, உபநிடதத்தின் வழியேசென்ற சூதசங்கிதையிற் பிரமகீதையும் அதற்கு முதலான வேதாந்தமென்னும் அவ்வுபநிடதமுஞ் சித்தாந்தமான சிவாகமமும் அதன் வழிநூல்களுஞ் சீவனுக்காநந்த முண்டென்னுவன்றே. அங்ஙனம் உண்டெனக் கூறியது ஒரோவழி நிகழுமாயின்.

**இன்பம் சீவான்மாவிற்கு உண்டு என்று அறைந்தது அன்று நின்ற பரமான்மாவிற்கு உண்டு என்றது ஆம்**

என்பது, சீவான்மாவிற்குக் குணரூபமாயுள்ள இனிய விரத முண்டென்று கூறுது முக்காலத்தும் உண்மைப்பொருளாய்ப் பரஞ்சுடராய் நின்ற பரமான்மாவிற்கே அவ்வாறநுபவித்தற்குரிய விரதரூபமாயுள்ள ஆநந்த முண்டென்றது எனவருமென்றவாறு.

**தன்பிரமகீதை** என்றது பிறநூலென்பது தோன்றற்கு. அஃது அவ்வாறு கொண்டும் அவனுக்கநுகூலமாகாமையை யறிவித்து நின்றது. இனிப் பிறர் கூறுவது.

பரமோப தேசத்தில்,

[1]கேளா யுபநிடற்பா கப்பிரம கீதையினு
மாளாயாய்ந் தார்க்கவர்வாக் கால்.

[1] பரமோப, பா, 20.

[1]ஆதிமுத்த னின்பமும மாதிமுத்த னின்பமுங்கேள்
ஓதும் விரித்துபசி டத்து.

என்பர். காமிகத்தில்,

1 कामिकादिशिवज्ञानं वेदान्तज्ञानमेव च ।
समं यो मन्यते मोहात्तं प्रयत्नेन वर्जयेत् ॥

என்பதனாற் சிவாகமங்களோடு சமனாக வெண்ணிப் பிரமாணமாகக் கொள்ள லாகாதெனின், அவ்வாகமத்திற்றானே,

2 वैदिकं सर्वसंग्राह्यं शैववाक्याविरोधि यत् ।

என்பதனாற் கொள்ளலாமென்பர்; [2]'தளைத்துவைத் துலையையேற்றித் தழலெரி மடுத்த நீரில் திளைத்துநின்றாடுகின்ற வாமைபோற் றெளிவிலா' தார் தமக்கு மேல் விளைவதை யறியாமையின். அவற்றுள் வேதாந்தப் பிரகாரம்வருமாறு.

சூதசங்கிதைப் பிரமகீதையில் உபநிடதப் பொருள்கூறும் மூன்றும் அத்தியாயத்திலே, (சு-42)

3 आनन्दमय आत्मा च ततोऽन्यश्चान्तरो यतः ।

எனவும்,

4 आत्मन्येव रतिक्रीडां शुद्धात्मा कुरुते सदा ।

எனவும் வருவனவாம். அதிற்றானே,

5 आत्मसंज्ञः शिवः शुद्ध एक एवाद्वयः सदा ।

எனவருதலிற் சிவாநந்தமென்றே முடிந்தவாறு காண்க. அற்றன்று. அவன் சீவனுக்கே யான்மா, சிவன் எனப் பெயரிட்டாண்டு, சீவாநந்தமே கொண்டா னேலோவெனின் அவன் நேதிபண்ணிச் சென்றவழிக்கண்ட பேரின்பத் தையே பிரமம் எனவும், அதுவே பரமான்மா எனவும், ஆண்டறிவானும் அறியப்படுமின்பமுமென விரண்டில்லை யெனவும் கூறுவனாகலின் அஃதாகா தென்க. என்னெனில் அதன்கண்ணேயே உபநிடதப் பொருள்கூறும் ஐந்தாமத்தியாயத்தில்,

6 देहेन्द्रियादिसङ्घातेऽहंममेत्यादिकां मतिम् ।
त्यक्त्वा चात्मनि चिद्रूपे यदाऽपीतो भवत्ययम् ॥ 72

तदा स्वपिति दुःखादिदर्शनं च न विद्यते ।
स्वात्मरूपसुखप्राप्तिरेव दृष्टास्य देहिनः ॥ 73

[1]பரமோப, பா, 19. [2]அப்பர், பொது, குறைந்த திருநேரிசை, பா, 10.

अतोऽपि मतिमान्नित्यं त्यक्त्वा देहादिगां धियम् ।
सर्वसाक्षिणि चिद्रूपे साक्षात्कुर्यादहंमनिम् ॥ 74

எனவும், பஞ்சதசமான்யத்தில்,

7 महदादिविशेषान्ता नेति नेति व्यपोह्य च ।
तत्तत्स्वभावदृष्ट्या च मनो जग्येश्वराधिपे ॥

परमात्मनि चिद्रूपे निवेशय महामुने ।

எனவும் வருவனவற்றால் இன்பத்தையே சாட்சியாயுள்ள பிரமமென்றதறிக. இதனையன்றே சங்கராசாரியாரும் தசசுலோகியில்,

8 न भूमिर्न तोयं न तेजो न वायुर्न खं नेन्द्रियं वा न तेषां समूहः ।
अनैकान्तिकत्वात्सुषुप्त्येकसिद्धस्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ (சு-1)

अपि व्यापकत्वाद्धितत्वप्रयोगात्स्वतः सिद्धभावादनन्याश्रयत्वात् ।
जगत्तुच्छमेतत् समस्तं तदन्यत्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ (சு-9)

எனச்சிவனையே யான்மாவாகக் கூறியதூஉமென்க. அற்றன்று; நேதிபண்ணிச் சென்றவழி நின்ற சைதன்னியத்தையே பிரமமென்றாராகலின். அது சித்தாந்தத்திற்குச் சிவனாகலின் அவன் ஆநந்தரூபனுமாமே அதனையவன் சித்தாந்தத்திற்குப் பூர்வபட்சமதவாதியாகலி னவ்வாறு சச்சிதானந்த ரூபனை சிவனையே சிவனாகக்கோடலின் ஆன்மாநந்த முண்டாம் பிறவெனின் அது கூறுதும். சித்தாந்தத்திற் சிவனியல்பைக் காமிகத்தில்,

9 शिवं वै शाश्वतं नित्यं ज्ञानानन्दस्वरूपकम् ।
व्यापकं सर्वतत्त्वानामप्रमेयमनौपमम् ॥

எனவும், அசிதத்தில்,

10 सच्चिदानन्दरूपी यः सदसद्व्यक्तिवर्जितः ।
स एव सर्वगः सद्भिर्ब्रह्मशब्देन शब्दितः ॥

எனவும், காமிகத்தில்,

11 नमस्ते परमानन्दप्रदाय विमलात्मने ।
अविशेषं भवेत्तद्वदात्मा तु परमात्मनि ॥

எனவும், சிவஞானபோதத்தில்,

12 अदृश्यं चेदसद्भावो दृश्यं चेज्जडिमा भवेत् ।
शम्भोस्तद्व्यतिरेकेण ज्ञेयं रूपं विदुर्बुधाः ॥ (சூ. 6.)

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

13 ब्रह्मरूपं परं गुह्यं ग्राह्यग्राहकवर्जितम् ।
रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ॥

चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ।
एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ॥

எனவும்,

14 शाश्वतं तुर्यरहितमानन्दं परमं पदम् ।
ज्ञातृज्ञानज्ञेयत्वैश्च विहीनं तत्परं शिवम् ॥

எனவும்,

15 निर्गुणे निर्मले शुद्धे वाच्यवाचकवर्जिते ।
नित्यानन्दमये सूक्ष्मे भावाभावविवर्जिते ॥

कैवल्ये चिद्घने शान्ते शिवे तु परिभावयेत् ।

எனவும், பிறவும் வருமாறே வேதாந்தத்தினும் ஆத்மபோதத்தில்,

16 निर्गुणो निष्क्रियो नित्यो निर्विकल्पो निरञ्जनः ।
निर्विकारो निराकारो नित्यमुक्तोऽस्मि निर्मलः ॥ 34

रूपवर्णादिकं सर्वं विहाय परमार्थवित् ।
परिपूर्णचिदानन्दस्वरूपेणावतिष्ठते ॥ 40

ज्ञातृज्ञानज्ञेयभेदः परे नात्मनि विद्यते ।
चिदानन्दैकरूपत्वाद् दीप्यते स्वयमेव हि ॥ 41

எனவும், வாக்குவிருத்தத்தில்,

17 निरस्ताशेषसंसारदोषोऽस्थूलादिलक्षणः ।
अदृश्यत्वादिगुणकः पराकृततमोमलः ॥ 29

निरस्तातिशयानन्दसत्यप्रज्ञानविग्रहः ।
सत्तास्वलक्षणः पूर्णः परमात्मेति गीयते ॥ 30

सर्वज्ञत्वं परेशत्वं तथा संपूर्णशक्तिता ।
वेदैः समर्थ्यते यस्य तद्ब्रह्मेत्यवधारय ॥ 31

यज्ज्ञानात्सर्वविज्ञानं श्रुतिषु प्रतिपादितम् ।
मृदाद्यनेकदृष्टान्तैस्तद्ब्रह्मेत्यवधारय ॥ 32

यदानन्दं प्रतिज्ञाय श्रुतिस्तत्सिद्धये जगौ ।
तत्कार्यत्वं प्रपञ्चस्य तद्ब्रह्मेत्यवधारय ॥ 33

विजिज्ञास्यतया यच्च वेदान्तेषु मुमुक्षुभिः।
समर्थ्यतेऽतियत्नेन तद्ब्रह्मेत्यवधारय॥ 34

जीवात्मना प्रवेशश्च नियन्तृत्वं च तान्प्रति।
श्रूयते यस्य वेदेषु तद्ब्रह्मेत्यवधारय॥ 35

எனவும், சங்கராசாரியார் செய்த சிவதோத்திரத்தில்,

18 न चैकं तदन्यद्द्वितीयं कुतः स्यान्न वा केवलत्वं न चाकेवलत्वम्।
न शून्यं न चाशून्यमद्वैतकत्वात्कथं सर्ववेदान्तसिद्धं ब्रवीमि॥ (தசஸ்லோகி 10)

எனவும், சூதசங்கிதை ஞானயோககண்டத்தில், (அத்தி. 19.)

19 अथवा सच्चिदानन्दमनन्तं ब्रह्म सुव्रत।
अहमस्मीत्यभिध्यायेद्व्योमातीतं विमुक्तये॥ 29

ब्रह्मणः साक्षिरूपत्वान्नेदं यदिति हि श्रुतिः॥ 30

समाधिः संविदुत्पत्तिः परजीवैकतां प्रति।

मुक्तिस्वभावो वेदान्ते मया च परिभाषितुम्।
अशक्यः स्वानुभूत्या च मौनमेवात्र युज्यते॥ (மு. 2-61)

न देहो नेन्द्रियं प्राणो न मनो बुद्ध्यहङ्कृती।
न चित्तं नैव माया च न च व्योमादिकं जगत्॥ (மு. 5-33)

न कर्ता नैव भोक्ता च न च भोजयिता तथा।
केवलं चित्सदानन्दब्रह्मैवात्मा यथार्थतः॥ (மு. 5-34)

सच्चिदानन्दसंपूर्णलक्षणं तमसः परम्।
ब्रह्मानन्दं सदा पश्यन् कथं बध्येत कर्मणा॥ (யஞ்ஞ. 42-14)

எனவும், பிறவும் வருமாற்றுன் சச்சிதானந்த ரூபனுயுள்ள பரமான்மாச் சிவனென்பது காண்க. சித்தாந்தத்திற் சிவனியல்பு கிரணத்தில் வித்தியாபாதத்தில்,

20 व्यापी मायोदरान्तस्थो भोगोपायविचिन्तकः। (பசுபட-15)

எனவும், பவுட்கரத்தில் (பசுபடலம். சு. 1.)

21 पशुः पशुत्वसंयोगान्न मुक्तः पशुरुच्यते।

எனவும், சருவஞானோத்தரத்தில் (தத்துவ. சு. 16.)

22 आत्मा जन्तुः पुमान्देही पुरुषः पुद्गली तथा ।
जीवः कपाली क्षेत्रज्ञः पर्याया एवमादयः ॥

எனவும், காலோத்தரத்தில்,

23 पुरुषः पुद्गलो धीमान् पशुर्ज्ञः पशुविंशकः ।
क्षेत्रज्ञो भोगभोक्ता च चेतनो देहिलिङ्गकः ॥

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

24 अणुरात्मा च जीवश्च पशुः पुद्गलं एव च ।
क्षेत्रज्ञः पुरुषश्चैव पञ्चविंशक इत्यपि ॥

எனவும் பிறவும் ஆநந்தரூபனெனக் கூறாது பிற சிலவாற்றாற் கூறியவாறே, வேதாந்தத்தினும் ஆத்மபோதத்தில்

25 आत्मनो विक्रिया नास्ति बुद्धेर्बोधो न जात्विति ।
जीवः सर्वमलं ज्ञात्वा ज्ञाता द्रष्टेति मुह्यति ॥ 26

रज्जुसर्पवदात्मानं जीवो ज्ञात्वा भयं वहेत् ।
नाहं जीवः परात्मेति ज्ञातश्चेन्निर्भयो भवेत् ॥ 27

எனவும், திருக்குத்திருசிய விவேகத்தில்,

26 जीवो धीस्थचिदाभासो भवेद्भोक्ता हि कर्मकृत् ।
भोज्यरूपमिदं सर्वं जगत् स्याद्भूतभौतिकम् ॥ 36

अनादिकालमारभ्य मोक्षात्पूर्वमिदं द्वयम् ।
व्यवहारे स्थितं तस्मादुभयं व्यावहारिकम् ॥ 37

चिदाभासस्थिता निद्रा विक्षेपावृतिरूपिणी ।
आवृत्य जीवजगती पूर्वे नूत्ने तु कल्पयेत् ॥ 38

प्रतीतिकाले एवैते स्थितत्वात्प्रातिभासिके ।
न हि स्वप्नप्रबुद्धस्य पुनः स्वप्ने स्थितिस्तयोः ॥ 39

प्रातिभासिकजीवो यस्तज्जगत्प्रातिभासिकम् ।
वास्तवं मन्यतेऽन्यस्तु मिथ्येतद्व्यावहारिकम् ॥ 40

व्यावहारिकजीवो यस्तज्जगद्व्यावहारिकम् । 41

எனவும் பிறவும் வருமாற்றாற் சிவாநந்தமின்மை காண்க. இதனானே முடிவினின்ற பேரின்பமே பிரமமென்றலின் அது பொருந்தாதென்க. அது வாக்கியார்த்த நிர்ணயத்தானும் பெறப்படும் துவம்பதவாச்சியார்த்த தேகாதி

விசிட்டனுமாய அதனானே யிளைத்தன் முதலாகிய தேகதருமாதிகளையும் அறுவகை விகார முதலியவற்றையுமுடையனுமாய்ச் சாக்கிராதி மூன்றவத்தைப் பட்டு தாபத்திரயத்தான் அநுபவ நிகழ்வுழிக் கர்த்திருத்துவ போத்திருத்துவ வபிமானத்தான் ஆர்ச்சிக்கப்பட்ட கன்மவசத்தாற் சுகாதியநுபவமுடையனு யுள்ளவன் சீவப்பிரமமெனவும் அதனிலக்கியார்த்த மங்ஙனங் கூறியவற்றிற்கு இலக்கணமாயுள்ள பிரமமெனவுந் தற்பத வாச்சியார்த்தம் சர்வத்தையு மறிகிற வனுமாய்ச் சர்வேசுரனுமாய்ச் சர்வாந்தரியாமியுமாய்ச் சர்வத்தையுஞ்சிருட்டிக்கிற வனுமாய்ச் சர்வத்தையும் பாலனம் பண்ணுகிறவனுமாய் அநாதியே அவித்தி யாசிரிய முடையனுமாய்க் குணவிசேடங்களான் மும்மூர்த்தியாயுமுள்ளவன் ஈசுரப்பிரமமெனவும் அதனிலக்கியார்த்தம் அங்ஙனம் கூறியவற்றிற் கிலக்கண மாயுள்ள பிரமமெனவுங்கூறி இலக்கணைகளான் ஐக்கியம் பண்ணுமிடத்து எல்லாம் பொய்யென, முக்காலத்துமுள்ள சச்சிதானந்தப் பிரமமே மெய்யாக நிறுத்தலின் என்க. என்னை? வாக்கிய விருத்தியில்,

27 तत्त्वमस्यादिवाक्यं च तादात्म्यप्रतिपादने ।
लक्ष्यौ तत्त्वंपदार्थौ द्वावुपादाय प्रवर्तते ॥ 42

हित्वा द्वौ शबलौ वाच्यौ वाक्यं वाक्यार्थबोधने ।
यथा प्रवर्ततेऽस्माभिस्तथा व्याख्यातमादरात् ॥ 43

आलम्बनतया भाति योऽस्मत्प्रत्ययशब्दयोः ।
अन्तःकरणसंभिन्नो बोधःसत्त्वंपदाभिधः ॥ 44

मायोपाधिर्जगद्योनिः सर्वज्ञत्वादिलक्षणः ।
पारोक्ष्यशबलः सत्याद्यात्मकस्तत्पदाभिधः ॥ 45

प्रत्यक्परोक्षतैकस्य सद्वितीयस्य पूर्णता ।
विरुध्यते यतस्तस्माल्लक्षणा संप्रवर्तते ॥ 46

मानान्तरविरोधे तु मुख्यार्थस्यापरिग्रहे ।
मुख्यार्थेनाविनाभूते प्रतीतिर्लक्षणोच्यते ॥ 47

तत्त्वमस्यादिवाक्येषु लक्षणा भागलक्षणा ।
सोऽहमित्यादिवाक्यस्थपदयोरिव नापरा ॥

எனவும், திருக்குதிருசியவிவேகத்தில்,

28 साक्षिस्थाः सच्चिदानन्दाः सम्बन्धाद्व्यावहारिके ।
तद्द्वारेणानुगच्छन्ति तथैव प्रातिभासिके ॥ 44

लये फेनस्य तद्धर्मा द्रव्याद्याः स्युस्तरङ्गके ।
तस्यापि विलये नीरे तिष्ठन्त्येते यथापुरा ॥ 45

प्रातिभासिकजीवस्य लये स्युर्व्यावहारिके ।
तल्लये सच्चिदानन्दाः पर्यवस्यन्ति साक्षिणि ॥ 46

अस्मिञ्जीवत्वमारोपाद्ब्रह्मत्वं च स्वभावतः । 33

எனவும், ஆத்மபோதத்தில்,

29 जगद्विलक्षणं ब्रह्म ब्रह्मणोऽन्यन्न किञ्चन ।
ब्रह्मान्यद्भाति चेन्मिथ्या यथा मरुमरीचिका ॥ 63

எனவும் வருதலின் இவ்வாறுலகோற்பத்தி நாசமும் பிரமத்தினிடத்திற் சொல்லுகையான் அப்பிரமகுணமான சச்சிதாநந்த மூன்றும் பிரபஞ்சத்திற் காணவேண்டுமெனை அவர், (திருக்கு திருசிய விவேகம்)

30 अस्ति भाति प्रियं रूपं नाम चेत्यंशपञ्चकम् ।
आद्यत्रयं ब्रह्मरूपं जगद्रूपं ततो द्वयम् ॥ 20

என்பராகலின், அதனுனும் ஆநந்தம் பிரமகுணமாகவே கொண்டாரென்பது. அது சித்தாந்த குரவர் நிராகரணத்தானும் உடன்பாட்டானும் விளங்கும். என்னை?

31 विज्ञानमात्रमानन्दं वस्तु सत्यं न तत्र हि ।
नैवंविधमुपादानं दृष्टं तत्त्वादि सूरयः ॥

எனவரும். இரத்தினத்திரய சுலோக வியாக்கியானத்தில் அகோரசிவாசாரியர்,

32 अत्र केचिदाहुः— किमनेनासत्यभूतेन शिवादि वस्तुकथनेन । तत्परिज्ञानसाधनकथनेन वा, "सर्वं खल्विदं ब्रह्म" "एको वशी सर्वभूतान्तरात्मा" इत्यादिभिः श्रुतिभिः परमात्मैव चिदाकारः सत्यभूतः स एव शिवादिशब्दवाच्यो नान्यत्किञ्चिदस्ति । ततः परं आनन्दस्वरूपस्य तस्य यथावदेव, सोऽयमेवं मोक्षहेतुरिति ॥ तान्प्रत्याह । वेदान्तैश्च कुलाम्नायैस्तथान्यैः प्रतिपाद्यते ॥ (சு-14)

எனக்கூறுமாற்றுன் ஆன்மா சிவனென்பது கண்டுகொள்க.

[1]தன்னல மதனைத் தானே நுகரும்
என்னின் முன்னல மெய்தா திருந்தென்
கட்டி போலெனக் கதறினை யின்பம்வந்
தொட்டிடும் வித்தை யுடையையா யிடினே
தத்துவ மசியென வைத்தமுப் பதத்திற்
கொன்றே பொருளென் றன்றே பகர்வது
நீபுலி யாயினை யென்றுங் குணரில்
ஆயினை யென்றது மாகுவ மைத்தான்.

எனவும் பிறவும் வருதலானும், சிவஞானசித்தியாரில்,

[1]உமா, சங்கற்ப நிரா, மாயா வாதி நிரா, வரி, 197 — 204.

[1]பண்டைமறை களுமது நா னேனென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

என்புழித் தற்பதார்த்தமுந் துவம்பதார்த்தமும் மாறுபடாது சேரடலானும் அவ்வாறே யுடன்பட்டதாயிற்று. எனவே உபநிடதத்தினும் அதன்வழி நடந்த பிரமகீதையினும் ஆன்மாநந்த மென்றது சிவாநந்தத்தையே யெனப் படுமென்றது வலியுடைத்தாயிற்று. இதனையன்றே யத்வைத வாதிகளும் பஞ்சதசப்பிரகரணத்தில் (யோ-சு. 2)

33 रसो ब्रह्म रसं लब्ध्वानन्दी भवति नान्यथा ।

எனவும், சுவேதாரணிய மான்மியத்தில்,

34 नृत्तदर्शनसंह्लादाद्भगवान् कमलापतिः ।
शिवानन्दार्णवे मग्नो न च सस्मार वै जगत् ॥

ममज्ज सुचिरं कालं शिवानन्दमहाम्बुधौ ।

उन्ममज्ज पुनस्तस्माच्छिवानन्दमहाम्बुधेः ।
तीरं कथंचित् संप्राप्य पुनः सस्मार वै जगत् ॥

எனக்கூறுவதூஉமென்க. எனவே, அவர் பிறநூல்கொண்டு கூறியதூஉஞ் சிவாநந்தாநுகூலமாயே முடிந்ததாம். இதனை மாயாவாதிக்கே மகனுயிருந்தும் அறியாதே போயினனென்று கருதி யன்றே பரமான்மாவிற் குண்டென்ற தென்னுது உண்டென்றதாம் என்றது. இவ்வாறுகண்டு மாயாவாத ஏகான்ம வாதம் ஆன்மாவையுஞ் சிவனையும் ஒன்றாகச்சொல்லுதலின் ஆநந்தம் பகுத் தறியப்படாதெனின் நீ இப்போது புத்திவந்து கூறலிற் பிரதிக்ஞாஹானியாம். ஆயினும் ஈண்டு விரோதமின்மையின்.

இனிப்பிறர், சித்தாந்த வசனங்கண்டு தமக்கு அநுகூலமாகக் கூறுவன :—

காமிகத்திலே,

35 निजानन्दमहाम्भोधौ यस्मिन् मज्जेदनाकुलः ।

எனவும், அசிந்தியவிசுவத்தில்,

36 ब्रह्मप्राप्त्यवधिश्चैव ह्यात्मानन्दसुखं भवेत् ।

எனவும், மிருகேந்திரத்தில், (அத்வபிர — சு. 175)

37 ते तत्स्थित्यन्तमाह्लादं प्राप्य यान्ति परं पदम् ।

எனவும், சிவஞானபோதத்தில்,

[1]சிவஞானசித், சு, 9, பா, 7.

38 मलमायाद्यसंस्पृष्टो भवति स्वानुभूतिमान् । (சூ-10)

எனவும், இரத்தினத்திரயத்தில், (சு. — 313)

39 प्रशान्तमलकालुष्यमात्मानमनुपश्यति ।

எனவும், சித்தாந்தசாராவளியில் கிரியாபாதத்தில் (சு. 2)

40 स्वाम्नायज्ञानसिद्धान्तरणमविकलं चाचरन् विप्लुतौ तन्
निष्कृत्याढ्योऽमृतोऽन्ते शिवनिहितमनाश्चान्त्ययागाच्छिवत्वम् ।

लब्ध्वा व्याप्त्याप्तविश्वः परमशिवसमोऽनीशता तेन शक्तो
नैजाह्लादैकपूर्णो निखिलपरिवृतः शङ्करप्रीतिरास्ते ॥

எனவும், திருமந்திரமாலையில்,

[1]இருட்டறை மூலை யிருந்த கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புணர்ந் தாளே.

[2]ஆவி யிருவகை யாண்பெண்ண தாகி
மேவி யிருவர் விருப்புறு மாறுபோல்
தேவியுந் தேவனுஞ் சேர்ந்தின்ப ரூபகம்
ஆவிக்கும் வேறே யாநந்த மாமே.

[3]முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே யாநந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

எனவும், சிவஞானபோதத்தில்,

[4]அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

எனவும், சிவஞானசித்தியில்,

[5]சூக்கும வாக்க துள்ளோர் சோதியா யழிவதின்றி
யாக்கிடு மதிகா ரத்திற் கழிவினை தன்னைக் கண்டா
னீக்கமி லறிவா னந்த முதன்மைநித் தியமு டைத்தாய்ப்
போக்கொடு வரவி னைப்பும் விகாரமும் புருட னின்றாம்.

[1]சத்திநிபாதம், பா, 1. [2]இப்பாடல் அச்சுப் பிரதியில் இல்லை. [3]மோனசமாதி, பா, 9
[4]சிவஞானபோ, சூ, 10. [5]சிவஞானசித், சூ, 1, பா, 23.

[1]காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
விசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
யாயுமறி வுடையனு யன்பு செய்ய
வந்நிலைமை யிந்நிலைமை யடைந்த முறையாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத *சுவானுபவ மருவிக் கொண்டே.

[2]இந்நிலைதா னில்லையே லெல்லா மீச
னிடத்தினிறு மீசனெல்லா விடத்தினிறு நின்ற
அந்நிலையை யறிந்தந்தக் கரணங்க ளடக்கி
யறிவதொரு குறிகுருவி னருளினா லறிந்து
மன்னுசிவன் றனையடைந்து நின்றவன் றனாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனிற் றுரியா தீதந்
தோன்றமுயல் சிவாநுபவஞ் சுவாநுபூ திகமாம்.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[3]பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதா
னிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமா யேகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
யகண்டிதமா யாநந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

எனவும், பிள்ளையார் தேவாரத்தில்,

[4]கோல மாகரி யுரித்தவ ரரவொடு மேனக்கொம் பிளவாமை
சாலப் பூண்டுதண் மதியது சூடிய சங்கர ஞர்தம்மைப்
போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர் பொருகடல் விடமுண்ட
நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந் தொழவினை யில்லாவே.

எனவும், திருவாசகத்தில் திருப்பாண்டித் திருவிருத்தத்தில்,

[5]செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் தென்னன்நன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக் காலமெக் காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வாள் உறைகழித் தானந்த மாக்கடவி
எறியும் பிறப்பை எதிர்த்தார் புரள விருநிலத்தே.

எனவும், பொன்வண்ணத்தந்தாதியில்,

---

[1]சிவஞானசித், சூ, 11, பா, 1. *இது ஆன்மாநந்தவாதி கண்ட பாடம். [2]சிவஞானசித், சூ, 8, பா, 34. [3]சிவப்பிர, சூ, 1, பா, 1. [4]சம்பந்தர், சிரபுரம், பா, 2. [5]திருவாசகம், பாண்டி, பா, 4.

[1]பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றம்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே.

எனவும், வருவன போல்வனவாம். அவை அவர் கருத்துக்குப் பொருந்தாவாறு கூறுதும். எவ்வழியுஞ் சொற்குப் பொருள்கோடல் ஒருவாற்றான் மூவகைப் படும், உண்மையே கோடலும், ஒருபயன் கருதி யாணையா னொன்றையொன் றாகக் கோடலும், ஒன்றையொன் றாக வுபசரித்துக் கோடலும் என. அவற்றுள் உண்மையாற் பொருள் கோடலாவது பிறிதோர் மாறுபாடுகளின்றாய்ச் சொல்லியவாறே பொருள் நிகழக்கொள்வது.

[2]கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

எனவும்,

12 अदृश्यं चेदसद्भावो दृश्यं चेज्जडिमा भवेत् ।
शम्भोस्तद्व्यतिरेकेण ज्ञेयं रूपं विदुर्बुधाः ॥ (சிவஞானபோதம் 6)

என்றாற்போலவும் நிகழ்வது. ஒருபயன் கருதி யாணையா னொன்றையொன்றாகக் கோடலாவது,

[3]அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

எனவும்,

[4]பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

எனவும்,

41 आचार्यः शिव एव स्याच्छिव आचार्य उच्यते ।

எனவும், பிறவுங்கூறியதை யவ்வாறே புத்திவிசாரமின்றிப் பொருள்கொள்வது. இவ்வாறு வருவதை,

[5]சிவனைக் குரவனெனச் சிந்தியே லிந்த
அவமதியா லாழ்வரவ லத்து.

என்றற்றொடக்கத்தால் விசாரிப்பின் நரகமேயாம்.

உபசாரத்தாற் பொருள் கோடலாவது, பிரமாண விரோதங் கண்டு யுக்தி பூர்வமாகப் பொருந்துவதூஉம் பொருந்தாததூஉம், விசாரித்துக் கோடல்.

[1]பொன்வண், பா, 1. [2]குறள், கடவுள், பா, 2. [3]சிவஞானபோ, சூ, 8, பா, 4. [4]திருவருட், அருளுரு, பா, 5. [5]சைவசமயநெறி, மாணாக், பா, 15.

ஒருவனைப் புளித்தின்றான் கடுத்தின்றானெனவும், கங்கையிலிடைச்சேரி யுள தெனவுங் கூறியவழி புளியமரத்தைத் தின்றான் கடுமரத்தைத் தின்றான் ஓடுகிற நீரி லிடைச்சேரி யிருக்கிறது எனப் பிரத்தியட்சப் பிரமாணத்தால் விரோதம் வந்துழி யதன் சம்பந்தியாயொன்றைக் கற்பியாவிடின் அச்சொல்லாற் சொல்வதற்குப் பயனின்மையின் அதன் பழமுங், காயுங், கரையுங் கற்பித்துப் பொருள் கோடலும்,

42 व्यक्तोऽसौ शिववद्भाति शिव एव तनुक्षये । (மதங்க-தர்ம-சு. 72)

எனவும்,

43 यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यत्यात्मनि तुष्यति ॥ (பஞ்சதசி-யோ-சு. 104)

என்றாற்போலவும் வரும்வழி, முற்றும் ஒத்தால் ஒருபொருளேயா மாகலின் யுக்தி விரோதங்கண்டு ஒருபுடை யொப்புமையாற் சமதையும்,

[1]தன்னிற் றன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே.

என்பவாகலின் கிரியா விரோதங்கண்டு பரமான்மாவைச் சீவான்மா பார்க்கின்றானெனவே பொருள் கோடலும்,

44 न च सृष्ट्यादि कुर्वन्ति स्वार्थनिष्ठा हि ते यतः । (மிருகேந்)

என முத்தான்மாக்கள் கிருத்தியம் பண்ணார்களென விலக்கியிருக்கவுஞ் சிவ சமபாவம் வந்தாற் சகத் சிருட்டியிலே அநேககாரணத்துவம் வருமெனச் சங்கித்தவனுக்கு அக்கிருத்தியம் நிகழாதெனக்கூறாது, மோட்சகாரிகையில் (சு.-115)

45 सिद्धानां शिवतुल्यत्वे कारणानेकता भवेत् ।
तेषामतुल्यबुद्धित्वात्कार्यं नोत्पत्तुमर्हति ॥

என்றற் றொடக்கத்தாற் பலவாற்றானுங் கூறிச் செல்வதுங் கண்டு அவ்வாறு வருஞ்சுத்ததையுஞ், சத்தியும் உண்டென்கிறதிலே தாற்பரிய மெனக்கோடலும்

46 * * * काश्यां तु मरणान्मुक्तिः ।
ज्ञानादेव तु कैवल्यं नान्यथा कर्म कोटिभिः ॥

என்னும் வசன விரோதங் கண்டு, காசி மரணக்கிரியை ஞானநிமித்தமெனக் கொள்ள வேண்டுமாற்றான் அம்மரணம் ஞானோபதேச வேதுவாகலின் பரம்பரையாற்காரணமாதல்பற்றி முத்தியென்றதெனப் பொருள்கோடலும், காலோத்தரத்தில்,

47 अनुग्रहाय लोकानां लिङ्गभूताः प्रकीर्तिताः ।
तेषामेव समीपस्थं यद्यत्तोयं षडानन ॥

---

[1]உமா, சங்கற்ப, மாயாவாதநிரா, வரி 195—196,

तत्तीर्थं परमं पुण्यं तत्र स्नात्वा शिवं व्रजेत् ।

என்புழியும் பரம்பரையான் ஞானகாரணங் கோடலும்,

[1]அணியு மமிழ்துமென் னாவியு மாயவள்.

என்புழிச் சிலகுணத்தான் ஒப்புமைபற்றிப் பிறிதொன்றாற் கோடலும்,

[2]அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

என்புழி, ஆர்வலரது புன்மையைக் கண்ணீர் மேல் ஏற்றிப் பொருள்கோடலும், பிறவும் போல்வன வுபசாரவகையாற் பொருள் கோடலாம். இதனானே உபசாரத்தான் வருவன,

[3]புந்தியை மனம தென்று மனமது புந்தி யென்றுஞ்
சிந்தையைச் சீவ னென்றுஞ் சீவனைச் சிந்தை யென்று
முந்தனை யான்மா வென்று மான்மாவை முந்த னென்றும்
வந்திடு மென்ற னான்மா வென்றது மற்றொன் றைக்காண்.

எனவுங் கூறுவதாமென்க. ஆதலின் ஆன்மாநந்தமென்பதைச் சிவாநந்தமெனவுஞ் சிவாநந்தத்தை யான்மாநந்தமெனவு மொன்றையொன்றாகக் கூறினும் பாதகமின்றாமென்க. அதனானிங்ஙனங் கூறும் நியாயத்தாற் பொருள் கொள்க. இவ்வாறே கொள்ளுதல் நியாயமாகலின் இவர் கொண்ட பிரமாணங்களுள் ஆன்ம குணமான வாநந்தமுண்டென வொன்றுங் கூறாமையின் அவர் கொள்கைக்கு அவை பிரமாணம் ஆகா என்றவாறு. என்னெனில்,

48 [4]मुत्प्रीतिः प्रमदो हर्षः प्रमोदामोदसंमदाः ।
स्यादानन्दथुरानन्दः शर्मशातसुखानि च ॥

எனவும்,

[5]ஆநந்த மென்ப தகமகிழ்ச்சி யேயாகும்.

எனவும், பிறவும் வருமாற்றான் ஆன்மாநந்தம், ஆன்மசுகம், நிஜாநந்த மென்றாற் போல வருவன எல்லாம் அகமகிழ்ச்சிப் பொருளவாகலின் அவ்வசனங்கள் ஆன்ம குணமெனக் கூறாமையின், निजाह्लादं என்பதூஉம் यदालोक्याह्लादह्रद इव । என்றாற்போல வகமகிழ்ச்சியேயாம். இன்பமென்றதூஉம்,

[6]தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

எனவருதலின் அகமகிழ்ச்சியாம், முற்கூறியவாறே யான்மரூபமான வாநந்தமின்றென மறுத்தலின். இது சிவனுக்காயின் அவனின்பரூபனாகலின் காரிய

[1]திருக்கோவை, பா, 5. [2]குறள் அன்பு, பா, 1. [3]சிவஞானசித், சு, 4, பா, 28. [4]அமரம், காலவர்க்கம். [5]உரிச்சொனிகண்டு, பண்பு, பா, 7. [6]குறள், கல்வி. பா, 9.

காரணவுபசாரத்தானும், பிறவாற்றானு மவனது வடிவான குணமேயாம். அவனுக்குண்டென்பதற்குப் பிரமாண விரோதமின்மையின், அவ்வகமகிழ்ச்சியுந் துக்க நிவிர்த்தி, அதிசய சுகலாபம் இரண்டில் ஒன்று பற்றியன்றி நிகழாமையின், துக்க நிவிர்த்தி புருடார்த்த மன்மையிற் சுகலாபம் பெறவேண்டுமாற்றாற் சிவாநந்தாநுபவமாகப் பொருள்கோடலே பொருந்தியதாம். **स्वानुभूतिमान्**, **स्वानुभवम्** என்றற் றொடக்கத்தனவும் சுடானுபூதிமான் அநுபவமாகக்கற்பித்தான் அனுபவத்திற்குவரக் கற்றான் என்றாற்போல அறிதற்பொருளவாகலின், தன்னையுமறியு மறிவுடையனாயினான் தன்னையறிந்தானென்றே பொருளாதலின், தன்னைத்தானறிதல் கிரியா விரோதமாகலிற் சிவானுபவங் கிடைத்தபின்பு ஊகத்தாற் றன்னையறிந்துகோடலே நியாயமாகலின் அவையுஞ் சிவாநந்தாநுபவத்திற்குரிய பிரமாணமேயாம்; **आत्मानमनुपश्यति** என்பதும் தன்னைத் தானறிதல் கிரியா விரோத மாகலிற் சிவாநுபவமூகத்தாற் றன்னை யூகத்தானறியா நிற்கின்றானென்க. இதனானே யன்றே,

[1]தன்னைநான் காணிற் றனித்தமுத லல்லவே
என்னையான் காணி லிரண்டாவேன்.

என்றருளுளரெனவே "சிவனடி யடைந்து தன் சத்தியைத் திளைக்கும்" எனவும், **சிவானுபவ மருவிக்கொண்டே** என்பதனைச் **சுவானுபவம்** எனத் திருத்தியதூஉ மிகவு மறியாமையாற் செய்ததென்றதூஉந் தானே விளங்கிற்று.

[2]மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

என்ற அளவிலொழிந்துபோனால் மலம் போக முத்தியாமென்று கருதியது கூறவேண்டுமெனின், எட்டாஞ்சூத்திரமுதலாகச் சிவனடியடைதல் அதிகாரமாய் வருதலின், அதிகாரமுறையென்னுந் தந்திரவுத்தியான் மேலைச்சூத்திரத்துப் 'பதி தண்ணிழலாம்' என்பது ஈண்டும் வருதலின், இவர் கிரியா விரோதமாகத் தன் சத்தியைத் திளைக்குமென்று திருத்தல் கூடாதாம். இவ்வாறே யவர் பல நூல்களைத் திருத்தியவெல்லாம் அவரறியாமையைப் புலப்படுத்தியவாறு ஆண்டாண்டுணர்க. சிவாநுபவங் கிடைத்தாலன்றித் தன்னையறிதல் கூடாமையின், அதுவே தனதநுபூதி யெனலாமாதலின், இரண்டற்கும் ஒற்றுமை கருதியுங் கூறுப. அது "சிவானுபவஞ் சுவாநுபூதிகமாம்" என்றற் றொடக்கத்தனவாம். இதனானுந் தன்னைத்தானறிதல் சுவாநுபூதியென்பது விலக்கியவாறு காண்க. இவ்வாறுவரும் வசனமெல்லாம் முத்தியவத்தை நிகழ்ச்சியிற் கூறியதன்றிப் பெத்தம் முத்தி யிரண்டற்கும் பொதுப்பட நின்ற ஆன்ம விலக்கணங் கூறும்வழிக் கூறாமையானும் ஆன்ம குணமான வாநந்தம் அன்றெனவுங் கண்டுகொளக் கிடந்தன. இனி எவ்வாறாயின் ஆன்மகுணமான வின்பமென்று பொருள்பட வருமெனில் ஆன்மா ரசரூபன்; தனதிரதத்தைத் தானறிந்தநுபவிக்கிறானென்று பெத்தமுத்தி யிரண்டினுங் கண்டால், உண்மைப் பொருளாற் கொள்ளப்படும். அவ்வழியும் யுத்தி விரோதம் நிகழ்தலிற் கொள்ளப்படாதென்க. அன்றேல்,

---

[1] சிற்றம்பலநாடிகள், சாத்திர, வெண்பா, பா, 59. [2] சிவஞானபோ, சூ, 10.

தியா னனைத்து விறகாற் றெளித்துச் சிவந்த கல்லாற்
பாயாத லொன்று படைத்தோர் மலடி பரிந்து பெற்ற
சேயான வன்கண் படைசெய்யக் கண்டு திகழ் முயற்கோ
டோயாது நின்று நகைசெய்த தேயிவ் வுலகத்திலே.

என்பதன் பொருளும், பிரத்தியட்ச முதலிய பிரமாணவிரோத முண்டாகவும் உட்கொள்ளப்படு மென்க. அஃதற்றாக; உமது உட்கோள் பிரமாண விரோத மின்றாய் நின்றதே யாயினும், சிவனிரதவடிவானதை யான்மா வநுபவிக்கு மென்று வரல்வேண்டும் பிறவெனின்; எங்ஙனம் வரினும் யுத்தி பூர்வமாயே பொருள்கொள வேண்டுதலின் அது வேண்டுவதன்றென்க. ஆயினுங் கூறுதும். இரௌரவத்தில்,

49 देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।

எனவும், வாதுளத்தில்,

50 एवं शिवामृतं प्रोक्तमप्रकाश्यमिदं गुह ।

எனவும், சர்வஞானோத்தரத்தில்,

51 शिवज्ञानामृतं पीत्वा विचरन्स्वयमेव हि । (பட-2-சு-61)

எனவும், சிவதருமோத்தரத்தில்,

52 ज्ञानामृतरसो येन सकृदास्वादितो भवेत् ।
स सर्वकर्माण्युत्सृज्य तत्रैव परिधावति ॥

எனவும், பஞ்சதசப்பிரகரணத்தில்,

33 रसो ब्रह्म रसं लब्ध्वानन्दी भवति नान्यथा ।

எனவும்,

[1]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும் வருவன பலவுமாம். இவ்வாறே இங்ஙனம் வந்தவற்றிற்கெல்லாம் பொருள் கண்டுகொள்க. அவற்றுட் சில கூறுதும். காமிகத்தில்,

53 शिववत्सर्वकर्तृत्वे सर्वज्ञत्वे च सत्यपि ।
न करोति न जानाति भृशं मुह्यति बालवत् ॥

यदानुगृह्यते सोऽयं गुरुणा करुणाब्धिना ।
तदास्य पुद्गलस्यैषा ज्ञानशक्तिः प्रसर्पति ॥

---

[1]சிவஞானசித், சு, 11, பா, 12.

देशकालानवच्छिन्ना निरवद्या निरर्गला ।

अतीतानागतार्थज्ञा नशब्दपरिमोहिनी ।
विपर्ययेण रहिता विषयेष्वनिलङ्गिनी ॥

अतिसूक्ष्मतरेष्वर्थेष्वन्तर्गत्वा प्रसर्पिणी ।
तथापि विपुलानर्थांश्च जानाति हि पुद्गलः ॥

35 तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ।
निजानन्दमहाम्भोधौ यस्मिन्मज्जेदनाकुलः ॥

सा मुक्तिस्तत्तु निर्वाणं तदेव परमं पदम् ।
मृग्यं हि ऋषिभिः सर्वैः योगिभिश्च द्विजोत्तमाः ॥

एतद्रूपस्य लाभार्थं तप्यते हि तपो महत् ।
व्रतानि दानयज्ञाश्च नियमा श्चाप्यनेकशः ॥

वर्णाश्रमप्रयुक्ताश्च नित्यनैमित्तिका अपि ।
अभिव्यक्तात्मनिफलानि पर्यवस्यन्तिचात्र वै ॥

ஆன்மசத்தி மலபெத்தமாயுள்ளது. குருபதேசத்தான் மல நிவிருத்தி வந்துழி முத்தியில் அதன் ஞானசத்தி பரம்பும். அது தேச காலங்களால் அவிச்சின்னப்படாததுமாய்ப், பழுதில்லாததுமாய்த் தடையில்லாததுமாய்த் திரிபில்லாததுமாய் எல்லாவிடயங்களையுங் கடந்திருக்கையினுஞ் சூக்குமமாயுள்ள பொருள்களெல்லாவற்றினும் சென்று செறிந்து பரம்பியிருக்கும். ஆகையினானே சென்ற காலத்தனவும் எதிர் காலத்தனவுமான பொருள்களெல்லாவற்றையும் அறியுஞ் (சிவனது) சர்வஞ்ஞத்துவ சத்திபோல வான்மாவுக்குஞ் சர்வஞ்ஞத்துவ சத்தியிருந்தும் ஏகதேசமாகிய பிரபஞ்சப் பொருள்கள் விடயமாகாமையின் அவற்றைப் பாராது.

எக்காரணத்தானும் இலக்கணங்களான் தன்னின் வேறாய பரமான்மாவாயுள்ள சிவன் ஆநந்தரூபனாகலின் புற்கலனானவன் அவனைப் பார்த்தவழி அகமகிழ்ச்சி யுண்டாமாகலின் அவனையறிந்து சந்தோஷியா நிற்கின்றான். அந்தச் சந்தோஷந் தனதேயாகலினான் நிசாநந்தமான யாதொரு சமுத்திரத்திலே அநாகுலனாய் அமிழ்ந்துகின்றான். அதுவே (சிவாநந்தாநுபவமே) முத்தியாம்; அதுவே யனைவரானுந் தேடப்படும்; தவமனைத்திற்கும் பயனும் அதுவே என்பது பொருள். ஆதலின் மூலாகமப்படியே மொழிந்தவற்றிற்கும் பொருள்கொள்ளவேண்டும், இதற்கு மாறுபடக்கூறின் அதற்கு விரோதமாகலான். இவ்வாறே யனைத்திற்கும் பொருள் கண்டுகொள்க. இதனானேயன்றே,

[1]எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரோன், றல்லா தறியா ரற.

என்பது முதலாயின வந்ததூஉமென்க.

[1] திருவருட், அணைந், பா, 3.

36 ब्रह्मप्राप्त्यवधिश्चैव चात्मानन्द सुखं भवेत् ।

இது சிவனைப் பெறுதலே முடிவாகக்கூறும். பரமுத்தியாவது ஆன்மாவினது மகிழ்ச்சிக்குக் காரணமாய இனிய விரதரூபமான சிவசுகப்பேறு மென வந்தது என்பதாம். அன்றி நீலமாகிய உற்பலம் நீலோற்பல மென்றாற்போல ஆநந்தமாகிய சுகம் உண்டாவதெனினுமாம்.

சிவாநுபூதிமான் என்பது சிவாநுபவம் பெற்றவாற்றாற் றன்னறிவு உடையனுயினனென்றவாறு; அது கடாநுபூதிமான் படாநுபூதிமான் என்றாற் போலாம். आत्मानमनुपश्यति என்பதூஉம் அது. அன்றேல் अत्मा ज्ञातव्यः என் பதை மறுத்தது கூடாதென்க. சித்தாந்தசாராவளியில், (கிரியா-சு-2)

40 स्वाम्नायज्ञानसिद्धाचरणमविकलं चाचरन् विप्लुतौ त
न्निष्कृत्याढ्योऽमृतोऽन्ते शिवनिहितमनाश्चान्त्य यागाच्छिवत्वम् ।

लब्ध्वा व्याप्त्याप्तविश्वः परमशिवसमोऽनीशिता तेन शक्तो
नैजाह्लादैकपूर्णो निखिलपरिवृतः शङ्करप्रीतिरास्ते ॥

என்பது தனது சமயநூலனுட்டானத்தை விகலமின்றிப் பண்ணித்தான், அன்றி விகலம்வந்துழிப் பிராயச்சித்தத்தா னிவர்த்திபண்ணிக்கொண்டுதான் ஒழுகிய ஒருவன் சிவன்பால் வைத்த மனத்தினனாய் மரணத்தை யடைந்துழி, யாசாரக்குறைபாடுண்டாயின், அதனிமித்தஞ் செய்யவேண்டும் அந்தியேட்டி பண்ணவேண்டியதாயிற் பண்ணப்படுமாகையால் அதனாற் சிவத்துவத்தை யடைந்து நிகிலமான சர்வஞ்ஞதாதி யறுவகைக்குணமுடையவனாய அதனானே யவன் பரமசிவனைப்போலே யெங்கும் பரிபூரணனாய் நிறைந்திருப்பன். அங் ஙனமாயினும் முற்றுஞ் சமதை கூடாமையின் கர்த்திருத்துவமின்மையின் அநீசிதாவாயுமிருப்பன். அதனானே ஞானசத்தி மாத்திர முடையவனாவன். சங்கரப் பிரீதியான சிவாநந்தமுடையவனாகையாற் றனது பூரணமாயுள்ள மகிழ்ச்சியுடையனாக விருக்கிறானென்க வென்பதாம். அன்றி,

40 स्वाम्नायज्ञानसिद्धाचरणं अविकलं च आचरन् विप्लुतौ तन्निष्कृत्याढ्यः शिवनिहितमनाः मृतः अन्ते अन्त्ययागात् शिवत्वं लब्ध्वा निखिलपरिवृतः तेन परमशिवसमः अनीशिता शक्तः व्याप्त्या आप्तविश्वः शङ्करप्रीतिः नैजाह्लादैकपूर्णः आस्ते ॥

என அந்வயங்கூட்டி யவ்வாறு மரித்தவ னந்தியேட்டியாலே சிவத்துவத்தை யடைந்து அறுவகைக் குணங்களுமுடையனாவன். அதனானே பரமசிவ சம னாவன். ஆயிற் பஞ்ச கிருத்தியம் பண்ணுவனோவெனில், அநீசிதாவும் பரிபூரணனு மாகையாற் பஞ்சகிருத்தியம் பண்ணாத சர்வகர்த்திருத்துவ சத்தியும், சர்வஞ் ஞத்துவ சத்தியுண்டாயிருந்தாலுங் காரிய மின்மையிற் சிவரூப மாநந்தமாகை யாற் சிவனைமாத்திர மறிதற்குரிய ஞான சத்தியுமுடையவனாய் அவ்வாறறிதற் குரிய சத்தியுடையவனாகையாற், சங்கரப்பிரீதியாகிய சிவாநந்தமாயுள்ள பிரம ரசாநுபவ முடையனாய், அதனானே, பூரணமாயுள்ள தனது மகிழ்ச்சியான சந்தோஷத்தையும் உடையனா யிருக்கின்றானெனினுமாம். இவ்வாறன்றி 'நிகில

பரிவிர்தன்' என்பதற்கு முத்தான்மாக்களாற் சூழப்படுதலென்றால் இவனை யதீசிதாவாகக் கூறலின் இவனைச்சூழ ஓர் ஏது இன்மையானுஞ், சூழ்வதற்கு ஏகதேசியன்மையானும், பொருளின்மையின் மனங்கொள்ளாமை யானும், சங்கரப்பிரீதி யென்பதற்குச் சங்கரப் பிரீதிபோலப் பிரீதியென்றாற் சந்தோஷம், துக்கநிவர்த்தி சுகலாபம் ஒன்றுபற்றி வருதலின் அவ்விரண்டும் பிரமத்திற்கின்மையிற் பொருந்தாமையானும், அங்ஙனங் கூறினும் 'நைஜாஹ்லாதைக பூர்ணன்' எனவும் வருதலின் சங்கர பிரீதிபோற் பிரீதியுமுடையவன் தனது பூர்ணமான சந்தோஷத்தையும் உடையவன் என்றலின் வெகு விரீகியாகையான் விசேடண விசேடிய பாவ மின்மையின் கூறியது கூறலாக வருதலானும் व्याप्त्या आप्तविश्वः परमशिवसमः என்பதற்கு,

54 सर्वज्ञता तृप्तिरनादिबोधः स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः ।
अनन्तशक्तिश्च विभोर्विधिज्ञाः षडाहुरङ्गानि महेश्वरस्य ॥

கூர்மபுரா-பிற்பகுதி அத்தி-8-சு. 13.

என்பதனுன் அறுகுண முண்டாகையாற் சிவசமதைகூறின் முழுதுஞ் சிவகுண மாதலான், இவ்வாறு முழுதுமொப்பின்றிச் சிறிது வேறுபட நிகழ்தலானு, மேற்கூறுமாறே பரமுத்தியில் இந்நிலைமை யான்மாவிற்குக் கூறலாகாமை யானும், ஈண்டுப்பரமுத்தியே கூறுமிட மாகலான் அது பொருந்தாமையானும் அவ்வாறு கூறினும் முன்னர்ச்சிவத்துவம் என்றது நோக்கிப் பின்னுமொரு காற் கூறியதாக வருதலின், இதுவுங் கூறியதுகூறலாக நிகழ்தலானும் பிறவாறு கூறுதல் பொருந்தாதாம் என்க.

शिवज्ञानामृतं पीत्वा । शिवैकरसतां व्रजेत् ।

எனவும்,

33 रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा ।

எனவும், பிறவும் வருதலின் என்க. பிறவுமன்ன.

[1]இருட்டறை மூலை யிருந்த கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புணர்ந் தாளே.

இது திருமந்திர மாலையில் திரோதசத்தி யதிகாரத்துள்ளது. இதன்பொருள். மலத்தாற் றடைப்பட்டிருக்கின்ற ஆன்மசத்தியாகிய வறைமூலையிற் சிறிதுந் தோன்றுவண்ணமிருந்து பெத்தாவத்தையி லான்மாவை அவனியல்புக்கேற்கச் செலுத்துந் திரோதானசத்தி, பக்குவம் வந்த அளவிற் குருட்டுக்கிழவனாகிய அந்த வான்மாவிற்கு முன்னிற்க வேண்டுமென நினைந்து, அவன் மலமாகிய குருட்டை நீக்கித் தனதியல்பு பலவற்றையுங்காட்டி, அவனுற்ற போதத்தை

[1] திருமந், சத்திநி, பா, 1.

மழுக்கித் தானேயாகத் தனதின்பம் அவனுணர்ந்தநுபவிக்கச் செய்தாளென்றவாறு.

[1]இருட்டறை மூலை யிருக்குமுயிர்ச் சத்தி
யிருட்டறையில் லைச்சிவசத் திக்கு.

என்பராலோவெனின் இருட்டும் அறைமூலையும் இரண்டுமன்றி அதிலிருக்குங் கிழவி யென்பதினுன் இருட்டு ஆணவமலம், அதனுலவரிக்கப்பட்ட அறைமூலையான்மசத்தி, அதிலிருக்குங் கிழவி திரோதான சத்தியாகவே கொள்ளக் கிடத்தலின். இருட்டறைமூலையிருந்த வுயிர்ச்சத்திக்குக் கூடாமையானும், அன்றிக் குருட்டுக்கிழவனைக் கூடல் குறித்துக் குருட்டினை நீக்குதல் ஆன்ம சத்திக்குக் கூடாமையிற் சிவசத்திக்கே கூடுதலானும், மருட்டி அவனை மணம் புணர்தலும் பிறன் மருள மருட்டி எனக் கொள்ளப்படுதலால், பேதமில்லாத உயிர்ச்சத்திக்கு அத்தன்மையில்லாமையானும், அவ்வாறாயினும் மருட்டி யென்பதனுன் மயக்கஞ்செய்தல் கூடாமையானும், தற்போத மழுங்கச்செய்தல் சிவசத்திக்கே யுரியதாதலானும், அன்றி ஆன்மாத் தனதுசத்தியைத் தினைத்தல் கிரியாவிரோதமென முற்கூறியவாறே கூடாமையினுனும்,

55 अर्थात्प्रकरणाल्लिङ्गादौचित्यादर्थनिर्णयः ।

என்பதனுல், திரோதசத்தி யதிகார மாகையினுனுங் கூடாதென்க. திரோத சத்தியை மலமாகக் கூறலின் இருட்டறை இயையும். அது சிவப்பிரகாசத்தில்,

[2]மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயவா ருயிரின் மேவு மருளெனி லிருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயவா ருயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்.

என்பதனுனறிக. இதற்கிவ்வாறு பொருள் கோடல் அந்தத் திரோதசத்தி யதிகாரத்துள்,

[3]இருள்சூ ழறையி லிருந்தது நாடிற்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போன்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
அருள்சூழ் இறைவனு மம்மையு மாமே.

எனவும்,

[4]மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தாளே.

எனவும், பிறவாறும் வருமாற்றானுங் கண்டுகொள்க.

[1]பரமோப, பா, 23. [2]சிவப்பிர, சூ, 7, பா, 2. [3], [4]திருமந், சத்திநி, பா, 4, 5.

[1]அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே யாநந்தம்.

என்பதூஉங் கிரியாவிரோதம் நோக்கிச் சிவாநந்தாநுபவ வேதுவாயிற்று.

[2]நீக்கமி லறிவா னந்த முதன்மைநீ யமுடைத்தாய்.

என்பது ஒருகாலத்தும் தன்னைவிட்டு நீங்காத வறிவாநந்த முதன்மையுடைய சிவனை யெப்பொழுதும் பேறாகப் பெறுதலை யுடைத்தாய் என்க.

அறிவாநந்த முதன்மை நித்தியமுடையதை யறிவாநந்த முதன்மை நித்தியமென்றது தகரஞாழல் என்றாற்போலவென்க. ஆயின் மேற் புருடன் என்பதற்கு உடைத்தென்பது திணைவழுவாம் பிறவெனின்; புருடன் என்பதோர் தத்துவமெனவே ஆண்டுப் பொருள் கொள்ளக்கிடத்தலினியையும். அன்றேல் அதற்கியைந்த உயிரென்னுஞ் சொல்லொன்று கொணர்ந்து முடிக்க. பிறர் சில பாடங்களிற் சுவாநுபவ மென்று திருத்தினுஞ் சிவாநுபவ முகத்தாற் றன்னை யறிதலென்றே பொருளாகலின் ஈண்டுவிரோதமின்று.

[3]சிவாநுபவஞ் சுவாநுபூதிகமாம்.

என்றது சிவாநந்தந் தனக்கறியப் படுவதாமென்றலின் அதுவும் அநுகூல மாயிற்று. ஒழிந்த பாசஞ் சடமாகலின் அதனான் ஆன்மாநந்தமென்பதற்கு விரோதமாயிற்று. பதியிலக்கணத்துள்,

[4]ஆநந்த வுருவா யன்றிச் செலவரிதாய்''

என்றலின் ஆன்மாவிற் கியையாமையானும் அங்ஙனம் இயையிற் சிவனிலக் கணத்து ளாநந்தங் கூறினன்றி அச் சமதையா னான்மாவிற்குக் கொள்ளப் படாமையின் சிவன் ஆநந்தரூபனென்பது கூறிற்றிலரென வருதலானும் அதனானே ஆன்மாவிற்கு மின்றெனை வருதலானும்,

[4]ஆனந்த வுருவாயன்றிச் செலவரிதாய்.

என்பதனால் ஆன்மா எப்பொழுதும் பெத்த முத்தியிரண்டினும் ஆநந்தரூபனெ னப்படாது முத்தியின் மாத்திர மாநந்தரூபனாக விருப்பன் எனக் கிடத்தலாற் பெத்தத் தின்மையின் முத்தியினுமவனுக்கின்றெனை வருதலானும், அன்றியும்,

[4]நின்மலமா யேகமாய் நித்தமாகி
அலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
யகண்டிதமா யாநந்த வுருவாய்.

என வினையெச்ச அடுக்கனைத்தும் பதியென்பதன்மேலே நிற்றலானும் இடையில் இவ்வாறு கூறுதற் கியைபின்மையானும் அவ்வாறு கூறினும், அலகி லுயிர்க்

[1] திருமந், மோனசமாதி, பா, 9. [2] சிவஞானசித், சூ, 1. பா, 23. [3] சிவஞானசித், சூ, 8. பா, 34. [4] சிவப்பிர, சூ, 1, பா, 1.

குணர்வு என்புழியே கூறுவராகலானும் அது பொருந்தாதென்க. அஃதவ் வாசிரியர் கருத்தன்றென்பது,

[1]இன்பதனை யெய்துவார்க் கியு மவர்க்குருவம்
இன்பகன மாதலினு லில்.

என்பதனுலுமறிக.

[2]சங்கரனுர் தம்மைப் போலத் தம்மடி யார்க்கு மின்பளிப்பவர்.

என்பது சோகம்பாவனையாற் றம்மைப்போல் ஆகாநிற்பக்கண்டு தன்னடி யார்க்கு மகிழ்ச்சி யெய்துவிப்பரென்க. உம்மை இசைநிறை. அன்றி, உம்மை பயன்படவேண்டில் தம்மைப்போலத் தம்மடியார்க்குந் துன்பமில்லாமல் அருள் வார் எனினுமாம்; ஒருவாற்றாற் றுக்கநிவிருத்தியு மினிமையென வுபசரிப்ப ராகலினென்க. அன்றி,

[3] * * * * தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே.

என்பது மலத்தோடு கூடின் மலமுஞ் சிவத்தோடு கூடிற் சிவமுமாதலே யென் வண்ணமாகலின் "தன்னைக்கண்ட என்வண்ணம்" யாதொரு சார்பிற் சாரும் வண்ணம் அவ்வண்ண மாமாறே றன்னைச் சார்ந்தேன்தன் றன்மையாய்ப்போக "ஆகிய வீசனுக்கே" என்றதென்க.

[4]மாயனன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
ஆயின தொண்ட ரவனரு ளாத லரிதலவே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே.

என்பதனறிக. இவ்வாறே கொள்ளக் கிடத்தலினன்றே இன்பஞ் சீவான்மா விற்குண்டென்று அறைந்தது அன்று நின்ற பரமான்மாவிற்கு உண்டென்றதாம் என்றதென்க. எனவே இத்துணையும் முன்னர் [5]உன்னிலேதான் இல்லதெனவே நீ யியம்பும் அளவைமுதற்சொல்லுமது கேளாய் துணிந்து என்றவாறே சொல்லியதாயிற்று. பிறவுமன்ன.

## இச்செய்யுளின் பாடபேதம் வருமாறு:—

இன்பமுயிர்க் குண்டென்ற தேதோ வுபநிடதந்
துன்பில் பிரமகீதை சொன்னதெனி—லின்பஞ்சீ
வான்மாவிற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம்.

---

[1] திருவருட். இன்பு, பா, 3. [2] சம்பந்தர், சிரபுரம், பா, 2. [3],[4] பொன்வண். பா, 1, 100.
[5] முத்திநிச், பா, 3.

*எ-து பாட்டு. எ-னின். அங்ஙன நிராகரிக்கப்பட்ட வான்மாநந்த வாதி தனதுட்கோள் சித்தித்தற்குச் சிவாகம வசனமின்மையிற் பிற நூலுஞ் சில பிரமாணமாகக் கொண்டானன்றே; அதனுனு மொவ்வாமைகாட்டி அவனுட் கோள் சிதைக்கின்றது.*

**உபநிடதம் பிரமகீதை துன்பு இல் இன்பம்**
**உயிர்க்கு உண்டு என்றது ஏதோ எனில்**

*என்பது, வேத சிரசான வுபநிடதமும் அதனியல்பானே பிறந்த சூத சங்கிதை யிற் பிரமகீதையும் ஆன்மாநந்த முண்டென்றதன்றே; அங்ஙனங் கூறுந் துக்க நிவிருத்தி முதலானவற்றுற் பிறக்கும் அகமகிழ்ச்சியன்றிச் சொரூபாநந்தங் கூறு மான்மாநந்தவசன மெவ்வாறு முடிவு போமெனில்,*

**இன்பம் சொன்னது சீவான்மாவிற்கு**
**உண்டு என்று அறைந்தது அன்று**
**நின்ற பரமான்மாவிற்கு உண்டு என்றது ஆம்**

*என்பது, அங்ஙனம் இன்ப முண்டென்று சொன்னது சீவான்மாவிற்குக் கூறியதன்று; அவன் சீவனை மித்தையாகத் தள்ளி யுண்மையாய் முக்காலத்தும் நின்ற பொருள் ஆன்மாவேயெனப் பரமான்மாவாகிய சிவனைக் கூறுதலான், அதுவுஞ் சிவாநந்தமே கூறியதாம் என்றவாறு.*

**பதினொரும் பாட்டுரையும், பாடபேதமும் முற்றியன.**

*திருச்சிற்றம்பலம்.*

உ

திருச்சிற்றம்பலம்

# பதினேழாம் பாட்டு

சிவசத்தி யைத்திளைப்பர் சீவன்முத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் – சிவசத்தி
தன்னைப் புணர்ந்ததன்று சாற்றுவமை யுந்தெரியா
தன்னைமுலைப் பாலென் றறி.

எ-து பாட்டு. எ-னின், இது சிவாநந்தாநுபவத்திற்குப் பிறர் குற்றம் போ லொன்றைக் கூறியது கூடாதென நிராகரித்தல் வாயிலாக இத்துணையும் பிறர் கோள் சிதைத்து இனித் தன்கோள் பாதுகாக்கின்றது.

**சிவசத்தியைத் திளைப்பர் சீவன்முத்தர் என்னும்**
**அவசத்த மாபாதகம்.**

என்பது, சிவசத்தியை அநுபவித்தலே உமது கருத்தாகலின் சிவசத்தி மாதாவும் உயிர்கள் மைந்தரும் ஆகலின் அவளை யவர் திளைத்தல் குற்றமாமன்றே அதனால் அச்சொல்லுஞ் சொல்லலாகாது மகாபாதகம் வருதலின் என்று குற்றம்போல் ஒன்றை ஆரோபித்துக் கூறியது என்னை?

**சிவசத்தி தன்னைப் புணர்ந்தது அன்று சாற்று உவமையுந் தெரியாது**
**அன்னை முலைப்பால் என்று அறி.**

என்பது, அரூபமாய் வாக்கு மனாதீத கோசரமாயுள்ள சிற்பராநந்த வெள்ள மன்றே சிவசத்தி. அது தனுவுடைத்தன்மையின், நீ கூறுமாறே நிகழாமையின் அங்ஙனங் கூறும் புணர்ச்சி யொருவரானுங் கூறப்பட்ட தன்று. அன்றியுஞ் சிவசத்தியைப் பிதா மாதாவாகக் கூறுவது உபசார மன்றி உண்மையாதல் கூடாமையின் அதன்பாற் பட்ட உவமைநிலையும் உனக்குத் தெரியாததாயிற்று. ஆயின் இவ்வாறு நிகழ்வது எவ்வாறும் எனின் உலகில் அன்னை முலைப்பாலதனைப் புதல்வ ரநுபவிக்குமாறுபோல் நிகழ்வதென்று அறிவாயாக வென்றவாறு.

உவமையுந் தெரியா தென்புழி நின்ற உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை; முற்கூறிய புணர்ச்சி நிலையையுந் தெரியாதெனத் தழீஇ நிற்றலின். பிறர் கூறுவது; இவ்வாசிரியர் "[1]புசிப்போஞ் சிவபோகம்" என ஞானனுபூதி வெண்பாவினும், "[2]உள்ளமல நீங்கி யோங்கு சிவாநந்த வெள்ளந் திளைத்து." என இந்நூலினும் வருவனவும் பிறவும் சிவாநுபவம் என வருவது கண்டு என்க.

[1] சிவபோக. பா. 56. [2] முத்திநிச். பா. 22.

[1]பேசப் பொருளல்லாப் பிறவி தன்னைப்
பெரிதென்றுன் சிறுமனத்தால் வேண்டி யின்று
வாசக் குழன்மடவார் போக மென்றும்
வலைப்பட்டு வீழாதே வருக நெஞ்சே
தூசக் கரியுரித்தான் றூநீ றாடித்
துதைந்திலங்கு நூன்மார்பன் றொடர வில்லா
நீசர்க் கரியவனெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.

எனவும்,

[2]முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே.

எனவும் வருமாறுபோற் கருதிப் பொருள்கொண் டிவ்வாறு நிகழ்வது ஆன்மாவிற்கு மான்மசத்திக்கு மாயின் இயல்பாம். அன்றி, நூல்கள் சிவனையும் சத்தியையும் பிதாமாதாவாகவே கூறலின், சிவசத்தியை ஆன்மாத் திளைக்கும் என்றல் மாபாதகமாகலாற் குற்றமேயாமென்பது. அது பரமோபதேசத்தில்,

[3]சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னும்
அவசத்த மாபாத கம்.

[4]தாயவன் காணுலகிற் கென்றனர் தற்பரனை
பாயபுகழ் நாவரையர் பார்.

[5]மைந்த ரனுபவிப்பர் மாதாத் தனையென்று
நிந்தனைநீ சொன்னவழு நீக்கு.

எனவும், பிறவும் வருமாற்றாற் கண்டுகொள்க. உயிரைச் சிவசத்தி பெற்றதற்குப் பிரமாண முண்டோவெனின்,

[6]ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப
மியைபொடு போகமதி காரமாகித்
தேசருவ மருவுருவ முருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வமாகிப்
பேசரிய வுயிரையெல்லாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

[1]அப்பர். திருநெய்த். பா. 7. [2]அப்பர். திருவால. பா. 1. [3, 4, 5]பரமோப. பா. 8, 25, 35. [6]சிவஞானசித். பரபக்கம், பாயிரம், பா, 1.

இதனுள், சிவனுக்குச் சிவசத்தி தேவியெனவே யவன் அவட்கு மணாளனாகையான் இருவருங் கூடி யுயிரைப் பெறுதலின் உயிர் மைந்தனானவாறும் அவண் மாதாவும் அவன் பிதாவு மானவாறும் வந்தன காண்க. இதற்கு உதாரணம்,

[1]பேய்கள்பா டப்பல் பூதங்க டுதிசெயப் பிணமிடு சுடுகாட்டில்
வேய்கொ டோளிதான் வெள்கிட மாநட மாடுவித்தக னூரோண்
சாய்க டான்மிக வுடையதன் மறையவர் தகுசிர புரத்தார்தாந்
தாய்க ளாயினர் பல்லுயிர்க் குந்தமைத் தொழுமவர் தளராரே.

என்றலின்,

[2]தாயுமா னார்பல் லுயிர்க்குமெனுஞ் சம்பந்தர்
வாயிலங்கு பாடன் மதி,

எனவும்,

[3]தாயவன்கா ணுலகிற்குத் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண் மலைமங்கை பங்கா வென்பார்
வாயவன்காண் வரும்பிறவி நோய்தீர்ப் பான்காண்
வானவர்க்குந் தானவர்க்கு மண்ணு ளோர்க்குஞ்
*சேயவன்கா ணினையார்க்குச் சித்த மாரத்
திருவடியே யுள்கிநினைந் தெழுவா ருள்ளம்
ஏயவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே.

என்றலின்,

[4]தாயவன் காணுலகிற் கென்றனர்தற் பரனைப்
பாயபுகழ் நாவரையர் பார்.

எனவும்,

[5]காயும் புலியி னதளுடையார் கண்ட ரெண்டோட் கடவூரர்
தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமே யாய தலைவனார்
பாயும் விடையொன் றதுவேறிப் பலிதேர்ந் துண்ணும் பரமேட்டி
பேய்கள் வாழு மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

என்றலின்,

[6]தந்தைதாய் பல்லுயிர்க்குந் தாமேயென் றூர்கடவூர்
நந்திதனைச் சுந்தரரு நாடு.

எனவும்,

[1]சம்பந்தர். சீபுரம். பா. 7. [2]பரமோப, பா. 24. [3]அப்பர். கச்சி. பா. 4.
*"சேயவன்காண் நினைவார்க்கு" என்பது அச்சுப்பாடம். [4,6]பரமோப. பா. 25, 26.
[5]சுந்தரர். கடவூர்மயா. பா. 3.

[1]தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தா னல்குதியே
தாயே யென்றுன் றாளடைந்தேன் றயாநீ யென்பா லில்லையே
நாயே னடிமை யுடனாக வாண்டாய் நான்றான் வேண்டாவோ.

எனவும்,

[2]பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி

எனவும் வருதலின்,

[3]தாயேயென் றேயுன் சரணடைந்தே னென்றனர்நம்
வாயான்மா ணிக்கவாச கர்.

[4]பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறமென்றார் பார்.

எனவும்,

[5]மோதலைப் பட்ட கடல்வயி றுதித்த
முழுமணித் திரளமு தாங்கே
தாய்தலைப் பட்டங் குருகியொன் றாய
தன்மையி னென்னைமுன் னீன்ற
நீதலைப் பட்டா லியானுமவ் வகையே
நிசிசர ரிருவரோ டொருவர்
காதலிற் பட்ட கருணையாய்! கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே.

என்றலின்,

[6]திருவிசைப்பா வின்மோ தலைச்செய்யு ளாயின்
ஒருவுங்கா ணுன்கொள்கை யூன்.

எனவும்,

[7]வைத்த விருநிதியே யென்னுடைய வாழ்முதலே
நித்திலமே காளத்தி நீள்சுடரே—மொய்த்தொளிசேர்
அக்காலத் தாயே யடிநாயேன் காணுங்கால்
எக்காலத் தெப்பிறவி யான்.

என்றலின்,

[8]அக்காலத் தாயே யெனவழைத்தா னன்பிறு
ணக்கணைநக் கீரனது நாடு.

எனவும், தேவிகாலோத்தரத்தில்,

[1]திருவாசகம், ஆனந்த, பா, 5. [2]திருவாசகம், திருவெம்பா, பா, 14. [3,4,6,8]பரமோ பா, 27, 28, 29, 30. [5]திருவிசை, கங்கைகொண்ட, பா, 7. [7]கைலைபாதி, பா, 54.

நிற்பனவு நடப்பனவு மாகியவந் நீடுயிர்கட்
கொப்புடைய தாய்தந்தை யீசனுமா யுள்ளோநான்
கைப்படவு முத்திதனிற் காமராய்த் துரியத்தே
நிற்பவர்க ளருச்சனையா னென்றனையே நினைவரால்.

என்றலின்,

[1]ஈசன் பிதாமாதா வாமெவ் வுயிர்க்குமெனப்
பேசினன்பே தைக்கெம் பிரான்.

எனவும் வரும் பல பிரமாணங்களு முளவாதல் கண்டு நிச்சயித்தவாறே,

[2]அநாதிமல முத்தன் பிதாவமலை யன்னை
அநாதிமல பெத்தர்க்கெ லாம்.

எனவும், எமது குரவர் கூறுமாற்றான் அது பிரமாணவத்தாதல் காண்க. எனவே, [3]'மைந்த ரநுபவிப்பர் மாதாத் தனையென்று' நிந்தனை வருதலிற் சிவசத்தியைத் திளைத்தல் கூடாதென்பது கருத்து. என்பராலோவெனின் கூறுதும்;

[4]சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னும்
அவசத்த மாபாத கம்.

என்று கூறியவழி அவசத்தமா யிருக்கிற சொல்லான் அஃறிணைப் பொருட்கே மாபாதகம்.

இவ்வாறு பிறர் கூறியது பொருந்தா தென்பார் என்னென வினைச் சொற் புணர்த்தோதினர். அதனாற், பிறர் மனத்தி னினைத்தவாறே வெளியிற் புலப்படச் சொற்றொடுக்க மாட்டா ராயினர். அதனாற் றன்கோணிலையிலே வலிய மதியிலராயினர் பிறர்கோ ளெவ்வாறுதுணிவர்? அங்ஙனந் துணியமாட்டாமையின் அவரை நிராகரித்தல் எளிதின் முடியு மென்பதாம். என்னெனிற் பிறர்க்கில்லையென மயங்கக் கூறி வருதலானும், அன்றி மாபாதகமாவது அச்சொற்றான் பிறிதொன்றில்லை யென மற்றொன்று தோன்ற வருதலானும் "சிவசத்தியைத் திளைப்ப ராதிமுத்தர்" என்ப தெனப் பொருண்மேல் வைத்துக் கூறிக் குற்றங் காட்டவேண்டு மாகலான் அங்ஙனங் கூறாமையின் நின்றுபயன்படாமையானுஞ், சொல்லைச் சொல்லவே ஞாபகத்தாற் பொருட்குற்றந் தானே நிகழு மெனின் அந்த அவசத்தத்தைச் சொல்லுவது மாபாதகமென வேண்டு மாகலானும், அன்றியுங் குற்றங் கூற வேண்டிற் சிறப்பித்து அப்புணர்ச்சி யுணர்த்துஞ் சொல்லாற் கூறியே யுணர்த்தவேண்டு மாகலின் அவ்வாறு கூறாமையாற் குன்றக் கூறிவருதலானும் என்க. இங்ஙனந் திளைத்த லென்பது,

[5]தேனங்கைத் தமுதாகி யுள்ளூறுந் தேசனைத்
திளைத்தற் கினியானை.

எனவும்,

---

[1,2,3,4]பரமோப, பா, 33, 34, 35, 8. [5]சுந்தரர், வலி, பா, 8,

[1]அளித்து வந்தெனக் காவவென் றருளி
யச்சந் தீர்த்துநின் னருட்பெருங் கடலிற்
றிளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்.

எனவும்,

[2]மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை
வளரிளந் திங்களை முடிமேற்
கங்கையோ டணியுங் கடவுளைக் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானை
அங்கையோ டேந்திப் பலிதிரி கருவூ
ரறைந்தசொன் மாலையா லாழிச்
செங்கையோ டுலகி லரசுவீற் றிருந்து
திளைப்பதுஞ் சிவனருட் கடலே.

எனவும்,

[3]விழுந்து மெழுந்தும் பலமுறையான் மேவிப் பணிந்து மிகப்பரவி
எழுந்த களிப்பி னுலாடிப் பாடி யின்ப வெள்ளத்தில்
அழுந்தி யிரண்டு கண்ணுனு மம்பொற் புற்றி னிடையெழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார்.

எனவும் பிறவும் உலகத்துப் பெத்தரா னன்றி முத்தான்மாக்களாற் செய்யப்பட்ட தேவாரந் திருவாசகந் திருவிசைப்பா பெரியபுராணம் முதலானவற்றின் வருதலின், அவசத்த மன்றுவதை ஆவதெனா முதனூலொடு மாறுகொளக் கூறலானும்,

[4]உமையோ டாடித் திளைத்தானை.

என்பது அவ்வாறு செய்யுட் செய்தல் மரபன்மையின் உமையொடு விளையாடி மகிழ்ந்தானை யென்றே பொருள்படலானும், தாமும்

[5]சகளசிவ னோத்திளைப்பர் சார்ந்தபர முத்தர்.

எனவும்,

[6]நம்மழுக ளுடகத்தை ஞானவிழி யாற்றிளைக்கும்.

எனவும் கூறுதலின் முன்னொடு பின் மலைந்து மாறுகொளக் கூறலின் முத்த ரென வமையும். அஃதொழிய ஆதிமுத்தரென மிகைபடக் கூறுதலானும், அன்றி அஃது அவசத்த மென்பது கருத்தாகில் இடக்கரடக்கலாக "ஆழுன் வரு மீகாரபகர" மென்றாற்போல இன்மையின் வழூஉச்சொற் புணர்த்தலானும் "சிவசத்தியைத் திளைப்ப ராதிமுத்தர்" என்புழி, ஆதிமுத்த ரென்றது சீவன் முத்தர் பரமுத்தர் அபரமுத்த ரென்னும் மூவரையுமோ? அன்றிப் பரமுத்த ரையோ?

[1]திருவாசகம், செத்திலா, பா, 10. [2]திருவிசை, கங்கைகொண்ட, பா, 11. [3]பெரிய, எயர்கோன், பா, 311. [4]அப்பர், திருவால, பா, 1. [5]பரமோப, பா, 16. [6]சைவசமய, நெறி, பாயிரம், பா, 8.

[1]நீக்கமி லதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகும்
ஊக்கமி லிரண்டுங் கூடா தொழியவோர் நிலையி னீடுஞ்
சாக்கிரா தீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே.

எனவருதலின், மூவர்க்கும் ஒக்கு மெனிற் பாவிற்கு இன்னோசை பயக்கச்,

[2]சிவசத்தி யைத்திளைப்பர் சிவன்முத்த ரென்னும்.

எனச் செய்யுட் செயலா யிருக்க, அவ்வாறு கூறாமையால், "கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்" நிகழ்தலானும், பரமுத்தர்க்கேயாகின் முற்கூறிய வசன விரோதநிகழ, ஒழிந்த விருவர்க்குஞ் சிவாநுபவம் இன்றெனா முதனூலொடு மாறுகொளக் கூறி விலக்கலானும், அன்றி "மைந்த ரநுபவிப்பர்" என்றற் றொடக்கத்தான் முற்கூறிய வதனையே பயனன்றிப் பின்னுங் கூறலிற் கூறியது கூறி வருதலானும், பிறவாற்றானுஞ், சொற்படையானும் பொருட்கூற்றானும் அளவில் குற்றம் பெருகலின்,

[3]சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னு
மவசத்த மாபாத கம்.

என்ற குறள் வெண்பாவைக் கேட்டலே யாகாது. எனவே சொல்லுதற் கெவரும் உடன்படாராயிற்று. ஆயினும் எதிர்வாதியாகலின் அவனுட்கோளாகிய பொருள் இதுவென் றறிந்து போக்குதும். ஈண்டுச் சிவபோக மென்றது சிவனை யிரண்டு மொன்றுமறக் கலந்தழுந்தியறிதல். சிவாநுபவ மென்பதும், கடாநுபவ மென் பதுபோலச் சிவனை யறிதலா னிகழு மகிழ்ச்சி. சிவாநந்தாநுபவம் என்பது சிவரசத்தை யறிவது. அது ஞானசித்தியில்,

1 शिवानन्दमयं प्रोक्तं स्वानुभूतिस्थितं भवेत् ।
मूकस्वप्नमिवाहुर्निरतिशयात्मविज्ञानम् ॥

भोगोऽस्य वेदना पुंसः सुखदुःखादिलक्षणा ।

எனவும்,

उपलब्धिर्भोगः

எனவும், வருதலின் சிவனை யறிதலேயாம். எனவே, இரண்டற நின்று அறிதற் பொருளேபடலிற் புணர்ச்சிப்பொருள் ஈண்டுக் கொண்ட தன்றாம். எனவே சிவபோகாதி மொழிகளெல்லாஞ் சிவத்துவாபிவியத்தி தாரதம்மியத்தால் அவசரபேதவசனங்களாகலின் இழிவுப்பொருள்படுவன அல்ல. அன்றி, நித்தவிபுவாயுள்ள விருபொருளும் அக்கிரியாவான்களாகையாற் புணர்ச்சிக் கிரியை கூடாதாம். இதனனே யன்றே முன்னர்த் தனுவின்மையிற் கூட்டமின்றென்பதூஉம் என்க. ஆயின் திளைத்த லென்று வந்தது எவ்வா றெனின் அது புரிதல் படுதல் செய்தல் முதலானவைபோற் பிரகரணத்திற்

[1]சிவப்பிர, சூ. 4, பா, 34. [2], [3]பரமோப, பா, 8.

கேற்ற பொருளுணர்த்தும் பொதுச்சொல். ஆகலின் ஈண்டெல்லாமறியும் அறிவுண்டாகவும் அவற்றினைப் பாராது சிவரச மோன்றையே தம்மில் இரண்டற நன்று யறிகிறோம் என்னும் அறிவு மில்லாமல் அறிகின்றது என்றது.

[1]இந்துவாழ் சடையா றுடுமா நந்த
வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

"திளைத்தற் கினியானை" என்றாற்போல வருவன பிறவற்றானுங் கண்டுகொள்க. எனவே "உருகப் பணியாய்" "தின்பன் கடிப்பன் றிருத்தலு மாமே" என்றாற் போலத் திளைத்தலும் அச்சிவாநுபவ முதிர்ச்சியை யறிவிக்குஞ் சொல்லாகவிற் குற்ற மின்றாம். ஆகவே அவசத்தமும் இன்றாம். அதனானே யன்றே மாபாதக நிகழ்வது மின்றாயிற்று. அன்றேற் றிருப்பாட்டனைத்தும் அவ்வாறு படுமென்க. எனவே "சிவசத்தி தன்னைப் புணர்ந்த தன்று" என்றது வலியுடைத்தாயிற்று. ஆகவே சிவசத்தி மாதாவாயினுங் குற்ற மில்லை யென்பதாம். அன்றியுஞ் சிவனுஞ் சத்தியும் ஆன்மாவிற்குப் பிதாமாதா வென்பது அப்பொருட் குண்மையாயின் அவ்வுயிரைப் பெற வேண்டும். அவ்வாறு [2]பெற்றுநோக்கி யென வருதலின், பெற்றார்களேயெனின் அவர்கட்குச் சரீர மின்மையிற் புணரக் கூடாமையானும் விபுவா யருவமாய் இருந்து புணர்ந்து பெற்றார்க ளெனின் இருவருங் கிரியாவான்க ளன்மையிற் கூடா தாகலானும் அவ்வாறாயிற் றன்மதன்மி பேத விவகார நிமித்தந் தேவிதேவ னென விரண்டாய்க் கூறுவ தன்றிஉண்மையான் ஒரு பொருளே யாகலானும், அவ்வாறொரு பொருளா யிருந்து தானே கூடிப் பெற்றதெனின் எத்துணைக் கூடாமை யுடையவர்களாயினுந் தன்னைத் துணித்துக் கொள்ள மாட்டாதது போல வீண்டுங் கூடா தாகலானும், கூடிற் கிரியாவிரோத முண்டாகலானும், உலகிலுள்ளோர் போலக் கர்ப்போற்பத்திக் கிரியை முதலான வெல்லாமுடையராய் அவர்களுள் இவ்விருவரும் எண்ணப்பட்டுப் பெத்தபாவ மடைதலானும், ஒருகா லுற்பத்தி யாயின் உயிர் ஏகதேசியாக வேண்டு மாதலானும், உற்பத்தி யுடையது நசிக்கு மாகலானும், அங்ஙனம் பெறுவது உலகிற்போலத் தேகியா யன்றே பெறுவது. அதனாற் சடசித்திரண்டுஞ் சிவனோடுற்பத்தி யென வருதலானும், அன்றி, அருவாய்ப் பெற்றதாயினும் மும்மலத்தோடுங் கூடப் பெறுதலானும், அவ்வாறு சித்தினிடத்து அசித்துத் தோன்றுதல் நியாய விரோத மாகலானும், அது மாயாவாதப் பிரவேச மாகலானும், பதி பசு பாச மூன்றும் அநாதிநித்திய மென்னும் ஆகமப் பிரமாண விரோத முண்டாதலானும், பிறவாற்றானும் பொருந்தாமையின் அஃது உபசாரமே யாமென்க. இது ஏரல் அக்கர நியாய மன்றி, விவேகபூர்வ மன்மையின் பொருளா யெண்ணி விடை கூறாமையும் ஒன்று. அவ்வாறு வருதற் கெவ்வாறு பொருள் கொள்வதெனின், ஆன்மாக்கள் மகாப்பிரளய காலத்தில் ஆணவ கேவலமா யிருந்துழி, அறிவுண்டாய் விளங்காமையின் ஆன்மா வென வொன்றில்லை

[1]பெரிய, தடுத்தாட், பா, 107. [2]சிவஞானசித், பரபக்கம், பாயிரம், பா, 2.

யென்பது போ னின்றன வன்றே. அவைகளை உற்பத்திக் காலத்தில் ஈசுரனோ டபின்னமாயுள்ள சத்தி சுத்தாசுத்தமாயைகளிலே தத்ததாகாரணமான கலாதிகளை உதிப்பித்து அந்தக் கலாதி கரணங்களினாலே ஆணவமலசத்தியைச் சிறிது நீக்கி ஆன்ம ஞானத்தில் தான் பேதமற நின்று பிரகாசிப்பிக்கையால், ஈசுர சத்தி யான்மாக்களைப்பெற்ற வென்பதனோ டொத்த தாகலானும் அவன் மாதா வெனவும் உலகிற் புதல்வர்க்குப் பிதா நிமித்த காரண மானாற்போல அந்தச் சிவசத்தி அபின்னமான ஈசுரன் அங்ஙன முண்டாவதில் நிமித்தகாரணனாய் நிற்றலிற் பிதாவெனவுங் கூறுப வென்க. இதனானே யன்றே,

[1]பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்.

எனவும், ஈசுவரனொருவனையே,

[2]தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமேயாய தலைவனார்.

எனவும், வருவன காண்க. அன்றிக் கடவுள் உயிர்கள்பால் வைத்த கருணையாற் பிதா மாதா வென்ற தெனினுமாம். இவ்வாறு உபசாரங் கூறுவது உயிர் பிறப்பிறப்புடைத்தென்பது பெருவழக்காக இயன்றதாயினும் தேகம் விட்டொழிதலும் பிறிதொரு தேகத்தை யடைதலு மாகவே கருதிக் கொண்டாங்கு மாதா பிதா வென நூல்களில் வரும் பெருவழக்கெல்லாம் இவ்வாறே கொள்ளப்படுமென்க. அன்றேல்,

[3]அப்பனீ யம்மைநீ யைய னுநீ
யன்புடைய மாமனு மாமி யுநீ
* * * *
இப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத் துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.

[4]மாதா பிதாவாகி மக்க ளாகி.

எனவும்,

முற்றாத் சுடர்மூன்றும் புவன மூன்று
முறைநாலு மறைநாலு மொழிக ளாலுஞ்
சொற்றாய பதமைந்துங் கதிக ளைந்துந்
தொழிலாறுந் துறையாறுங் குறைக ளாறும்
வற்றாத கடலேழும் பிறவி யேழும்
வரையெட்டுந் திசையெட்டும் வளங்க ளெட்டும்
பெற்றாளைப் பெருநலமா முலையை வாழ்த்திப்
பேதையே னுய்ந்தவா பேசொ ணாதால்.

எனவும் வருவனவெல்லாம் பரிகரிக்கப்படாவென்க,

---

[1] திருவாசகம், திருவெம்பா-14. [2] சுந்தரர், கடவூர் மயா, பா, 3. [3] அப்பர், தனித்திருத், பா, 1. [4] அப்பர், நின்றதிரு, பா, 7.

[1]முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே.

என்பதனுள் "உமையோ டாடித் திளைத்தல்" எனவும்,

[2]அப்பனீ யம்மைநீ யைய னுநீ
* * * *
யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.

[3]மாதா பிதாவாகி மக்க ளாகி
மறிகடலு மால்விசும்புந் தானே யாகிக்
கோதா விரியாய்க் குமரி யாகிக்
கொல்புலித்தோ லாடைக் குழக னாகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பறுக்கும் புனித னாகி
யாதானு மெனநினைந்தார்க் கெளிதே யாகி
யழல்வண்ண வண்ணர்தா நின்ற வாறே.

எனவும் வருதலின் சிவசத்தியைப் பிதா மாதாவென்பது உபசாரமாகலின் அவ்வாறு கூடாதென்றதாயிற்று. ஆகவே சாற்றுவமையுந் தெரியாது என்றது வலியுடைத் தாயிற்று. இதனனுஞ் சிவசத்தி ஒருவாற்றால், தாய் போறலின் முன்னர்க் காமப்புணர்ச்சி யியல்பானன்றிப் பிறிதொருவாற்றான் அநுபவிக்கப் படுவள் என்றலின் அதுவு மநுபவ விடயமாகவே நிகழ்தலிற் குற்ற முண்டாம் பிறவெனின் பெற்ற தாயைப் புதல்வன் காமப்புணர்ச்சி யியல்பானன்றி முலைப்பாலருந்துமாற்றா லநுபவித்தலி னவள் அவனுக்கு அநுபவவிடயமாதலுங் குற்றமின்மை கண்டமையிற் கூடுமென்க. இதனானே யன்றே "அன்னைமுலைப் பாலென் றறி" என்றது. அன்றேல்,

[4]தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தா னல்குதியே.

என்றாற் போல்வன, பயன்படா வென்க. பிறவு மன்ன இவ்வாறு நிக்கிரக யோக்கியமல்லாத சித்தாந்த நிலையை நிக்கிரகித்தலில் நிரநுயோச்சியாநுயோகம் என்னு நிக்கிரகத்தானத்தாற் பிறர் தோற்றவாறும், அன்றிப் பிரகிருதமல்லாத மாதா பிதா விசாரம் பண்ணுதலான் அர்த்தாந்தர மென்னும் நிக்கிரகத் தானமுமாம்.

பதினேழாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

[1]அப்பர், திருவாலவாய், பா, 1. [2]அப்பர், தனித், பா, 1. [3]அப்பர்; நின்றதிரு, பா, 7.
[4]திருவாச. ஆனந்தமாலை, பா, 5.

திருச்சிற்றம்பலம்

# பதினெட்டாம் பாட்டு

சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் – சிவசத்தி
தன்னைக்கண் டாங்கருளாற் சச்சிதா நந்தமெனு
மன்னைத் திளைத்துவாழ் வார்.

எ-து பாட்டு. எ-னின், இதுவுமது.

**சிவசத்தியைத் திளைப்பர் ஆதிமுத்தர் என்னும்**
**அவசத்தம் மாபாதகம் என்**

என்பது, சிவசத்தியைத் திளைப்பர் ஆதிமுத்த ரென்று சொல்வது குற்றமுடைய சொல் லாகையால் அச்சொல்லே சொல்லலாகா தென்றால், பொருட் குற்ற முடைத் தென்பது தானே போதருதலின் அந்நிலைமை கொள்ளற்க என்ப தென்னை?

**சிவசத்தி தன்னைக்கண்டு ஆங்கு அருளாற் சச்சிதாநந்தம் எனும்**
**மன்னைத் திளைத்து வாழ்வார்**

என்பது, சிவசத்தி தன்னை முன்னர்த் தரிசித்துப் பின்னர் ஞான மருளி இவற்றி னிலைகளிலே அமிழ்ந்துநிற்கப் பெற்றான் மேல்நிகழும் ஞேயத்தோ டழுந்தி ஒன்று மிரண்டு மற நின்று வாழ்வராகலின் அதற்கு நீ கூறுங் குற்ற மின்றாகலான் அது பொருந்து மென்றவாறு. பூர்வபட்சத்தியல்பு முன்போலக் கண்டு கொள்க. திருமந்திர மாலையில்,

[1]சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தனைச் சாராம னீவுதல்
சைவஞ் சிவாநந்த சாயுச்சி யம்மே.

[2]இருணீக்கி யெண்ணில் பிறவி கடத்தி
அருணீங்கா வண்ணமே யாகி யருளு
மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருணீங்கா வின்பம் *புணர்ந்தயின் றேனே.

எனவும் சிவஞானசித்தியில்,

---

[1] திருமந், சாயுச், பா, 1. [2] திருமந், சத்திநி, பா, 3. *புலம்பயின்றேனே என்பது அச்சுப்பாடம்.

[1]சிவனையவன் றிருவடிஞா னத்தாற் சேரச் செப்புவது.

எனவும்,

[2]பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்.

எனவும்,

[3]தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சிவன்முத்த னாகும்
உரியமல மௌடதத்தாற் றடுப்புண்ட விடமு
மொள்ளெரியின் ஒளிமுன்ன ரிருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந்
திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயு மன்றே.

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[4]பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனு ளுள்ளச் செயலறத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

எனவும், சிவாநந்தமாலையில்,

[5]ஞானந் திகழ்ந்தறிவை நாடுவதே சாலோகந்
தானும் பரையாதல் சாமீபம் — ஆநந்த
போதமே யாகுமது சாரூபம் போதசுகா
தீதமே சாயுச் சியம்.

எனவும், அப்பர் தேவாரத்தில்,

[6]இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருடரு கண்ணிழந் துண்பொரு ணாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே.

எனவும், திருவாசகத்துள்,

[7]காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி.

எனவும், பிறவும் வருமாற்றாற் சிவனைப் பெற்றிருத்தலே முத்தி யாதலின் முற்கூறியது கூடாதாம். அதனானே யன்றே சிவசத்திபோகம் என்னாது சிவபோக மென்றதூஉமென்க. என்னை? வாதுளோத்தரத்தில்,

---

[1]சிவஞானசித், சூ, 9, பா, 4. [2]சிவஞானசித், சூ, 11, பா, 2. [3]சிவஞானசித் சூ, 11, பா, 4. [4]சிவப்பிர, சூ, 10, பா, 1. [5]சிவாநந்த, பா, 181. [6]அப்பர், ஐயாறு, திருவிருத், பா, 4. [7]திருவாசகம், திருவம்மானை, பா, 6.

1 सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगं च तदेव परमं सुखम् ॥

எனவருதலின். அன்றியும் ஞானசித்தியில்,

2 ज्ञानमुद्राविधिप्रोक्तं तत्र सन्मार्गदर्शनम् ।
अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ॥

ज्ञानात्सायुज्यमाप्नोति शुद्धात्मा शिवसङ्गमम् ।
तज्ज्ञानं शक्तिसामर्थ्यं शिवभोगमिहोच्यते ॥

तत्प्राप्तिस्तत्परा मुक्तिः शिवजीवैक्यसंभवा ।

எனவுஞ் சிவப்பிராத்தியே கூறியவாறு என்க. இதனையன்றே,

3 ज्ञानाज्ज्ञेयं समालोक्य पश्चाज्ज्ञानं परित्यजेत् ।

என்றதாம், என்பது. இத்துணையுங் குணகுணிகட்குப் பேத மின்மை கருதி ஒன்றாயே மொழிந்த நீர் ஈண்டு வேறுபடுத்திச் சொல்லிய தென்னை யெனின் அங்ஙனம் ஒன்றாயினும் அநுபவத்தா னளவிறந்த பேதந் தோன்றி முடிவிற் சிவமாயே நிற்றல் எல்லாநூற்கும் எல்லாருக்கு மொப்ப முடிந்தது. என்னை? சுப்பிர பேதத்தில் (ஞான. சிவ. சு. 3)

4 अन्धकारवदज्ञानं ज्ञानं दीपवदुच्यते ।
ज्ञेयं भास्करवत्प्रोक्तं *तस्माज्ज्ञानं विशिष्यते ॥

எனவும் அசிந்திய விசுவ சாதாக்கியத்தில், ஞான தீக்கையில் சோடச சமற்கார பிரகரணத்தில்,

5 अनन्तशक्तिसंयुक्तिर्विवाह इति कीर्तितः ।
अनन्तशक्तिविश्लेषः वानप्रस्थत्वमिष्यते ॥

केवलं शिवसद्भावो यतित्वमिति निर्दिशेत् ।

எனவும், பிறவும் வருதலின் இது குருவருளா லுணர்த்தப்பட் டுணர்த லன்றிப் பிறிதொருவாற்றா னறியப்படாமையின் ஈண்டுணர்த்தல் கூடாதென்க. என்னை?

1 सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ॥

எனவும்,

6 मूकस्वप्नमिवाहुर्निरतिशयात्मविज्ञानम् ।
सत्संप्रदायसिद्धं सन्ततजातप्रकाशसद्भावम् ॥

எனவும், பிறவும் வருதலின். அன்றேல் சிவபோகங் கொள்ளாமையின் சாத்தமத

*पश्चात्ज्ञानं विनश्यति इति मुद्रितपुस्तके पाठो दृश्यते ।

முத்தியாகவே முடியுமென்க. இஃதாணை கூறல் என்னும் தந்திர யுத்தியுமாம். இதனானேயன்றே,

[1]மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுதன் றந்தையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயும தேநிட்டை யென்றா னிறைக்கச்சி யேகம்பனே.

என வந்ததூஉ மென்க. எனவே,

[2]திளைப்பா ரவர்சிவன்சிற் சத்தியைப்பற் றற்றார்
திளைப்பா ரலர்சிவனை யும்.

[3]சாத்துவி யென்றுபரா சத்திதனைச் சாற்றுபய
லார்த்த மதங்கத்து ளாய்.

[4]சாத்துவி யென்றபெயர் தான்கற் புடையதற்கு
வாய்த்தபெய ரென்றே மதி.

[5]கற்புடையா ளைத்திளைப்பன் காதலவன்காண் தன்னவளை
மற்றையார் தீண் டார்காண் மனின்.

[6]கண்ணகைதன் றோளையவள் காந்தன் கலந்தனவ
னண்ண வல்லார் மற்றோர் நவில்.

[7]அனைவன் வசிட்ட னருந்ததி தன்னை
யணையவல்லார் மற்றோர்சொல் லாய்.

என்றாற்போலப் பலபடச் சலிப்பின்றிக் கூறியதெல்லாம் மைந்தர் குழவிப் பருவத்துக் கூறு மழலைச்சொற்போலப் பயன்படா வாயின. பூர்வாபர பரியாலோசனையும் வியாத்தி ஞானமும் நியாய பராமரிசமு மின்றித் தம் மனத்திற் றோன்றியதொன்றை யெவ்வாறாயினும் ஆக எனச்சொல்லி வைத்தலி னென்க. அவர் கூறியது அற்றாக, மதங்கத்தில்,

7 **आद्यन्तोपरता साध्वी मूर्तित्वेनोपचर्यते ।** (பட-3. சு-3.)

என்புழி, சாத்வீ யென்பதன் பொருளியாதெனின்? "**साध्वी करुणायुक्ता**" சாத்வீ யென்றது கருணையோடு கூடினவள் என்பதாம். இதனை மதங்க வியாக்கியானத்திற் கண்டுகொள்க. அது வருமாறு:—

8 **यद्येवमप्राप्तप्रापणीयत्वेन प्रयोजनाभावात् अस्याः मूर्तेर्न सर्गनिर्माणादौ प्रवृत्तिरुपपद्यते । यदाहुः "प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते" इति । तदपि न । यतः सा पत्युः मूर्तिः साध्वी करुणायुक्ता । स्वप्रयोजनाभावेऽपि करुणावन्तः परार्थं प्रवर्तमाना दृश्यन्त इति नात्र प्रयोजनाभावः ।**

என்பதாம். இதனானும் மறைஞான பண்டாரங் கூறுவன வெல்லா முன்னூலி லில்லாப்பொருள்களேயாம் என்பது கண்டுகொள்க. எனவே இதுநோக்கி

[1]பட்டினத்தார், திருவேகம்பமாலை, பா, 10. [2]பதிபசு, போதக, பா, 15.
[3], [4], [5], [6], [7]பரமோப, பா, 10, 11, 12, 13, 14.

வரும் [1]"கற்புடையா ளைத்திளைப்பன்." என்றற் றொடக்கத்தவெல்லாம் முற் கூறியவாறே பயன் படாவாயின. [2]"பற்றற்றார் திளைப்பா ரலர்சிவனையும்" என்றதூஉம் இவ்வாறே முதனூலி லில்லாததே யாம். என்னை? முற்கூறியவாறே,

9 * * * शिवमेवाधिगच्छति ।

शिवज्ञानामृतं पीत्वा । * * आनन्दं शिवभोगं तु ।

எனவும், [3]"ஞானப் பெருமை யுடையோர் சிவனைப் பெறுவர் காணே" எனவும் [4]"தேசனைத் திளைத்தற் கினியானை" எனவும் வருதலானும், திளைத்தல் இரண்டறசின் றறிதல் என முற்கூறிய வாற்றானும் இவர் மாற்றம் பொருந்தா தென்க. இவ்வாற்றாற் சிவாநந்தாநுபவம் தனது விருத்தி சுகசாட்சாத்காரம் அன்மையிற் புருடார்த்த மன்றாதலானும் ஆதிமுத்தன் தனதானந்தமுளதா யிருக்கப் பிறராநந்தமான சிவாநந்த மநுபவியான். அநுபவிப்பின் மற்ற முத்தான்மாக்கள் ஆநந்தமும் அநுபவிக்க வருதலானும், அதனானே பெத்தரது சுகதுக்க போகங்களும் அநுபவப்பட நிகழ்தலானும், அன்றித் தனது செல்வ மிருக்கப் பிறர் செல்வத்தை யநுபவித்தல் உலகத்துள்ளார் கூறுமாறே நிந்தை யாகலானும், ஆதிமுத்தன் முன்னர்ப் பெத்தனுகலின் அநாதி முத்தனை சுத்தன தின்பத்தை யநுபவித்தல் கூடாமையின்,

[5]அனுதிசுத்த சிற்சத்தி யிற்பேரா நந்தம்
அனுதிமுத்த னேதிளைப்ப னோர்ந்து.

[6]திளைப்பர்பர முத்தர் தன்சித்தின் செல்வம்
ஒளித்திடுநா ளண்டன்மற் றுள் ளுண்,

என்றே கூற வேண்டு மாகலானும் சீவசிவயோகந் தாமரையிலையு நீரும்போ லன்றி யின்மையிற் சிவாநுபவங் கூடா தெனவும் பிறவு மவிவேக வினுவாக முற்கூறியதையே கூறி வினவும் வினுவனைத்துஞ் சேட்புலத்த வாயின வென்க; என்னெனில் அந்தக்கரண விருத்தியை யாண்டமையின். அவ்வாறு நிகழ்வதை வீட்டின்ப மாக ஒரு நூலுங் கூறாமையின் விருத்தியா னன்றி நிகழ்வதையே வீட்டின்ப மாகக் கூறலானும், தனது ஆன்ம சிற்சத்தியைக் கூறின் வியாபார விரோதத்தாற் கூடாமையானும், ஆன்மா வாநந்த சொரூப னுயினன்றே தனது ஆனந்தாநுபவ முண் டென்பது; அவ்வாறின்றென மறுத்தலானும் உண்டா யினுங் கிரியாவிரோத மாகலானும், அதனன் முத்தான்மாநந்தாநுபவ விரோத மும், பெத்தான்ம சுகாதி யநுபவ விரோதமும், பிறர் செல்வாநுபவ நிந்தையும் இல்லை யாதலானும், பெத்தராய் முன்னுள்ளா ராயினும் பின்ன ராதிமுத்தர்,

10 शिववच्छाश्वतः शुद्धः

என்பதனுற் சுத்த ராகலிற் சிவாநுபவங் கூடு மாதலானும், அவ்வநுபவம் ஞானவிசேட மாகையாற் குற்ற மின்மையானும்,

[7]அலைகடலிற் சென்றடுங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

என்றற் றொடக்கத்தால் ஐக்கியமாமாறே கூறும் பிரமாணங்கள் பலவற்றானுங்,

---

1, 5, 6பரபோப, பா, 12, 9, 17. 2பதிபசு, போதக, பா, 15. 3சிவஞானசித், சூ, 8, பா, 22. 4சுந்தரர், வலி, பா, 8. 7சிவஞானபோ, சூ, 8, பா, 7.

தாமரையிலையு நீரும்போலத் தோய்ந்துந் தோயாமலும் சிவனுஞ் சீவனு நிற்கு நிலைமையாற் சிவாநந்தாநுபவங் கிடையாதென்பது பொருந்தாமை யானும், இத்திட்டாந்த முத்திநிலை ஐக்கியத்துக்குக் கூறின் ஒரோவழி நீர் ஒரோவழித் தாமரையிலையென இரண்டும் ஏகதேசப்பட்டிருப்பன வன்றி இஃதுள்ளவிடத் ததுவும் அஃதுள்ளவிடத் திதுவுங் கலந்திராமையானும், பின்னொருகாற் பிரிந்து போகலானும், இவ்விரண்டும் மிகவும் பேதமா யிருத்தலே தோன்றலின் ஐக்கியங் கூறுதல் பொருந்தாமையானும், அவ்வாறுயினுஞ் சிவன் தன்னை யடைந்த முத்தான்மாக்களை யன்றி ஒழிந்த பிரபஞ்சத்தினையே தோய்ந்துந் தோயாமலு மிருப்ப னுகையானும், அது,

11 तत्प्राप्तिः सा परा मुक्तिः शिवजीवैक्यसंभवा ।

எனவும், பிறவும் வருமாற்றான் முத்திநிலைக்குச் சிறப்புவிதி யுண்டாகலானும் பிறவாற்றானு மவ்வனைத்தும் பொருந்தாவாம் என்க. எனவே, இவர் சில செய்யுட்குப் பொருள் வேறுகொண்டு கூறியதூஉந் திருத்தியதூஉம் பிறவும் பொருந்தாமையும் தானே போதரும். அன்றி இங்ஙனங் கூறும் வீட்டின் றன்மை உலகியல் கடந்த வைதிக மரபாகலின் அதற்கு இவர்கூறும் உலகியன் மரபு சிறிது மியையா தாகலானும், அவ்வாறு கூறும் வழியுந் தொல்லோர் போல அதற்குரிய மரபாற் கூறுமையானும், யாவனொருவன் கர்த்தா அவன் சரீரியாக வேண்டும்; குலாலனைப் போல போத்திருத்துவ முடைய னுகவும் வேண்டும்; பெத்தனுகவும் வேண்டும்; என நல்ல வேதுவான் நிச்சயியாது, பிறிதொருவாற்றான் மனத்திற் றோன்றியவாறே சொல்லி இத்தருமங்களைச் சிவனுக்கு முண்டாம்படிக் கூறும் ஒருவனைப் போல உலகிற் புணர்ச்சியின்பத் தைக் கண்டு சிவசத்தியின்பால் ஆரோபித்தும், ஆன்மசத்தியின்மேல் ஆரோபித்துஞ், சிவசத்தியை யான்மாத் திளைக்கின்ற தெனவும், உயிரைச் சிவனுஞ் சத்தியும் பெற்றதாகவும், அதனுனே வழுவாதல் கருதிச் சிவாநந்தாநுபவத்திற்கு ஒரு குற்றங் கூறலும், தன்னைத் தானேயநுபவித்தலே நியாய மெனவும், சிவ சத்தி கற்புடையவள் அவள் முத்தான்மாக்களோடு கூடா ளெனவும், சிவாநந்த மென்பது யோகரூடியாற் சிவாநுபவத்தி னிற்பதை ஆன்மாநந்தமு மாமெனப் பொருள்கொண்டும், அவ்வாறு கொண்டுழியுஞ் சிவாநுபவ மென்றாற் போல் வனவற்றைச் சுவானுபவ மெனத் திருத்தியும், இங்ஙனம் முன்னூலி வில்லாத வற்றைக் குயுத்தியாற் சில கற்பித்துச் செய்யுட் செய்தலானும், பிறவாற்றானு மெதிரேற்று விடைகொடா தொழிதலு மொன்று. என்னை; நியாயமன்றி மதி மயங்கிக் கூறும் பித்தர் வாய்மொழியை யெதிரேற்று விடைகூறுதது நியாய மாகலின் என்க. எனவே இவ்வாறு நிக்கிரக யோக்கிய மல்லாத சித்தாந்த நிலையை மாபாதகம் "மைந்த ரநுபவிப்பர் மாதாத்தனை யென்னும் நிந்தனைநீ சொன்னவழு நீக்கு" என் றற்றொடக்கத்தா னிக்கிரகித்தலின் நிரநுயோச்சியாநு யோகம் என்னும் நிக்கிரகத்தாற் பிறர் தோற்றவாறு காண்க. அன்றிப் பிரகிருதமல்லாத பதிவிரதாவிசார முதலிய கூறலி னார்த்தாந்தர மென்னு நிக்கிரகத்தானமுமாம். பிறவு மன்ன.

**பதினெட்டாம்பாட்டுரை முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்

# பத்தொன்பதாம் பாட்டு

அன்றியுயிர் சற்சித்தே யாநந்த மில்லையதற்
கென்றுபல வாற்றானு மெய்துவிக்க - நின்ற
முறையாலு மீசனொடு முற்றுஞ் சமதை
யறையாமை கூறியது மாம்.

எ-து பாட்டு. எ-னின், முன்னர் நிராகரிக்கப்பட்ட ஆன்மாநந்த மதவாதத்தாற் போந்தபொருளிதுவென வுணர்த்து முகத்தாற் சிவசமவாத நிராகரணங் கூறுகின்றது.

**அன்றி உயிர் சற்சித்தே ஆநந்தம் இல்லை அதற்கு**
**என்று பலவாற்றானும் எய்துவிக்க நின்ற முறையாலும்**

என்பது, இனிய இரதகுண ரூபமாயுள்ளதோர் ஆநந்தம் ஆன்மாவிற் கின்மையின் அச்சீவான்மாச் சற்சித்து ரூபி மாத்திரமே யென்றாகலின் அவ் வான்மாநந்தவாதி நிராகரிக்கப்பட்ட தன்றி இனி மேற்கூறுமா றில்லாது இவ் வான்மாநந்த வாதி உடன்பட்டு நின்றவாற்றானும்,

**ஈசனொடு முற்றுஞ் சமதை அறையாமை கூறியதும் ஆம்**

என்பது, சச்சிதாநந்த ரூபனை பரமசிவனோடு சற்சித்துரூபியான சீவான்மா விற்கு முழுதுஞ் சமதை கூறும் சிவசமவாதமும் நிராகரிக்கப் பட்டதூஉ மாயிற்று என்றவாறு.

எனவே ஆன்மாநந்த வாத நிராகரணத்தாற் போந்தது உயிர் சற்சித்துரூபி மாத்திரமே யெனவும், சிவசமவாதி யெல்லாவாற்றானுஞ் சமதை கூறுங்கா லாநந்த முண்டெனவுங் கூற வேண்டு மன்றே! அவ்வாறன்றிச் சற்சித்தென்னுந் தருமமாத்திர மொத்தலி னொருபுடை யொப்புமையா னன்றிச் சமதையுங் கூடா தென்பதாம். அஃதற்றாக, ஆன்மாநந்த வாதியைப் பலவாற்றானும் நிராகரித்த தெவ்வாறெனின் கூறுதும். சுவாநுபவப் பிரமாணம் இவர்க்கும் ஒத்ததாக வுட்கொண்டு பிரத்தியட்சப் பிரமாணத்தான் நிரா கரித்தது. என்னை? முத்தியிற் சிவனையும் ஆன்மாவையுங் காண வேண்டுதலிற் சிவனை யாநந்த தருமத்தானும் ஆன்மாவை அதனை யறிகின்ற திதுவாக வேண்டுமென்னும் ஊகத்தானும் அறிதலே நியாயமாகலின், தோன்றிய வாநந் தஞ் சிவமாகலான்.

அவன் இரண்டின்பந் தோன்றிற் றென் றனுகோவெனின், தன்னின்பந் தனக்குத் தோன்றுதல் கிரியாவிரோதமாகலானும், பேரின்பத்தை இரண்டாக வேதாகமங்க ளோதாமையானும், அதனின்பமுந் தன்னின்பமும் வேறுபட்ட தருமத்தாற் றேன்றுமையானும் பொருந்தா தென்க. சீவான்மா ரசரூபன் அன்று, ஒருவர்க்கும் அநுபவமாகாமையின்; யாதொன்று ரசரூபமாக அநு பவிக்கப்படுவதில்லையோ அது ரசரூப மன்று; தீபாலோகம் போல. யாதொன்று ரசரூப முடையதோ அது ஒருவரா னநுபவிக்கப்படும்; பால்போல வன்றாலின் இது அந்வயவெதிரேகி அநுமானம். சீவான்மா ரசரூப னன்மையிற் பட்சதருமம் பட்சத்தி லுண்டாயிற்று. அதனுலே அசித்தி என்கிற ஏத்துவாபாசம் இன்று. தீபாலோகத்தின் இனிய விரதமின்மை காண்டலின் சபக்ஷசத்துவம் தீபா லோகத்தி லுண்டாயிற்று. அதனுனே விருத்த வெத்துவாபாச மின்று. பாலிலே அநுபவமாதல் இருக்கையான் விபக்ஷத்தினின்றும் வியாவிருத்தியுண்டாயிற்று. அதனுனே அநேகாந்த வேத்துவாபாச மின்று. ஆன்மா ரசரூப னன்று என்பது பிறிதோர் பிரமாணத்தான் வாதிக்கப் படாமையின் அபாதித விடயத்துவம் உண்டாயிற்று. அதனுனே காலாத்தியயாபதிட்ட வேத்துவாபாச மின்று. ஆகமங்களில் ஆன்மாநந்த முண்டெனக் கூறப்படு மெனில் அது ஆன்ம விலக்கணங் கூறும்வழி முத்திகிலேயில் ஞானாநந்த முண்டென்கையானும், அவ்வாநந்த மென்பது மகிழ்ச்சிப் பொருள்பட நிற்றலானும், சிவரச மென்றாற் போல வான்மரச முண்டென யாண்டு முபசார மல்லாத வுண்மைமொழியாற் கூருமையானும் பொருந்தாமையின் ஆகமப் பிரமாண மின்றென்பதாம். ஆன்மா ஆநந்த ரூபனுயின் தன்னை னநுபவிக்கப்படுவது கிரியா விரோத மாகலிற் கூடாமையானும், பாசஞ் சடமாகையானும், சிவனுக்கு ஏகஞானமன்றி அநுபவஞான மின்மையிற் கூடாமையானும், கூடின் பெத்தான்மாக்களுடைய சுகதுக்கங்களும் அநுபவமாமென்கையானும், முத்தான்மாக்க ளநுபவிப்ப ரென்றால் அவர்கள் சிவபோகமன்றி அநுபவியார்க ளாகையானும், அவ்வாறு வசனப் பிரமாண மின்மையானும், பிறவாற்றானும் ஆநந்த முண்டென்பது கூடாமையின் அசற்பிரதிபட்ச முண்டாகையாற் பிரகரணசமவேத்துவாபாச மின்று. சிற்சத்திசத்தாஞாபகத்தா னுண்டென்றது குற்றப் படுதலின் ஈண் டியலாதாம். ஆகவே நல்லேதா ரேதுவுடைய தாயிற்று. ஆகவே அநுமானப் பிரமாணத்தா னான்மாவிற் காநந்த மின்றென்பதூஉம் பொருந்திற்று.

[1]அந்த மொன் றில்லா வாநந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பால்.

என்றற் றொடக்கத்து வசனப் பிரமாணத்தானு மஃதின்றாயிற்று. ஆகவே அவ்வாறுகண்டு உடன்பட்ட ஆன்மாநந்தவாதி பிரதிக்ஞாசந்நியாசம் என்றற் றொடக்கத்துத் தோல்வித் தானங்களான் நிக்கிரகிக்கப்பட்டது முற்கூறிய வற்றாற் காணப்படும். இதனுனேயன்றே பலவாற்றானு மென்றதூஉம். இதனாற் சிவசமவாத நிராகரணமுங் கூறிய தென்னெனின் சிவன் சச்சிதானந்த ரூப னாகலின் அவனைப் போல வான்மாவுஞ் சச்சிதானந்த ரூபனென்றன்றே சிவ சமவாதி கூறவேண்டும். அதற் கான்மாவிற் காநந்தமில்லை யென்றமையானும்,

[1] திருவாசகம், கோயிற்றிருப்பதிகம், பா, 10.

உண்டாயிற் சச்சிதானந்த தருமஞ் சிவனுக்குஞ் சீவனுக்கு மொத்தலின் தருமபேத மின்றாகலின் ஒரு பொருளாதல் வேண்டுமாற்றான் மாயாவாதப் பிரவேச மாகலானுங் கூடாதென்பதாம். என்னை? பவுட்கர விருத்தியில் எடுத்துக்காட்டிய சூதசங்கிதையில் (யக்ஞ-அத்தி 39)

1 केनचित् साधनेनैव मुक्तः शिवसमो भवेत् ।
इत्येवं केचिदिच्छन्ति वादिनो मुनिपुङ्गवाः ॥ 45

वार्तामात्रमिदं प्रोक्तं सर्वथा न तदर्थवत् ।
एकदेशेन वा जीवः किं वा सर्वात्मना समः ॥ 46

एकदेशेन चेत्सर्वे शिवाः संसारवर्तिनः ।
एकदेशेन सर्वेषामस्ति साम्यं शिवेन हि ॥ 47

सर्वात्मना चेत्साम्यं तत्सर्वथा शिव एव सः ।
[1]भेदकारणशून्यत्वाद्भेदाभावाच्च वस्तुनः ॥ 48

तस्माज्जीवः स्वतः साक्षाच्छिवः सत्यादिलक्षणः । 50

எனவருதலின் என்க. இவ்வாறு சிவசமவாதி நிராகரணத்தானு மான்மா நந்தமின்றென்பது வலியுடைத்தாயிற்று. இதனானேயன்றே சைவ பரிபாஷையில் முத்தி பரிச்சேதத்தில்.

2 [2]शूर्यादिप्रकाशेन सूर्यप्रकाशानुभवे चक्षुःप्रकाशविनियोगवत् शिवानन्दानुभवे जीवन्मुक्तज्ञानानन्दरूपमुपयुज्यत इति न स्वगतसुखानुभव इति संप्रदायः

எனவந்ததூஉம் என்க. பிறவு மன்ன.

பத்தொன்பதாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

[1]भेदकाकारशून्यत्वात् इत्यपि पाठः   [2]பாடம் மாறியுள்ளது.

உ

திருச்சிற்றம்பலம்

# இருபதாம் பாட்டு

ஆநந்த மின்றி யரன்சமதை முத்தியெனிற்
றானந்த வேதா கமஞ்சாற்று — ஊனப்
படுமே தசகா ரியத்திற் பலவுங்
கெடுமேயொன் றாமெனலுங் கேள்.

எ-து பாட்டு. எ-னின், இந்நூலின் வைத்துக்கூறும் ஆன்மாநந்த வாதி சிவசமவாதி யிருவருண் முற்பட வான்மாநந்தவாதி நிராகரணப்படுதலின், நின்ற சிவசமவாதி நிராகரண மெடுத்துக் கொண்டாராகலின் அவன் மேலைச் செய்யுளாற் கூறப்பட்டதை உடன்பட்டுப் பிறிதொருவாற்றாற் சிவசமதை கூறுகின்றதை மறுக்கின்றது.

**ஆநந்தம் இன்றி அரன்சமதை முத்தி எனில்**

என்பது, முன்னர்க்கூறியவாறே ஆநந்தமில்லாத துண்மைதானே அவ்வாநந்த மன்றிப் பிறிதொருவாற்றாற் சமதை சொல்லப்படும். அஃதென்னெனின், சிவன் சச்சிதானந்த ரூபனன்று. சற்சித்து ரூபிதானே அதனானே ஆன்மா வுஞ் சற்சித்து ரூபியாகலின் சிவசமனாக வேண்டுமாற்றாற் கூறுவேனெனில்,

**தான் அந்த வேதாகமஞ் சாற்று ஊனம் படுமே**
**தசகாரியத்தில் பலவும் கெடுமே ஒன்றும் எனலும் கேள்**

என்பது, அவ்வாறு சிவன் ஆநந்தரூபி யன்றெனற வேதாகமங்கள் கூறா. அன்றியுந் தசகாரியத்திற் பல காரியங்களும் வேண்டாதே போம். சாயுச்சிய முத்தி கூறலுங் கூடாதா மாகையான் இவ்வாறு அளவிறந்த விரோதங் கூறு மிந்த வார்த்தை யாண்டுப் பெற்றாய்? அஃதொழிந்து சற்குருவை யடைந்து உண்மையைக் கேட்டறிவாயாக என்றவாறு.

**தான்** என்பதசைநிலை. எனவே இங்ஙனங் கூறுஞ் சிவசமவாதி யான்மாநந்த வாதியினுங் கேடுபட்டான் என்றதாயிற்று. அவனிவ்வாறு வேதாகம விரோத முதலான வெகு விரோதங் கூறுமையின் என்க.

அற்றேல் அவ்வாறு வரும் வெகுவிரோதங்களின்றிக் கூறுதும். அது வருமாறு:— காமிகத்தில்,

1 **शिवं वै शाश्वतं नित्यं ज्ञानानन्दस्वरूपकम् ।**

எனவும், அசிதத்தில்,

2 सच्चिदानन्दरूपी यः सदसद्व्यक्तिवर्जितः ।

எனவும், வருவன கண்டன்றே சிவனுக் கானந்த முண்டென்றது. ஆனந்த மென்னுஞ் சொல் இனிய விரதமான வின்பமும் சந்தோஷமான மகிழ்ச்சியும் சமிருத்தியும் மென்னும் மூன்றிடத்துஞ் செல்லும். இரத்தினத்திரயத்தில்

3 आनन्दविप्रलब्धानामानन्दोपहिता चितिः । (௬-14)

எனப் *பிறர்மதநிராகரணத்தி லானந்தமென்பது ரசரூபமான சுகார்த்தத்தில் வந்தது.

4 मुत्प्रीतिः प्रमदो हर्षः प्रमोदामोदसंमदाः ।
स्यादानन्दथुरानन्दः शर्मशातसुखानि च ॥

என விதித்தலானும்

5 निजानन्दमहाम्भोधौ यस्मिन् मज्जेदनाकुलः ।

என்னும் பிரயோகத்தானும் சந்தோஷப் பொருள்பட வந்தது. இரத்தினத்திரயத்தில்,

6 पत्युराविष्करोत्युच्चैः परमानन्दसन्ततिम् ।

என்புழி ஞானக்கிரியைகளின் சமிருத்தியில் வந்தது, என்னை? ஆண்டு அதன் வியாக்கியானத்தில் அகோர சிவாசாரியர் (பக்கம்-90).

7 सा च शक्तिरुद्योगेन बिन्दोः कार्यस्य प्रसवाभिमुख्यं कुर्वाणा यदा पत्युः परमानन्दसन्ततिं ज्ञानक्रियासमृद्धिं कार्योत्पादनेन आविष्करोति तदास्य भोगः शिवस्य पालनात्मको भवतीति भावः। न तु शिवस्य परमानन्दः सुखातिशयो भोगश्च सुखसंवेदनरूपो व्याख्येयः। निर्मलत्वेन शिवस्य *पाशरूपयोस्तयोरसंभवात् ।

என உரை கூறலினென்க. எனவே ஈண்டுச் சச்சிதானந்தரூபி என்புழி ஆநந்தமென்பது ஞானக்கிரியா சமிருத்தியென்றதாயிற்று. ஆகவே ஆநந்தம் அகண்ட பரிபூரணம் திருத்தி சமிருத்தியாதல்போல இரதஞ் சுகம் மென்றூற்போல்வனவும் ஆதலின் இவைபோல்வன எல்லாம் ஒரு பொருட் கிளவியாம். ஆகவே சிவனுஞ் சற்சித்துரூபி யென்றே பொருளாகலி னவனோடு சமதை கூறுமான்மாவுஞ் சற்சித்து ரூபியேயாம். இதனையன்றே பிரமாநந்த ரூபமென்று கூறும் வேதாந்தி முதலாயினோர், சீகண்டசிவாசாரியர் செய்த இரத்தினத்திரயத்தில்

8 वेदान्तैश्च कुलाम्नायैस्तथान्यैः प्रतिपाद्यते ।
आनन्दविप्रलब्धानामानन्दोपहिता चितिः ॥ 14

---

*ஏகான்மவாதநிராகரணத்தில்.

*उपाधिभूतयोः इति मुद्रितकोशे दृश्यते,

अस्यार्थः "आनन्दं ब्रह्म" इत्यादिश्रुतिगतस्य आनन्दशब्दस्य परिपूरणतार्थस्य मुखार्थता-भ्रान्त्या विप्रलब्धानामपरिणतमलानामेव शोभते। नान्येषां अस्मदादीनां शिवानुगृहीतानामिति भावः॥ अत एव आत्मविषयं ज्ञानमपि तत्तच्छास्त्रप्रसक्तानां यथावन्न संभवतीत्याह।

चिन्महोदधिगाम्भीर्यमवसीयेत सूरिभिः।
अवगाह्य परानन्दलहरीं यदि नोक्षिपेत्॥ 15

यदिहि प्रोक्तवत्परमानन्दभ्रान्तिकल्लोलः तान्नोत्क्षिपति ततो विद्वद्भिः चिन्महोदधेरात्म-वर्गसमुद्रस्य गाम्भीर्यं सर्वज्ञत्वसर्वकर्तृत्वात्मस्वरूपं नित्यत्वव्यापकत्वानेकत्वादि चावगाह्य प्रमाणं विषयीकृत्य अवसीयेत। नान्यथा। तत्तच्छास्त्रकर्तॄणामसर्वज्ञत्वात्तद्वचनादेतन्न संभवतीत्यर्थः।

என நிராகரிக்கப்பட்டதூஉம் என்க. இதனானே சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ தருமத்தாற் சிவனொடு சமதை கூறி, முத்தியில் அவற்றினபிவியத்தி கூறுதலே சித்தாந்தமுத்தி யென்பதூஉ மாயிற்று. ஆகவே ஆநந்தச்சொற் கண்டவழிச் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ சத்தி யென்றும், மகிழ்ச்சி யென்றுமே பொருளாகலின், இரதரூபமாயுள்ள சுகாநந்தஞ் சிவனுக்கு மான்மாவிற்கு மின்றென்க. இதனானே யன்றே காமிகாதியாகமங்களும் பிறவு மான்ம விலக்கணங் கூறும்வழிப் பெத்த முத்தியிரண்டற்கு மொத்திருத்தலின் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ சத்தி மாத்திரத்திற்கே மலாவிருதத்துவமு, மல நிவர்த்தியான் அபிவியத்தியுங் கூறுவனவாயின. காமிகத்தில்,

9 शिववत्सर्वकर्तृत्वे सर्वज्ञत्वे च सत्यपि।
न करोति न जानाति भृशं मुह्यति बालवत्॥

எனவும், அசிதத்தில்,

10 अथात्मापि विभुर्नित्यो मलबद्धस्वदृक्क्रियः।

எனவும், சுவாயம்புவத்தில்,

11 अथात्मापि मलैर्बद्धः पुनर्मुक्तश्च दीक्षया।

विज्ञेयः स क्रियावस्थः केवलः सकलोऽकलः।
चेतनश्च विभुर्नित्यो गुणहीनोऽक्रियोऽप्रभुः॥

எனவும், மிருகேந்திரத்தில் (பரமோட்ச-சு-5)

12 चैतन्यं दृक्क्रियारूपं तदस्त्यात्मनि सर्वदा।

எனவும், பவுட்கரத்தில், (பதி-சு-12)

13 पशुः पशुत्वसंरुद्धदृक्क्रियाप्रसरः सदा।

எவுனம், சிவஞானபோதத்தில்,

14 अवस्थापञ्चकस्थः स्यान्मलंरुद्धस्वदृक्क्रियः । (சூ-4)

எனவும் சிவஞானசித்தியாரில்,

[1]உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதா யுற்றுச்
செயிருறு மிச்சா ஞானச் செய்திக ளுடைய தாகிப்
பயில்வுறு மின்பத் துன்பப் பலன்களு நுகரும் பார்க்கிற்
றுயிலொடு மஞ்ச வத்தைப் படுமுண்மை துரியா திதம்.

[2]ஆயவா ணவம கன்ற வறிவொடு தொழிலே யார்க்கும்.

எனவும், இவைபோல்வன பிறவும் பெத்தாவத்தையிற் கூறியவாறே முத்தியினும், காமிகத்தில்,

15 यदानुगृह्यते सोऽयं गुरुणा करुणाब्धिना ।
तदास्य पुद्गलंस्यैषा ज्ञानशक्तिः प्रसर्पति ॥

देशकालंानवच्छिन्ना निरवद्या निरर्गला ।

எனவும், இரௌரவத்தில்,

16 अनन्तोपरमे तेषां महतां चक्रवर्तिनाम् ।
विहितं सर्वकर्तृत्वं कारणं परमं पदम् ॥

எனவும், மதங்கத்தில் (பதிபடல-சு-59-60).

17 सा शक्तिस्तस्य संस्पर्शाद्व्यक्तिभूता सुनिर्मला ।
*पत्युर्दानं तदेवोक्तं न स्वयं व्यज्यते पशोः ॥

எனவும், பவுட்கரத்தில், (பசுபடலம்)

13 पशुः पशुत्वसंयोगान्न मुक्तः पशुरुच्यते ।

18 यस्मात्स्वदृक्क्रियाशाली कलाहीनोऽप्यनीश्वरः ॥ 1

व्यापकश्चिन्मयः सूक्ष्मः शिववत्संव्यवस्थितः । 2
दीक्षैव मोचयेत्पाशान् शिवत्वं च ददात्यणोः ॥ 47

दानं नाम स्वसत्त्वैव या सा ज्ञानक्रियात्मिका ।
न तु स्थानान्तरादानादभ्युत्पत्तिः कदाचन ॥ 48

எனவும், கிரணத்தில், (பசுபடலம்)

19 समे कर्मणि सञ्जाते कालान्तरवशात्ततः । 20

[1], [2]சிவஞானசித், சூ, 3, பா, 1. சூ, 1, பா, 41.

*प्रत्युत्थानमिति मुद्रितपुस्तके पाठः

तीव्रशक्तिनिपातेन गुरुणा दीक्षितो यदा।
सर्वज्ञः स शिवो यद्वत्किञ्चिज्ज्ञत्वविवर्जितः॥ 21
शिवत्वव्यक्तिसंपूर्णः संसारी न पुनस्तदा। 22

எனவும், மிருகேந்திரத்தில், (வித்யாபடலம் 6ம் பிர. சு. 7)

20 नाव्यापको न क्षणिको नैको नापि जडात्मकः।
नाकर्ताऽभिन्नचिद्योगी पाशान्ते शिवता श्रुतेः॥

எனவும், மோக்ஷகாரிகையில்,

21 चिद्व्यक्त्या सर्वकर्तृत्वं सिद्धानामीश्वरो यथा।
अन्यथा कर्तृता न स्यादीश्वरस्यापि सिद्धवत्॥ 123
न कर्तृशक्तेश्चिद्व्यक्तिरेकनाशे सयुक्तिका। 124

எனவும், சிவஞானசித்தியில்,

[1]விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்.

எனவும், காமிகாதிமூலாகம முதலான பலவுஞ் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ சத்தி மாத்திரத்திற்கே அபிவியத்தி கூறியவாறு காண்க. இவ்வாறு ஆநந்த மென்பதொன்றின்றிச் சிற்சொரூப மாத்திரமே இருவர்க்கு முள்ளனவாகலின் முத்தியி லிவன்றானே யவனென முழுதுஞ் சமதை கூறுவதும், நிச்சுவாசத்தில்,

22 सर्वकृत्सर्वलोकेशः शिवतुल्यः प्रजायते।

எனவும், மதங்கத்தில், (தர்ம படலம் சு-72)

23 व्यक्तोऽसौ शिववद्भाति शिव एव तनुक्षये।

எனவும், சர்வஞானோத்தரத்தில்,

24 *अमृतात्मा शिवः साक्षात्तस्मिन् विद्यस्तु योगवत्?।
सर्वज्ञः सर्वगः सूक्ष्मः सर्वेशः सर्वकृद्भवेत्॥

எனவும், சிவதருமோத்திரத்தில்,

25 संसारसागरान्मुक्तः शिवतुल्यः प्रजायते।

எனவும், மோக்ஷகாரிகையில்,

26 प्राप्नुतः शिवतुल्यत्वं तन्वन्ते गुरुदीक्षितौ। (சு-117)

எனவும், தத்துவப் பிரகாசிகையில்,

[1]சிவஞானசித், சூ, 5, பா, 8.     * அச்சிட்ட புத்தகத்தில் இல்லை.

27 चिदचिदनुग्रहोऽयं किल यो मोक्षः शिवसमानतारूपः । (சு-36)

எனவும், சித்தியாரில்,

[1]காயங் கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போ னிற்பன்.

எனவும், பிறவும் வருவனவும் காண்க. சிவன் சித்துருவமுடைய னென்றது சிற்சத்தி முதன்மை பற்றியாகலின், (கூர்மபு-உபரிபாகம்-அத்-8 சு-13)

28 सर्वज्ञता तृप्तिरनादिबोधः स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः ।
अनन्तशक्तिश्च विभोर्विधिज्ञाः षडाहुरङ्गानि महेश्वरस्य ॥

என்னு மிவைகளுஞ் சிவகுணமாகக் கூறலின் இவ்வான்மாவிற்கும் வேண்டுமெனின் சித்தாந்த சாராவளியில் (கிரியா-சு-87),

29 सुग्ध्याऽग्नौ च नियोज्य तत्र परया शिष्यस्य चिद्व्यक्तिकां
सर्वज्ञत्वसुतृप्त्यनादिकमतिस्वातन्त्र्यसंज्ञानि च ।

शक्तिं पूर्तिमतीमनन्तविषयां षट्कं गुणानां तत
श्चावाद्यानलतः शिवेन सदृशं शिष्ये तदा योजयेत् ॥

என்பதனுன் ஆன்மாவிற்கு முண்டென்க. இவ்வாறன்றி எண்குணமாகக் கூறுவது முண்டு;, (ஸர்வஞானோ-பிர2-சு-57)

30 सर्वज्ञता तृप्तिरनादिबोधः स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः ।
अनन्तशक्तिश्च निरामयात्मा विशुद्धदेहः स शिवत्वमेति ॥

எனவருதலின். இதனுனேயன்றே திருமந்திரமாலையில்,

[2]கண்ணின் மணியாடு பாவையெம் மீசனை
உண்ணின் றுணரவல் லாரவர் கட்கு
விண்ணின்று தூறு முலக மதுகடந்
தெண்ணும் பரிசினோ டெண்குண மாமே.

[3]விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேயுல காகிற்
கொடையுடை யான்குண மெண்குண மாகச்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே.

எனவும், அப்பர்தேவாரம்,

[4]ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே

[1]சிவஞானசித், சு, 8, பா, 31. [2]திருமந்திர, அச்சிட்ட பதிப்புக்களில் இல்லாதது.
[3]திருமந்திர, அனுக்கிரகம், பா, 4. [4]அப்பர், குடந்தைக்கீழ்க், பா, 10.

கூவியம ருலகனைத்து முருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலும்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே.

[1]நாவார நம்பனையே பாடப் பெற்றோ
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
ஆவாவென் றெமையாள்வா னமரர் நாத
னயனெடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் றென்றிசைக்கோன் றானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
குணமாகக் கொள்ளோமென் குணத்து ளோமே.

என்வும், பிறவும் வருவதூஉம் என்க. எனவே மூவகைச் சமரசீ பாவத்தானும் ஒத்ததூஉமாயிற்று; சிவனைப்போல மலபெந்தமின்மையின் முத்தி சமரசமுஞ், சிவசத்திபோல வான்மசத்தியும் விளங்கலிற் சத்திசமரசமுஞ், சிவனாகலிற் சிவ சமரசமும் நிகழ்தலின். இதனானே பெத்தாவத்தையிற் பாச பெந்தங்களாற் சீவனென நின்றதேயன்றி அது நிவர்த்தியானவழி பதி தானே யாயினு னென்பதூஉம் விளங்கிற்று. என்னை? தசகாரியத்திலான்மசுத்தியில்,

பாசபெந் தத்தி னாலே சீவனும் பாசம் போனால்
ஈசனு முயிரே யாகு மியைந்திடுங் கன்மத் தாலே
நாசமேல் வினைக ளெல்லா நாதனு மலத்தி னாலே
தேசுநீர் பசுவாம் போனாற் சிவனுமாஞ் சீவன் றானே.

எனவருதலின் என்க. எனவே முத்தியிற் சிவன் பிரேரிக்கப்படுவதின்மையும் பேதமுண்மையும், தாமே போந்தவாறு மாயிற்று. ஆகவே, மிருகேந்திரத்தில் (பிர. 2. - சுலோ. 29.)

31 शैवे सिद्धे भाति मूर्धीतरेषां मुक्तः सृष्टौ पुंवरोऽभ्येति नाथः।
विश्वानर्थान्स्वेन विश्व्य धाम्ना सर्वेशानानी*शितः सर्वदास्ते॥

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[2]இருணனி யிரவி தான்வந் திரித்தலு மிரவி லெண்ணும்
பொருணிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருணிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னு
மருளையு மொழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே.

எனவும் வரும். முத்தியிற்பேதமென்பது,

---

[1] அப்பர், மறுமாற்றத், பா, 10. *अनीरितः इत्यपि पाठः [2] சிவப்பிர, கு, 5. பா, 4.

[1]செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
　　செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்
　　நற்குளிகை போலவர னணுருமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு
　　மக்குளிகை தானும்பொன் னாகா தாகு
மும்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
　　னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே.

என்பதனானுமன்றி,

32 अद्वैतवासनाविष्टैः सिद्धान्तज्ञानवर्जितैः ।
व्याख्यातोऽत्रान्यथाऽन्यैर्यत्सततोऽस्माकमुद्यमः

எனவரும் அகோர சிவாச்சாரியர் *மொழியானு மறிக. இதனானேயன்றே தசகாரியத்துட் சிவபோகத்தில்,

ஆதியிற் பசுபா வத்தை யகன்றுநற் பதிபா வத்தாற்
கோதற வுறைத லானே கூடுத லென்று கூறும்
ஈதலாற் சிவனோ டான்மா வியைந்திடு மாற தெங்ஙன்
றீதற வெங்கு மானான் சேரவே றிடமு முண்டோ.

என்றதூஉமென்க. எனவே ஆன்மாநந்தமென்பது ஆகிலாதமேயாகலின் அது ஆன்மசத்தி யபிவியத்தி ஆவதோரியல்பாகலான் ஆன்மகுணமான வினிய விரதமான சுகார்த்தங் கூடாதென்பதாம். என்னை? மிருகேந்திரத்தில் (அத்வ சு. 175)

33 येऽपि तत्पदमापन्नाः शैवसाधनयोगतः ।
ते तत्स्थित्यन्त †माह्लादं प्राप्य यान्ति परं पदम् ॥

ब्रह्मप्राप्त्यवधिश्चैव चात्मानन्दसुखं भवेत् ।

என்றற் றொடக்கத்தான் ஆன்ம குணாநுபவங் கூறின் 'முற்கூறியவாறே யான்மாவிற் காநந்தமின்மையின் கூடாமையானும், பிறவாற்றான் மகிழ்ச்சிவருவது சுகரூபமான வதிசயலாபத்தானுந் துக்க நிவர்த்தியானுமாகலிற் சுகாதிசயலாபம் பெற்றுழி நிகழ்வதென்றாற் சிவாநந்தானுபவப் பிராத்தி யுண்டாமாதலின் அது சம்பிரதாய மன்மையானுந் துக்கநிவர்த்தி முகத்தாற் கூறு மகிழ்ச்சியே யீண்டாகலாத மென்றதாம். இவ்வாறு முன்னுள்ள சத்திப்பிரகாச ரூபமான இதுவேயன்றி இன்பமாய் ஒன்றுந் தோன்றாதோ வெனின் புண்ணிய பாவமான சூக்கும கன்மமென்னுஞ் சிற்றின்பானுபவமாவது புத்திநிட்டமான சாத்விக குணபரிணதியன்றே. அதுவே யளவிலின்பந் தருவதென்றால் உபாதி ரகிதமாய் அகண்டமாய்ச் சுத்தமாய்ச் சிவசத்தி சமமாயிருக்கிற ஆன்மசத்தி

[3]சிவஞானசித், சூ, 11. பா, 10. *தத்துவப்பிரகாசிகையின் உரையின் தொடக்கத்திலுள்ள சுலோகம். † आनन्दं इत्यापि पाठः

விசிரும்பண மெவ்வாறின்பமாகத் தோன்றாது? அதனால் அளவில் பேரின்ப முண்டாமென்க. இதனையன்றே தத்துவ விளக்கத்தில்,

[1]இல்லா தனபிறந் துள்ளன யாயு மெனா மயக்கம்
நல்லா கமமறி ஞர்க்கிலை நாட்டிய தத்து வங்கள்
எல்லா மியம்பு முறையே பிறந்து மிறந்து முத்தர்
அல்லா வனைக்கட் கனுபவ காரிய மாகி நின்றே.

எனவந்ததூஉம் என்க. இதுவே ஆன்மாநந்தமும், சிவனா னிருமிக்கப்படுதலிற் சிவாநந்தமுமாம். என்னை? எமது குரவர் கூறிய சகலாகம சாரத்தில்,

சிவன்குரவ னாலியன்ற தீக்கை யியற்ற
வவன்மலங்க ளெல்லா மகன்று.

பெற்றகில போகம் பெறுவன் பரிதிருத்தி
யுற்றே யனாதியறி வும்.

பெறுவன் சுதந்தரமும் பெற்றலுத்த சத்தி
யுறுவ னநந்தசத்தி யும்.

ஆமயந்தீ ரான்மா வசுத்தமிலா வாக்கையொடு
மேவு மறுகுணத்தின் மேல்.

என்றியம்பு மட்ட குணமு மிறையருளாற்
பொன்றா துயிர்க்குறுமப் போது.

தொன்னா ளறிவுதொழி றோன்றுதலாற் பெற்றவின்பே
தன்னாநந் தம்பெறுத றான்.

சிவாநந்த மென்றுமிதைச் செப்பிடுவர் கற்றோர்
அவனா லுயிர்க்குறுத லான்.

எனாதிக் கிவையெட் டியல்பாகு மன்றே
தனாது நிராவரணத் தால்.

ஆவரண நீக்கியுயிர்க் காக்குதலி னாலீசன்
மாவரத்தால் வந்ததென வாய்.

எனவும், பிறவுங் கூறுதலால். இவ்வாறுவருஞ் சிவசமதை யெவ்வாற்றான் வருமெனின், எமதுகுரவர் கூறிய தசகாரியத்துச் சிவயோகத்தில்,

காண்டகு சிவன்போ லுன்னைக் கருதியே யவனோ டொன்றாய்ப்
பூண்டுநின் றிடுத லன்றோ பொருவறு சிவயோ கந்தான்
ஈண்டஃ தறிவான் மிக்க விருந்தவ வுற்சா காதி
மாண்டசா தனங்க ளாறும் வல்லையே லொல்லை வாய்க்கும்,

[1] தத்துவ, பா, 49.

தன்னையே சிவனென் றெண்ணித் தானவ னாகி வேறற்
றன்னவே சமர சந்தா னுதித்திடு மரனோ டொன்றிப்
பின்னமில் குணங்க ளெல்லாந் தன்னுளும் பிறங்க லாலே
அன்னிய னுயிர்நோய்க் கென்ன வனனியன் பாலிற் போலே.

எனவருமாறே நிற்பின் வருமென்க. இவ்வாறன்றிச் சிவாநந் தானுபவம் முத்தியென்னிற் சிவகுணமான வாநந்த மான்மாவிற்கு வந்தாற் சங்கிராந்தியாய் நிராகரிக்கப் படுதலானும். [1]"ஆநந்த மென்ப தகமகிழ்ச்சி" யாதலின்,

[2]கருத்தின் களிப்பினைக்கண் காணாது காணா
தொருத்தன்பே ரின்பமுயி ரும்.

என்றமையான் அநுபவ மாகாமையானும், அன்றிச் சிவாநந்த மென்பது சிவனது ஞானக்கிரியா சமிருத்தியாகலிற் பொருந்தாமையானும், பலவகைப் பட்டகுற்றந் தங்குமென்க. இவ்வாறு யாங் கூறியவாறே கூறுவதே சிவாகமங் களுக்குந் தொல்லாசிரியர் வாய் மொழிக்குங் கருத்தென்பது எமது குரவர் கூறிய வாய்மொழியானு முணர்க. அது † எமது குரவர் கூறிய வகவலுள்,

சிலருயி ரிடத்து நிலவிய சிவன்குணஞ்
சேருமென் றுரைப்ப ரார்வங் கூரச்
சங்கி ராந்தஞ் சடத்துக் கல்லது
பங்கமி லறிவிற் பற்றா தாகலின்
அவருரை பழுதென் றறிவா யாக
சுத்த சைவத் துத்தமர் கொண்ட
வத்தங் கேளுன் னரும்பவ மகலப்
பரசிவ முதலாப் பகர்ந்திடு தருமமும்
பிரமமென் பெயருயிர்க் குரிமைய னாதியின்
அக்குண முழுது மனாதி மலத்தான்
ஒக்க மறைப்புண் டொடுங்கி யிருப்பக்
கலைமுத் தத்துவக் காட்சி யாலே
இலகுசிற் றுணர்வோ டிருந்த நானே
மம்ப ரளிக்கு மைம்மல ரரன்றன்
செம்மலர்த் திருத்தா ளண்ட நீங்கி
அக்கணம் பிரம மானேன் நானென
ஒக்கு மிப்பொருட் குதாரணஞ் செப்பிற்
சருவஞ் ஞானோத் தரவிருத் தியினின்
அறுதி யிட்டன னகோர சிவாசான்
[3]'செம்பிரத குளிகையிற் செம்பொ' னாமென
வெம்பி ரானரு ணந்தி யியம்பினன்
[4]'இருணனி யிரவிவந் திரித்த'லென் பாட்டிற்
பரவு புகழுமா பதியுங் கூறினன்
[5]'நில்லா தனபிறந்' தென்னும் பாட்டின்

[1]உரிச்சொனிகண்டு, பண்பு, பா, 7. [2]பரமோப, பா, 18. † ஈண்டு எமது குரவர் என்றது களந்தை ஞானப்பிரகாச பண்டாரம் என்பவரை. [3]சிவஞானசித், சூ, 11, பா, 10. [4]சிவப்பிர, சூ, 5, பா, 4. [5]தத்துவ, பா, 49.

நல்லசம் பந்தசர ஞெயை றுரைத்தனன்
அந்நிலை யுயிர்பெறு மனுபவங் கேண்மதி
என்று மறைதி முத்தனைத் தொழிலும்
இன்றி யெலாந்தன் சத்தியின் விளங்கும்
முக்கா லத்துந் தொக்கபல் பொருள்களும்
எக்கா லத்து மிசைந்து
காணு மென்னு மாணம ருரையே.

எனவரும்.

இவ்வாறு ஆன்மசிற்சத்தி யபிவியத்தியாலுள்ள வின்பத்தையே யான்மாநந்தமென மறைஞான பண்டாரங் கூறியதூஉ மாம். என்னை?

[1]பரிபாகத் நின்மலத்தைப் பாற்றியுயிர்ச் சத்திக்
கருளா லிலக்குவனின் பார்த்து.

என்றாராகலின், இதனையே தேவாரங்களில்,

[2]தம்மைப் போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவன்.

எனவும்,

[3]பருக லாம்பரு மாயதொ ராநந்தம்.

எனவும், பிறவுங் கூறியதூஉமாம். இங்ஙனம் மூலாகம முதலாகத் தொல்லாசிரியர் வாய்மொழி யிருகச் சிவசமதையே முத்தியெனக் கூறி வருதலின் வேதாகம விரோத முதலிய வெகு விரோதங்களிலவாம். இவ்வாறு வசனப் பிரமாணமன்றி அநுமானப் பிரமாணங் கூடாதோவெனின், அதுவுங் கூடும். என்னெனில்,

[4]मुक्तात्मानः शिवसदृशाः सर्वात्मना शक्त्यन्तरसमर्थीकृतशक्तिमत्त्वात्। ये न शिवसदृशाः न ते सर्वात्मना शक्त्यन्तरसमर्थीकृतशक्तिमन्तः। यथा सकलप्रलयाकलादयः।

இன்னும்,

[5]मुक्तात्मा परमसमृद्धिलक्षणस्वसमवेतगुणानुभूतिमान्। सर्वबन्धरहितशक्तिमत्त्वात्। यः सर्वबन्धरहितशक्तिमान् सः परमसमृद्धि लक्षणस्वसमवेतगुणानुभूतिमान्। यथा शिवः। यः परमसमृद्धिलक्षणस्वसमवेतगुणानुभूतिमान् न, स सर्वबन्धरहितशक्तिमान् न। यथा अपरमुक्तात्मा सकलो वा इत्यनुमानद्वयं सिद्धम्॥

---

[1]பரமோப, பா, 6. [2]சம்பந்தர், சிரபுர, பா. 2. [3]அப்பர், மருகல், குறுந், பா, 1. [4]முத்தான்மாக்கள் எல்லாப்படியாலும் சிவனேடொப்பர்; பிறிதொரு சத்தியால் ஆற்றலுடைய தாக்கிய சத்தியுடைமையால் எவர்கள் சிவனேடொப்பிலர், அவர் எல்லாப் படியானும் பிறிதொரு சத்தியால் ஆற்றலுடையதாகச் செய்யப்பட்ட சத்தியுடையாராகார். சகலர், பிரளயாகலர் முதலியோர் போல. (என்பது பொருள்).

[5]முத்தான்மா முழுநிறை விலக்கணமான தனது சமவேத குணநுபவமுடையவன். எல்லாப் பந்தமும் நீங்கிய சத்தியுடைமையான். எவன் எல்லாப்பந்தமும் நீங்கிய சத்தியுடையவன் அவன் முழு நிறைவிலக்கணமான சமவேத குணநுபவமுடையவன். சிவன்போல. யாவன் முழுநிறை விலக்கணமான தனது சமவேத குணநுபவ இலக்கணமிலன், அவன் எல்லாப்பந்தமும் நீங்கிய சத்தியுடையனலன். அபரமுத்தான்மா அல்லது சகலான்மாப்போல என்னும் அநுமான மிரண்டும் பெறப்படும்.

எனவே எவ்வாற்றானு "மாநந்தமன்றி யரன்சமதை முத்தி" என்பது வலியுடைத்தாயிற்றாலோ எனின், அது பொருந்தாது. என்னெனில்,

3 आनन्दविप्रलब्धानामानन्दोपहिता चितिः । (ரத்ன-சு-14)

என்றது ஆன்மாவிற் காநந்த முண்டென்பாரை நிராகரித்தது. அதன் பொருள் கூறுமுறையில்,

34 अत एवात्मविषयं विज्ञानमपि तत्तच्छास्त्रप्रसक्तानां यथावन्न संभवतीत्याह
"चिन्महोदधिगाम्भीर्यमवसीयेत सूरिभिः ।
अवगाह्य परानन्दलहरी यदि नोत्क्षिपेत्" ॥ (ரத்ன-சு-15)

यदि हि प्रोक्तवत्परमानन्दभ्रान्तिकल्लोलस्तान्नोत्क्षिपति ततो विद्वद्भिश्चिन्महोदधेरात्मवर्गसमुद्रस्य गाम्भीर्यं सर्वज्ञत्वसर्वकर्तृत्वात्मस्वरूपं नित्यत्वव्यापकत्वानेकत्वादि चावगाह्य प्रमाणैर्विषयीकृत्यावसीयेत ।

என்றற் றொடக்கத்தாற் காண்க. அன்றேல் அநேகத்துவாதி தருமமென்றது முதலானவைகள் பொருந்தாவாம். ஆயின் பிரமாநந்த மென்பதைப் பிறர் உட்கோளாக வெடுத்ததென்னெனின் பிரமமென்பது ஆன்மாவிற்குஞ் சிவனுக்கும் வழங்கப்படுமாகலின், ஆண்டு வேதாந்திக் கிரண்டு மொன்றாகலின் அவன் கூறுவன வெல்லாம் இவர் ஆன்மா வென்றே கொண்டு மறுப்பராகலின் அது ஆன்ம விலக்கணத்திற் கெடுத்ததன்றே மறுத்தாரென்க. அவ்வாறு ஆன்மாவிற்குப் பிரமமென்னும் பெயருமுண்டென்பது உனது குரவரான களந்தை ஞானப்பிரகாச பண்டாரஞ் செய்த அகவலுள்,

பிரமமென் பெயருயிர்க் குரிமை.

என்பதனானு மறிந்து கொள்வாயாக. ஆயின் (ரத்ன - சு. 264. பக்கம் 90.)

6 पत्युराविष्करोत्युच्चैः परमानन्दसन्ततिम् ।

என்புழிச் சிவனுக்கு மாநந்த மில்லையென்ற தென்னெனில், ஆண்டும் பாச காரியமாயுள்ள சூக்கும கன்மமெனுஞ் சுகத்திற்கு ஆண்டுப் பிரவேச மின்றென்றே கூறுதலின் இரத ரூபமாயுள்ள சிவசுகத்தை யில்லையென்றதன்று. அஃது அங்ஙனங் கூறிய न तु सुखसंवेदनरूपः

7 [1]निर्मलत्वेन शिवस्य पाशरूपयोस्तयोरसंभवात् ।

என்பதனானும் அறியக்கிடந்தது. அவர்க்கது கருத்தாயிற் கிரியாக்கிரம பத்ததியிலே யோசனைக் கிரமஞ் சொல்லுமிடத்து,

35 द्वादशान्ते ज्वालान्तेऽपि परमानन्दस्वरूपे मनोऽतीते भावशून्ये नित्यगुणोदये शिवे संयोजयेत्

[1] அகோரசிவாச்சாரியார் உரை.

எனக் கூறுராகலின் என்க. இதற் கிவ்வாறு பொருளென்பது இவர் செய்யும் பத்ததிக்கு மூலமான அசிந்திய விசுவத்தில் கன்ம நிர்வாண தீக்ஷா படலத்தில்,

36 अनुभूय च तत्सर्वं द्वादशान्तेऽपि तत्क्षणात् ।
निर्गुणे निर्मले शुद्धे वाच्यवाचकवर्जिते ॥

नित्यानन्दमये सूक्ष्मे भावाभावविवर्जिते ।
कैवल्ये चिद्घने शान्ते शिवे तु परिभावयेत् ॥

शिष्यात्मानं च तत्रैव लीयमानं विभावयेत् ।

என்பதனுள் சிற்கனம் எனவும் ஆநந்தமயமெனவும், இருகாற் கூறியவதனல் வலியுடைத்தெனக் கொள்ளப்படுதலின் என்க. அன்றியும் அசிந்திய விசுவத்திற் கூறும் ஆநந்த விலக்கணத்தாலும் பெறப்படுதலி னதற்கதுவே கருத்தாகக் கொள்ளப்படும். அவ்வாறு வரினும் ஆநந்தமென்பதற்கு அகண்டாகாரமென்று பொருளாக்கிச் சிற்கந மென்பதற்கு ஞானசத்தியென்றே கொள்ளுது மெனின், அது கூறுதும். ஆநந்தமென்பது टु नदि समृद्धौ என்னும் தாதுவிற் பிறந்த வுபசர்க்க பூர்வமான சொல்லன்றே! அது யோகரூடியாற் சந்தோஷத்தினுஞ் சுகார்த்தத்தினும் சண்டு அகோரசிவாசாரியர் பரமாநந்த சந்ததி யென்பதற்குப் பொருள் கூறியவாற்றான், அகண்டார்த்தத்தினுஞ் செல்லும் என்றன்றே சுகார்த்தத்திற் போக்குவது; அவ்வாறன்றிச் சிவாநந்தரூப மென்பதற்கு அவ்வினிமைப்பொருடோன்ற रस आस्वादने (ரச ஆஸ்வாதனே) என்னுந் தாதுவிற் பிறந்த ரச பதத்தாற் பிரயோகித்திருக்கக்காண்கின்றோமே எனின் அவ்வாறாயின் உடன்படக் கடவதாம். என்னெனின் இரௌரவத்தில்,

37 देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।

என்னுமிதனுள் ஆன்மாரசரூபனென்பது கூடாமையான் ஆன்மசிற்சத்திக்குச் சந்தோஷ சநகமான சிவனது முக்கியமான ரசம் பேரின்பம் அதை யடைவனென்றவாறு காண்க. இங்ஙனஞ் சிதாநந்தமாயுள்ள நைஜாஃலாதமென்னும் மகிழ்ச்சியுஞ் சிவனுமென்னும் இரண்டையுமடைவனென்றாலோ வெனின் அவர்க்கு ரச முண்டென்பது பாவிரதத்தைப் பிறரனுபவித்தறியுமாறு போல அனுபவியாவிடின் அவரிரதந் தோன்றாமையின் அஃதொருவரனுபவிக்கவேண்டும். அதற்கு முத்தான்மாக்களன்றிப் பிறராற் கூடாமையி னவர் அனுபவித்தா ரென்றே பொருள் கொள்ளவேண்டுமென்க. இது முன்னர் [1]"அண்ணலைப் போ லாநந்தம்" என்பதனுள் விரித்துணர்த்திய வாற்றான் கொள்ளக் கிடக்கின்றது என்க. இவ்வாறு அந்த ரசத்தை யறிந்தனுபவித்தவன் பிரபஞ்சத்தை விரும்பானெனவோர் வசன முண்டேற் கொள்வதன்றிப் பிறவாற்றாற் கொள்ளப்படா தெனின். அதுவுங்கூறுதும். சிவதருமோத்தரத்தில்,

38 धर्मरज्ज्वा व्रजेदूर्ध्वं पापरज्ज्वा व्रजत्यधः ।
द्वयं ज्ञानासिना छित्वा विदेहं शान्तिमृच्छति ॥

[1] முத்திநிச், பா, 12.

ज्ञानामृतरसो येन सकृदास्वादितो भवेत् ।
स सर्वकर्माण्युत्सृज्य तत्रैव परिधावति ॥

எனவரும். இதனுள் ஞானவாளாற் கன்மத்தை வெட்டி யெனவே தனது ஞானத்தாற் கூடாமையிற் சிவஞானமிர்தரசமென்பதே பொருளாயிற்று. அன்றி யான்மாவிற்கு ரசமான சுகமின்மையானும் அது கூடாதாம். இதனனேயன்றே சர்வஞ்ஞானேத்தரத்தில் (படலம் 2. சுலோகம் 61)

39 शिवज्ञानामृतं पीत्वा विचरन्स्वयमेव हि । (பட-2-சு-61)

எனவும்,

[1]பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்.

எனவும் வருவதூஉமென்க. அன்றியும் ஆன்ம திருத்தியும் ரசம் போன்றிருத்தலின் ஆகுபெயராய்க் கொள்ளினுமாமன்றே. அதனல் அந்தச் சிவஞானமிர்தத்தாற் றிருத்தனென்று வரவேண்டுமெனின் அதுவுங் கூறுதும். சிவதருமோத்தரத்தில்,

40 ज्ञानामृतेन तृप्तस्य कृतकृत्यस्य योगिनः ।
नैवास्ति किञ्चित्कर्तव्यमस्ति चेन्न स तत्त्ववित् ॥

लोकत्रयेऽपि कर्तव्यं किञ्चिदस्य न विद्यते ।

என்பதனற் கண்டுகொள்க, ஈண்டு ஞானமிர்தத்தினலே யெனக் கரணர்த்தந் தோன்றக் கூறினமையின் தனதாயிற் கிரியாவிரோதமாகலானும் உண்மையான் ஆன்மாவிற்கு இரசமின்மையானும் சிவஞான வினிமை தோன்றக்கிடந்தது காண்க. அவ்வாருகுபெயராயினு முன்னர்ப் பிரயோக மின்மையிற் கூடாதாம். அன்றி, அவ்வாறேரிரதஞ் சிவனுக் குண்டென்றமையானும் முத்தானுபவித்தமை பெற்ரும்; பிறர்க்கது கூடாமையின். அற்றன்று; சிவனுக்கின்பம் ரசவடிவமென்பது வியாபகமான வகண்டத்தோடே கூடி யிரண்டுமோரிடத்தில் வரவேண்டும். அவ்வாறு வருவழியும் அந்தச் சிவரசஞ் சந்தோஷார்த்தமாய்ப் போக்கினும் போக்கலாமன்றே! அதை நீக்குதற்கு ஒருவரனுபவித்தார் என்றும் வரவேண்டுமெனின், அதுவுங் கூறுதும். காலோத் தரத்தில் ஞானபூசாப் பிரகரணத்திலே (கிரியாதீபிகை)

41 अज्ञानवासनानाशो धूपो दीपः स्वयंप्रभा ।
शिवानुभूतिर्नैवेद्यं पानीयं च सुवासितम् ॥

रसास्वादस्य गलनं हस्तोद्वर्तनमीरितम् ।
कषायगलनं जातं ताम्बूलं मुखवासनम् ॥

[1]திருவிசைப்பா, பூந்துருத்தி காடவநம்பி, திருவாரூர், நம்பி, பா, 2.

अनाहतनाख्यनादस्य लयः स्तोत्रं समीरितम् ।
प्रदक्षिणं च सर्वत्र व्यापित्वं शम्भुना सह ॥

42 सरित्समुद्रसंयोगाज्जलं समरसं यथा ।
तथात्मशिवयोर्योगो नमस्कारः प्रकीर्त्यते ॥

ज्ञाता ज्ञानं यथा ज्ञेये मग्नं भवति तत्तथा ।
पराङ्मुखार्घ्यमित्याहुरात्मनश्च निवेदनम् ॥

என்பதனுள் வேண்டியவாறே கண்டுகொள்க. இந்த ரசசப்தம் **रस आस्वादने** என்னுந் தாதுவி னுற்பத்தியானது. அஃதினிமையான விரசத்தையுங் கடுமுத லாகிய விரசத்தையுமே யுணர்த்துதலின் ஈண்டுச் சிவரச மென்றது இனிமை பற்றிக் கிடந்தது.

43 अर्थात्प्रकरणाल्लिङ्गादौचित्यादर्थनिर्णयः ।

என்பதனை னீண்டுப் பிறவாற்றாற் றிருப்பப்படாமையுங் காண்க. இதனினிமை யெவ்வாறிருக்குமெனின், அது; வாக்குமனத்திற் கெட்டாத தாகலின், இன்ன தென்று நிரூபிக்கப் படாதாமாயினும், விவகாரார்த்த மொன்றே டொப்புமை யாக்கியுங் கூறப்படும். என்னெனில் ஞான சித்தியில்,

44 मूकस्वप्नमिवाहुर्निरतिशयात्मविज्ञानम् ॥

என்னும் இதனுள் ஆன்ம விஞ்ஞான மென்று வருதலின்; ஆன்ம சந்தோஷம் என்னுமோ வெனின், அதற்கு முன்னர்,

45 शिवानन्दमयं प्रोक्तं स्वानुभूतिस्थितं भवेत् ।

எனவருதலின் அது சந்தோஷமாயினுஞ் சிவரசானு பவத்தான் வந்ததாம். இதனுட் சுவானுபூதி ஆன்ம விஞ்ஞான மென்றலிற் சிவாநந்தானுபவமாவது ஆன்ம சத்தியா லறிதலென்றும் பொருடருதலின் மறைஞான பண்டாரந் ‡ திளைத்த லென்று அதைக் குற்றங் கூறுதலும் பொருந்ததாயிற்று.

[1]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும்,

[2]உணர்ந்தார்க் குணர்வரி யோனறில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய்.

எனவும்,

[3]தேனை யின்னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்.

‡ "சிவசத்தியைத் திளைப்பர் சீவன் முத்தர்" என்ற பரமோபதேசக் குறளில், [1]சிவஞான சித்தி, சூ, 11, பா, 12, [2]திருக்கோவை, பா, 9. [3]திருவாசகம், திருவேசறவு, பா, 10.

எனவும், பிறவுங் கூறி வழங்கப்படு மிவ்வியல்பு முன்னரும் கூறினும். விரித்துணர்ந்து கொள்க. இதனானே யன்றே,

46 रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा ।

எனவும்,

[1]இன்பதனை யெய்துவார்க் கியு மவர்க்குருவ
மின்பகன மாதலினு லில்.

எனவும், பிறவும் வருவதூஉம் என்க. இதனானே ஆன்மானந்தம் ஆன்ம சந்தோஷமென்றது இவ்வானந்தானுபவத்தாற் பெற்ற தென்பதூஉந்தானே விளங்கிற்று. இவ்வாறு சிவன் ஆநந்தரூப னென்பதற்கு உதாரணம் இன்னுங் கூறுதும், அசிதத்தில்

2 सच्चिदानन्दरूपी यः सदसद्व्यक्तिवर्जितः ।
स एव सर्वगः सद्भिर्ब्रह्मशब्देन शब्दितः ॥

எனவருமிதனுள், சர்வகன் என்றது விபுவான அகண்டத்தை யுணர்த்தலானுஞ் சிற்சத்தம் வேறுபட வந்தமையானும் ஆநந்தம் என்றது இரதமாயிற்று, ஞான சித்தியில், शिवानन्दसंज्ञेयम् ।

எனவும், அசிந்திய விசுவத்தில் (சமாதி ராசபடலத்தில்),

47 सुखानन्दस्वरूपत्वाच्छिवता च शिवस्य वै ।
योगामृतरसास्वादस्त्रिविधं रसमुच्यते ॥

ब्रह्मेन्द्रादिसुराणां च सर्वेषां च जन्मकोटिभिः ।
अलभ्यं मोक्षदं दिव्यं बोधानन्दमवाच्यकम् ॥

कदा किञ्चिन्न कस्यापि दत्तवान् विदिशःस्थितम् । ?
तत्स्मृत्या जननी व्याली परमानन्दजं परम् ॥ ?

एवं परात्परं ज्ञेयं वर्जनातीतभोजनम् ।
ब्रह्मरूपं परं गुह्यं ग्राह्यग्राहकवर्जितम् ॥

रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ।
चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ॥

एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।
आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिबर्हणम् ॥

गुरुवक्त्रेण तत्सिद्धिरानन्दस्तु न संशयः ।
आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ॥

[1] திருவருட், இன்புறு, பா, 43,

எனவும், சர்வஞானோத்தரத்தில், சுவாத்மசாக்ஷாத்காரோபதேசபடலத்தில்,

निस्तत्त्वे निष्कळीभूते विन्दत्यात्मनि यत्सुखम् । 38

எனவும், அசிந்தியவிசுவத்தில், சமாதிராசபடலத்தில்,

48 आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति ।

எனவும், வருவனவும் பிறவும் விடயானந்தத்தையும் பிரமானந்தத்தையும் பாகுபடுத்திக் கூறுமாற்றானுங் காண்க. அதிலேயே ஞானதீக்ஷாப் பிரகரணத்தில்,

49 परमानन्दभोक्तृत्वमन्नप्राशनमुच्यते ।

என்னும் இதனானும், சுவைப் பொருளாதலும் ஆன்மபோதமாதலும் வலியுடைத்தாயின. இவ்வாறு வடமொழியி னன்றித் தமிழினும் முன்னர் " அண்ணலைப் போல் " என்னும் பாட்டிற் கூறியவைகளுங் கண்டு கொள்க. இவைகளேயன்றி வேதாந்தப் பிரகரணங்களினும் புராணங்களினும் வருமாறு. ஆத்மபோதத்தில்,

50 स्वभावः सच्चिदानन्दनित्यनिर्मलतात्मनः । 24
नित्यशुद्धविमुक्तैकमखण्डानन्दमद्वयम् ॥

सत्यं ज्ञानमनन्तं यत्परं ब्रह्माहमेव तत् । 36
परिपूर्णचिदानन्दः स्वरूपेणावतिष्ठते ॥ 40

अखण्डानन्दमेकं यत्तद्ब्रह्मेत्येवधारयेत् ।
अखण्डानन्दरूपस्य तस्यानन्दलवाश्रिताः ॥ 57

ब्रह्माद्यास्तारतम्येन भवन्त्यानन्दिनोऽखिलाः । 58

எனவும், வாக்குவிருத்தியில்,

51 आनन्दरूपः सत्यः सन् किन्नामानं प्रपद्यसे ।
सत्यानन्दस्वरूपं धीसाक्षिणं ज्ञानविग्रहम् ॥ 12

निरस्तातिशयानन्दसत्यप्रज्ञानविग्रहः ।
सत्यः सुलक्षणः पूर्णः परमात्मेति गीयते ॥

यदानन्दं प्रतिज्ञाय श्रुतिस्तत्सिद्धये जगौ ।
तत्कार्यत्वं प्रपञ्चस्य तद्ब्रह्मेत्यवधारय ॥ 33

अखण्डैकरसत्वेन वाक्यार्थो विदुषां मतः । 38

प्रत्यग्बोधो य आभाति सोऽद्वयानन्दलक्षणः ।
अद्वयानन्दरूपश्च प्रत्यग्बोधैकलक्षणः ॥ 39

निरस्तातिशयानन्दं वैष्णवं परमं पदम् ।
पुनरावृत्तिरहितं कैवल्यं प्रतिपद्यते ॥ 53

எனவும், பஞ்சதசி பஞ்சகோசவிவேகத்தில்,

52 स्वयमेवानुभूतित्वाद्विद्यते नानुभाव्यता ।
ज्ञातृज्ञानान्तराभावादज्ञेयो न त्वसत्तया ॥ 13

माधुर्यादिस्वभावानामन्यत्र स्वगुणार्पिणाम् ।
स्वस्मिंस्तदर्पणापेक्षा नो न चास्त्यन्यदर्पकम् ॥ 14

अर्पकान्तरराहित्येऽप्यस्त्येषां तत्स्वभावता । 15

எனவும், பஞ்சதசி யோகாநந்தத்தில்,

46 रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा । 2

अखण्डैकरसानन्दे मायातत्कार्यवर्जिते ॥ 82

எனவும், பஞ்சதசி அத்வைதாநந்தாத்தியாயத்தில்

53 अद्वैतानन्द एवास्मिन् विश्राम्यन्तु जनाश्चिरम् । 104

எனவும், விஷயாநந்தாத்தியாயத்தில்,

54 एषोऽस्ति परमानन्दो योऽखण्डैकरसात्मकः । 2

எனவும், சூதசங்கிதையில், (ஞானயோக. அத்தி. 14.)

55 अहो ज्ञानामृतं मुक्त्वा मायया परिमोहिताः ।
परिभ्रमन्ति संसारे सदाऽसारे नराधमाः ॥ 54

ज्ञानामृतरसं प्रायस्तेन नास्वादितो भवेत् । 55

यतोऽन्यत्रापि रमते तद्विहायैव दुर्मतिः ॥ 56

अथवा सच्चिदानन्दमनन्तं ब्रह्म सुव्रत । (அத்-19-சு-29)
सच्चिदानन्दसंपूर्णलक्षणं तमसः परम् ॥

ब्रह्मानन्दं सदा पश्यन्कथं बध्येत कर्मणा ॥ (யஞ்-42-சு-14)

எனவும், இவைபோல்வனவும் காண்க. இவ்வாறு வேதாந்தப் பிரகரண புராண வசனம் உதாகரித்தது, உனது உடனெத்த மறைஞான பண்டாரம்,

[1]கௌா யுபதிடற்பா கப்பிரம கிதையினும்,

---

[1]பரபோ, பா 20.

[1]எழுநான்கு நான்கறுமூன் றென்பவற்று ளில்லை.

எனவுட்கொண்டமையானும்,

56 वैदिकं सर्वसङ्ग्राह्यं शैववाक्याविरोधि यत्।

என்பதனானும், தொல்லாசிரியரெல்லாரும் வேதவாக்கிய வசன முட்கொண்டு சித்தாந்தார்த்தமே பண்ணுகையானுமாம். இதனையன்றோ அகோர சிவாசாரியர், இராமகண்டாசாரியர் முதலியோருட்,

57 ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात् कुरुतेऽर्जुन। (பகவத்கீதை, அத்-4-சு-37)

என்பதைக் காட்டினர். ஆதலின் அதனையு முட்கொள்ள வேண்டிற்கொள்க. எனவே வேதத்தினு மவற்றின் வழிநடந்த பிரகரண புராணாதிகளினும் வெகு விரிவாக விடயாநந்த பிரமாநந்த விசாரம் பண்ணி, யாநந்த மாநந்த மெனச் சிவரூபத்தை முறையிடுதலானும் அவ்வாறே காமிகாதி மூலாகமங்களினும் உபாகமங்களினும், शिवैकरसतां व्रजेत्। सच्चिदानन्दरूपी यः। ज्ञानानन्दविग्रहः। என்பவற்றானும், அசிந்தியவிசுவசாதாக்கியத்துச் சமாதிராசபடலத்தில்,

58 पञ्चविंशतिरानन्दमपरानन्दजं भवेत्।
एवं बुध्यस्व नन्दीश परानन्दमथोच्यते॥

त्रिविधं तत्परानन्दं गौरवं ज्ञानयोगजे।

என்றற் றொடக்கத்தாலும் விடயாநந்தம் சிவாநந்த மிரண்டையும் வெகு விரிவாகக்கூறி,

59 एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः।
आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत्॥

என்றவாறே, தமிழினும்,

[2]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்.

எனவும்,

[3]மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயிறைற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்.

[4]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும்,

[5]இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவம்
இன்பகன மாதலினு வில்.

[1]பரமோப, பா, 36. [2]சிவஞானபோ, சூ, 11, பா, 2. [3]சிவஞானசித், சூ, 8, பா, 36. [4]சிவஞானசித், சூ, 11, பா. 12. [5]திருவருட், இன்புறு, பா, 3.

எனவும், முத்தியிலக்கணம் கூறியவாறே அதனைப்பெற்ற தொல்லாசிரியர்,

[1]மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

[2]தின்பன் கடிப்பன் றிருத்தலு மாமே.

எனவும்,

[3]தேனு மின்ன முதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்.

எனவும்,

[4]நின்னருட் பெருங்கடலிற் றிளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்.

எனவும்,

[5]அந்தமொன் றில்லா வாநந்தம் பெற்றேன்.

எனவும்,

[6]உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய்.

எனவும்,

[7]பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்.

எனவும் பிறவும் வருதலானும், இரத்நத்திரயத்தில் **आनन्दविप्रलब्धानाम्** என்பது ஆன்மாவிற் காநந்த மின்றெனவும், சிவனுக்காநந்தமுண் டெனவும் கிறுத்தலானும், அதனானே பிரமாநந்த சந்ததி யென்றோதுதலானுஞ் சிவன் ஆநந்த ரூபனும் என்க. அன்றி, அகோரசிவாசாரியர் சர்வஞ்ஞானோத்தர முதலிய வற்றின் ஒரோவழி யுரை செய்யுமாற்றான் நிகழும் ஏகதேசமான சிறிது வசனங் கொண்டு வேதாகம புராண வசனங்களுக்கும் இவரினுமுயர்ந்த ஞான சித்தாந்த குரவர் சமயகுரவர் வசனங்களுக்கும் மாறுபாடாகக் கோடலின் நியாயமன்மை யின் [8]அவர் அவ்வாறு கூறினாராயினும் முன்னர் [9]"சந்தான நற்குரவர்" என்னும் பாட்டில் வசனப் பிராமாண்யம் நிச்சயமானவாறே நிச்சயித்து அவ் வுரைக்கும் அவ்வாறே பொருள் கோடலே மரபாம்.

இங்ஙனமன்றி அகோரசிவாசாரிய ரொரோவழிச் சம்பிரதாய விரோத மாகப் பொருள்கொண்டு மூல வசனங்களை நலிதலான் அவருரை கொள்ளா தொழிதலு மொன்று. என்னெனின், இரத்தினத் திரயத்தில்,

60 **तथा समासमात्मीयपुण्यापुण्याख्य कर्मिणाम् ।
अणूनामविकारोऽपि बन्धमोक्षकरः शिवः ॥**

[1]திருமந், மோனசமாதி, பா, 9. [2]திருமந், அணைந்தோர், பா, 24. [3]திருவாசகம், திருவேசறவு, 10. [4]திருவாசகம், செத்திலாப், 10. [5]திருவாசகம், கோயில் திருப்பதிகம், 10. [6]திருக்கோவை, 9. [7]திருவிசை, பூந்துருத்திகாடவ, திருவாரூர், பா, 2. [8]அவர், அகோரசிவாசாரியார். [9]முத்திநிச், பா, 2.

என்னுமிதனுட் புண்ணிய பாவ சமதையுடைய வான்மாக்களுக்கு என்றதற்கு இராகத்துவேஷ சமதை யென்றுரை கூறுதல் போல்வனவாம். புண்ணியா புண்ணிய மென்று இராகத்துவேஷங்களுக்குப் பெயரின்மையினானும், இலக்கணையாமெனின் இராகத் துவேஷ சமதைக்குப் புண்ணியம் வாராது மோட்சப் பிரார்த்தி யாகலானும், மூல வசனம் நலிதலானும், மற்ற வாகம வசனங்களுக்கும் தொல்லாசிரியர் வாய்மொழிக்கும் விரோத மாகலானும், பிறரவ்வாறு புண்ணிய பாவ சமதையாகவே பொருள்கூறலானும், பிறவாற்றானும் அவருரை பொருந்தாதாம். அவர்,

61 न हृष्यत्युपकारेण नापकारेण कुप्यति।
यः समः सर्वभूतेषु जीवन्मुक्तः स उच्यते॥

எனவசன முண்மையானும், சம்சாராவத்தையினும் அவ்வாறு சம்பவிக்குமாகையானும், சுவநாசமாத்திரத்தானே சரிதார்த்தமாகையானும் எல்லாக் கன்மமும் இன்றாயின் விஞ்ஞானகேவலப் பிராத்தியாதலே யன்றி மோட்சவேது வாகாமையானும், மலபரிபாக சின்னம் இதுவேயாய்த் தீக்ஷாத்துவாரத்தினாலே மோட்சவேதுவாகையானும், கூடாதெனை வசன விரோதமும் யுத்தி விரோதமும் கண்டு நலிந்து பொருள் கொண்டாரெனின் **न हृष्यत्युपकारेण** என்பது தீக்கையடைந்தபின்னர் ஞானம்வந்து சீவன்முத்தனானவ னியல்பென்றே கூறுதலானும், சுப்பிரபேதத்தில்,

62 स्वभावाज्ञानतो मुक्तः स जीवन्मुक्त एव हि।
समत्वं सुखदुःखाभ्यां तत्प्रियाप्रिययोः समः॥

शरीरालब्धकर्मा तु सृजते स्वयमेव हि।

எனவும், தேவிகாலோத்தரத்தில்,

63 समस्तु मित्रामित्रे च समो लोष्टाश्मकाञ्चने।

எனவும்,

[1]மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்திநி பாத
  மேவுதலு ஞானம்விளைந் தோர்குருவி னருளாற்
புக்கனுட்டித் தேசிட்டை புரிந்து ளோர்கள்
  பூதலத்தே புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டிற்
  றமனியத்திற் சமபுத்தி பண்ணிச்சங் கரனோ
டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே
  யுடந்தையாய்ச் சிவன்றோற்ற மொன்றுமே காண்பர்.

எனவும், பிறவும் வருதலான் விளங்குதலானுஞ், சம்சாராவத்தையிலேயும் அசுவமேதப் பிரமகத்திகள் சமதைவருமென்பதற்கு ஒரு பிரமாண மின்மையானும், பவுட்கரத்தில், பசுபடலத்தில்,

---

[1]சிவஞானசித், சு, 8, பா, 29.

64 यदान्यत्कर्म सर्वं च समं तस्य विनाशिनी ।
तदा विज्ञानकैवल्यं पुंसः स्यात्कर्मनाशतः ॥ 36

कर्मनाशान्मलस्यापि विपाके सहकारिणः ।
पतत्युन्मीलिनी शक्तिस्तदानुग्रहरूपिणी ॥ 37

எனவருதலின் சுவநாச மாத்திரத்தினாலே சரிதார்த்தமென்பது கூடாமையானும், விஞ்ஞான கேவலப்பிராத்திக்கு ஏதுவானாலும் மலபரிபாகத்துவாரத்தாற் சத்திநிபாதவேதுவாகவும் நிகழ்தலான் மோட்சவேதுவாகலானும், ஆண்டு அனுபபத்தி யின்மையின் நலிந்து பொருள் கோடல் கூடாதாம். இன்னும், பவுட்கரத்தில்,

65 अदृष्टवेदनीयं तत्कर्मोक्तं शिवदर्शने ।
अश्वमेधो द्विजवधः कृतः कालेन भोगतः ॥

तयोः समुच्चयायोगादेकस्तु प्रबलः पुरा ।
अन्यो नियतकालः स्याद्यावन्मध्येऽपि कर्मणाम् ॥

द्वयोरैहिकयोस्तुल्यफलयोः सम्भवे सति ।
क्लैब्याक्लैब्यात्मनोस्तत्र पतिता शक्तिरैश्वरी ॥

कर्मान्तरं समुच्छित्य बलादन्यतरस्य तु ।

तदा तद्बलवद्भोग्यमन्यत्कालान्तरे भवेत् ।
तथामुष्मिकयोरश्वमेधद्विजवधात्मनोः ॥

युगपत्संभवे शक्तिर्द्वयोरपि विनाशिनी ।

अन्यत्कर्मासमं भोग्यं विधत्ते पुरुषस्य सा ।
तत्रानियतयोः सद्यः सम्भवे परिपक्वयोः ॥

विरुद्धयोश्च सा शक्तिस्तन्नाशे नान्यभोगदा ।
यदान्यत्कर्म सर्वं च समं तस्य विनाशिनी ॥

तदाविज्ञानकैवल्यं पुंसः स्यात्कर्मनाशतः ।
कर्मनाशान्मलस्यापि विपाके सहकारिणः ॥

पतत्युन्मीलिनी शक्तिस्तदानुग्रहकारिणी ।

என்பதனால் வசன விரோதமும், சித்தியாரில்,

[1]அனாதிமுத்த னைப்பரனை யசலனை யெல்லா
வறிவுதொழி லனுக்கிரக முடையவரன் கன்ம

[1]சிவஞானசித், பரபக்கம், சௌத்திராந்திகன்மறுதலை, 40.

நுறுநிகமற் றொருத்தவிடத் தேசத்தி பாத
　　நுழைவித்து மலங்களெல்லா நுங்க நோக்கி
மறுநிகர ணங்களெலா மடக்கித் தன்னை
　　வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையா
லிறுதபிறப் பினின்று மெடுத்து மாறா
　　வின்பமுத்திச் சேவைப்ப ளெங்கண்முத்தி யிதுவே.

என்பதனாற் றொல்லாசிரியர் வாய்மொழி விரோதமும், பிறவும் நிகழ்ந்தமை காண்க. எனவே அவிராகத்துவேஷ சமதையென்றது கூடாதாம். இவ்வாறே சர்வஞானோத்தரத்தில் சுவாத்ம சாக்ஷாத்காரோபதேச படலத்தில்,

66 निस्तत्त्वे निष्कलीभूते विन्दत्यात्मनि यत्सुखम् । 38
निर्विकल्पमचिन्त्यं च हेतुदृष्टान्तवर्जितम् ॥

तत्सुखं परमं प्रोक्तमात्यन्तिकमनौपमम् । 39

यदा यात्युन्मनीभावं तदा तत्परमं सुखम् ॥ 40

என்புழிப் பரமசுகமான சிவானந்தாநுபவத்தை, 67 दुःखनिवृत्यात्मकंसुखं लभते । எனவுரை செய்ததூஉம் பொருந்தாதாம். என்னெனில் இரௌரவத்தில்,

68 देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।

எனவும், அதிலேயே,

69 भिन्ने देहे शिवो भूत्वा शिवधर्मैः समन्वितः ।
शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ॥

எனவும் வருமாறே அசிந்தியவிசுவத்தில், சமாதிராசபடலத்தில்

70 ब्रह्मरूपं परं गुह्यं ग्राह्यग्राहकवर्जितम् ।
रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ॥

चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ।
एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ॥

71 आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिवर्हणम् ।
आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ॥

आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति ।

परमानन्दभोक्तृत्वमन्नप्राशनमुच्यते ।

எனவும், காலோத்தரத்தில்,

72 रसास्वादस्य गलेनं हस्तोद्वर्तनमीरितम् ।

எனவும் வரும் வலிவுடைப் பிரமாண முண்டாகவும் அதனைமாறுபாடாய்ப் பொருள் கோடலினென்க. இதனானேயன்றே பின்னர்ச் சர்வஞானோத்தரத்திலேதானே,

39 शिवज्ञानामृतं पीत्वा *विचरस्व यथासुखं ।

என்றது. இதன் பொருள் சிவனையறிதலினான் அவனிரதம் அமிர்தம்போல இனித்திருக்குமன்றே யதனை யனுபவித்து இனிதுதிரிக என்பது. இதனை,

[1]தேனயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்.

[2]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

என்றற் றொடக்கத்தாலுங் காண்க. இவ்வாறே சர்வஞானோத்தர முதலான சிலவற்றிற்கு அவர் செய்தவுரை பேதவாதமாக நிகழ்வதனாற் பொருந்தாதாம்;

42 सरित्समुद्रसंयोगजलं समरसं यथा ।
तथात्मशिवयोर्योगो नमस्कारः प्रकीर्त्यते ॥

என்றற்றொடக்கத்தனவாகிய மூலாகமவசனங்கட்கு விரோதமாகலின் என்க. எனவே அவருரை சம்பிரதாயவழி தப்பிநடத்தலிற் கொள்ளாமையுமொன்று. அன்றி, அகோரசிவாசாரியர் சற்சம்பிரதாயி ஆனாலுஞ் **சிலவுபாகமங்களைப் பின்பற்றிப்** பூர்வபட்சத்தையே சித்தாந்தமாகவைத்துப் பாலபோதனார்த்தமாக வியாக்கியானம் பண்ணினாரெனினுமாம்; சிலவுபாகமங்கள் மதபேதமாயுள்ள பூர்வபட்சத்தையே சித்தாந்தம்போல **श्रोतृ भेदादनेकधा** (கேட்போர் வேறுபாட்டால் பலவகை) என்னும் நியாயம்பற்றிப் பிரதிபாதிக்குமாகலின் என்க. அது ஞானசித்தியில்,

73 ज्ञानसाङ्ख्यं योगसाङ्ख्यं शैवसाङ्ख्यमथ द्वयम् ।
निर्वाणसारसाङ्ख्यैकं ज्ञानसारं द्वितीयकम् ॥

तत्त्वसारं विधाभेदं द्विविधं नश्वरं गुह ।

என்பதுமுதலாகச் சைவபேதம் கூறப்பட்டதென உத்தேசம் செய்து பின்னர்,

74 मृगेन्द्रः किरणो वापि मतङ्गःपारमेश्वरः ।
† पौष्करा योगसाङ्ख्यार्थास्तत्त्वसारादिभेदकाः ॥

अनेकार्थागमाः साङ्ख्याः § चतुष्पादाःशैवनिर्णयाः ।
देविकालोत्तरस्कन्दकालोत्तरद्विशतोत्तराः ॥

---

*विचरन्स्वयमेव हि इत्यपि पाठः । [1]**திருவாசகம்**, திருவேசறவு, 10. [2]சிவஞானசித், சு, 11, பா, 12.
† पौष्करादि ज्ञानसांख्या स्तत्वसारादिभोगताः என்பது வட்டுப்பிரதி. § पादार्थनिर्णयः என்று பாடம்.

सर्वज्ञानोत्तरः साङ्ख्याः इत्यादिज्ञानसाङ्ख्यकाः ।

शैवभेदागमा इत्थं साक्षान्मोक्षप्रवेशकाः ।
पूर्वकाण्डमिति प्रोक्तं ज्ञानसिद्धान्तभेदकम् ॥

उत्तरं काण्डकं पश्चात् परमं कामिकादिकम् ।
कामिकं योगजं चिन्त्यं कारणं त्वजितं तथा ॥

இவை முதலாகக்கூறித் தந்திராவதாரப் பிரகரணம் முடிதலின் இவரும் அந்தந்த வியாகமங்கட் கேற்பவே பொருள் கூறிச் சித்தாந்தமென முடிக்கவேண்டுதலின் அதுபற்றிக் கூறினு ரெனினுமாம். ஆகவே, இக்காலத்து வழங்குகிற பவுட்கர மதங்காதிகளுங் காலோத்தரங்களும் அவற்றின்வழிப்பட்ட சிவர் பண்ணின பிரகரணங்களும் யோகசாங்கிய ஞானசாங்கியார்க்குப் பிரதிபாதகமாக விருக்குமென்பதூஉ மாயிற்று. இதனானே, கேவலர் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ வியத்தி மாத்திரங் கூறுவது ஞானசாங்கிய மெனவும், சாட்குண்ணியாபிவியத்தி கூறுவது யோகசாங்கிய மெனவுஞ் சிறிது பேத முண்டென்பது பௌஷ்கராதிகளானுஞ், சர்வஞானோத்தராதிகளானும் அறியப் பட்டதூஉ மாயிற்று. அஃதற்றாக; இவ்வகோர சிவாசாரியர் கிரியாக்கிரம பத்ததி பண்ணினாரன்றே ஆண்டுச் சித்தாந்தமே கூறினாராகலின் அவ்வழியும் சாட்குண்ணியாபிவியத்தி கூறுதலின் அது பூர்வபட்சமன்றெனின் ஆண்டும் ஏனைய முத்திகட்குரிய கிரியா தீக்ஷைக்கிரமமே அவர்கூறலின் அதுவுஞ் சித்தாந்த மன்றாம்; என்னை? சாட்சாத் பரமுத்திக்கு ஞானதீக்ஷையே காரணமாகலின். ஆயின் அந்தப் பத்ததிக்கு மூல மேதெனின் இக்காலத்துவழங்கி வருகிற மதங்காதிகளுங் காலோத்தராதிகளும் எவ்வளவாயினுங் கிடைத்த மூலாகம வசனமுமாமென்க. அதற்கவர் வாக்கியமே பிரமாணம். என்னெனில் கிரியாக்கிரமத்யோதிகையில் நித்தியகர்ம முடிவில்,

75 श्रीमतङ्गादिशास्त्रेषु विद्यापादार्थसंग्रहम् ।
सर्वविद्येशिनी नाम्ना निर्ममे यस्तदुक्तिभिः ॥

पवित्रस्य स्वरूपं च निर्ममे यः शिवोक्तिभिः ।

எனவும், அப்பத்ததி மஹோத்ஸவவிதி முடிவில்,

76 * * * * शरजन्मने ।
श्रीकण्ठनाथो भगवानघोरत्करुणानिधिः ॥

तेषु कालोत्तराख्येषु संग्रहेषु शतत्रयम् ।
सार्धं तु विवृतं कर्त्रा यत्र यो दशभिः शतैः ॥

तत्रानुक्तं तु यत्किञ्चित्सूचितं न प्रकाशितम् ।
विस्तीर्णसङ्ग्रहेऽन्यत्र संहितायामवेक्ष्य च ॥

अनुष्ठितं गुरुश्रेष्ठैरस्मदीयैः पुरातनैः ।

எனவும், மதங்காதிகளில் ஞானபாதக் கிரகணமுங் கர்த்தாவான சீகண்ட முதல்வனால் விரிக்கப்பட்ட சார்த்தத்திரிசதிகாலோத்தரம் திரிசகஸ்ர காலோத்தரம் என்னும் இவைகளினுஞ் சொல்லிப் பிரகடனம் பண்ணுதலை அந்நியாகமத்தினும் கிரகித்து கிரியாபாதக் கிரகணமும் பண்ணினதென வருதலின். இதனானே யவர் சித்தாந்தியானாலும் அவர் கூறியது பிறிதொன்றாக விருப்பினும் இருக்குமாகலின் ஒரோவழி யவர் மாற்றங்கொள்ளாமை நியாயமெனினுமாம். ஆயினவர் சித்தாந்தியானாலும் இன்னுமொருவழி சித்தாந்தப் பொருளான் நீர் கொள்ளுமாறு அத்துவித சிவனுக்கு ஆநந்தங் கூறுதலும் அவர் வாக்கியத்துட் கண்டதுண்டோ வெனின் அவர்கூறு மாற்றமெல்லாம் அவ்வாறே பொருள் கொள்ளக்கிடத்தலினுண்டென்க. அவற்றுட் சில கூறுதும்; நிருவாண தீக்ஷாந்தத்தில், சிவஸம்யோஜனகிரமத்தில்,

77 परमानन्दस्वरूपे मनोऽतीते भावशून्ये नित्यगुणोदये शिवे संयोजयेत् ।

என்றதனாற் சிவனுக்கும் ஆன்மாவிற்கும் அத்துவிதமும் பாவசூனியத்துவமும் சிவனுக்காநந்தமுங் கூறியவாறாம். ஈண்டும் ஆநந்தத்தை ஞானக்கிரியா சமிருத்தியெனின் அதற்கு மூலமான ஆகம வசனம்,

78 निर्गुणे निर्मले शुद्धे वाच्यवाचकवर्जिते ।
नित्यानन्दमये सूक्ष्मे भावाभावविवर्जिते ॥

कैवल्ये चिद्घने शान्ते शिवे तु परिभावयेत् ।
शिष्यात्मानं च तत्रैव लीयमानं विभावयेत् ॥

எனச்சிற்கனமும் ஆநந்தமும் வேறெடுத்தோதலிற் கூடாதென்க. இதனானேயன்றே அவரானங்கீகரிக்கப்பட்ட திரவியசுத்தியான சதுர்சமற்காரப் பிரகரணத்தினும் அத்துவிதமுஞ் சிவனுக்குத் தோன்றக்கிடந்தது. என்னெனின் அவர்வழி நடந்த மறைஞானபண்டார மான்மார்த்தபூசாபத்ததியிற் கூறுவது,

79 द्रव्यशुद्ध्या किं साध्यते जलादिद्रव्याणां स्वत एव सिद्धत्वादिति चेन्न । अशुद्धभुवनोत्पन्नमायेयस्य द्रव्यजातस्याशिवतया शिवभोगानर्हत्वात् । न च व्यापकसम्बधाच्छिवत्वं तस्येति वाच्यम् । शिवस्य पुष्करपर्णवन्निर्लेपतया द्रव्यसंपर्काभावात्तच्छुद्धिरवश्यं कार्या ।

என்றாராகலின். சுத்திபண்ணினால் அசிவமானசடம் சிவரூபமாம். அப்பொழுது சிவபோகார்கமாம் என்றதாயிற்று. அங்ஙனமே ஆகமத்தில்,

80 मायेयरूपत्यागाच्च शिवशक्तिस्वरूपतः ।
शिवभोग्यं भवेद्द्रव्यं सा क्रिया द्रव्यशोधनम् ॥

मायाभिर्वस्तुभिः पूजा कृता चेन्निष्फला भवेत् ।
शिवेनाधिष्ठितं द्रव्यं शिवाय परिकल्पयेत् ॥

எனவந்தது. இதனாற் போந்தது எங்குஞ் சிவன் விபுவாயுள்ளவன், சமற்கார வசத்தான் விசேடித்துச் சிவனுக்குந் திரவியத்துக்கும் ஐக்கியம் பண்ணுவித்து

சிவதருமமான நிருமல ஞானானந்ததருமத்தைச் சடவத்துவில் ஆரோபித்துச் சடத்துவத்தைப்போக்கி அந்தத்திரவியசாதத்தைச் சிவரூபநிருமல ஞானானந்த தருமமுடையதாக்கிச் சிவனுக்குச் சமர்ப்பணஞ் செய்க என்றதாம். அது சுத்தி வசனத்தால் விளங்கும். என்னை? பாரமேசுவரத்தில்,

81 दृक्क्रियेच्छात्मकैरर्कसोमवह्निविलोचनैः ।
क्रमाच्छुष्कं तथा दग्धममृताप्लवसंयुतम् ॥

எனச்சாமானிய சம்ஸ்காரமான சிவதிருட்டியால் சடத்தை நிருமலசிதானந்த தருமியாக்கி சிவார்ப்பணஞ் செய்ய வேண்டும். அது தந்திரசாரத்தில்,

82 जडचिद्भेदनं विद्धि शिवदृष्ट्या निरीक्षणम् ।

என்பதனான் விளங்கும். இனிவிசேட சம்ஸ்காரமான மூன்றினையும் வருமாறு,

83 प्रोक्षणं योग्यता तृप्तिर्जडाद्भिन्नस्य वस्तुनः ।
ताडनं तत्र चिद्व्यक्तिर्यथा पाषाणताडनात् ॥

उत्पत्तिर्विस्फुलिङ्गानामभ्युक्षणमतः परम् ।
अमृतीकरणं तावत् जडचित्पूर्तिकारणम् ॥

எனவருதலின் புரோட்சணமென்னும் விசேட சம்ஸ்காரத்தான் முன்னர் ஞானசத்தி ரூபமான அர்க்கனாலே சுஷ்கமாகப் பண்ணிப் பச்சையை யுலர்ந்ததென வேறுபடுத்தினாற்போலச் சடத்தைச்சித்தென வேறுபடுத்தி நிர்மலமாக்கியும் தாடன விசேடத்தான் முன்னர்க் கிரியாசத்திரூபமான அக்கினியால் தகித்து வேறொன்றாக்கினாற்போல அப்பியுக்ஷணத்தாற் சடபாவம்போக்கிச் சிற்பாவத்தைக் கல்லிற் புலிங்கம்போல வியத்தி பண்ணியும் இச்சாசத்தி ரூபமான சோமனாலே அமிர்தாப்பிலாவனத்தை சாமானியாகாரமாகப் பண்ணப்பட்டாற்போல ஆனந்ததர்மமான அமிர்தீகரணம் பண்ணித் திரவிய முழுதுஞ் சிவரூபமாக்கினவாறு. இதனை சடத்திரவியத்தைச் சுத்திபண்ணுகிறதற்கும் சிவதருமங்களை யாரோபித்துச் சிவரூபமாகவே பண்ணவேண்டுமென்றால் பெத்தனை முத்தனாக்கற்குத் தீக்ஷாசமற்காரத்தான் [1]முன்னின்றவனும் ஆன்மாவும் விபுவாயினு மொற்றுமை யில்லையன்றே! பின்னர்த்தீக்கை பண்ணின பிறகு முன்போலே பேதமானாற் சிவத்துவஐக்கியமின்மையின் சுத்தனாகான். அதனால் அவன் சுத்தனாகற்குச் சிவதரும ஆரோபணத்தாற் சிவனாக்கித் திரவியத்தை ஐக்கியம் பண்ணுவித்தது போல் இவனை ஐக்கியம் பண்ண வேண்டுமாதலின் யோசனையில் குணபாதனமும் சிவனிடத்திலே [2]யோசனையுஞ் சொன்னவாறு. அவ்வைக்கியஞ் சிவானந்தானுபவ நிமித்தம் ஒற்றுமைப் பட்டறியுந் தன்மையின்றி நிகழாமையின் சிவானந்தமுஞ் சித்தித்ததாயிற்று. அன்றேற் சுத்தி பண்ணுவதற்குமுன் திரவியங்களை வியாபித்திருக்கையினுஞ் சிவன் றோய்ந்திலாதவாறுபோல இவனுடனுந் தோய்ந்திரார். அதனாற் சுத்திபண்ணினபிறகு திரவியத்தோடும் எப்படித்தோய்ந்து அதைத்தமது

[1] முன்னின்றவன் வெளிப்பட்டுநின்ற சிவன், [2] யோஜனை தீக்கையில் ஒரு பகுதி.

ரூபமாக்கிக்கொண்டு தமக்கு அர்ப்பிக்கப்பண்ணி வைத்துக் கொண்டாரோ அங்ஙனமே பெத்தாவத்தையினும், எங்குமாயிருக்கையினுந் தோயாத சிவன் தீக்ஷாசம்ஸ்கார வசத்தான் முத்தான்மாவாம்படித்தோய்ந்து அவன்றனேயாய்,

[1]காட்டாக்கிற் றென்றிக் கனல்சே ரிரும்பென்ன
ஆட்டாறு மோதஞ் செழுத்து.

என்றவாறே அத்துவிதமாய்த் தனது ஆநந்தத்தை யறியும்படிக் கலந்து, நிற்பனென்று பொருள்பட்டதென்க. சிவதிருஷ்டியான சாமான்ய சம்ஸ்காரம் மிருத்திகாஸ்நானம்போல. புரோக்ஷணாதி விசேஷ சமஸ்காரம் பூதசுத்தி அரை தொடங்கி முடியளவு சுசிபண்ணுகிற கடிஸ்நானாதிகள்போல. இவைபோல சமய விசேட சாமான்ய சமஸ்காரமும், நிர்வாணம் விசேட சமஸ்காரமும் என்க. இங்ஙன மன்றி கன்மசித்தாந்தகுரவர்வழியென நீக்கினுமாம். அவ்வழியும் பிறருரையனைத்து மொத்து நிகழ்வதியாண்டுங் கண்டுகொள்க. எனவே ஆநந்தம் அகண்டம் சமிருத்தி என்பன ஒரு பொருட்கிளவியென்பது பொருந்தாதாயிற்று; ஆனந்தம் ஈண்டு ரசார்த்தமெனவே கொள்ளவேண்டுதலின். இதனானெவ்வாற் றானுஞ் சிவன் சச்சிதாநந்தரூபியென்றே யாயிற்று. ஆகவே, "தானந்த வேதா கமஞ்சாற்ற" என்பதூஉம் வலியுடைத்தாயிற்று.

இனி, யான்மா ஞானக்கிரியாசக்தி யுடையவனெனப் பெத்த முத்தி யிரண்டற்கு மொப்பக் கூறியது உண்மையேயாம். அவற்றோடு பின்னும், திருப்தி, நித்தியத்துவம் முதலாயின சிலகுணங்கூட்டி யிவைகளு முன்னமே யான்ம குணமாம்; அவை மலநிவர்த்தியில் வெளிப்பட்டன என்பது பொருந் தாதாம். என்னெனில் அக்குணங்களனைத்தையும் மிருகேந்திராதிகளிலாயினும் ஒழிந்த சிவாகமங்களிலாயினும், பிரகரணங்களிலேயாயினும் யாண்டுஞ் நிரோதங் கூறி யக்குணங்கட்கு அபிவியத்தி கூறாது, ஞானக்கிரியா சத்திக்கே நிரோதமும் அபிவியத்தியுங் கூறுதலினென்க. இதனானேயன்றே யவைகள் சிவகுண மென்பது தோன்றக் குணுபாதகம் என்னும் விவகாரமுமென்க. அது **षडाहुरङ्गानि महेश्वरस्य** என்பதனானு மறியப்படும். அற்றன்று; சர்வஞானோத் தாத்தில்,

90 ताम्रस्यैव तु हेमत्वमन्तर्लीनं यथा स्थितम् ।
अन्तर्लीनं तथा ज्ञेयं शिवत्वं पुद्गलस्य तु ॥

என நிரோதமும்,

30 सर्वज्ञता तृप्तिरनादिबोधः स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः ।
अनन्तशक्तिश्च निरामयात्मा विशुद्धदेहः स शिवत्वमेति ॥

என அபிவியத்தியுங் கூறுதலின் அது ஆன்ம குணமேயாம். அன்றியும் ஞானக்கிரியை நித்தியத்துவம் முதலான தருமங்கள் ஆன்மகுணமாதலின் அவைகளோடே திருப்தியாதிகளுங்கூட மொழிதலானும் ஆன்மகுணமேயாம். அன்றேல் (மதங்கம்)

[1] சிவஞானபோ, சூ, 9, பா, 7.

91 दानं नाम स्वसत्त्वैव या सा ज्ञानक्रियात्मिका।

என்பதற்கும் நிர்வாணதீக்கையிற் குருபாதனம் பண்ணுவதற்கும் விரோதமாமென்க. இதனுனேயன்றே எமது குரவரும் *தசகாரியத்துட் சிவதரிசனத்தில்,

நற்றவர் தலைவ வெல்லா ஞானமே யாகி விசர்க்
குற்றிடுங் குணங்க ளாறு முறைசெய வேண்டு மென்னச்
சிற்றுயிர் பாச நாசஞ் செறிந்ததத் துவஞ்சி ருட்டி
முற்றுமுற் றுணர்த லாலே முழுதுணர் வுடையோ னென்பர்.

ஓங்கிய பொருள்கண் முற்று முடையனு யுலகுக் கெல்லாந்
திங்கறு சார்பு மாகிச் செறிந்திடு சார்பொன் றின்றி
ஆங்குறு பொருளை னைத்து மடைந்தென்று நிறைத லாலே
பாங்குறு தவத்தோ ரீசன் பரிதிர்த்த னுவ னன்றே.

அனுதியா மியல்பு மாகி யனைத்துள வுயிர்கட் கன்றே
தனுதுசிற் சத்தி தன்னாற் றுனறிந் தியற்ற லாலே
மனுதியி னறிவுக் கெட்டா வரம்பிலா வறிவ னுகும்
எனுதியை யனுதி போத னென்றிய லனைத்துங் கூறும்.

சாற்றுமூ வுலகத் தோடே சராசர சகம னைத்துந்
தோற்றுவித் தளித்துப் போக்குந் தொழிறனக் குரிமை யாலே
தேற்றமா மறிவன் மிக்க செழுந்தவ தேவ தேவன்
ஆற்றல்கொள் சுதந்த ரத்தோ னுமென வறைவர் மேலோர்.

நித்தமாய்த் தோற்ற மின்றி நிலைபெற வெவையுந் தானே
சுத்தனு யறிந்தெ வர்க்குஞ் சுகத்தினை யுதவித் தோய்ந்தும்
வைத்திடும் பொருள்க ளெல்லா மாய்ந்திடா தமர்த லாலே
அத்தனை யலுத்த னென்றே யாகம மனைத்துங் கூறும்.

தனுதியு நடுவு மீறுந் தவிர்ந்துமுன் னொருவ ராலும்
உனுததற் சத்தி யென்று முலப்பில வாத லாலே
எனுதியை யநந்த னென்றே யியம்புவ ரிந்தவாறும்
அநாதியா மரனுக் காதி யணுவுக்கா வரணத் தாலே.

எனவும் சகலாகமசாரத்துள்,

ஆமயந்தீ ரான்மா வசுத்தமிலா வாக்கையொடு
மேவு மறுகுணத்தின் மேல்.

என்றியம்பு மட்ட குணமு மிறையருளாற்
பொன்று துயிர்க்குறுமப் போது.

எனுதிக் கிவையெட் டியல்பாகு மன்றே
தனுது நிராவரணத் தால்.

*இது களந்தை மறைஞானசம்பந்தர் செய்தது போலும்.

எனவும் பிறவுங் கூறுவதூஉம் ஆம். சர்வஞானோத்தர முதலியவற்றில் சிவத்துவத்துக்கு நிரோதமும் அபிவியத்தியுங் கூறுவதன் பொருள் சிவதருமங் கட்கேயாம். அற்றேல் சிவதருமங்கட்கு பசுவினிடத்தி லபிவியத்தி கூறுவது கூடாமையானும் சர்வஞானோத்தர விருத்தியிற் சிவத்துவஞ் சிவசமான ரூபமென வகோர சிவாசாரியார் கூறுதலானும் பொருந்தாதெனின் அற்றன்று,

[1]பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது.

என்றதனானும், ஆன்மாவை இலிங்கமுதலாகிய வதிகரணங்களுள் ஒன்றாகக் கூறுதலானும், சிவனுக்கு விசேடாபிவியத்தித்தான மான்மாவே யாகலானும், ஒழிந்த பாசஞ் சடமாகலானும், விளங்கு மிடமாகலிற் காட்டத்துள் அக்கினிக்கு அபிவியத்தி யுண்டாமாறுபோ லுண்டாகலின் மாறுபாடின்றென்க. இதனனே யன்றே,

[2]காட்டாக்கிற் றோன்றி கனல்சே ரிரும்பென்ன
ஆட்டாது மோதஞ் செழுத்து.

என்றாற்போல வருவதூஉம் என்க. இதனனே சிவத்துவ மென வருவது சிவதருமமே யாமென்க. அன்றி [3]யது ஏகான்மவாத சாத்திரமாம் முத்தியிற் பிரமத்தையே பேறாகச் சொல்லுகிறதாகலின். ஆன்மதரும மலநிவர்த்தி மாத் திரத்தின் வெளியாகலின் அது முத்தியென்னும் பதத்தாற் சரிதார்த்தமாகலின் இச்சிவத்துவங் கூறுவது மிகையுமாம். இதனனேயன்றே பவுட்கரம் பதிபட லத்தில்,

92 ज्ञानसाध्योऽधिकारो हि मुक्तिश्च व्यक्तिरीश्वर। (சு-6,)

என்பதூஉம். அவ்வாறு கொள்ளவேண்டினும் ஆன்மகுணம் ஞானக்கிரியா சத்திக்கே கோடலன்றி யிக்குணங்கட்குக் கோடல் பொருந்தாதாம்; அனுபத்தி யுண்டாகலின். சிவத்துவ மென்பதற்கு ஆன்மத்துவ மென்று பொருளாகாமை யின் அகோர சிவாசாரியர் கூறியதுதூஉம் பொருந்தாதாம். அனுபபத்தி யுண்டெனின் षडाहुरङ्गानि महेश्वरस्य எனவும், நிச்சுவாசத்தில்,

93 एतेऽप्यङ्गा महेशस्य वेदितव्याः प्रयत्नतः।
मुच्यते सर्वपापेभ्यः शिवं याति निरामयम्॥

எனவும், பிறவுஞ் சிவாங்கங்களாகக்கூறி நியாசாவசரத்தினும்,

94 ओं हां सर्वज्ञशक्तिधाम्ने हृदयाय नमः। ओं हीं तृप्तिशक्तिधाम्ने शिरसे स्वाहा। ओं हूं अनादिबोधशक्तिधाम्ने शिखायै वषट्। ओं हैं स्वतन्त्रशक्तिधाम्ने कवचाय हुं। ओं हौं अलुप्तशक्तिधाम्ने नेत्रत्रयाय वौषट्। ओं हः अनन्तशक्तिधाम्ने अस्त्राय फट्॥

எனச் சிவாங்கங்களாகவே நியசிக்க விதித்தலானும் அன்றியும் பஞ்ச கிருத்தி

[1]திருமந்திரம், யோகம், பா, 3. [2]சிவஞானசித், சூ, 9, பா. 7. [3]சிவசமானரூபமென்றது ஏகான்மவாத சாத்திரக் கருத்தாம்.

யானுசாரமாக மந்திரதநுவுடையனாகலின் அம்மந்திர விசேடணமாகலி னக்குணமுழுது மவனுக்கே யுரிமையாகலின் பஞ்சகிருத்தியம் ஒருக்காலுமில்லாத ஆன்மாவிற் கவ்வாறு வருங்குணமின்றாகலானும் ஒரோவழியாயினும் ஆன்மகுணமென்று வருகையும் பெத்த முத்திக்குப் பொதுப்படக் கூறும்வழிக் கூறாமையானும் அநுபபத்தியின்றென்க. ஞானக்கிரியை பிரதான மாகலின் அவை கூறவே யேனையவும் அடங்குதலின் அநுபபத்தி யுண்டெனின், அவ்வாறாயின் ஞானமாத்திரம் கூறவேயமையும் அது பிரதானமாகையால் கிரியை கூற வேண்டாவன்றே. அது கூறலி னிவையுங் கூறவேண்டு மாகலின் அதுபொருந்தாதென்க. அவ்வாறுண்டாவது சிவாங்கருணம் போலப் பொருளொற்றுமை யுண்டாயினன்றே. அதுவுங் கூடாமையிற் பொருந்தாதாம். என்னெனின் நிச்சுவாசகாரிகையில் தேவிகூற்று,

95 सार्वज्ञ्यादि गुणा देव गीयन्ते सर्वतः शिवे ।
*तदहं श्रोतुमिच्छामि भगवन् वक्तुमर्हसि ॥

ஈசுவரன் கூற்று,

96 पशुं पाशांस्तथा तत्त्वान्युद्भवं प्रलयं तथा ।
सर्वं जानाति देवेशि सर्वज्ञस्तेन चोच्यते ॥

सर्वैश्वर्यैः सुसंपूर्णः सर्वाश्रयनिराश्रयः ।
सर्वगः परिपूर्णश्च परितृप्तः स उच्यते ॥

अनादित्वात्स्वभावाच्च सर्वात्मा दृढगोचरः ।
स्वशक्त्या बोधयेद्यस्मात्तस्माद्बोधः प्रकीर्तितः ॥

उत्पादयेज्जगत्कृत्स्नं त्रैलोक्यं सचराचरम् ।
स्थितिं नाशं च देवेशि स्वतन्त्रस्तेन चोच्यते ॥

नित्यत्वादजनित्वाच्च सर्वज्ञत्वाच्च शङ्करः ।
योगैरव्याहतत्वाच्च अलुप्तस्तेन चोच्यते ॥

अनादिमध्यनिधनं न परं वेत्ति कश्चन ।
शक्तेरव्याहतत्वाच्च अनन्तस्तेन चोच्यते ॥

एतेऽप्यङ्गा महेशस्य वेदितव्याः प्रयत्नतः ।
मुच्यते सर्वपापेभ्यः शिवं याति निरामयम् ॥

எனவருதலி னிக்குணங்கள் ஆன்மாவிற் குண்டாகின் அநாதியே பதியேயாம். பதியானல் பிறப்பிறப்புக் கூடாமையி னவ்வாறுவருங் குணங்கள் மலபெத்தருக் கில்லையென்க. மலத்தானவரிக்கப்பட்டு உள்ளேயிருந்ததெனின்,

*तत्=सर्वेष्वप्यागमेषु गीयमानत्वाद्धेतोरिति यावत्.

97 पशुं पाशान्तथा तत्त्वान्युद्भवं प्रलयं तथा।
सर्वं जानाति देवेशि * * *

என்றமையின் இவ்வாறறிகின்றமை பதிக்கேயாகலின் ஆன்மாவிற்குக் கிருத்திய மின்மையின் வேண்டாமையானும், வேண்டினும் மலாவிருதத்தா னறியப் படாமையானுமாம். அதற்கு யோக்கியதை யுண்டெனின் சிவனுக்குயோக்கியதை யன்றி நிகழ்ந்து காரியப்படுவதையே கூறுதலானும், அக்குணம் ஆன்மாவிற்கும் உண்டென்றல் கூடாதென்பதாம். சர்வஞ்ஞத்துவ முண்டென்று உடன் பட்டதையுங் கூட ஈண்டு விலக்குவதென்னெனின், சர்வஞ்ஞத்துவ யோக்கியதை யுண்டென்றதன்றி, யெப்பொழுதுஞ் சர்வத்தையுஞ் சிவனைப்போல வறிந்து கொண்டே யிருப்பனென்றுடன்படாமையின். சர்வைசுவரியத்துவம் நிராசிரயத் துவம் முதலியன பெத்தருக்குக் கூடாமையானும், முத்தியினுஞ் சுத்தாவத்தை யிற் சிவனைக் கூடியன்றித் தனிநிற்க மாட்டாமையிற் சர்வத்துக்கு மதிகரண மான சிவனைப்போல நிராசிரயத்துவங் கூடாமையானுந் திருப்தியுண்டெனப் படாது.

சர்வாத்மக்ருடகோசரத்துவம் பெத்த முத்தி யிரண்டினுஞ் சிவனைப் போல வின்மையின் அனுதிபோதமின்று. 'ந ச கிருட்யாதி குர்வந்தி' என்பதனால் எக்காலமும் இவனுக்குப் பஞ்சகிருத்தியஉரிமை யின்மையிற் சுதந்திரமின்றாம். இவற்றானும் இக்குணங்களனைத்துஞ் சிவகுணமின்றிப் பிறர்க்கில்லையென்பதாம்.

இதனைச் சர்வஞத்துவசத்தி யெனக்கூறி யுண்டெனப்படாதோவெனின் யோக்கியதை யன்றிச் சிவனைப்போல நிகழாதென்க. யோகங்களான் அவ் வியாஹதத்துவ முதலானவை மலத்தாற்கேடுபட்ட சிற்சத்தியுடையவனுக்குக் கிடையாமையானும், அவற்கு நிகழாநிற்குஞ் சர்வஞ்ஞதை முன்னிலையாகவே யலுத்தசத்தி கூறுதலானும், பிறவாற்றானும் அலுத்தசத்தி கூடாதென்க. மலத்தாற் கெடுக்கப்பட்டிருக்கிற சிற்சத்தியுடையவனுக்கு சத்தியின் அவ்வியாஹ தத்துவ முதலாயின இன்மையின் அநந்தசத்தி கூடாதாம். நிராமயத்துவமும் விசுத்த தேகத்துவமும் மலபெத்தனுக்குக் கூடாவாம். முத்தியிற் கூடுமெனின் அபிவியத்தி கூறுவார்க் கிவைகளும் முன்னே உளவாதல் வேண்டுமன்றே. அவையின்மையிற் கூடாதாம். இதனானுஞ் அவை சிவகுணங்களன்றி யான்ம குணங்கள் அல்ல என்பது விளங்கும். எனவே இங்ஙனம் கூறும் சிவகுணங் களை ஒருவாற்றா னடைவனென்பதே சர்வஞாஞேத்தரப் பொருளென்க. எனவே தமிழ், வடமொழி யிரண்டினும் ஆன்மா பெற்றதாகக் கூறுவன வெல்லாஞ் சிவகுணமே யாகலின் சிவனுக் களவில் பல்குண முண்டன்றே. அவற்றுள் இவ்வகைப்படுங் குணங்களையு மவத்தாந்தரத்தின் ஆன்மா வடைதலு முண்டு. அடையாமற் போதலுமுண்டு. அடைந்துழியும் முற்றுநில்லாது காலாந் தரத்திற் கழிந்து போதலுமுண்டு. அதனாற் குணபாதன மென்பதூஉஞ் சம்பாத்தியமாகலிற் சிவகுண சம்பாத்திய மென்பதே பொருள். இதனானே யன்றே மிருகேந்திரத்திலும்,

98 गुणानापाद्य तत्रैव सिद्धानाहुतिभिस्त्रिभिः।

என்றதூஉ மென்க. சிவகுணத்தை ஆன்மாவினிடத்தில் ஆபாதிப்பானே னெனிற் குளிகைபரிசத்தானன்றிச் செம்பு பொன்னுகாவாறுபோல சிவகுணங் கலந்தன்றி, யவன் சுத்தனுகாமையிற் சிவன தளவிறந்த சத்திகளையெல்லாம் ஒருவாற்ரு ஞுரயடக்கி யாபாதித்தாலன்றி ஆன்மாவிற்கு மலநிவர்த்தி பிறத் தலும், இவற்றிற்கு விபரீதமான மலகுணங்களா யுள்ளன போதலும் ஆகாமை யின் ஆபாதிக்க வேண்டுமென்க. அது சமயதீக்கையில் [1]"ருத்திராம்சோ பவ" என்ருற் போலக் கொள்ளப்படும். அன்றேல் ருத்திராம்சத்துவம் அவனுக்கு அபிவியத்தி கூறுதல் கூடாதாம். எனவே இவ்வாறு சிவனேடொத்த குணம் ஆன்மாவிற் கின்றென்க. இவ்வாறன்றிக் கொள்ளின் அகோர சிவாசாரியர்க்கு அவசித்தாந்தமாம். என்னே? இவ்வாறறுவகைக்குணங்களாற்ருன் எண்வகைக் குணங்களாற்ருன் சமதை கூறுமாற்ருற் பேதங் கூறியவர் நிர்வாண தீக்கையிற் சிவனிடத்தில் யோஜிக்கையால் என்க. ஆயின் சிவனுக் களவிறந்த சத்தியுண் டெனவும், அதனை யாருகவும் எட்டாகவும் பிறிதாகவும் வகுத்துக் கூறுவரெனவும், அவற்றுள் இப்பகுதியுட்சிலவற்றை ஆன்மா வடைந்தும் பின்னரில்லாமற் போவ னெனவும், அடைதலு முண்டு அடையாமையு முண்டெனவுங் கூறியதற்குப் பிரமாண முண்டோ வெனின் அது கூறுதும். திருவிசைப்பாவில்,

> [2]எண்ணில்பல் கோடி குணத்தரேர் வீழி
> யிவர்நம்மை யாளுடை யாரே.
>
> [3]குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலும்.

எனவும்,

> [4]குணமாகக் கொள்ளோமெண் குணத்து ளோமே.

எனவும் வரும். இவை ஆன்மகுண மிவ்வாறின்மையிற் சிவகுணப் பிராத்தி யொரோவழி நிகழ்ந்துழிக் கூறியனவாம்.

> [5]ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப
> மிலயமொடு போகமதி கார மாகித்
> தேசருவ மருவுருவ முருவ மாகித்
> தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
> பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப்
> பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
> டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு
> மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

எனவும்,

> [6]பரந்தபரா பரையாதி பரன திச்சை
> பரஞானங் கிரியைபர போக ரூபங்

[1] அகோரசிவபத்ததிவியாக்யானம். [2] திருவிசைப்பா, திருவீழி, சேந்த, பா, 9. [3] அப்பர், குடந்தைக்கீழ்க், பா, 10. [4] அப்பர், மறுமாற்ற, பா, 10. [5] சிவஞானசித், பரபக், பாயிரம், பா, 3. [6] சிவப்பிர, பாயிரம், பா, 2.

தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்க டாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
விமலமா யைந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தரந்தைகெட மணிமன்று ளாடல் காணு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

எனவும்,

[1]துரித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி
கோகநதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி யறுவகையும் மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லா
னிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வர்க்கு
நினைப்பரியா னென்றுமிலா னேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

எனவும், திருப்படையாட்சியில்,

[2]எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை யெய்துவ தாகாதே
என்னை யுடைப்பெரு மானரு ளீச னெழுந்தரு ளப்பெறினே.

எனவும்,

[3]எல்லையி லாதன எண்குண மானவை யெய்திடு மாகாதே
இந்து சிகாமணி யெங்களை யாள வெழுந்தரு ளப்பெறினே.

எனவும் பிறவும் வருமாற்றாற் காண்க. இங்ஙனங்கூறு மெண்வகைக் குணங்கள் முன்னர்க் கூறியவாறன்றிச் சித்தியாருரையிற் கூறிய வெண்குணங்களெனினுமாம். அவை யவ்வுரையிற் கண்டுகொள்க. இதனானுஞ் சிவகுணத்தோடொவ்வாமை காண்க. வடமொழியினும் வேண்டுமெனின் சிவதருமோத்தரத்தில்,

99 अणिमादिगुणैश्वर्यं सर्वज्ञत्वं च योगिनः ।
तृणवद्यस्त्यजेत्सर्वमीशस्तस्य प्रसीदति ॥

எனவும், காமிகத்தில்,

100 ततः प्रसन्ने देवेशे बुद्धिः सत्त्वात्प्रवर्तते ।

எனவும், சர்வஞானோத்தரத்தில்,

101 अणिमादिगुणव्याप्तिर्जायतां वा न जायताम् ।
तथापि मुच्यते देही पतिं संज्ञाय निर्मलम् ॥

எனவும், அசிந்தியவிசுவத்தில் ஞானதீக்ஷையில் சோடசசமற்காரப் பிரகரணத்தில்,

[1]சிவஞானசித், சு, 9, பா, 6. [2,3]திருவாசகம், திருப்படையாட்சி, பா, 5, 7.

102 शिथिलीभूतबन्धस्य शक्तावुत्कर्षणं च यत् ।
आत्मनो रुद्रपुत्रत्वं गर्भाधानं तदुच्यते ॥

स्वातन्त्र्यादिगुणव्यक्तिरिह पुंसवनं भवेत् ।
मायात्मनोर्विवेकेन ज्ञानं सीमन्तवर्धनम् ॥

शिवादिसदसद्वस्तुस्वीकारो जननं भवेत् ।
बोधनं यच्छिवत्वेन शिवत्वार्हस्य नाम तत् ॥

शिवत्वस्य प्रवेशो हि निष्क्रामणमितीर्यते ।
परमानन्दभोक्तृत्वमन्नप्राशनमुच्यते ॥

शिवप्रसादोत्कर्षे तु यत्तच्चूडाकरं भवेत् ।
निर्वाणज्ञानसूत्रेण सम्बन्धमुपवीतकम् ॥

इन्द्रियाणां च संरोधो व्रतादेश इति स्मृतः ।
पुनर्जन्मपरित्यागो गोदानमिति कीर्तितम् ॥

सर्वेषु निरपेक्षत्वसद्भावः स्नानमुच्यते ।
अनन्तशक्तिसंयुक्तिर्विवाह इति कीर्तितः ॥

*अनन्तशक्तिविश्लेषः वानप्रस्थत्वमिष्यते ।
केवलं शिवसद्भावो यतित्वमिति निर्दिशेत् ॥

எனவும், பிறவும் வருவன கண்டுகொள்க. இவற்றுள் முன்னர் அபிவியத்தியும், பின்னர் அறுகுணப்பெயரும், பின்னர் அப்பரமானந்தபோகமும், பின்னர் அளவில்சிவசத்தி யோகமும் வியோகமும் வந்தமையான் ஆன்மாவிற்கு ஞானக் கிரியாசத்திமாத்திரமே யுண்மை யெனவும், இடையிற் பெறுங் குணங்கள் சிவ குண மெனவும், சிவாநந்த போகமும் இன்பசத்தி முதலியவற்றுட் டோய்தலும் விடுதலும் ஞானம்ஞேய மெனவும், இவற்றோடு அருளும், இவற்றொடு சிலவும் கூட்டிப் பத்தாயும், முப்பஃதாயும் விவரிக்கப்படும் பேதங்களும் எல்லாம் வருதலின் அத்துவித நிலையுஞ், சிவாநுபவ மொன்றற்கே யுரிமை வந்தவாறுங் கண்டுகொள்க. சத்தியோநிர்வாணதீக்கையாயின் அவத்தாந்தர குணங்களின்றிக் கேவலஞ் சிவாநந்தாநுபூதிமானகலின் அக்குணம் பெருமையுங்காண்க. எனவே பலவாற்றானும் அறுகுணமாகத்தான் எண்குணமாகத்தான் கூறுங் குணங்கள் சிவகுணமேயாமென்க. அதனால் 'சிவத்துவ மேதி' என்பது சிவதருமங்களை அடைகிறானென்றே கொள்ளப்படும். அன்றி இவ்வாறு அறுவகையாகத்தான் எண்வகையாகத்தான் சிலகுணஞ் சிவகுணம்போல உண்டென்று கூறியதனாலே முற்றுஞ் சமதையுங் கூடாதாம்; பிறவாறும் எண்வகைக்குணமும் அறுவகைக் குணமுமாகக் கூறுமிடத்தும், சிவாநந்தம்போல் ஆநந்தமும் மற்றும் அளவில் குணமுண்மையும் பெறுமையின். காமிகத்தில்,

*अन्तः शक्तेश्चविश्लेषः इति च पाठः

103 सर्वज्ञत्वं विभुत्वं च जगत्कर्तृत्वमेव च ।
निर्मलत्वं च नित्यत्वं सर्वानुग्राहकं तथा ॥

ऐश्वर्यत्वं प्रभुत्वं च शिवत्वाष्टगुणास्तथा ।

எனவும், திருவள்ளுவரிற் பரிமேலழகர் சிவாகமத்திற் கூறியதெனக் கூறியவைகள் தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற் றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என எண்குணங்கள் பேதமாக வந்தன; வேறிடத்தில்,

104 ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः ।
ज्ञानवैराग्ययोश्चैव षण्णां भग इतीरणा ॥

எனவும், சுதரிசனாசாரியரால்,

105 ऐश्वर्यमग्र्यमनुपाधिमती च लक्ष्मीः ज्ञानं च वीर्ययशसी च विरागता च ।
एते गुणाः षडपि ते भगसंज्ञयोक्ताः सन्तीत्यनेन भगवन्भगवानसि त्वम् ॥

ऐश्वर्यमीश्वरपदश्रुतिरुग्रशब्दो वीर्यं यशः शिवपदं च तवाभिधत्ते ।
सर्वज्ञकामरिपुशब्दसमर्थितौ च सार्वज्ञ्यरागविरहौ भवतः पुरारे ॥

अर्थःश्रिया शिव न कोऽपि विरज्यतस्ते श्रेष्ठस्तया त्वमसि दाशतयीभिरुक्तः ।

எனவும்,

[1]எண்ணில்பல் கோடி குணத்தரேர்வீழி யிவர்நம்மை யாளுடை யாரே.

எனவும்,

102 अनन्तशक्तिसंयुक्तिर्विवाह इति कीर्तितः ।

எனவும்,

[2]எந்தை பிரான்குண மெண்ணிலி கோடிகள்
எந்தை பிரான்சத்தி யெண்ணிலி யாகினும்
எந்தை பிரான்றனை யான்காண வந்துழி
எந்தை பிரானலா லியாதொன்றுங் காணேனே.

எனவும், பிறவும் வருதலின் இவ்வாறு சமதை கூடாவிடின்,

23 व्यक्तोऽसौ शिववद्भाति शिव एव तनुक्षये । (மத-தர்-72)

என்றற் றொடக்கத்துச் சிவசமதாவசனத்துக்குப் பொருளென்னெனின் சிவ தருமோத்தரத்தில், மகாபாதகம் துல்யம் என்பன முதலியன, மகாபாதகம்

* இவை பௌட்கரவிருத்தி யாரம்பத்தில் ஸ்ரீமதுமாபதி சிவாசாரியர் எடுத்துக் காட்டியவை,
[1] திருவிசைப், சேந்த, பா, 9. [2] திருமந்திரம், இப்பாடல் அச்சிட்ட பிரதியில் இல்லை.

அதிகமுந் துல்லியபாவங் குறைவாகவுங் கொண்டு அதற்கு மிகுதியாகவும் இதற்குச் சிறிதாகவும், பிராயசித்தம் விதித்தல் போலவும், ஸ்ரீமதங்கத்தில்,

106 शिववच्छिवभक्ताश्च द्रष्टव्याः शिवकाङ्क्षिभिः ।

எனவும், சுப்பிரபேதத்தில்,

107 भस्मरुद्राक्षसंभिन्नः शिव एव न संशयः ।

எனவும் வருவனபோல ஒருபுடை யொப்புமையாற் சிலகுணம் நோக்கியே சமதை கூறியதென்க; என்னெனின் எப்பொழுதும் ஆன்மாவிற்குச் சர்வத்தையுமறிய யோக்கியதையான சர்வஞத்துவசத்தி யுண்டு. பெத்தாவத்தையின் மலாவிருதனுகையான் அறியாமையானும், ஒரோவழிச் சிவனது பிரேரகத்தாற் பஞ்சகிருத்தியம் பண்ணவந்துழியும்,

108 तद्वदनुग्रहकरणं प्रोक्तं सततोदितस्यास्य ।

எனச்சிவனுக்கே நியமித்துக்கூறலின் இரும்பு தீநின்று சுடுதற்குரிமை பெற்றாற் போலப் பெறுதலானும்,

[1]உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரியன்.

எனவருதலானும், சர்வகர்த்திருத்துவ சத்தி யோக்கியதை மாத்திரம் ஆண்டிருந்ததாகலின் அதுபோலச் சர்வஞத்துவ சத்தியுஞ் சிவனதேயாகலின் சிவனிடமாக நின்றறிதற் குரிமையேயன்றி யிவன்சத்தி யறிந்ததன்றாகலின் என்க. அன்றியும் இரத்தினத் திரயத்தில் (சு-45) அநந்தாதிகள் சவிகற்பஞானமின்றி யறியார்கள் சிவன் நிர்விகற்பமாக வறிவார் என்றமையானும் கூடாதாம். இங்ஙனமன்றிக் கூடுமெனின், சர்வகர்த்திருத்துவமு மிவனதேயாம். அஃதின்மையிற் கூடாதாம். ஆகவே பஞ்சகிருத்தியத்தையும் பண்ணுங்காலத்துஞ் சிவப்பிரேரகத்தா னறிதலின் கிரியாசத்திபோல ஞானசத்தியும் யோக்கியதைபற்றி யிருத்தலானும், முத்தியில், शिवैकधीः । शिवैकरसतां व्रजेत् । எனவும், சிவதருமோத்திரத்தில்,

99 अणिमादिगुणैश्वर्यं सर्वज्ञत्वं च योगिनः ।
तृणवद्यस्त्यजेत्सर्वं * * *

எனவும், சுவேதாரணிய மான்மியத்தில்,

109 शिवानन्दार्णवे मग्नो न च सस्मार वै जगत् ।
तीरं कथंचित्संप्राप्य पुनः सस्मार वै जगत् ॥

எனவும், வேற்றுநூலாய பஞ்சதசப்பிரகரணத்தில்,

110 निजानन्दं सदापश्यन्नपश्यन्नखिलं जगत् ।

எனவும், சிவஞானசித்தியில்,

[1]சிவஞானசித். சு, 11, பா, 10.

[1]உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவாநுப மொன்றினுக்கு முரித்தே.

[2]உடந்தையாய்ச் சிவன்றேற்ற மொன்றுமே காண்பர்.

எனவும், திருவருட்பயனில்,

[3]எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்
றல்லா தறியா ரற.

எனவும், திருக்கழுமல மும்மணிக்கோவையில்,

[4]வசையில் காட்சி யிசைநனி விளங்க
முன்னு ணிகழ்ந்த பன்னீ ருகத்து
வேறுவேறு பெயரி னூறின் றியன்ற
மையறு சிறப்பிற் றெய்வத் தன்மைப்
புகலி நாயக விகல்விடைப் பாக
வமைநாண் மென்றே ளுமையாள் கொழுந
குன்றுகுனி வித்து வன்றோ ளவுணர்
மூவெயி லெரித்த சேவகத் தேவ
விளநிலா முகிழ்க்கும் வளர்சடைக் கடவுணின்
னெற்றியிற் சிறந்த வொற்றைநாட் டத்துக்
காமனை விழித்த மாமுது தலைவ
வானவ ரறியா வாதி யானே
கல்லா மனத்துப் புல்லறிவு தொடர
மறந்து நோக்கும் வெறுந்தண் ணுட்டத்துக்
காண்டொறுங் காண்டொறு மெல்லா மியாண்டை
யாயினும் பிறவு மென்னதும் பிறரது
மாவன பலவு மழிவன பலவும்
போவதும் வருவது நிகழ்வது மாகித்
தெண்ணீர் ஞாலத்துத் திரண்ட மணலினு
மெண்ணில் கோடி யெனைப்பல வாகி
யில்லன வுளவா யுள்ளது காணுது
பன்னு ளிருள்வயிற் பட்டே னன்னது
மன்ன காதலி னடுக்கும தென்னெனிற்
கட்புலன் றெரியாது கொட்புறு மொருவர்க்குக்
குழிவழி யாகி வழிகுழி யாகி
யொழிவின் றுருன் றின்றுதடு மாற
வந்தாற் போல வந்த தெந்தைநின்
திருவருள் நாட்டங் கருணையிற் பெறலும்
யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய

---

[1]சிவஞானசித். சூ, 11, பா, 10. [2]சிவஞானசித், சூ, 8, பா, 29. [3]திருவருட், அணைந்தோர், பா, 3. [4]திருக்கழுமலமும்மணி, பா, 10.

சிற்ப விகற்ப மெல்லா மொன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே.

எனவும் வருதலானும், பண்டித பாமர சாதாரணமாக "ஒன்றுகக் காண்பதே காட்சி" எனக்கூறு முலகவழக்கத்தானும், அதுவும் பிறவும் நோக்கிப், பிறரும்,

இன்ன திதுவென் றிறைவன் றிறமதனைச்
சொன்ன மறையுந் துணிந்திலகா ணம்மானை
சொன்ன மறையுந் துணியாப் பரம்பொருளைக்
கன்னி வனத்திடையே காணலா மம்மானை
கண்டாற் பிறிதொன்றுங் காணுர்கா ணம்மானை.

எனவும் கூறுதலானும் என்க. இதனுனே யாழ்ப்பாணத்துக் கடலோட்டு உவமையானதும் ஒருகரை தெரியின் மற்றொரு கரை தெரியாதிருந்தமையான் எனவும் பிறவும் வருமாற்றுனும் முத்தியினு மான்மாவினது சர்வஞத்துவ சத்தி யோக்கியதை யுடையதன்றி அறியமாட்டாது; கர்த்திருசத்திபோல என்னும் யுத்தியானும் யோக்கியதையே பெறுதலின் என்க. இதனுனே யன்றே,

மெய்யுறு சமாதி விடுத்தவ் வருளினுள்
வையகங் காண்பது மறித்துக் காட்சியே.

என்பதும் பொதுஞானந்துணையாகத் திருவருளே கண்ணுக அறிவிக்க அறிந்த தாயிற்று. இதனுனே யோக்கியதையும் பயன்பட்டது. இவ்வாறே யோக்கியதை யான கர்த்திருசத்தியுமுண்டு. அது,

111 न च सृष्ट्यादि कुर्वन्ति स्वार्थनिष्ठा हि ते यतः।

என்பதனுன் அறிக. இவ்விரண்டு மொத்தலால் ஏனைத்திருப்தியாதி குணங்க ளுண்டென்பார் அவைகளு மிவைபோற் சிவகுண சமதையின்றிப் பிறிதொரு வாற்ருனுடன்பட்டு வேண்டினுங் கொள்வதென்றே யாயிற்று; சிவனுக்குச் சர்வதா அறிகிறதுஞ் சர்வதா பண்ணுகிறதுமாகிய ஞானக்கிரியைகளாகலின். அது மிருகேந்திரத்தில்,

112 स्वापेऽप्यास्ते बोधयन् बोधयोग्यान् रोध्यान् रुन्धन् पाचयन् कर्मिकर्म।
मायाशक्तीर्व्यक्तियोग्याः प्रकुर्वन् पश्यन् सर्वं यद्यथा वस्तुजातम्॥

என்பதனுனு மறிக. அன்றியும்,

113 ज्ञातृज्ञानज्ञेयत्वविहीनं तत्परं पदम्।

எனவும்,

114 ज्ञाता ज्ञानं यथा ज्ञेये मग्नं भवति तत्तथा।

எனவும், ஆத்மபோதத்தில்,

115 ज्ञातृज्ञानज्ञेयभेदः परे नात्मनि विद्यते । 41

எனவும் பிறவும் வருதலானும் முத்தியிலறிகிற சர்வஞத்துவமின்று. அதனானே சர்வகர்த்திருத்துவமு மின்றென்க.

40 ज्ञानामृतेन तृप्तस्य कृतकृत्यस्य योगिनः ।

எனவும்,

38 ज्ञानामृतरसो येन सकृदास्वादितो भवेत् ।
स सर्वकर्माण्युत्सृज्य तत्रैव परिधावति ॥

39 शिवज्ञानामृतं पीत्वा विचरस्व यथासुखं ।

எனவும், வருவனவற்றாற் சிவாநந்தம் உளதாதல் காண்க,

[1]மாருத சிவாநுபவ மருவிக் கொண்டே.

எனவும், பிறவும் வருதலின் சிவாநந்தாநுபவத்தில் நிகழுந் திருத்தியுமுண்டு.

[2]இருணனி யிரவி தான்வந் திரித்தலு மிரவி லெண்ணும்
பொருணிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருணிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னும்
அருளையும் ஒழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே.

என்பதனாற் கூறுமாறே சிவனைச் சுதந்தரமாக வறிதலின் ஒருவாற்றாற் சுதந்தரமுமுண்டு. ஈண்டு மலமின்மையாற், சிவப்பிரேரக மின்மையின் சுதந்தரஞ் சிவனைப் போலுண்டெனின்,

[3]இரவி யெதிர்முளரி யலர்வுறுமொன் றலர்வான்
முகையாமொன் றென்றுலரு முறையி னுமே.

எனவும், சிவஞானபோதத்தில்,

116 तद्विकारी शिवश्चेन्न कान्तोऽयोवत् स तन्नयेत् ।

எனவும், இரத்திநத்திரயத்தில்,

117 द्रवताशुष्कताहेतुरविकारोऽपि भास्करः । 310

तथा समासमात्मीयपुण्यापुण्याख्यकर्मिणाम् ।
अणूनामविकारोऽपि बन्धमोक्षकरः शिवः ॥ 311

எனவும், பிறவும் வருதலின் பெத்தாவத்தையினுஞ் சிவன், சந்நிதி மாத்திரத்தாலே நிகழ்தலின் முத்தியினுஞ் சிவசந்நிதியின்றிச் சிவனை யறியாமையானும் ஆண்டும் அவனருளானே யவன்றாள் வணங்கிச் சிவாநுபவம் பெறுதலானுஞ் சிவனாற் பிரேரகமுண்டென்க.

[1]சிவஞானசித், சு, 11, பா, 1. [2]சிவப்பிர, சு, 5, பா, 4. [3]சிவப்பிர, சு, 1, பா, 5.

118 सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम् ।

என்பதனாற் பரவசமாதல் துக்கமன்றோ வெனின், அது பெத்தர்க்குப் போலன்றி அவரினு மேம்பட வொருகாலிகழ்ந்தமையானே முற்றும் நிகழ்தலிற் குற்ற மன்று. இதனானே பிரேரக மில்லையெனவும் உபசாரத்தாற் கூறப்படும். இவ் வாறு முத்தியினுஞ் சிவனருளானே சிவனை யறிவதற்குப் பிரமாண முண்டோ வெனின் முற்கூறியதேயாம். அன்றியும் மோக்ஷகாரிகையில்,

119 शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्त्यादिभिः सार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥

எனவரும். இதனுள் ஆதியென்றது சிவவிபுத்துவாதிகளை; மற்றப் பிரபஞ்சத் தைப் பாராமை முற்கூறலின். இதனுட் சிவசத்தியாற் சிவனை யறிவதுகாண்க. அன்றியும் சித்தாந்த [1]ரகசியத்தில்,

120 परमेशार्ककिरणप्रकाशीकृतचक्षुषा ।
मुक्तात्मनाक्षिवच्छम्भुर्ज्ञायते शिवतेजसा ॥

என்பதனுள் விழியுவமையானும் அறிக. இதனானே யன்றி [2]"உடலுயிர்கண் ணருக்கனறி வொளிபோல்" என்றாற் போலவும் [3]"கண்ணொளி விளக்கு" என்றாற் போலவும் பிறவும் வருவனவும் என்க. அன்றேற் பெத்தருஞ் சிவசந்நிதி சேட்டிதராகலின் சுதந்தரரே யாமென்க.

39 शिवज्ञानामृतं पीत्वा विचरस्व यथासुखम् ।
शिववच्छाश्वतः शुद्धः सृष्टिधर्मविवर्जितः ॥

எனவருதலிற் சிவனைப்போல நித்தியத்துவமும் மலபெந்தநிவர்த்தித்துவாரத்தா னிகழ்தலினாற் சிவனைப்போலாது அசுத்த தேகமும்,

[4]காயங் கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போ னிற்பன்.

எனவும், சிவதருமத்தில்,

121 शिवयोगाच्च सर्वज्ञः परिपूर्णः सुनिर्वृतः ।
आत्मन्येव स्थितः शुद्धः शिववत्सर्वगो भवेत् ॥

என்பதனாற் காயம் போனபின்பு நிகழ்தலி னொருவாற்றாற் சிவனோடொத்த விபுத்துவமுமுண்டு. இவ்வாறு சிவனோ டொவ்வாதுவரும் சர்வஞதை சர்வகர்த் திருத்துவதை சிவாநந்தாநுபவத்தால் வருந்திருப்தி சுதந்தரத்துவம் சுத்ததேகம் விபுத்துவஞ் சிவனைப்போல் நிகழ் நித்தியத்துவசத்தியத்துவங்களும் பிறவு முண்டென்க. இக்குணமுழுதும் மல யோகத்தாற் றடைப்பட்டு இன்றெனக் கிடந்து சிவயோகத்தாற் பெற்ற தெனப்படும்; அது கிரணத்தில்,

[1]சித்தாந்த சங்கிரகத்தில் என்றும் பாடம். [2]சிவப்பிர, பாயிரம், பா, 7. [3]சிவப்பிர, சூ, 3, பா, 8.
[4]சிவஞானசித், சூ, 8, பா, 31.

122 यथा भेषजसामर्थ्यादशक्तानां बलं वरम् ।
तथा तच्छक्तियोगेन सामर्थ्यममितं भवेत् ॥

என்பதனால் விளங்கும்.

இவ்வாற்றான் ஆன்மா சற்சித்துரூபி, சிவன் சச்சிதானந்தரூபி யென்னும் பேதமு முண்டாய்ச் சீவான்மாவிற்குஞ் சில குணமுண்டென்பதும், பரமான்மாவிற்கு இவ்வான்மகுணங்களினு மேம்பட்ட பலகுணங்களுண்டென்பதும் பெறப்படுதலின் சிவகுணம்போல வொருவாற்றா னொத்த குணமுஞ் சீவனுக் குண்டாதல்பற்றி யவன் சிவதர்ம மடைந்தானெனப்படுமெனவும் இக்குணங் களின் மேம்பட்ட குணங்களே சிவகுண மெனவும் படுதலின், இருபொருட்கும் ஒருபுடையாற் சமதையன்றி முற்றுஞ் சமதை கூடாதாயிற்று. முற்றுஞ் சமதை யாயிற் றரும பேதமின்மையிற் றருமி பேதமுமின்றாய் மாயாவாதப் பிரவேசமா மென்க. என்னெனில், பவுட்கர வியாக்யானத்தில் (சூதசங்கிதை வசனம்),

123 केनचित् साधनेनैव मुक्तः शिवसमो भवेत् ।
इत्येवं केचिदिच्छन्ति वादिनो मुनिपुङ्गवाः ॥

वार्तामात्रमिदं प्रोक्तं सर्वथा न तदर्थवत् ।
एकदेशेन वा जीवः किं वा सर्वात्मना समः ॥

एकदेशेन चेत्सर्वे शिवाः संसारवर्तिनः ।
एकदेशेन सर्वेषामस्ति साम्यं शिवेन हि ॥

सर्वात्मना चेत्साम्यं तत्सर्वथा शिव एव सः ।
भेदकारणशून्यत्वाद्भेदाभावाच्च वस्तुनः ॥

तस्माज्जीवः स्वतः साक्षाच्छिवः सत्यादिलक्षणः ।

எனவருதலின் என்க. இதனையன்றே இரௌரவத்தில்,

124 द्विधा सच्चित्स्वरूपो हि ज्ञत्वकर्तृत्वभिन्नतः ।
तस्मादेकोऽपि पूज्यो हि नान्यश्च इति कथ्यते ॥

எனவும், சிவஞானசித்தியில்,

[1]சீவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்
ஆவனென் றிடில னாதி மலமிவற் றினைம றைக்குங்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் றாகும்.

எனவும்,

[2]சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்

[1]சிவஞானசித், சூ, 1, பா, 64. [2]சிவஞானசித், சூ, 11, பா, 11.

பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
அவன்றனே யறியுஞ்சித் தாதலினு லிரண்டு
மனைந்தாலு மொன்றுகா தநியமா யிருக்கும்.

என வந்ததூஉம் என்க.

இவ்வாறுயிற் காணுபத்திய முத்திபோலச் சிவனதிசயகுணங்கள் இவன் பெறுமையான், நிரதிசயத்துவங் கூடாமையின் முத்தியிலக்கண முற்றுப் பெறுதாகலான், அப்பொருட்பேத நிமித்தம் அனுதிமுத்தன் ஆதிமுத்த னென் பதின் வைத்து முற்றுஞ் சமதை கூறப்படுமெனின் स्वरूपावाप्तिरेव मुक्तिः எனமுத்தி யிலக்கண முண்மையின், இல்லாததூஉம் பெறவேண்டு மென்றல் அவரது அனுதிமுத்தத்துவமும் பெறவேண்டும்; அது பெறுமையின் ஆண்டுங் குறையாகலி னவ்வாறு வருங் குறையின்றென்க. அன்றேல் முற்கூறிய வாற்றாற் சிவனெடு முற்றுஞ் சமதா குண மின்றெனவே நிகழ்தலானுங் கூடாதாம். ஆகவே, பிறர் சமதைகூறுமாற்று னெடுத்த வடமொழி தமிழனைத்தும் இவ்வாறு பொருள்படும் என்பதே பொருந்திற்றும். அற்றன்று; முற்கூறியவாறே சமதை போகாமல் எவ்வாற்றனுங் கூறுவேனெனின், அது சர்வஞானேத்தராதி பிரக்கிரியை யாதலின் ஞானசாங்கியமாகிய பூர்வபக்கம் எனத் தள்ளினுமாம். ஆகவே சீவன் சற்சித்துரூபி சிவன் சச்சிதானந்தரூபி யென்பதே வலியுடைத்தாயிற்று. இதனுனே மலபெந்த நிவர்த்தியான் முத்திசமரசஞ் சிவனேடொருவாற்று னெத்ததாயினுஞ் சத்தி சமரச முழுதுமின்மையானும், அத்தரும பேதத்தாற் றருமியும் பேதமாகலின் முழுதுஞ் சிவசமரச மின்மையானும், சமரசீ பாவம் முழுதும் ஒவ்வாதாயிற்று. ஆகவே மாயாவாதிபோலப் பாசோபாதி பேதத்தாற் சீவனும் உபாதி ரஹிதனுற் சிவனுமாவ னென்றுற்போலக் கூறியதூஉம், சிவனுற் சிறிது மறிவிக்கப்படுதல் இன்றெனக் கூறு முகத்தாற் பிரேரகமின் றென்பதூஉம் முற்கூறிய வாற்றாற் சேட்புலத்தனவாயின; “ அறிவிக்கப் படுஞ் சித்து மிவன்றனே ” என முத்தியிற் கூறுதலின். இதனுனே யன்றே “ சிவ தேசசா ” என்றதூஉம். அறிவிக்கப்படுதலே பிரேரகமாகலின் மல நிவர்த்தி செய்து சிவனை யறியச் செய்தலுஞ் சிவனுகலிற் பெத்தரைப் போலாது ஒரு வாற்று னறிவிக்கப்படுமுகத்தாற் பிரேரக முண்டாகலானுஞ், சர்வஞத்துவ சத்தியுண்டாகலானு முற்கூறியவாறே,

31 विश्वानर्थान् स्वेन विद्यभ्य धाम्ना सर्वेशानानीशितः सर्वदास्ते । (மிருகே-பிர-2-சு. 29)

என்றுற் றெடக்கத்தன உபசாரமேயாமென்க. எனவே முத்தியிற் சிவாநந் தானுபவமாதலே சித்தமாகலின், அஃதத்துவிதமின்றிக் கூடாமையின் முற் கூறியவாறே பேத நிராகரணஞ்செய்து அத்துவிதமாமாறு கூறிக்கொள்க. அதற்குப் பிரமாணம்,

[1]ஒன்றிரின் றுணரு முண்மைக் குவமையா னவத்தொ டொன்றே.

எனவும்,

[1]சிவப்பிர, சூ, 10, பா, 8.

42 सरित्समुद्रसंयोगाज्जलं समरसं यथा।
तथात्मशिवयोर्योगो नमस्कारः प्रकीर्त्यते ॥

என்றற் றொடக்கத்தவாகவும் வருவனவாம். இதற்கு,

ஆதியிற் பசுபா வத்தை யகன்றுநற் பதிபா வத்தாற்
கோதற வுறைத ருனே கூடுத லென்று கூடும்
ஈதலாற் சிவனே டான்மா வியைந்திடு மாற தெங்ஙன்
ற்தற வெங்கு மானேன் சேரவே றிடமு முண்டோ.

எனக் கூறியபடி,

[1] அரனடிக்கீழ் வைப்ப னருங்களங்க மறுக்கு
மக்குளிகை தானும்பொன் னுகா தாகும்.

என்பதனுன் அருணந்தி சிவாசாரியாரும், **अद्वैतवासनाविष्टैः** என்பதனுனும், சர்வ ஞானேத்தர விருத்தியானும் அகோர சிவாசாரியரும் அவ்வாறே கூறினரென வுடன் படுத்திக் கொண்டாராலோ வெனின்; அகோர சிவாசாரியர் சம்பிரதாய விரோதமாய்ப் பொருள் கொள்வா ராகலான், அவர் மாற்றமன்றி மூலமே பிரமாண மாகலானும், அருணந்திதேவசிவாசாரியர் அவ்வாறு கொண்டில ரென்பது அவர் நூலான் விளங்குதலானும், பிறர் " ஆதியிற் பசுபா வத்தை " என்பதனுற் கூறுமாறே கூறுவதற்கு மூலவசன மின்மையானும், தசகாரியத்துள் பலவும் வேண்டாமென நிகழ்தலானுஞ், சாயுச்சிய பதார்த்தங் கூடாமையானும், பிறவாற்றானும் அது பொருந்தாதென்க. இதனுனேயன்றே **ஊனம் படுமே தசகா ரியத்திற் பலவுங் கெடுமே யொன்று மெனலுங்கேள்** என்றதூஉம் என்க. அஃது எவ்வாறெனின் கூறுதும். இரத்நத்திரயத்தில்,

124 तथाहि विमलोदारगम्भीरे चिन्महोदधौ।
स्वात्मनि प्रविलीयन्ते तेनैके समधिष्ठिताः ॥ (சு-281)

என்பதற்குத் **திரிலோசனசம்பு** அத்துவிதமாக வுரைகூறி யிருக்கவுந் தத்துவப் பிரகாசத்தில் **मोक्षः शिवसमानतारूपः** என்பதற்குப் பிறர் சமானபதம் சமரூபம் சரூபம் சாரூபம் என்பவற்றிற்குப்போல ஏகரூபமென்னும் பொருள்கொண்டு அத்துவிதமாகப் பொருளுரைக்கவும் அத்துவிதமென்றது கொண்டு ஏகான்ம வாதி யுட்கோள்போலக்கருதி, தாடலைபோற் கொள்ளுஞ் சித்தாந்த சம்பிர தாயந் தெரியாமையின் இவ்வாறு அத்துவிதார்த்தம் பண்ணினதெல்லாந் தள்ளுகிறேமென்றே **अद्वैतवासनाविष्टैः** என்பதனுற் பிரதிஞ்ஞை பண்ணிக்கொண்டு, அது சித்தித்தற்பொருட்டுச், சிவன் ஆநந்தரூபனென வேதாகம சாத்திரங்க ளெல்லா முறையிடவுஞ், சிலபொருளுரைப்பதுபோல ஆநந்த சத்தத்திற்கு வேறுபொருளுரைத்தும் இவ்வாறு மாறுபாடாகக் கூறலின் அவருரை பிராமாணிகம் அன்றென்பது முன்னமே கூறினமையின் அது கோடற் பாற்றன்றென்க. அன்றியும் சர்வஞானேத்தரத்தில், (பிர, 1, சு, 47)

[1] சிவஞானசித், சு, 11, பா, 10.

125 स एव भगवान् व्यापी अप्रमेयो ह्यनुपमः।
बहिरन्तर्विभागेन तिले तैलमिव स्थितः॥

என்பதுகண்டுஞ் சுத்தபேதமாகவும், தேவிகாலோத்தரத்தில்,

126 निस्तत्त्वे निष्कलीभूते विन्दत्यात्मनि यत्सुखम्।

निर्विकल्पमचिन्त्यं च हेतुदृष्टान्तवर्जितम्।
तत्सुखं परमं प्रोक्तमात्यन्तिकमनौपमम्॥

என்பதுகண்டும், இரௌரவத்தில்,

127 एवं दीक्षाविशुद्धात्मा देहस्थोऽपि न देहभाक्।
निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः॥

37 देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत्।

என்பது கண்டும் சுகசத்தத்திற்குத் துக்க நிவர்த்தியாகவும் பொருள்கொண்டு உரை செய்தலானும், பிறவுரையின் இவர்கூறியவாறன்றிச் சித்தாந்தார்த்த மாகவே கிடத்தலானும் அகோர சிவாசாரியருரை பிரமாணவத்தன்றென்பதாம். ஆகவே இவருரையை நம்பியன்றே பிறர் தசகாரிய மெனவும், அளவையெனவும், சகலாகம சாரமெனவும், அகவலெனவும் பிறவுஞ்செய்தனர். அவையனைத்தும் பிரமாணமுடையன அன்மையின் நிராகரித்துழி, வரையினது சிகரத்தினின்றுந் தவறிவீழ்பவன் சிலந்திநூல் பிடித்துத் தரிக்கலாமெனப் பற்றியாங்கு நிலையில்வழக்கேயாயிற்றென்க. இனி அருணந்தி தேவசிவாசாரியர் அங்ஙனங் கூறியது ஏகான்மவாத நிராகரணார்த்தம் வேறுபட ஏகதேச வுமமையாற் கூறினாராகலின், பின்னர்,

[1]இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும்,

[2]சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
அவன்றானே யறியுஞ்சித் தாதலினா லிரண்டு
மணைந்தாலு மொன்றாகா தநாதியமா யிருக்கும்.

[1]சிவஞானசித், சூ, 11, பா, 12. [2]சிவஞானசித், சூ, 11, பா, 11.

எனவும், பிறவும் வருதலானும், சிவசமவாத நிராகரணம் பெத்த முத்தி யிரண்டினும் பண்ணுகையானும் அவர்க்கது கருத்தன்றென்க. இவ்வாறாகவும் இவர் தமதுட்கோட்கு ஏற்குமோவென அவர் மொழியைப் பின்சென்றது, சுகப் பிரமரிஷியை வியபிசாரி பின்சென்றது போலும். இவ்வாறு உமாபதிசிவா சாரியர்மொழிப்பின் சென்றதற்கும் ஒக்கும். என்னை,

[1]உவமையா னவத்தொ டொன்றே.

எனவும்,

[2]உடலுயிர்கண் ணருக்க னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகும்.

எனவுங் கூறலின்,

[3]இருணனி யிரவி தான்வந் திரித்தலும்.

என்பதனாற் சிவனுபகாரந் தோன்றக் கூறியதூஉம்,

[4]கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தோன் றன்றே.

என்பதனானும், பிறவாற்றானும் விளங்கும். அஃதற்றாக; தசகாரியத்து ளொவ் வாமையான் வேறுபட வருவதென்னையெனின், ஆன்மா தனது ஞானக்கிரியா சத்தி யபிவியத்தியைப் பெற்றவாறே முன்னர்ப் பெத்த காலத்தில் நின்றாற் போல முத்தியினும் நிற்றலாற் சிறப்பாகச் சிவனுக்குஞ் சீவனுக்கு மோர் சம்பந்த மின்றாயிற் பேதப்பட நிகழுமாற்றான் ஆன்ம தரிசனம் ஆன்ம சுத்தி சிவதரிசனஞ் சிவ யோகஞ் சிவபோகம் ஐந்துங் கூடாமையின், இன்றெனல் வேண்டு மாகலானென்க. ஆன்ம தரிசனமாவது, சிவஞானம், அருள், ஞேயம் என்னுமிவைகள் பலவாகப் பாகுபடுதலின், அவற்றுள் ஒன்று கண்டு அழுந்தி நின்று தானுந் தோன்று மாற்றால் தரிசிப்பதாகலின் ஆண்டுப் பிரிந்து, நிற்றல் கூடாமையின் ஈண்டுப் பேதவாதிக்கு அவ்வான்மதரிசனங் கூடாதென்றது. இவ்வாறாயின் மலதரிசனத்தானுங் கூடுமெனின், அவ்வாறு கூடினும் அஃ தறியாமை யாகலின் ஆண்டு விவேகதரிசன ஞானங் கூறுதற்குச் சிறப்பில தாதலானும், அதனானே சகலாவத்தையிற் பாரிசேடத்தானறிதல் அதனினுஞ் சிறப்பென நிகழ்தலானும், ஆன்மதரிசனம் பண்ணுவதற்கினஞ் சிவஞானமே யாகலானும், ஆண்டு மலதரிசனத்தினுஞ் சிவஞானமன்றி யுணர்தல் கூடாமை யானும் சிறப்புப்பற்றி ஞானநந்தந் தோன்றும் வழியே கொள்ளப்படுமென்க. இச்சிறப்பு நோக்கியன்றே,

[5]நாடியரன் றன்னாலே தன்னையுங் கண்டு.

எனவும்,

[6]சிவனையவன் றிருவடிஞா னத்தாற் சேரச்
செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்
அவனையணு காவென்று மாத லானு
மவனடியவ் வொளிஞான மாத லானும்

[1]சிவப்பிர, சூ, 10, பா, 8. [2]சிவப்பிர, பாயிரம், பா, 7. [3]சிவப்பிர, சூ, 5, பா, 4. [4]சிவப்பிர, சூ, 3, பா, 8. [5]சிவஞானபோ, சூ, 9, பா. 1. [6]சிவஞானசித், சூ, 9, பா, 4.

இவனுமியான் றுவக்குதிர மிறைச்சி மேதை
யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ
அவமகல வெனையறியே னெனுமைய மகல
வடிகாட்டி யான்மாவைக் காட்ட லானும்.

எனவும், [1]'கண்டிடுங்கண் டனைக்காணு' என்பதனுள்,

கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங் காட்டி.

எனவும், [2]'சூரியகாந்தக்கல்' என்பதனுள்,

அடிஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத்
தூரியனுஞ் சிவன்றோன்றுந் தானுந் தோன்றும்.

எனவும்,

[3]மாயப் படலங் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்.

எனவும், பிறவும் வருவதூஉம் என்க. இவ்வாறு ஆன்ம தரிசன விலக்கணம் [4]'பாசம தகல ஞானம் பற்றல்' என்னும் வகுப்பிற் படவரும். அறியுந் தன்மை,

[5] தன்னாலே தனைய றிந்தாற்
றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே.

எனவரும். அன்றியும்,

[6]நீயுநின் செயலொன் றின்றி நிற்றலே தரிச னந்தான்.

என்பதற் கேற்கக் கூறினுமாம். இனி ஆன்ம சுத்தியாவது அங்ஙனந் தோன்றி நின்ற ஞானத்தினும் நின்று நெகிழ்ச்சி கொடுத்துத் தற்போத மழுங்கத் திருவருளோ டொன்றுபடழுந்தல், அது பேதவாதிக்குக் கூடாமையின் ஆன்ம சுத்தி யின்றென்றது. அவ்விலக்கணம்,

[7]உய்த்தறிந் திடவுதிப்ப தொளிவளர் ஞான மாகும்
அத்தன்மை யறியு மாறுமகன்றிட அதுவா யான்மா
சுத்தமாம்.

என்பது. அன்றியும்,

[8]போயிவன் றன்மை கெட்டுப் பொருளிற்போ யங்குத் தோன்று
தாயிடி லான்ம சுத்தி யருணூலின் விதித்த வாறே.

என்பதூஉமாம். சிவதரிசனமாவது முன்னர் நின்ற நிலையினின்று அறிவு

---

[1]சிவஞானசித், சூ, 9, பா, 5. [2]சிவஞானசித், சூ, 8, பா, 28, [3]திருவிடைமருதூர் மும், பா, 13. [4,5,7]சிவப்பிர, சூ, 8, பா. 1, 2, 3. [6,8]உண்மைநெறி, பா, 2.

அடங்கியவழிச் சிவனே டொற்றுமையாதல். அது சர்வஞத்துவஞ் சர்வ கர்த்திருத்துவ முண்டென்னும் பேதவாதிக்கு முன்னர்க் கூறியவற்றிற்குந் தற்போத மழுங்கவிருப்பது கூடாமையின் இதுவும் கூடாதாகலான், ஞானம் அருள் முதலிய நிலைபெறுததான் இதுவும் பெறுமையிற் சிவதரிசன மின்றென்றது. அவ்விலக்கணம்,

[1]சுத்தமாஞ் சுத்த ஞானத் தொருமுத லேன்று மன்றே.

என்பதுமாம். அன்றி,

[2]அந்நிலை கரண மாகா வகையதி லறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் றேன்று மன்றே.

என்பதுமாம்.

[3]பரையுயிரி லியானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறென் றின்றித்
தரைமுதலிற் போகாது † நிலையினினில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமானந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தெரிசனமாய்ச் செப்பு நூலே.

இங்ஙனம் பெற்றநிலையினின்று மேன்மேலவிழ நிகழ்வது சிவயோகமுஞ் சிவ போகமுமாம். முன்னர்க் கூறியவாறே தற்போத மழுங்க விருந்த இவற்றின் காரணமாக முன்னர் நிகழ்வதுபெறுதார் இவ்விரண்டும் பெறமாட்டாராகலின் அவர்கட்கு இவை யிலவென்றது. அவ்விலக்கணம்,

[4]பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனு ளுள்ளச் செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

எனவும்,

[5]மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேற்
பெற்றிடு மதனை மாயப் பிறப்பினை யறுக்க லாமே.

எனவும் வருவது. அன்றியும்,

[6]எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்தங்
கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு மேலாம்
ஒப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெல்லா மதனாலே பற்றி நோக்கித்

---

[1]சிவப்பிர, சூ, 8, பா, 3. [2]சிவப்பிர, சூ, 9, பா, 3. [3]உண்மை நெறி, பா, 4. † தன்நிலைநில்லாது என்றும் பாடம். [4],[5]சிவப்பிர, சூ, 10, பா, 1, 3. [6]உண்மைநெறி, பா, 5.

தப்பினைச்செய் வதுமதுவே நினைப்புமது தானே
 தருமுணர்வு புசிப்புமது தானே யாகும்
எப்பொருளு * மசைவில்லை யெனவந்தப் பொருளோ
 டிசைவதுவே சிவயோக மெனுமிறைவன் மொழியே.

எனவும்,

[1]பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப்
 பயின்றிடினு நெறியல்லா நெறியயிற்றி வரினுஞ்
சாதிநெறி தப்பிடினுந் தவறுகள்வந் திடினுந்
 தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கில்
நாதனிவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து
 நானுபோ கங்களையுந் தானுகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானுக்கி விடுவன்
 பெருகுசிவ யோகமெனப் பேசுநெறி யிதுவே.

எனவும்வரும்,

இவ்வாறொற்றுமைப்பட்டுநின்று சிவாநந்தாநுபவம் பெறுதற்பொருட்டு ஞாதுரு ஞான ஞேய பேதமின்றித் தற்போதமழுங்க இருந்திருந்து அவிழப் பெறும் இவைகள் பேதவாதிக்குக் கூடாமையின் இவ்வைந்து மில்லையென்றது. இதனுனே ஒழிந்தனவும் பெற்றதுபோலப் பிறர்கூறினும் அவர் பெற்றிலராம். ஆகவே தசகாரிய சம்பிரதாயமுந் தெரியாமையுமாயிற்று. அது ஞானுசாரியரை யடைந்து ஞானோபதேசம் பெற்று அநுபவித்தவர்க் கன்றிப் பலபட விரித்துக் கூறினுந் தெரியாமையின் என்பது. இதனுனே யன்றே சம்பிரதாய வாய்மைகள் வெளிப்படுமென்று கருதி ஈண்டுத் தசகாரியத்தைப் பாகுபடுத்தி விரியக் கூறுதநூஉ மென்க. இது பல ஆகமங்களினும் இப்பொருள்பட வருவது நோக்கி வேண்டியவாறே யோர்கோவைப் படக்கோத்துக் கற்பித்துக் கூறிக்கொளலாகக் கிடக்க ஈண்டொருமைப்படுத்திய தென்னெனின், அவ்வாறு கூறின் தந்திரகலா பாகமான சாத்திரங்களுள் அன்றே ஆண்டாண்டு எடுத்துத் தொகுக்கவேண்டும். அது பிரகரண பேதங்களாற் பிறிதோர்பொருள்கொளக்கிடப்பதையும் ஈண்டுப் பொருந்தக் கூறவரும்: ஆதலாற் சம்பிரதாயம் வெளிப்படாதாம். ஆயின் நீர் தாங் கூறுமே எனின் யாங்கூறுவதுஞ் சம்பிரதாய நிலையாற் றெல்லாசிரியர் காமிகாதியாகமத்து வழிநூலாக வுபதேசகலாபாகத்தைச் செய்த தன்றி மூலாகமத்தாற் கூறப்படா தென்க.

அவ்வாறு வருவன சிவப்பிரகாசத்தில் [2]மூன்ருக வகுத்துப் பிறிதொரு மூவகைப்பாகுபாட்டி லடக்கிக்கூறும்வசனமும், மெய்கண்டதேவசிவாசாரியர் தம் மாணுக்கரு ளுயர்ந்தோராய அருணந்திதேவ சிவாசாரியருக்கு மூத்தோராயினர். * * செய்துழிப் பொல்லாதபிள்ளையான் அங்கீகரிக்கப்பட்டுச் சித்தியாரொடு கூடவெடுத்து மெய்கண்டதேவ சிவாசாரியர் கையிற்கொடுக்க அவர்வாங்கி யுலகின் நிறுத்தலின் ஏககாலத்தின் அறுபத்துமூன்று திருப்பெயருக்குச் சாம்பவதீக்கையாற் சத்தியோநிர்வாணதானம்பண்ணித் தாமுஞ் சமாதியிருந்து சிவகதியடையும் பெருமையுடைய சிற்றம்பலநாடிப் பண்டாரத்தான் உரை

*இசைவில்லை என்றும் பாடம். [1]உண்மைநெறி, பா, 6. [2]சிவப்பிர, சூ, 8, பா ,1.

யெழுதப்பட்ட உண்மைநெறிவிளக்கம் முதலானவையுமாம். இவையேயன்றி மூலாகமவசன மின்றோவெனின், அது சிவாலய சேவாவிதி முதலாயினவற்றிற்கு ஆகமவசன மிக்காலத் திறந்ததுபோல எல்லாமூலாகம வுபாகமங்களும் வழங்காமை யிறத்தலின் இதுவும் இறந்ததேயாம். அதனுற் றசகாரியத்திற் கநுமேய சுருதி யுண்டென்பதாம். அதனனே யன்றே முற்காலத்து வழங்கினமை கண்டு செய்தமைதோன்ற [1]"அருணூலின் விதித்தவாறே" என்றதூஉம் என்க. அன்றி இக்காலத் தருகி வழங்கும் மூலாகம வசனங்களுள் உத்தேச மாத்திரங் கண்டிருத்தலின், ஒழிந்த விலக்கண வசனமும் உண்டெனினுமாம். அது காமிகத்தில் சாம்பவதீக்ஷாபடலத்தில்,

128 ज्ञानदीक्षामहं वक्ष्ये शृणुत द्विजसत्तमाः ।
सुवारे सुदिने पक्षे सुमुहूर्ते विशेषतः ॥

एकान्ते निर्जने स्थाने मध्यरात्रावुपक्रमेत् ।
सच्छिष्याणां सदाचार्यो बोधं कुर्याद्विशेषतः ॥

शिवालये गुरुस्थाने शक्तिपीठे मठे गृहे ।
शुद्धदेशे सुखासीनः पञ्चगोचरसंभवः ॥

दर्भासने व्याघ्रचर्मषट्पदे पीठमध्यमे ।
सद्गुरूणां सुखावासे वासमात्रे शुभे दिने ॥

स्नानोपचारमाल्यैश्च सर्वाभरण संयुतैः ।
गन्धपुष्पादिभिः पूज्य शय्या योगस्य मध्यमे ॥

पायसं चाप्यपूपं च ताम्बूलं च निवेदयेत् ।
षोडशेनोपचारेणाभ्यर्चयेद्गुरुपादयोः ॥

ज्ञानदीक्षां विशेषेण कुर्यात्सद्देशिकोत्तमः ।
शरीरमर्थं प्राणांश्च सद्गुरुभ्यो निवेदयेत् ॥

दीर्घदण्डं नमस्कुर्यान्निर्लज्जो गुरुसन्निधौ ।
सच्छिष्यस्तु विशेषेण बोधं कुर्वेति देशिके ॥

गन्धपुष्पकरः *तिष्ठेत् शिष्यमूर्धनिकारयेत् ।
अर्चितं तु शिरोमध्ये पादं कारुण्यदेशिकः ॥

तत्पश्चाज्ज्ञानसद्भावमिदं शिष्यस्य बोधयेत् ।
प्रथमं तत्त्वरूपं तु द्वितीयं तत्त्वदर्शनम् ॥

तृतीयं तत्त्वशुद्धिं च चतुर्थं चात्मलक्षणम् ।
पञ्चमं चात्मसन्दर्शं षष्ठं स्यादात्मशोधनम् ॥

---

[1] உண்மைநெறி, பா, 2.  *स्थित्वा इति च पाठः

सप्तमं शिवरूपाख्यमष्टमं शिवदर्शनम् ।
नवमं शिवयोगं च दशमं शिवभोगकम ॥

इत्यर्थदशकं ज्ञात्वा ज्ञानमार्गं विधीयते ।

எனவருமாற்றானும், சூக்குமத்தில் விஞ்ஞானதீக்ஷாப்பிரகரணத்தில்,

129 दशकार्यक्रमेणैव बोधयेच्छिष्यवद्गुरुः ।
तस्य ज्ञानं महासूक्ष्मं वाङ्मनोऽतीतगोचरम् ॥

रहस्यमतिगुह्यं च सूक्ष्मात्सूक्ष्मं शिव*मयम् ।

* * *

शरीरमर्थं प्राणांश्च सद्गुरुभ्यो निवेदयेत् ।
तस्यान्ते ज्ञानसंपूर्णं गुरुं * *
* * * नामविधीयते ॥

என்றற் றொடக்கத்தானும் வருவது கண்டுகொள்க. இவ்வாறன்றிக் கரும நிருவாண தீக்கை மாத்திரமுடையோர் சுவயகற்பனாயுத்திகளால் இக்காலத்து வழங்கும் தந்தரகலாபாகங்களிற் சில எடுத்துக்கூறித் தசகாரியமெனப் பெயரிட்டுத் தமிழிற்செய்து இதற்கு மூலமுண்டோ வென்றால் தாம் பொறுக்கிக் கோத்ததைத் தம்மினு மிழிந்த வறிவுடையார்க்குக் காட்டித்திரிதல் பொருந்தாதென்க. அஃது அவ்வாறு பொருந்தாமை அவர்செய்த தமிழும் அதற்கு மூலமென அவர் பலவழியானும் எடுத்துத் திரட்டியதூஉம் பார்க்கிற்றெரியும். அவ்வாறு நீரும் பலவழியு மெடுத்துக் கூறுமெனின், அவ்வாறு கூறினும் பின்காணுமிடத்துத் தொடர்ச்சியுடையது போலாகாதன்றே. ஆயினு மவ்வாறு திரட்டியதுண்டு. அதனைப்பார்க்கின் அது தமிழிற்கு ஒத்துமுடிதலானும், அவர்போல் நலிந்து பொருள்கொள்ள வேண்டாமையானும் இயல்பாற் பொருள் விளங்கும். அதனிற் கண்டுகொள்க. அன்றிப் பிறர் திரட்டியதுங் காமிகாதிக ளிறந்துபோய்க் கிரியாபாதத்திற் சிறிதும் ஞானபாதத்தி லுதாஹரணங் காட்டினவைகளுட் சிறிதுமாயே கிடைத்தலின் சித்தாந்தத்திற் கிடையாது தக்ஷிணகமமான ஞானசித்தியினின்றும் எடுத்தாராகலின். அவையெல்லாஞ் சிவாநந்த முத்தியே கூறுதலானுஞ், சித்தாந்த முத்தியே கூறுதலானுஞ், சித்தாந்த வசனங்களு முற்கூறியவாறே சிவானந்த முத்திக்கே பிரமாணமாதலானும் அவர்கொண்ட அனைத்து மவர்க்கன்றி ஈண்டைக்கே பிரமாணமாம். அஃது ஈண்டு விரிப்பிற் பெருகுமாகலி னீண்டுக் கண்டுகொள்க. ஆயினுஞ் சிறிதுணர்த்துதும். ஈண்டுப்பிறர் சிவபோகமெனக் கூறுவது,

செப்புவங்கே ளருந்தவரிற் சிறந்த மேலோய்
சிவபோக முனதுமனந் தெருளு மாற்றான்
ஒப்பரிய சிவனவனோ டடங்கை யாகி
யொளிவிடுங்கால் மலபாச விருள்க ளோடத்

*अयं — இவன், என்றது சீடனை.

தப்பறவே நின்மலமாம் பரமா நந்தந்
தனிற்பிரகா சிக்குமங்கே சமம தாக
வப்பொழுதே யிவனவனே டொன்றி யெங்கு
மமர்ந்திடுவ னறிவுதொழி லிச்சை யோடும்.

தாதனு னென்றென் னுளுஞ் சாற்றுத லதீத மோகம்
ஈதல வதுநா னென்றே யியம்புதல் பிரமை யாகும்
ஓதிடி னுனே யெல்லா மெனவுணர்ந் திடுத லுள்ளே
தீதறு மயக்க மூன்றுஞ் செறிந்திடா தறிந்தி டாயே.

நித்தியமா மாநந்த வுருவத் துள்ளே
நீங்காதே தூங்கிடுக நிமல மாகிச்
சத்தியமாஞ் சூனியமாஞ் சுவானு பூதி
தான்பிரகா சிக்குமுன்னுட் டரும நீதி
யுத்தமனே யூமனுணர் கனுப்போ லாகி
யுணராதே யுணர்தல்சிவ போக மாகும்
முத்திநிலை தானுமிது மோன மான
முடிவிலா நிரதிசய மொழியுங் காலே.

எனவரும் இம்மூன்று பாட்டுஞ் சிவபோக பரீக்ஷை பண்ணின தென்று பிறர் கருத்து. என்னை? முன்னர்த் "தத்துவரூபங் காட்சி" யென்னும் பாட்டான் உத்தேசித்தவாறே,

உண்மையாம் ஞான நந்த வொளியினு ளடங்கித் தூய
திண்மையாங் குணங்க ளெட்டுஞ் சேர்ந்தனு பவித்து நீங்கா
வண்மையா னதிச யங்கண் மாய்ந்துதா னுகி நின்ற
துண்மையே சிவபோ கந்தா னேமென நுவலு நூலே.

எனவிலக்கணங்கூறி அதன் பின்னர் இது தசகாரியத்தி னிலக்கணம் முற்றும். மேல்,

மதிசெய்தா ருரைக்க வல்லா ராயினும் வடநூல் வல்ல
வதிகவா லறிஞர் கூற வையமுந் திரிவு மின்றி
விதிமுறை யுணர்ந்த வாறு விளம்புவன் கேட்டி மேலோய்.

எனப்பரீக்கை கூறுதற் கதிகாரம் பாரித்து நிறுத்த முறையே கூறுதலின். இவ்வாறு கூறுதல் தனது கற்பனையாம். என்னை? முன்னூலானவற்றிற் றந்திரகலை மந்திரகலை யுபதேசகலையாக மூவகைப் படுத்திக் கூறும் பலவற் றுள்ளும் ஒரு வழியாயினும் மிவ்வாறு உத்தேசம், இலக்கணம், பரீக்கை யென வகுத்துக் கொள்ளாமையின் அவ்வாறு சிவாகமங்களின் இன்றாயினுந் தருக்க நூலுள் உண்டாகலின் அவ்வாறு கூறியதெனின், அவன் மரபு சிவாகமத்திற் கலந்து கூறலாகாமையின், அது குற்றமென்க. ஆயின், அவன் கூறும் அனுமானுதி யிலக்கணஞ் சில கொண்ட தென்னையோவெனின்; அவ்வாறு கூறும் பொருட் பகுதியிலொத்தன சில கொண்டது அன்றிச் சொல் வழக்கப்பாடான் வருமரபு கொண்டது இன்றென்க. அதுசமயநூற்சங்கேதங்

தனித்தனி கொண்டவாறன்றிக் கொள்ளாமையே மரபாகலான். இதனானே யன்றே பிறர் ஒன்றாயு மிரண்டாயும் ஆறாயும் பதினாறாயும் பிரமேயங்களையும், பிரமாணங்களை ஒன்றாயும் இரண்டாயும் நாலாயும் ஆறாயும் பலவாயுங் கொண்ட வாறே கொள்ளாது, பிரமேயங்களைப் பதி,பசு, பாச மெனப்பெயர் வேறுகொண்டு மூன்றானும் பிறவாற்றானும் பாகுபடுத்தியும், பிரமாணங்களை மூன்றினடக்கியுங் கொண்டதுமென்க. இவ்வாறன்றியுங் குற்றமின்றெனிற் சமயசங்கேதத்தான் முன்னோரான் வழங்கப்படாததான 'தாச னென' வைணவர் கூறுவதைச் சிவனடிமையாதல் நோக்கித் தம்பிரான்களையும் வழங்கலாமென்க. எனவே முன் வழக்கமில்லாதவற்றைக் கற்பித்தமையாற் குற்றமேயாம். அன்றியும் இவ் வுத்தேச விலக்கண பரீக்கையென்பது பரிபாடையுள் अस्य शास्त्रस्य என்று தன் னூலுக்கு மாத்திரங் கூறிக்கோடலாற் பிறர்நூற்கும் கூறுதல் குற்றமுமாமென்க. அவ்வாறுகூறின் அவனிலக்கண வாக்கியத்தை அவ்வியாத்தி அதிவியாத்தி அசம்பவம் என்னும் மூன்றும் படாமையன்றே கூறுவன்; அஃதீண்டின்மையிற் குற்றமுண்டென்க. என்னை? சிவபோகமாவது,

உண்மையாம் ஞான நந்த வொளியினு ளடங்கித் தூய
திண்மையாங் குணங்க ளெட்டுஞ் சேர்ந்தநு பவித்து நீங்கா
வண்மையா னதிச யங்கண் மாய்ந்துதா னாகி நின்ற
துண்மை.

என்பதன்றே. இது ஆன்மதரிசனத்திற்குங் கூடுதலின் அதிவியாத்தியேயாம்.

அணுவினை யடைந்தே யென்று மகன்றிடா ஞானச் செய்தி
நுணியபே ருருவந் தன்னை நோக்காது நோக்கிப் பொல்லாத்
திணியபே ரிருளிற் றேன்றுஞ் சிற்றறி வல்ல யானென்
றெண்ணுவதே யணுவின் காட்சி யென்றன னெவர்க்கு மேலோன்.

என்பதாகலின், இதனான் முற்காலத்துள்ள ஞானமுதலிய குணங்கள் விட்டு விளங்குதலாற் "சிற்றறி வல்ல யான் என்று" கூறலில், எண்குணமாகிய சிவத்துவங்களும் ஆன்மதருமமாகலின், ஆன்மதருமமன்றி யான்மதரிசனங் கூடாமையின் முற்சிவபோகத்தோடு பேதமின்றென்றது. இதற்கிவ்வாறு பொரு ளென்பது இதன் பரீக்கையாகவரும்,

செப்பியவிச் சிவத்துவந்தா னுயிர்கட் கெல்லாஞ்
சேருணத்தி லடங்கியிடுங் கனகம் போலக்
கப்பறவே யுளதன்றே குளிகை நீங்கக்
கனகவுரு வாய்க்களிம்பு காண லாபோல்
ஒப்பறுசீர்ச் சிவன்குருவாய்ப் பரிசஞ் செய்ய
வுறுமலந் தீர்ந் தவனுவன் பசுவா காண்பின்
றிப்பியமா மரணித்தீக் கடையத் தோன்றுஞ்
செந்தழனெய் யவையாகாத் திறமே போல.

இச்செய்யுளான் விளங்கும். எனவே ஆன்மசுத்திக்குஞ் சிவபோகத்துக்கும் இலக்கண வகையாற் பேதமின்றாயிற்று. இதனானே யான்மசுத்தியினும் இவன்

எண்குண விளக்கமின்றிப் பிறிதின்மையின் ஆண்டும் இவ்விரண்டிற்கும் அதிவியாத்தியாம். அது, "சேர்ந்த பந்தம்யா னல்லே னெல்லாம் பரவச மென்று பார்க்குஞ் சுதந்தரவறிவே யான்ம சத்தியாம்" என்றலின், இவ் வான்மாச் சத்தனுகையின் அப்பொழுதே சர்வஞ்ஞத்துவ முண்டாகையாற் சிவன்முதலாய பொருளனைத்துந் தோன்று மாகலின், ஆண்டே சிவதரிசனமு நிகழ்தலின், சிவதரிசனமும் ஆன்ம சுத்தியிற்றான் ஆன்ம தரிசனத்திற்றான் சிவயோகத்திற்றான் அடங்குமாற்றான் ஆண்டும் அதிவியாத்தியாம். இது சிவயோகத்திற்கு மொக்கும். ஆகவே இவர் சிவபோக மென்றது, ஆன்ம தரிசன மென்றேனு மான்மசுத்தியென்றேனுஞ் சிவதரிசன மென்றேனுஞ் சிவயோக மென்றேனும் இலக்கண வகையாற் கூறப் பெறுமையின் ஒன்றே டொன்றிற்கு அதிவியாத்தி யுண்டாகலானும், சிவபோகமாவது,

[1]மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேற்
பெற்றிடு மதனை.

எனவும்,

[2]பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்

எனவும்,

[3]சிவன் ரேற்ற மொன்றுமே காண்பர்.

எனவும்,

[4]மாறாத சிவாநுபவ மருவிக்கொண்டே.

எனவும்,

[5]சிவாநு பவங்க டெரிந்திடு மாகாதே.

எனவும், பிறவும் முற்கூறியவாறே இரௌரவத்தில்,

127 निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः।

என்பதனாற் சிவனொருவனையே யறிகின்றான் பிறிதொன்றறியப்படுதலில்லையென வருதலானும், அவ்வாறே பட்டினத்துப் பிள்ளையாருந் திருக்கழுமல மும்மணிக் கோவையில்,

[6]* * * எந்தைநின்
திருவளர் நாட்டங் கருணையிற் பெறலும்
யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய
சிற்ப விகற்ப மெல்லா மொன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே.

எனக்கூறுதலானும்,

[1]சிவப்பிர, சூ, 9, பா, 3. [2]உண்மைநெறி, பா, 6. [3]சிவஞானசித், சூ, 8, பா, 29.
[4]சிவஞானசித், சூ, 11, பா, 1. [5]திருவாசகம், திருப்படை, பா, 8. [6]திருக்கழுமல, மும், பா, 10.

37 देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।
शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ॥

எனவும் வருதலானும், அவ்வாறே,

[1]பத்தியா லுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்.

எனவும்,

[2]தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்

எனவும்,

[3]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவுங் கூறுதலானும்,

129 जलं सामुद्रमासाद्य नदी ह्यम्बुवाहिनी ।
क्षारतोयत्वमायाति प्रभावाद्धि महोदधेः ॥

एवं वै देहभिन्नात्मा शिवमेवाधिगच्छति ।

எனவும் வருதலானும், அவ்வாறே,

[4] சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

எனவும்,

[5]உவமையா னவத்தொ டொன்றே.

எனவும், அசிந்திய விசுவத்தில்,

113 ज्ञातृज्ञानज्ञेयत्वविहीनं तत्परं पदम् ।

எனவும் வருதலானும், அவ்வாறே,

[6]நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றிஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

எனவுங் கூறுதலானும், வாதுளோத்தரத்தில்,

[1]திருவிசைப், ஆரூர், பா, 2. [2]திருவாசகம், திருவேசறவு, பா, 10. [3]சிவஞானசித், சூ, 11, பா, 12.
[4]சிவஞானபோ, சூ, 8, பா, 7. [5]சிவப்பிர, சூ, 10, பா, 8. [6]சிவஞானசித், சூ, 8, பா, 22.

130 सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगश्च तदेव परमं सुखम् ॥

எனவும், ஞானசித்தியில்,

131 अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ।
ज्ञानात्सायुज्यमाप्नोति शुद्धात्माशिवसङ्गमम् ॥

तज्ज्ञानं शिक्तिसामर्थ्यं शिवभोगमिहोच्यते ।

ஈண்டுச்சத்திசாமர்த்தியம் என்றது சிவசத்திவல்லமையாணிகழ்வதென்க; தத்ஞானம் என்பது ஆன்மசத்திஞானமாதலானும், அறிவிக்கவறியு மான்மசத்திக்குச் சாமர்த்திய மின்றாகலானும், அது,

मुक्तात्माश्चिवच्छम्भुर्ज्ञायते शिवतेजसा ।

எனவருதலானறியப்படுமாதலானும்,

[1]உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே.

எனவும்,

111 न च सृष्ट्यादि कुर्वन्ति स्वार्थनिष्ठा हि ते यतः ।

எனவும் வருதலானும் பிறவாற்றானுஞ் சர்வஞத்துவ சர்வகர்த்திருத்துவ ஸ்வதந்திரத்து வாதிகளின்றிச் சிவனொருவனையே அறிவதால் சிவானந்தாநுபவியாய்ச் சிவனே யிரண்டு மொன்றுமின்றி அத்துவிதமென அடைந்தவனய் முடிவிலா ஞாதுரு ஞான ஞேயமு மொருவாற்றான் இன்றெனக் கிடத்தலின் நிரதிசயாநந்த சுகத்தோடழுந்தப் பெறுதலேயாம். இதற்கு மாறுபாடாகப் பசுபாவமகன்று பதிபாவம் பெறுதலே கூடுதலெனலும் எண்குணப்பேறு நிகழ்வதே சிவபோகமெனலும் அசம்பவமாகலானும் பொருந்ாதென்க. எனவே தமிழர்கூறுங் "குன்றக்கூறன் மிகைபடக்கூறல்" முதலிய பத்துவகைக் குற்றங்களும் பிறவுமென்றதனுற் றழுவும் முதனூலொடு மாறுபடக்கூறலென்பது முதலாகிய குற்றங்களும் பலவிடங்களிலும் பலபட நிகழ்வது உந்தானே விளங்கின. இவ்வாறே இவர்செய்த பத்திற்கு மொக்கன் ஆண்டுங் கூறிக் கொள்க. அன்றி அவசித்தாந்த முதலிய தோல்வித்தானங்களாற் றோற்றதுங் கண்டுகொள்க. அவற்றுளொன்று கூறுதும்.

ஆதியிற் பசுபா வத்தை யகன்றுநற் பதிபா வத்தாற்
கோதற வுறைத லேனே கூடுத லென்று கூறும்
ஈதலாற் சிவனே டான்மா வியைந்திடு மாற தெங்ஙன்
நீதற வெங்கு மானேன் சேரவே றிடமு முண்டோ.

[1]சிவஞானசித்தி, சு, 11, பா, 10.

இப்படிச் சிவரூ பத்தை யிரண்டற வுயிரி னுள்ளே
யொப்பறு குரவன் கூற வொருமைகொண் மனத்தினாலே
தப்பற வுணர்ந்த மேலோர் தானவ னவர் மீளார்
உப்புறு பவ்வ நீரோ டோடைநீ ருற்ற தென்ன.

எனப் பின்னர் அத்துவிதம்பெறக் கூறலின் இஃதவர்க்கு அவசித்தாந்த மாயிற்று. இவ்வாறே அவர் கூறிய பலவற்றுள்ளும் ஏனை நிக்கிரகத் தானங் களான் நிக்கிரகப்பட வருவதூஉங் கண்டுகொள்க. எனவே இவர் கூறிய தசகாரியத்திற்கு முன்னூலின்மையானும், பலவகைப்பட்ட பிரமாண விரோத நிகழ்தலானும் சொற்படையானும் நிகழ்குற்றம் உடையதாகலானும் அஃது உட்கொள்ளுந் தகுதியின்றென்க. இவர் தமிழிற் செய்தது இவ்வாறாக, அதற்கு மூலமென வாகமங்களில் எடுத்துக்கோத்த அவைகள் பிரமாணமாக வேண்டுமெனின் அவையும் ஈண்டு யாங்கூறியவாறே அத்துவித சித்தாந்தத் திற்கே பிரமாண விரோதமின்றி இயல்பாற் பொருள்கொளக் கிடத்தலின் அவர் காட்டிய வனைத்தும் இதற்கே யுதாரணமாமென்க. அவைமுழுதும் விரிப்பிற் பெருகுமாகலிற் சிறிது காட்டுதும். ஞானசித்தியில்,

132 सर्वतत्त्वं चतुर्भेदमाक्रन्द नलिनोद्भव ।
पूर्वोक्तस्य सुकर्तव्यं तत्त्वत्रयं निशेषतः ॥

तत्त्वरूपं ततस्तत्र तत्त्वदर्शनभावतः ।
तत्त्वशुद्धिं पृथग्भावं तत्त्वलीनस्थितिं कुरु ॥

இதனாற்கூறும் பிருதக்பாவலீநத்துவம் குருவுபதேசத்தான் விளங்குதலின் ஈண்டுக்கூறலாகாது. அது,

[1]கண்ணுறுத லருளா னீங்கல் சுத்தியாய்க் கருதலாமே.

என்பதனானு மறிக, இதனானேயன்றே,

[2]காட்டிடுங் கரண மொன்று மில்லையேற் காணொ ணாதால்
நாட்டிய விவற்றான் ஞான நணுகவு மொண்ணா முன்னம்
ஈட்டிய தவத்தி னாலே யிறையரு ளுருவாய் வந்து
கூட்டிடு மிவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே.

எனவும், சிவஞானபோதத்தில்,

133 स्थित्वा सहेन्द्रियव्याधैस्त्वां नवेत्सीति बोधितः ।
मुक्त्वैतान् गुरुणानन्यो धन्यः प्राप्नोति तत्पदम् ॥ (சூ-8)

எனவும் வருதலானுமறிக. இதனைக் குருமுகமாகக் கேட்டறியாதார்,

[1]உண்மைநெறி, பா, 1. [2]சிவப்பிர, சூ, 6, பா, 1.

பூமுதற் சிவமீ ருகப் பொருந்துதத் துவங்க டம்மை
ஆமுறை யொன்றி லொன்றை யடக்கிவைத் திட்டெ லாமும்
நாமல வென்று ளெண்ணி நருதல்செய் திடுத லன்றோ
யாமென்பர் தத்வ சுத்தி ... ... ... .

யென்பர். இவ்வாருயின் மூலத்துக் கொவ்வாமையானும், அவ்வாறு மனத்தால் எண்ணுதல்எளிதாய்ப் பெத்தாவத்தையினடைந்து திரியும் நையாயிகர் முதலிய பிறர்க்குங் கூடுதலானும் அது சம்பிரதாயமன்றென்க. எனவே தத்துவரூப தரிசன நிலைகளும் இவையெனத் தெரியாவென்க. அவைகளும்,

[1]மண்முதற் சிவம திருய் வடிவுகாண் பதுவே ரூபம்
மண்முதற் சிவம திருய் மலஞ்சட மென்றல் காட்சி.

என்பதனல் அறியப்படுதலானும், இவ்வாறே உண்டென நிறுத்தி யத்தன்மை கண்டு தெளிவதாகலின் மூலத்திற்கு மியைந்து கிடத்தலானு யறியப்படும். ஆகவே பிற தத்துவரூப, தரிசன, சுத்தியுமறியாரென்பதாயிற்று. அவ்வாறு, கூறியதை அவர் பாட்டாகிய "சுத்தமாம் விந்து மாயை" என்பதனுலும், "மேதினி யாதி யாக" என்பதனுனுங் கண்டுகொள்க. எனவே தத்துவரூப, தரிசன, சுத்திகள் போலவே மேல்வரும் ஆன்மாவிற்கும் நிகழ்வனவுந் தெரியா வென்க. ஞானசித்தியில்,

134 अरूपावर्णचैतन्यमविकारान्तगोचरम् ।
अभिन्नाभिन्नशून्यत्वं इत्थमात्मस्वरूपकम् ॥

எனவரும். இதன்பொருள், பாசஞானங்க ணீங்கித் தனைக்காட்ட லான்ம ரூப மென்பதாம். இவ்வாறன்றி,

அறிவதாய் வன்ன மின்றி யருவமா யகில மெங்குஞ்
செறிவதா யெனதென் றேதுஞ் சிறப்புடைத் தாகி மேலாய்ப்
பிறிவதாய்ப் பின்னு பின்னம் பிணித்தமும் மலத்தி னுலும்
உறுவதா மான்ம ரூப முத்தம குணத்தின் மிக்கோய்.

என்ருல் மூலத்துக் கொவ்வாமையானும், மேலிவர் கூறு மான்மதரிசனம் போலாகலானும், இதுகொண்டிவ்வாறறிவது சத்திநிபாதமல்லாத பிறர்க்குங் கூடு தலானும் பொருந்தாதென்க. இவ்வான்மரூப தரிசனந் தெரியாதார்க்குச் சிவ ரூப, தரிசன, போகங்களுந் தெரியாமையின் அவையுந் தவறுபடுமென்க. ஞான சித்தியில்,

135 अभिन्नाभिन्नशून्यत्वमित्थमात्मस्वरूपकम् ।
तद्वद्यार्थं चेतनारूपं तत्सर्वं सुप्रदर्शनम् ॥

तद्वयोमसम्भवत्यर्थं तदवस्थात्मशोधनम् ।

[1]உண்மைநெறி, பா, 1.

[1]நீயுநின் செயலொன் றின்றி நிற்றலே தரிச னந்தான்
போயிவன் றன்மை கெட்டுப் பொருளிற்போ யங்குத் தோன்றா
தாயிடு லான்ம சுத்தி.

என்பதாம். அன்றி,

[2]அறியுந் தன்மை தன்னாலே தனையறிந்தாற்
றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே.

என்பதெனினுமாம். ஞானசித்தியில்,

136 रूपारूपं तथाशून्यं तुर्यातीतं परं शिवम् ।
तत्पदं परमं स्थाणुं तत्त्वातीतं परं शिवम् ॥

अणोरणीयान् महतो महीया नात्मागुहायां निहितोह्यनन्तः ।
उपाधिशून्यः स्वयमात्ममध्ये प्रकाशकं ज्ञप्तिपरानुभावः ॥

स्वजीवपरयोरैक्यं शिवयोगशिवोद्भवम् ।
सत्यानन्दमहाज्योतिः शिवभोगानुभूतिकम् ॥

எனவும், அதிலேயே,

सनकादिमुनीनां तु वटच्छायाप्रबोधकम् ।
ज्ञानदीक्षास्वयंवेद्यं सत्यं मौनं च मुद्रया ॥

ज्ञानात्सायुज्यमाप्नोति शुद्धात्मा शिवसङ्गमम् ।
तज्ज्ञानं शक्तिसामर्थ्यं शिवभोगमिहोच्यते ॥

शिवानन्दमयः प्रोक्तः स्वानुभूतिस्थितं भवेत् ।

எனவும் வரும் இவற்றிற்கெல்லா முற்கூறியவாறே கோடல் வெளிப்படையாம். இவ்வாறு அவர்காட்டியதே சிவாநந்தாத்துவிதமுத்தி. சித்தாந்தத்திற்குப் பிரமாண மானவாறு காண்க. ஏனைப்பரீக்கைக்குக் காட்டிய மூல கிரந்தங்கள் எல்லாம் பௌஷ்கராதியிற் கூறும் பதி பசு பாசவிலக்கண வசனமாகலினவை களை மீண்டுக் கூறுவது பயனின்றென்க. அவ்விலக்கணங்களுள் வேறுபட்டு வருவதில்லையோ வெனின், அவ்வாறுண்டாயினு முன்னர்க் கூறியவற்றான் விளங்கும். ஆயினுஞ் சில எடுத்துக்காட்டுதும்.

தாதனா னென்றே நாளுஞ் சாற்றுத லதிக மோகம்.

என்பதனால் ஞானோபதேசஞ் சிவோகம்பாவிப்பதெனக் கூறி, அதற்கு ஆகாத தெனக் கடியப்படுங் குணங்கள் இவையெனச் சிவபோகப்பாற்படுத்தல் கூடாதாம். என்னெனின் ஞானதீக்ஷாவிதிகூறுமிடத்துச் சிவோகம் பாவனையை

[1]உண்மைநெறி, பா, 2. [2]சிவப்பிர, சூ, 8, பா, 2.

ஞானோபதேச மிதுவெனச் சிவாகமங்கள் கூறுமையானும் அது மனோவிருத்தி சீவனஏதுவாகலானும்,

> [1]ஐம்புல னுலா மந்தக் கரண
> முக்குண மிருவளி யொருங்கிய வாறே
> ரேத்த நின்றனே.

எனவும்,

> [2]பாவிக்கின் மனுதி வேண்டும் பயனிலை கரண நீத்துப்
> பாவிப்ப னென்னி லென்ன பழுதுள பாவ கத்தாற்
> பாவிக்க வொண்ணு னென்று பாவிப்ப னென்னி னீயென்
> பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றி னோர்க்கே.

> [3]பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
> சொற்பர மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்று
> சிற்பர மதனு ளுள்ளச் செயலறுத் திடவு திக்கும்
> தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

எனவும்,

130 सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगं च तदेव परमं सुखम् ॥ *

113 ज्ञातृज्ञानज्ञेयत्वैश्च विहीनं तत्परं पदम् ।

எனவும் வருதலினதற்கு விரோதியென நிஷேதிக்கையானுஞ் சிவபோகம் நிகழ்தற்கான அனுட்டான மன்றாகலானும் என்க.

இவ்வாறு மனோவிருத்தி யில்லாமலிருக்கும்படி சோகம்பாவனையால் நிகழத்தானன்றோ.

137 दासोऽहमिति संमोहं सोऽहमेव परिभ्रमम् ।
अहमेव परिभ्रान्तिः स्वानुभूत्यै मुमुक्षुकः ॥

मूकस्वप्नमिवाहुर्निरतिशयात्मविज्ञानम् ।

எனவுபாய மூலவசனங்கண்டு "தாதனு னென்றே" என்பதனுற் கூறியதேதெனின், ஞானோபதேசத்தானன்றிச் சோகம்பாவனையாற் பாவிக்கின் மூன்று குற்றமுண்டு. அதனாலதனை விட்டுச் சுவானுபவவேத்தியமானபொருளை அந்த ஞானோபதேசத்தாற்றானே பாவிக்க. அவ்வாறுகூறுவது என்னெனின், "ஊமனுணர் கனைப்போல வந்தஞான" வாய்மை யிருத்தலினெனக் கூறுதலான் ஞானோபதேசத்தியல்புகூறி அதைப்பொருடெரியாது சோகம் பாவனைக்கென்று கொண்டு தமிழ்செய்தாராகவின் அது கூடாதாம். ஆகவே அவர் தசகாரியத்திற்

[1]சம்பந்தர், திருவெழுகூற்றிருக்கை, வரி, 17, 19. [2]சிவப்பிர, சூ, 10, பா, 7. [3]சிவப்பி, சூ, 10, பா, 1.
* पदमित्यपि पाठः

சோகம் பாவனையை ஞானோபதேசமாகக்கொண்டு கூறி, இழுத்து ஆட்டி, பலபட "காண்டகு சிவன்போ லுன்னைக் கருதியே" என்பதனானும்,

தன்னையே சிவனென் றெண்ணித் தானவ னாகி வேறற்
றுன்னவே சமர சந்தா னுதித்திடும்.

என்பதனானும் பிறவாற்றானுங் கூறியதூஉம் பொருந்தாதாயிற்று. சிவோகம் பாவனைசெய்ய அந்தக்கரணவிருத்தி அடங்குமெனின் அது அகண்டாகார விருத்தியன்றிக் கண்டாகார விருத்தியாகலி னடங்கினதுபோ லிருப்பதாகலிற் பொருந்தாதென்க; என்னெனின் அவ்வாறிருந்துழி யிவனாற்காணப்பட்ட பூதாகாசத் தியானமாயே யிருக்கும். அன்றேற் சித்தவிருத்தியாய்த்தான் கேவலமாய்த்தானிகழும் ஆகலின். அதனானே விளக்கொளியைக்கண்டு மணியுளதென நிச்சயித்தாற்போல அது விசம்வாதிப் பிராந்தி ஞானமாயிருத்தலிற் பயன்படாதாகலான்.

அவ்வாறாயின்,

[1]கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணா
கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

எனவும், சித்தாந்த சம்போதிகையில்,

138 शिवभावेन संयोज्य शिवोऽहमस्मीति निर्णयः।
शिवोऽहमस्मीति सिद्धान्तं वेदान्त सोऽहमस्मि तु॥

எனவும், சர்வஞானோத்தரத்தில்,

139 यःशिवः सोऽहमेवेतिह्यद्वैतं भावयेत् सदा।

எனவும், பிறவும் சோகம்பாவனை பண்ணுக என்றதென்னையெனின் அது சமாதிநிலை தடைப்பட்டகாலத்து அவ்வனுபவமுடையோர் அனுபவித்தவாறே நினைத்துப் பாவிக்கக் கூடுமாகலின் அச்சமாதி வரவில்லையென வாளாவிருக்க வேண்டா; அந்தக்கரண விருத்தியைப் பரப்புங் கிரியையினு முயலவேண்டா; இப்பாவனையாயினுஞ் செய்யிற் காலாந்தரத்திற் சிவானுபவ முண்டாமென்றும், சமாதிக்கு அதிகார மில்லாதவனுக்கு அனுபவமுடைய வாசாரியர்பாற் கேட்டு அறிவிற் றோன்றிய மாத்திரஞ் செய்யக் காலாந்தரத்திற் சமாதிக் குரியவனாவனென்றும், கூறியதாகலிற் சாட்சாத் ஞானோபதேசமாகக் கூறியதன்றென்க.

[1] சிவஞானசித், சு, 9, பா, 7.

எனவே இதுவும் பஞ்சாட்சர நிட்டை முதலானது போலச் சமாதிகூடுதற்கோர் உபாய மாயிற்று,

[1]பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுதி னீங்கியது விடும்பொழுதிற் பரக்கும்
ஆசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்து
மரனடியை யுணரும்போ தகலும்பின் [2]னணையு
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
யாசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ
ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்.

என்றபின்னர் ஒன்பதாஞ் சூத்திர முதலானவற்றுற் கூறியதனுன் அறியப்படும். அற்றன்று இது சாட்சாத் ஞானோபதேசமான சமாதிநிலைதானே என்று அந்தரங்கமாக முருகனுக்குப் பரமசிவன் உனதிடத்திலுள்ள புத்திரவாஞ்சையாலே சொல்லுகிறேமென்று கூறுதலின். அது, கந்தகாலோத்தரத்தில் ஹிருத்தாரணைத்தியாநசமாதிபடலத்தில்,

140 प्राकृतं भावमुत्सृज्य शिवोऽहमिति भावयेत् ।
एतं समाधिमुद्दिष्टं प्रशंसन्ति मनीषिणः ॥

शिवमेव स्वयं भाव्यं स्वयमेव शिवं भवेत् ।
समरसीभावयोगेन तत्समाधिरिहोच्यते ॥

स्वरूपशून्यमितिभाव्य शिवमेव सदा भवेत् ।
समाधिरेषविज्ञेयः शास्त्रविद्भिरुदाहृतः ॥

तदर्थमात्र निर्भास स्वरूपं सून्यं भावयेत् ।
समाधिमेतच्छंसन्ति योगशास्त्रविशारदाः ॥

साक्षान्मृत्युञ्जयोपायं तव स्नेहादुदाहृतम् ।

எனவருதலின் எனின், அதுபொருந்தாது; என்னெனின் இது சித்த நிரோதனார்த்தமாக யோகசாத்திரமுடையோர் கூறும் யோகசமாதியேயாய் ஞானசமாதியன்றாகலின். அது, நீ கூறியதனுள் இருதயதாரணைத்தியானசமாதிபடலம் என்னும் அதிகார முறைமையாற் சித்தநிரோதனவுபாயமெனப் படுதலானும், அதன்முன்னர்,

141 रेचकं पूरकं त्यज्य कुम्भकं च परित्यजेत् ।
शिवमेव स्वयं भाव्यं समाधिस्तेन उच्यते ॥

எனவும்,

[1]சிவஞானசித், சூ, 8, பா, 39. [2]அணுகும் என்பது அச்சுப்பாடம்.

142 समाधिमेतच्छंसन्ति योगशास्त्रविशारदाः ।

எனவும்,

143 तदर्थमात्रनिर्भासस्वरूपं शून्यं भावयेत् ॥

எனவும் எனவருதலின் ஞானசமாதியேயாம் என்னின், அதன்பின்னர் பிராணுயாம பூர்வமான மனேவிருத்தியானிகழும் பாவனை கூறுதலானும், 'யோகசாத்திர விசாரதா' என யோகசமாதி யென்பதுபடவருதலானும், பிறவாற்ருனும் நிகழ்தலின் என்க. இதனனே யன்றே சிவதருமோத்தரத்தில் யோக நிலை கூறும் பிரகரணத்தில் அறுவகைச் சாதனங்களாக ஏற்றும், அவற்றுட் சமாதியென வொன்றை வேறெண்ணியும், பிறிதொருவாற்ருன் யோகோபாயம் அறுவகையாற் கூறியும், அச்சமாதியுடையோனை யோக சமாதி யுடையோ னெனப் பெயரிட்டு வருவதுமாம். என்னெனில், சிவதருமோத்தரத்துப் பத்தாமத்தியாயத்தில்,

144 प्राणायामः प्रत्याहारः प्रतिष्ठानं च धारणा ।
ध्यानं जपः समाधिश्च षडङ्गं योगसाधनम् ॥

எனவும்,

145 ध्येये मनः सन्निवेश्य सन्निष्ठो निश्चलः स्थिरः ।
निर्वाणानलवद्योगसमाधिस्थः प्रकीर्तितः ॥

எனவும்,

उत्साहान्निश्चयाद्धैर्यादभ्यासात्तत्त्वदर्शनात् ।
मुने जनपदत्यागाद्योगः षड्भिः प्रसिध्यति ॥

எனவும் வருதலின் இவ்வாறு நிகழ்வது மனேவியாபார மாகலினன்றே ஞான சமாதியன்றென யோகசமாதியிற் கூட்டுவதூஉம் என்க. அற்றேல், ஆண்டு மனேவியாபார மின்றென அந்தச் சிவதருமோத்தரத்திற்ருனே,

146 न शृणोति न चाघ्राति न रस्यति न पश्यति ।
न च स्पर्शं विजानाति न सङ्कल्पयते मनः ॥

न चापि मन्यते किञ्चिन्न च बुध्यति काष्ठवत् ।
एवमीश्वरसंलीनः समाधिस्थः प्रकीर्तितः ॥

यदर्थमात्रनिर्भासं स्तिमितोदधिवत्स्थितम् ।
स्वरूपशून्यमध्यानं तत्समाधिरिहोच्यते ॥

எனவருதலின் இஹ என்பதனல் யோகசமாதி இதுவென்பதூஉம், அதனனே ஞானசமாதியிலக்கணம் வேறுண்டென்பதூஉம், சுவரூப சூந்யம் அத்தியானம் என்பதனற் சிவோகம்பாவனையென வருதலின் மனேவிருத்தி வசத்ததென்ப தூஉங், கூறுதலின், முன்னர் மனேவிருத்தி முதலியன இன்றென்பது விடயங்களினென்ருதலிற் பொருந்தாதாம். ஆகவே முற்கூறியவாறே சிவோகம்

பாவனை யோகசமாதியாய் ஞானசமாதி யடைதற்கு நிமித்தமென்றே யாயிற்று. அஃதற்றாக, ஞானசமாதி யிலக்கண மெவ்வாறெனின் அது அசிந்திய விசுவ சாதாக்கியத்துச் சமாதிராச படலத்தில்,

147 एवं परात्परं ज्ञेयं वर्जनातीतभोजनम् ।
ब्रह्मरूपं परं गुह्यं ग्राह्यग्राहकवर्जितम् ।
रागारागविनिर्मुक्तं द्वैताद्वैतविवर्जितम् ॥

चिन्त्याचिन्त्यविनिर्मुक्तं वाच्यवाचकवर्जितम् ।
एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।
गुरुवक्त्रेण तत्सिद्धिरानन्दस्तु न संशयः ।

எனவும்,

148 एवं ज्ञात्वा विशेषेण समाधिं कारयेद्बुधः ।

எனவும், பிறவும் வருமாற்றானும் தசகாரியப் பிரகரணத்தானுங் கண்டுகொள்க. ஞானசித்தியின் சன்மார்க்க விவேகபடலத்தில்,

149 जीवात्मपरयोरैक्यं समाधिस्थस्य लक्षणम् ।
समाधिः समवस्था च जीवात्मपरमात्मनोः ॥

सर्वाचारविनिर्मुक्तं ज्ञानाचारप्रवर्तकम् ।

எனவும் பிறவும் வருமாற்றானும் ஞானசமாதி வேறுபாடு கண்டுகொள்க. அன்றியும் விரிவினறிய வேண்டின் ஞானசித்தியில் நாநார்த்தயோக படலத்தில் யோகசமாதி யியல்பும் ஞானசமாதி இயல்பும் பிறவாற்றினும் கண்டுகொள்க. இவ்வாறு *தேவிகாலோத்தரம் சர்வஞானோத்தரம் கந்தகாலோத்தரம் முதலான வைகளெல்லாஞ் சிவோகம்பாவனையைச் சமாதியெனக்கூறி, யத்துவிதம் பிரதி பாதித்து அஷ்டகுணப் பிராத்தியும் ஷட்குண பிராத்தியுஞ் சொல்லலின்' யோக சாங்கிய நூலெனவும், பவுட்கர மதங்கம் மிருகேந்திர கிரணங்கள் தத்துவ சாராதி பேதங்களாயெண்ணி யறியவிருத்தலின் அபரஞானரூபமான ஞானசாங்கிய மெனவு மாறிப் பாடம் திருத்தி யெழுத வேண்டும். ஏனெனில் வைதிக சாங்கி யனைப்போல முத்தியில் தன் சுவயப்பிரபாரூபபிராப்தியேகூறி ஞானக்கிரியா மாத்திரசமதை கூறலின், பவுட்கராதி ஞானசாங்கியமாக வேண்டியது. யோகி சத்துவமத்தான அணிமாதியட்டகுணம்போல வீண்டும் அஷ்டகுணபிராத்தி கூறலின் தேவிகாலோத்தராதி யோகசாங்கியமாக வேண்டியது. இந்த நூல்களிற் பரமோபதேசமாகச் சொன்னமையானும், சிவோகம்பாவனை சித்தாந்த ஞானோப தேசமன்றாயிற்றென்க. அவ்வாறாயின் விசம்வாதிப் பிரமமாகலின் இது சமாதியடையு முபாயமன்றாமெனின் அது பரம்பரையான் அநுபவமுடைய் ஞானா சாரியர்பால் அவ்வுபதேசங் கேட்டுச் செய்வோருக்கும் அனுபவித்துச் செய்

---

*2-ம் பாட்டு 65-ம் பக்கத்தும், 21-ம் பாட்டு உரையுனும் வந்துள்ள ஞானசித்தி சுலோகங் கட்குப் பாடங்கொள்ளுமுறை யுணர்த்துகிறார்.

வோர்க்கு மணிப்பிரபையின் மணிபுத்திபோலக் காலாந்தரபலமாகத் தந்த பிரமமாகலான் விசயவாதிப் பிரமமன்றிச் சர்வஞ பிரமஞானமாகலிற் பயன்படுமென்க. இவ்வாசிரியர் கூறுகிலையன்றி முற்கூறிய பூதாகாசத் தியானமாகவே கிற்றலின் விசயவாதிபிரமமாய்ப் பயன்படாதாகலிற் குற்றமின்றென்க. அவ்வாறு தியானிப்புழிச் சச்சிதானந்தபாவனையுன்றுந் தோன்றப் பண்ணப்படும். அஃதெவ்வாறெனின் குருமுகமாகக் கேட்டுணர்க. இப்பாவனையை மிகவும் வலியுறுத்திக் கூறுவது சர்வஞானோத்தரம் தேவிகாலோத்தர முதலியவாம். இதனானேயன்றே ஏகான்மவாதப் பிரவிருத்தியும், ‘இவ்வாறு வலியுடைத்தாயின் அச்சமாதிநிலையன்றி இப்பாவனையே யெனக்குப் போதுமெனின்’ அரசனுக விருந்து சந்தனம், மாலை, மாதர் முதலிய போகங்களும் குழம்புபால் முதலிய அசனங்களும் அபவிக்கக் கிடையாதார் இரவலனுகத் திரிந்து, முட்டி புகுந்து, கஞ்சிகாடிகொண்டு சீவித்தல்போல, இதுவே விருப்பமாயின் அதனைக் கொள்ளினுங் கொள்க. இதனானே ஞானோபதேசப் பிரக்கிரியையான தசகாரியத்துள் வாராதென்பதூஉம் பெறுதலின் இதனைக் களந்தை ஞானப்பிரகாச பண்டாரங் கலந்து கூறுதலுங் குற்றமுடையதாயிற்று. அந்த ஞானோபதேசஞ் சனகாதிகளுக்குத் தக்ஷிணாமூர்த்திநாயனார் மோனத்தான் நிகழச் செய்ததாகலின், இது மனோவிருத்தியான வகண்டாகாரத் தியானமாம் என்பது. தியானதீபத்திலே,

150 निर्गुणब्रह्मतत्त्वस्य नह्युपास्तेरसम्भवः ।
अवाङ्मनसगम्यं तन्नोपास्यमिति चेत्तदा ॥

ब्रह्मज्ञानाय ते साक्षान्निर्गुणोपासनं शनैः ।
यथा संवादिविभ्रान्तिः फलकाले प्रमायते ॥

विद्यायते तथोपास्तिर्मुक्तिकालेऽतिपाकतः ।
निर्गुणोपासनं पक्वं समाधिः स्याच्छनैस्ततः ॥

यः समाधिर्निरोधाख्यः सोऽनायासेन लभ्यते ।

எனவும், ஞானசித்தியில்,

151 सनकादिमुनीनां तु वटच्छायाप्रबोधकम् ॥

131 ज्ञानदीक्षास्वयंवेद्यं सत्यं मौनं च मुद्रया ॥

ज्ञानात्सायुज्यमाप्नोति शुद्धात्मा शिवसङ्गमम् ।
तज्ज्ञानं शक्तिसामर्थ्यं शिवभोगमिहोच्यते ॥

எனவும் வருதலானுணர்க. இதனானே சிவபோகஞ் சமாதியானன்றி நிகழாமையின் சோகம்பாவனாதி சேட்படுமுபாயத்தான் நிகழ்ச்சி கூறுதல் பொருந்தாதாயிற்று. அதனாற் சைவசாங்கியகலாபாகமான சர்வஞானோத்தரம் பவுட்கரம் முதலானவற்றிற் பலபடப் பலவுங் கூறும்வழிக் கூறப்பட்ட சிவோகம் பாவனையாகிற வுபாசனக்கிரமத்தைச் சித்தாந்த சமாதிநிலைக் காரியமான

தசகாரியத்திற் பரீக்ஷையென்றெடுத்துக் காட்டல் *விடைவழுவாம். தஞ்சாவூர்க்கு வழி யாதென்றாற் கொட்டைப்பாக்கு மூன்றுரூறென்றாற்போல் நிகழ்தலின். இது பிறர் தசகாரியத்திற் பரீக்ஷையெனச் செய்ததற்கெல்லா மொக்கும். எனவே தொல்லாசிரியர் வாய்மொழியானும், இவர்செய்த தசகாரியஞ் சிவாநந்தாநுகூலமேயாய் அவர்க்கு விரோதமாயே நிகழ்தலானும், "ஆதியிற் பசு பாவம்" என்பது முதலிய சிலசெய்யுளைத் தாமே கற்பித்து, மூலக்கிரந்த மன்றிக் கூறும் பேதவாதங் கூடாதென்று பொருந்திற்று. அஃதவ்வாறாகச் சிலவற்றிற்கு மூலமாக அவரெடுத்த ஞானசித்தியில்,

152 पाशबद्धस्तथा जीवः पाशमुक्तः सदाशिवः ।
कर्मबद्धस्तथा जीवः कर्ममुक्तः सदाशिवः ॥

अनेनैव शरीरेण सर्वज्ञत्वं प्रकाश्यते ।

என்றற் றொடக்கத்தன எவ்வாறுமெனின், முன்னது சைதன்னிய ரூபத்தாற் சிவனுஞ் சீவனுஞ் சரியென்பாரைச் சிவனது சுத்தியுஞ் சீவனது பேதமுந் தோன்றக் கூறியதாகலானும், பின்னது யோக்கியதையான சர்வஞத்துவ சத்தி யுண்டென்றமையானும் மாறுபாடின்றென்க. அது சிவதருமோத்தரத்தில்,

99 अणिमादिगुणैश्वर्यं सर्वज्ञत्वं च योगिनः ।
तृणवद्यस्त्यजेत्सर्वमीशस्तस्य प्रसीदति ॥

என்பதனானு மறிக. இவ்வாறே ஏனையவற்றிற்கும் அறிந்துகொள்க. இனி,

தன்னையே சிவனென் றெண்ணித் தானவ னாகி வேறற்
றன்னவே சமர சந்தா னுதித்திடும்.

என்பதும் பொருந்தாது; அங்ஙனம் சிவோகம்பாவனை பண்ணியவழித் தான் மல நீங்கிச் சிவசமதையான சர்வஞத்துவ சர்வகர்த்திருத்துவ சத்தியைப் பெறுதலென்றமையாற் பாவிக்கப்பட்ட சிவனைப் பெறுமையின் நினைத்த தொன்று முடிந்ததொன்றாய் மாறுபட நிகழ்தலின்; அங்ஙனஞ் சர்வத்தையு மறிகிற சத்தியுண்டாகவே, சிவனையறிதலே சிவாநுபவம் ஆதலானும் முத்தியிற் பெறுவதும் அதுவே ஆதலானும் சிவனையும் பெற்றாரெனின், முத்தான்மாக்கள் அனைத்தையும் ஊகஞானத்தானறிவரன்றி, அநுபவ ஞானத்தான் அறியின் பெத்தான்மாக்களது சுகதுக்காநுபவமுங் கூடுமென்பராகலின் சிவாநந்தாநுபவமுகத்தாற் சிவனை யறியாமையிற் சிவனைப் பெற்றிலரேயாம்.

அற்றன்று, மோட்ச காரிகையில்,

119 शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्त्यादिभिः सार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥ (சு-111)

என்பதனுரையில்,

*வினவழுவாம் என்று எழுத்துப்பிரதியில் காணப்படுகிறது.

153 यथाऽर्कोपकृतेन चक्षुषा लोकोऽर्कं पश्यति, एवं परमेश्वरानुग्रहान्निवृत्तावरणया उपचितसामर्थ्यया च ज्ञानशक्त्यैव तदनुगृहीतैर्भक्तैस्तज्ज्ञाननिष्ठैः परमेश्वरो दृश्यते ।

என்பாராகலிற் சிவனையநுபவித்து அறிவரென்க; அவ்வாறறிவழியும் ஏகதேசப்பட்டுப் பெத்தக்காலத்திற் கடாதிகளினின்கிக் கன்மமாக அவற்றைக் கருதி யறியுமாப்போலறியாமல், எங்கும் விபுவாகையிற் கலந்துடனிந்தையாய் நின்றறிவராகலின். அதனானேயன்றே யவ்வுரையிற்றானே பின்னர்,

154 किं घटादिवत् कर्म ? तथा न । द्रष्टृद्रष्टव्ययोर्द्वयोरपि व्यापकत्वेन तथादर्शनासम्भवात् ।

என்றதூஉம். இவ்வாறுயின் அவரை எவ்வாறு அநுபவித்தீரெனின் ஊமனுணர் கனுப்போல வறிந்து அநுபவித்தேனெனின், அதுதான் சிவபோகமாம். என்னை?

[1]மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினாற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்.

எனவும்,

[2]மகட்குத் தாய்தன் மணாளனொ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

எனவும்,

[3]உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய்.

எனவும்,

[4]தேனையின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்.

எனவும்,

130 सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगश्च तदेव परमं सुखम् ॥

எனவும்,

155 आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिबर्हणम् ।
आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ॥

आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति ।
एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ॥

எனவும், வருமாகலான், இவ்வாறுயிற் பாவிக்கப்பட்ட சிவரூபமான வாநந்தந் தானே அநுபவித்தறிய வெளிப்படுதலின் நினைத்ததொன்று நிகழ்ந்ததொன்றென்னும் மாறுபாடுமின்றாம். அதுவே சிவாநந்தாநுபவமுத்தியுமாகலின் நீ சித்தாந்தியுமாயினை என்க.

[1]சிவஞானசித்.சு, 8, பா, 36. [2]திருமந், மோனசமாதி, பா, 9. [3]திருக்கோவை, பா, 9.
[4]திருவாச. திருவேசறவு, பா, 10.

இவ்வாறுடன்படவிங்னமையன்றதோ? அற்றன்று. எனது சர்வ ஞத்துவ சர்வகர்த்திருத்துவ சத்தி விசிரும்பணமே சாத்துவிக குணநுசாரியான புத்தி விசிரும்பணம்போல வின்பந்தந்தது. அதுவே யான்மாநந்தம் என்னை? சர்வஞானோத்தரத்துச் சுவாத்மசாட்சாத்கார படலத்தில்,

156 निस्तत्त्वे निष्कलीभूते विन्दत्यात्मनि यत्सुखम्। (சு-38)

என்பதன் விருத்தியிற் சுகமென்பது,

157 आत्यन्तिकं समस्तदुःखनिवृत्त्यात्मकं सुखं लभते।

எனவருதலானும், சகலாகமசாரத்தில்,

தொன்னு வறிவுதொழி றேன்றுதலாற் பெற்றவின்பே
தன்னுங் தம்பெறுத ருன்.

என, எமது குரவர் கூறுதலானும் எனின், இவ்வாறுயின் முற்படக் கூறிய குற்றமனைத்தும் உன்பாலதாகலின் அது பொருந்தாதாம். ஆகமப் பிரமாண விரோதமும் பரிகரிக்கப்படாதாம். அன்றியும் அகோரசிவாசாரியர் கூறியவுரை பிராமாணிய மன்றாம். அவர் கூறியவாறே கொள்ளின் 'நிஸ்தத்துவே' 'நிஷ்களீ பூதே' என்பதனுற்றுக்கநிவர்த்தி கூறினமையிற் பின்னருஞ் சுகமென்பதனு னுங் கூறிற் கூறியதுகூறலாமாகலானும் 'விந்ததி' யென்பது பயன்படாமையா னும் என்க. அன்றியும் மலநிவிர்த்தியே நீ கூறும் அபிவியத்தியாகலின், அது துக்க நிவிர்த்தியேயாமாதலின், அதிசயலாப மின்மையிற் புருடார்த்த மன்றாய் மோட்சபத மடைந்ததின்றாம். அவ்விடத்து ஓரதிசயமான வின்ப முண்டாயிற் றெனின் அது சிவாநந்தமெனக் கூறுமையிற் றுக்கநிவர்த்தியி லின்பமுண்டாத லில்லையென்பது அனைவர்க்கு மொப்பமுடிந்ததாகலின், அதுபொருந்தாதென்க. அன்றேல் கழிகூர் புண்ணால் வருந்தினனுக்கு அப்புண்வருத்தம் போதன் மாத்திரமன்றிச் சிறிதின்பமும் பயக்க வேண்டுமென்பதாம். அவ்வாறு மாதர் போக முதலான அதிசயலாபம் பெற்றுழி நிகழுமின்பம்போல ஒன்றும் அவ்வழிக்காணமையிற் றுக்கநிவிர்த்திமாத்திரமே பயனாயிற்று. இதனாலேயன்றே உலகத்தும் இட்டப்பிராத்தியாநந்தம் அநிட்டபரிகார வாநந்தமென விரண் டாகக்கூறி வழங்குவதூஉம் என்க. ஆயின் துக்கநிவிர்த்தியும் ஆநந்தமென்ற தென்னையெனின் அஃது உபசார வழக்காற் கூறியதேயன்றி உண்மையன்று. அன்றேல் இரண்டெனும் விவகாரம் வேண்டாவாம். அற்றன்று. ஆன்மசத்தி விசிரும்பணம் இன்பம் பயக்கும்; சாத்துவிக குணபுத்திவிசிரும்பணம்போல வெனின் அச்சாத்துவிக குணபுத்தி மாதர் புணர்ச்சி முதலாகிய வதிசயலாபம் பெற்ற வழியன்றி நிகழாமையின் ஈண்டவ்வாறு அதிசய லாபமின்மையிற் கூடா தென்க. அன்றியுஞ் சாத்துவிக புத்தியின்பரிணதி, சுகரூபமாகத் தோன்றுவது ஆன்ம சிற்சத்தி வேதனானுபவவிடயமாத்திரமாகலின் அவ்வாறான்ம சத்திக கோர் விடயம் ஈண்டின்மையானுங் கூடாதாம்; அனைத்து மநுபவியாது அறி தலின். அவ்வாறன்றிச் சிவரூபமான ஓரதிசயலாபசுகப்பிராத்தி யுண்டாயின் அது கூடும். அவ்வாறின்மையிற் றருக்கவாதி மோட்சம் போலத் துக்கநிவிர்த்தி

மோட்சமேயாயிற்று. ஆயின், முன்னர் மலநிவிர்த்தியான் ஆன்ம சத்திப் பிரகாசத்தில் ஆநந்தமின்றாயின், அதுவுமொரோவழிச் சத்திவியத்திமாத்திர மாய்க் கூறிப் பின்னர் வேறோரதிசயாநந்தப் பேறுமாகிய இவ்விரண்டும் முத்தி திசையிற் கூறவேண்டுமெனின், அது கூறுதும்; அசிந்திய விசுவத்தில் ஞான தீக்ஷையில் சோடசசமற்காரப் பிரகரணத்தில்,

102 शिथिलीभूतबन्धस्य शक्तावुत्कर्षणं च यत् ।
आत्मनो रुद्रपुत्रत्वं गर्भाधानं तदुच्यते ॥

இது ஆன்மசத்தியபிவியத்தி யாவதற்கு மலநிவிர்த்தி கூறியது,

102 स्वातन्त्र्यादिगुणव्यक्तिरिह पुंसवनं भवेत् ।

இது சட்குணபிவியத்தி கூறிற்று,

102 परमानन्दभोक्तृत्वमन्नप्राशनमुच्यते ।

இது பரமாநந்தஞ் சிவாநந்தமாகலி னதிசயலாபங் கூறிற்று. இதனை ஆன்மாநந்தாநுபவ மென்றால் இரசார்த்தங் கொள்ளாமையானுங், கொண்டுழியும் கிரியா விரோதமாகலானுங் கூடாமையிற் சிவாநந்தமாயிற்று. அது மேலே,

102 केवलं शिवसद्भावो यतित्वमिति निर्दिशेत् ॥

என்பதனானு முணரப்படும். ஈண்டுத் துக்கநிவிர்த்தியாநந்தஞ் சொல்லிற் கூறியது கூறலாம்; சிதிலீபூத என்பதனானும் சுவாதந்திரியாதி என்பதனானுங் கூறுதலின். அன்றியும் திருத்தி ஆநந்தம் சமிருத்தி அகண்டம் பரிபூரணமென வொரு பொருட்கிளவியாக நீ கோடலின் சுவாதந்திரியாதி யென்பதனுள் அத் திருத்தி பெறப்படுதலானும், ஈண்டு அப்பொருள் கோடல் கூறியது கூறலாம். அன்றியும் அன்னப்பிராசனமென ரூபகம் பண்ணுகையானுங் கூடாதாம். மேல் அநந்த சத்திக்கூட்டமும் பிரிவுங் கூறுவது ஞானமுதலிய அவசரபேதங்களை என்க; அது திருப்படையாட்சியில் வருமாற்றா னுணர்க. அன்றி யான்மாவிற்கு ஆநந்த சத்தி யின்மையான் ஆன்மசத்தியென்பது பொருந்தாது; அறுகுணங்களுள் ‡ ஒன்று ஆநந்தசத்தியெனின் அது அறுகுணமென முன்வருதலிற் கூறியது கூறலாம். இதனானே சிவசத்பாவ என்பது சிவனைப் பெறுதல் என்றாயிற்று. ஆயின் முன்னர்ப்பரமாநந்தமென்றதனாற் பெறுதலின் கூறியது கூறலாமெனின் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகம் மூன்று மனேக அவசரபேதமாக விருத்தலின், முன்னம் இன்பசத்திதரிசனம், பின்னர் பரைமுதலிய சத்திகள் தரிசனம், பின்னர் ஞேயத்தழுந்தல் கூறுதலிற் கூறியது கூறலன்று. என்னெனில்,

[1] அண்ணலுமா நந்த மருளுமா நந்தமுயிர்
எண்ணிலா வாநந்த மெவ்வுலகும் — பண்ணி
அளித்தழிப்பா ராகு மவர்களுமா நந்தங்
களித்ததுவே யெப்போதுங் காண்.

‡ ஓராநந்த சத்தி என்று எழுத்துப் பிரதி பாடம். [1] திகளறு, பா, 76.

என்றற்றொடக்கத்துத் துகளறுபோதத்தானும்,

எந்தை பிரான்குண மெண்ணிலி கோடிகள்.

என்னுந் திருமந்திரத்தானும், பிறவாற்றானும் அவசர பேதத்தான் வேறுபடக் கூறலின். இவ்வாறாயின் அவ்வனைத்து மான்மசத்தி யவசரமாகப் பொருள் கொள்ள வேண்டுமெனின், அவ்வாறொருநூல்களுங் கூறாமையானும்,

119 शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्त्यादिभिःसार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥

என்பதனாற் சிவனைச் சத்தியோடுகூடப் பார்ப்பனென்பதற்கு மாறாகலானும் பொருந்தாதென்க. அன்றியும் தன் சத்தியைத் தானேக்குதல் கிரியா விரோத மாகலானும், சட்குணந்தான் எண்குணந்தான் பெறுதன் முத்தியென்பார்க்கு அநந்தசத்தி விசேடங் கூடாமையானும் கூடாதாம். ஆகவே துக்க நிவிர்த்தியிற் றோன்று மோரின்ப முண்டெனல் கூடாமையானும், அது புருடார்த்த மன்றா கலானும், சகலாகமசாரத்து,

தொன்ற ளறிவுதொழி றோன்றுதலாற் பெற்றவின்பே
தன்னுநந் தம்பெறுத ரன்.

என்பது மோக்ஷபலமென்பது கூடாதாம். அதனாற் சிவாநந்தாநுபவமே முத்தி யென்றால், சிவப்பேறுகூடுதலி னதுவே முத்தியெனல் வேண்டுமாற்றான் ஆன்மாச் சந்தோஷமடைதலின் ஆன்மாநந்தம் நிசாநந்த மென்றற்றொடக் கத்து விவகாரமுங் கூடுமென்பதாம்.

ஆயின் இவ்வாறு கன்மசித்தாந்தகுரவர் இக்காலத்துச் செய்த அட்டப் பிரகரணம், சித்தாந்தசாராவளி என்பவற்றில் இவ்வாறு சிவாநந்தாநுபவப் பேறே முத்தியென்பது ஓரிடத்தினுங் கூறாதது என்னையெனின், அவர்கள் இது சம்பிரதாயமாகையால் வெளிப்படுத்தல் ஆகாதெனச் சிவாநந்தாநுபவத் திற்குக் காரணமான சர்வஞத்துவசத்தியபிவ்யத்தியே கூறினரென்க. அது கூறவே இதுவுங் கூறியதாயிற்று. இதனானேயன்றே,

119 शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्तयादिभिःसार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥ (சு-111)

என்றதூஉம். இதனுள் ஆதிசத்தத்தால் கொள்ளற்பாலன சிவனது விபுத்து வாதியேயாம்; பிரபஞ்சத்தையும் பார்க்கக் கர்த்திருத்துவ மின்மையிற் காரிய மின்றாகலான். அன்றியுஞ் சித்தாந்தசாராவளியில்,

158 स्वाम्नायज्ञानसिद्धाचरणमविकलं चाचरन्विप्लुतौ तन्
निष्कृत्याढ्यो मृतोऽन्ते शिवनिहितमनाश्चान्त्ययागाच्छिवत्वम् ।
लब्ध्वा व्याप्त्याप्तविश्वः परमशिवसमोऽनीशिता तेन शक्तो
नैजाह्लादैकपूर्णो निखिलपरिवृतः शङ्करप्रीतिरास्ते ॥

இதனுட் சங்கரப்பிரீதி= (சங்கரன்—சிவன், பிரீதி—ஆநந்தம்) சிவாநந்தம். அஃதாவது சிவனை யநுபவித்தறிவதனுளதாகியபிரீதி சிவாநந்தமென்க. இதனைச் சங்கரனுளுண்டான பிரீதியென்னில், 'நிகிலபரிவிருத' என்பதனன் அறுகுணங் கூறலின், கூறியது கூறலாம்.

அஃதற்றாக, சங்கரப் பிரீதியன்றி நைசாஹ்லாதைகபூர்ண: .... என்ற தென்னெனின் சங்கரனுளுண்டானபிரீதி யுடையவனுகையானே நைசாஹ்லாதம் உடையனென ஏதுகர்ப்ப விசேடணமாக விருந்தது. அதனை நிகில பரிவிருத னென்பது பரமசிவசமனதைக்கேதுவாய் நிற்குமாபோல எனக்கொள்க. ஈண்டு முத்தியினுஞ் சிவாநந்தமென்றே கூறாது அறுகுணமுங் கூறியதென்னெனின் அறுகுணமடைந்து ஒருவாற்றாற் சிவசமனன பிறகு சிவாநந்தாநுபவப் பேறுங் கூறலின் முற்கூறியவாறே அறுகுணப்பேறு அவத்தாந்தரமாயிற்று. அன்றியு மவ்வறுகுணங்கள் சிவனுக்குப் போலல்லாமை அநீசிதா என்பதனனுங் காண்க. இவ்வாறு அதன்பொருட்கேற்க அன்வயம் வருமாறு,

158 **स्वाम्नायज्ञानसिद्धाचरणं अविकलं च आचरन् विप्लुतौ तन्निष्कृत्याढ्यः शिव-निहितमनाः मृतः अन्ते अन्त्ययागात् शिवत्वं लब्ध्वा।**

அங்ஙனமடைந்த சிவத்துவம் எவ்வாறெனின் **निखिलपरिवृतः** அறுகுணமுடையன் **तेन परमशिवसमः** அதனல் பரமசிவனுக்குச் சரியானவன். அவ்வாறு சரியாயினும் **अनीशिता व्याप्त्या आप्तविश्वः शक्तः शङ्करप्रीतिः नैजाह्लादैकपूर्णः आस्ते** என்று கூட்டிப் பொருளுரைத்துக்கொள்க. இவ்வாறன்றிச் சங்கரப்பிரீதி **शङ्करवत्** (சங்கரன் போல) பிரீதியென்றால் பகுவிரீஹியாகலின் ஆன்ம சந்தோஷ விசேடண மாகாதென்க.

**सर्वेषां शङ्कर इव प्रीतिकरणं येन सः शङ्करप्रीतिः**

எனினும் அவ்வாறு கூறியது கூறலாம். அன்றியும் கர்த்திருத்துவ மின்மையிற் சிவனைப்போல ஆன்மாவிற்குப் பிரீதிகரங் கூடாமையானும் அது பொருளன் றென்க. அநந்தாதிகள் கர்த்தராகலிற் கூடுமெனின் அவர் சிவப்பிரே ரகத்தானன்றிச் செய்யமாட்டாமையின் அவர்கட்கு அகர்த்திருத்துவமேயாம். அன்றியும் இது பரமுத்திப் பிரகரணமாகலானும் கூடாதாம். இன்னும் அவ்வான்மாக்களுக்குத் துக்க நிவிர்த்தியே சுகமாக நீ கோடலி னவ்வாறு சிவனுக்கு இன்மையானுங் கூடாதாம். ஆகவே சிவாநந்தாநுபவப் பேறே முத்தியென்ப தெல்லா வாசிரியர்க்கு மொப்ப முடிந்ததென்பதாம். ஆகவே [1]"கருத்தின் களிப்பினைக் கண்காணு" என்பதனற் கூறுங் குற்றமு மின்றாயிற்று. சிவன் இரசரூபனகலின் அவனையறிந்தநுபவித்தல் கூடும். இதனனே சங்கிராந்தவாததோஷ மின்றாயிற்று; சிவகுண மான்மாவை யடைந்து ஆன்மகுண மாகாமையின் என்க. இவ்வாற்றாற் சிவன் ஆநந்தரூபனகலின் அவனுக்குக் கூறும்வழி ஆநந்த மென்பதற்கு யகண்டார்த்தங் கோடலும்

[1]பரமோப, பா, 18.

பொருந்தாதாயிற்று. அதற்கானந்தமான இனிமைக்குணங் கோடன் மறை ஞான பண்டாரத்திற்கும் கருத்தென்பது,

[1]ஆதிமுத்த னின்பமுமா னுதிமுத்த னின்பமும் கேள்.

எனவும்,

[2]முளைப்பின்றி யான்மாத்தன் சத்தியின்முற் றின்பந்
திளைத்திருக்கை முத்தியெனத் தேறு.

[3]அனுதிசுத்த சிற்சத்தி யிற்பேரா னந்தம்
அனுதிமுத்த னேதிளைப்பா னுர்ந்து.

எனவும்,

[4]மைந்த ரநுபவிப்பர் மாதாத் தனையென்னு
நிந்தனைநீ சொன்னவழு நீக்கு.

எனவும், பிறவுங் கூறுமாற்றானுங், காளத்தி மறைஞான பண்டாரஞ் சிவஞான போதத்தில் பத்தாங் கிரந்தத்துட் படலப்பாகுபடுத்தி எழுதியவாற்றானுங் கண்டுகொள்க. எனவே ஈண்டானந்தமொழியச் சமதைகூறும் பிறர்க்கு ஒன்றானும் நிலைபெறப்படாமையின் அவருதாகரித்தவெல்லாஞ் சிவானந்தா நுபவத்திற் கநுகூலமாதலின்,

[5]பருக லாம்பர மாயதொ ரானந்தம்.

என்பது அவர்க்கினியயாதாயிற்று. இவ்வாறாயின்,

[6]இல்லா தனபிறந் துள்ளன மாயு மெனுமயக்க
நல்லா கமமறி ஞர்க்கில்லை.

என்பதெவ்வாறுமெனின், அது தத்துவ விலக்கண மாத்திரங் கூறுதலின் ஈண்டு வேண்டாதாம். வேண்டினுஞ் சிவானந்தாநுபவஞ் சிவனை யறிதலாகலின் அவனை யறியுஞ்சத்தி யனுதியே யான்மாவினிடத்திருத்தலின் இல்லன பிறவாமையிற் குற்றமின்றென்க.

எனவே, அனுமானமிரண்டுங் கூடாதென்பதூஉ மாயிற்று; பாதக முடைமையின். என்னெனின் முன்னர் முத்தான்மாக்கள் சிவசமவான்க ளென்றன்றே கூறியது. அது, 123 **एकदेशेन वा। किं सर्वात्मना।** எனும் விகற்பவிருத்திப் பிரமாணத்தானும்,

[7]சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னில்.

என்னுந் திருப்பாட்டானும்,

124 **द्विधा सचित्स्वरूपो हि ज्ञत्वकर्तृत्वभिन्नतः।**

---

1, 3, 4 பரமோப, பா, 19, 9, 35. 2 மறை, சங்கற்பநிராகரணம். 5 அப்பர், திருமருகல், குறுந், பா, 1. 6 தத்துவவிளக்கம், பா, 49. 7 சிவஞானசித் சு, 11 பா, 11.

என்னும் இரௌரவாகமத்தானும், பாதகமுடைமையிற் காலாத்தியயாபதிட்ட வேதுவாகலான். அன்றியும்,

159 व्यापकं सर्वतत्त्वानामप्रमेयमनूपमम् ।

என்பதனன் அநௌபமமாயிருக்கிறவன் சிவனென்கையானும், பாதக மூண்டென்பதாம். அன்றியும் முத்தான்மாச் சிவனோடே சமனன்று; தன்ம பேத முடைமையின், யாதொன்று தன்மபேத முடைத்து அது அதனோடு சரியன்றாம்; அக்கினியும் நீரும்போல எனவருதலின் அவ்வேது பிரகரண சமனுமாம். இரண்டாவது முத்தான்மா பரமசமிருத்தி யிலக்கணமுடைய தனது சமவேத குணனுபூதிமான்; சர்வபந்தரகிதத்தன்மையான். என்புழி இதுவும்,

160 सुतीव्रा अपि नोपायाः स्वात्मविच्छेदकारकाः । (மோட்-67)

என்னும் நியாயப் பிரதிபாதித ஆகம வசனத்தாற் பாதகமுடைமையிற் காலாத்தியயாபதிட்டனும். அன்றெனின் மாயாவாதப் பிரவேசமாம். அன்றி வியாத்தியின்மையின் வியாப்பியத்துவ அசித்தனுமாம். எனவே எல்லாவாற்றானும் § ஆநந்தமன்றி யான்ம சமதை முத்தி என்பது கூடாதாயிற்று. அன்றியும் அதனன் முற்கூறியவாறே பேதவாதமே நிகழ்தலிற் சாயுச்சிய பதார்த்தமாக

129 जलं सामुद्रमासाद्य नदी ह्यम्बुवाहिनी ।
क्षारतोयत्वमायाति प्रभावाद्धि महोदधेः ॥

என்றற் றொடக்கத்தாற் கூறுவது கூடாதாம். இதனானேயன்றே உமாபதி சிவாசாரியர்,

[1]உவமையா னவத்தோ டொன்றே.

[2]தாடலை போற் கூடியவை.

என்றவாறே சங்கற்ப நிராகரணத்துள் சிவசமவாத நிராகரணத்துள்,

[3]* * * சாயுச் சியமெனிற்
பந்த முற்ற கந்தல கழித்த
வறிவனோ டறிவு பிரியாப் பெற்றி
வேண்டும்.

என்றதூஉமென்க. இவ்வாசிரியர் வசனங் கருதிப்போலும் கெடுமே யொன்று மெனலும் கேள் என்றதூஉம். அன்றி இதனானே உமாபதிசிவாசாரியர் சங்கற்ப நிராகரணத்துள் சிவசமவாத நிராகரணம் பண்ணிய தெல்லா மிங்ஙனங் கூறுஞ் சமவாதிக்கு மேற்றலி னவர்கூறிய செய்யுளை யீண்டுதாகரித்து மறுப் பினுமாம். இவ்வாறு கொள்ளாக்கால்,

§ சிவானந்தம் பெறுதலே முத்தியன்றி என்பது கருத்து. [1]சிவப்பிர, சூ, 1, பா, 3. [2]திருவருட், இன்புறு, பா, 4. [3]உமா, சங்கற்பநிரா, சிவசம, வரி, 75–77.

161 शिष्यात्मानं च तत्रैव लीयमानं विभावयेत् ।

என நிர்வாணதீக்கையில் சிவனிடத்தில் யோசனையுங் கூடாதாம். இவ்வாற்ருன் முற்கூறியவாறே யான்மாநந்த வாதியினுஞ் சிவசமவாதி கேடுபட்டானென்பது பொருத்தமுடைத்தாயிற்று. ஆகவே.

ஆநந்த மன்றி யான்சமதை முத்தியெனிற்
ருநந்த வேதா கமஞ்சாற்ரு — னூனம்
படுமே நசகா ரியத்திற் பலவுங்
கெடுமேயொன் ருமெனலுங் கேள்.

என்றது பிரமாணவத்தாய் வலியுடைத்தாயிற்று. பிறவுமன்ன.

இருபதாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

௨
திருச்சிற்றம்பலம்

# இருபத்தோராம் பாட்டு

சிவசமமே முத்தியெனிற் சித்தாந்த மன்றுஞ்
சிவசமய பேதமெனச் செப்பு – மவைகளிலே
யொன்றென்பர் வேறெனினு மோரேக தேசமத
மன்றெனின்மற் ரேற்கு மது.

எ-து பாட்டு. எ-னின், முற்கூறியவாறே பிரமாணவிரோதங் கண்டும் உடன்படாரைச் சமயத்திற்குப் புறம்பாகத் தள்ளுகின்றது.

**சிவசமமே முத்தி எனின் சித்தாந்தம் அன்று ஆம்**

என்பது, முன்னர்க்கூறிய பிரமாண விரோதங் கண்டும் வாசனையான் உடன் படாது பின்னும் நான் சிவசமவாதத்தை யொழியேன் எனக்கருதிக் கூறின், அது சைவசித்தாந்தமுத்தி யன்றாம். என்னெனின்,

**சிவசமயபேதம் எனச் செப்பும் அவைகளிலே ஒன்று என்பர்**

என்பது, சிவசமய பேதமாகக் கூறப்படும் பலவற்றுள்ளும் இதுவும் ஒன்றென்றே கூறுவராகலான் நீயும் அவர்களுள் ஒருவனே யாவை.

**வேறு எனினும் ஓர் ஏகதேசமதம்**

என்பது, முன்னர்த் தொன்றுதொட்டுச் சிவசமவாதியெனத் தள்ளப்படும் அவர் கள் போல யான் கூறுமையின், வேறெனினும் சிவசமவாத மெவ்வாற்றானும் ஒத்தலின் ஒருசாதியாகலான் நீயும் அவர்களுள் ஓரேகதேசமதவாதியே யாவை.

**அன்று எனின் மற்றோர்க்கும் அது**

என்பது, அவ்வாறாகவுஞ் சித்தாந்தி யென்று பெயரிட்டுக் கொள்வையேல் மற்றச் சிவசமவாதிகளும் இவ்வாறே சித்தாந்தியாகல் வேண்டும். அது கூடாமை யின் நீ சித்தாந்திநிலையுடையாயல்லை என்றவாறு.

சிவசமய பேதமாகக் கூறுவது அசிந்தியவிசுவத்தில்.

1 शैवभेदं प्रवक्ष्यामि ऐक्यपाषाणवादिनौ ।
भेदवादी समवादी सङ्क्रान्ती चाविकारवान् ॥

परिणामी च शैवश्च सिद्धान्ती पर ईरितः ।

எனவருதலானறிக. இதனுட் சமவாதி யென்றது சிவசமவாதியை யென்க.

அஃதற்றாக, ஈண்டுக்கூறுவது பரமோக்ஷநிராசகாரிகையில்,

2 समता च समुत्पत्तिसङ्क्रान्त्यावेशपक्षतः । (சு-7)

என உத்தேசித்து நிராகரித்தலானும், சங்கற்ப நிராகரணத்துள் உமாபதி சிவாசாரியர் குணசங்கிராந்தி வாதத்தானுஞ் சிவசமவாதியெனப் பொதுப்பட வைத்துச் சமுத்பத்திசமதையும் சிவப்பிரகாசத்துள்,

[1]புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய.

என்பதனால் ஆவேசசமதையும் நிராகரித்தலானும் அவைகளுளொன்றாகாமையின் இது சிவசமவாத மன்றாமெனின், அவ்வாறு பொருட்பகுதியின் நிகழாதாயினும் அபிவியத்தி சமதையாகிற ஓரேகதேசமெனச் சைவசாங்கிய பதமுத்தியென வேறோர் பாகுபாட்டாற் சிவசமவாதமென்றே கொள்ளப்படும். அவ்வாறு கோடற்குச் சமயபேதவிதியுள் அபிவியத்திசமதை யென வொன்றின்மையிற் கூடாதெனின், சமயபேத விதியுட் சமவாதி என ஏகவசனமாகப் பிரயோகித்திருக்கவும் சமுத்பத்திசமதையும் சமாவேச சமதையுங் கொண்டாற்போலச் சாதிபற்றிக் கொள்ளப்படு மென்க. அன்றியுங் குணசங்கிராந்திசமதையைச் சங்கிராந்தியென வேறோதினாற்போல,

3 शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ।
कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वमतः परम् ॥

என்பதனாற் கன்மாந்தமெனக் கூறியதெனினுமாம். இனிக் கன்மாந்த குரவர்க் கநுட்டானமும் முத்தியும் வருமாறு:-

4 चर्या क्रिया योगयुक्तं *ज्ञानं चैव भवेत्तदा ।
शक्तिः शिवश्च सादाख्यं मन्त्रप्राधानिकात्मकम् ॥

समाप्तकलुषत्वं च मुक्तिस्तत्रैव चोच्यते ।

இதன்பொருள் சரியைமுதலாக அபரஞானசமாப்தி பரியந்தம் அநுட்டிக்க யோக்கியரெனவும், அதன் சமாப்தி பலன் சுத்தமாயா புவனத்திற் சத்திதத்துவத்திற்றான் நாததத்துவத்திற்றான் சாதாக்கியதத்துவத்திற்றான் மந்திரேசுரபதத்திற்றான் சமாப்த கலுஷனாய் (துகள் தீர்ந்தோனாய்) போயடைதல் அந்தச் சித்தாந்த விஷயத்திலே முத்தி எனவுமாம். அற்றேல்,

3 शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ।
कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं परं स्मृतम् ॥

5 शक्तिः शिवश्च सादाख्यं मन्त्रप्राधानिकात्मकम् ।
समाप्तकलुषत्वं च मुक्तिस्तत्रैव चोच्यते ॥

---

[1] சிவப்பிர, சூ, 9, பா 1. *विज्ञानाभ्याससंयुतम् इति पाठो दृश्यते ।

कर्मावरणमेवं स्यात्तस्योर्ध्वं तु निरावृतम्।
बिन्दुर्नादश्च शक्तिश्च परश्चैव परापरम्॥

ब्रह्मप्राप्त्यवधिश्चैव चात्मानन्दसुखं भवेत्।
निरावरणमेवं तु शैवभेदमिति स्मृतम्॥

என இவ்வாறு பிரித்துத் தொல்லோர்வைத்து நிராகரித்ததுபோல இவ்வபி வியத்தி சமதையு மொன்றெனவைத்து நிராகரியாமையிற் கூடாதெனின் சிவஞானசித்தியில்,

[1]சிவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்.

என்பதனானும்,

[2]சிவன்சீவ னென்றிரண்டும்.

என்னும் பாட்டானும் அஃதும்ஒன்றென வைத்து நிராகரிக்கப்பட்டதாம். அன்றியும் பவுட்கரம் யோகசாங்கியார்த்தம் எனவும், சர்வஞானோத்தர முதலாயின ஞானசாங்கிய எனவும் வருதலானும் அவனையும் சைவபரிபாஷையில்வைத்து நிராகரித்தலானும் அறிக. என்னை? சைவபரிபாஷை முத்திபரிச்சேதத்தில்,

6 शिवसाम्यमपि न मुक्तिः। तद्धि चतुर्धा सम्भवति, उत्पत्त्या सङ्क्रान्त्या समावेशेन अभिव्यक्त्या चेति।

எனவும், அதிலேயே,

7 नाप्यभिव्यक्तिसाम्यम्। ज्ञानक्रियाभिव्यक्तिमात्रस्य सुखदुःखाभावेतरत्वेनापुरुषार्थत्वात्। न च तत्कालीनो दुःखाभावः पुरुषार्थः। तस्य त्वया मोक्षत्वेनानङ्गीकारात्। ज्ञानक्रियाभिव्यक्तेरेव साम्यपदाभिधेयायास्तथात्वेनाभ्युपगमात्। विविधतत्त्वभुवनभोगपरित्यागेन तुल्यायव्ययतया तस्यापि पुरुषार्थत्वायोगाच्च। स्वतन्त्रस्य शिवसमस्य पुरुषान्तरस्य सद्भावे शिवस्य सर्वैश्वरत्वव्याघातापत्तेश्च। मुक्तस्य पारतन्त्र्यनिवृत्तौ (स्वातन्त्र्ये च) जगत्करणशक्तिमत्त्वेन स्वयमपि जगन्निर्माणप्रसङ्गाच्च। मुक्तस्य शिवाद्भेदकस्य धर्मस्याभावेन भेदायोगाच्च। किंच किमेकदेशेन शिवसाम्यं मुक्तिः। अथवा सर्वात्मना। नाद्यः। बद्धस्यापि केनचिद्रूपेण शिवसमानतया बद्धमुक्ताविशेषप्रसङ्गः। न द्वितीयः। मुक्तस्य शिवसाम्यं सावयवस्य वा निरवयवस्य वा। न तावन्नीरूपस्य। निरवयवस्य सर्वज्ञत्वादिगुणयुक्तस्य स्वतन्त्रस्य मुक्तस्य शिवस्य च भेदकाभावेन मुक्तः ईश्वर एवेति क्व साम्यम्। नापि सावयवस्य। सावयवत्वं बैन्दवादिशरीरयोगित्वमेव वाच्यम्। अन्यादृशस्य तस्यासंभवात्। तथाच संसारावस्थातोऽविशेषापत्तेः। सर्वात्मना सारूप्येऽभेदस्यैव प्रसक्तेश्च। तस्मान्न साम्यं मुक्तिः।

எனவும், பவுட்கர வியாக்கியானத்தில், (பகுபட பக்கம் 238)

[1]சிவஞானசித், சு, 1, பா, 64. [2]சிவஞானசித், சு, 11, பா, 11.

123 केनचित् साधनेनैव मुक्तः शिवसमो भवेत् ।
इत्येवं केचिदिच्छन्ति वादिनो मुनिपुङ्गवाः ॥

वार्तामात्रमिदं प्रोक्तं सर्वथा न तदर्थवत् ।
एकदेशेन वा जीवः किं वा सर्वात्मना समः ॥

एकदेशेन चेत्सर्वे शिवाः संसारवर्तिनः ।
एकदेशेन सर्वेषामस्ति साम्यं शिवेन हि ॥

सर्वात्मना चेत्साम्यं तत्सर्वथा शिव एव सः ।
भेदकारणशून्यत्वाद्भेदाभावाच्च वस्तुनः ॥

तस्माज्जीवः स्वतः साक्षाच्छिवः सत्यादिलक्षणः ।

எனவரும் சூதசங்கிதாவசனத்தானும் நிராகரணம் வந்தவாறுகாண்க. தமிழினும்

[1]சிவன் சீவ னென்றிரண்டும்.

என்பதனானும்,

[2]சீவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்.

என்பதனானும் மறுத்தவாறு காண்க. இவ்வாறுயிற் சித்தாந்தத் திறனைக் குறித்து ஏனைமதங்க ளெல்லாம் பூர்வபக்கமாகலி னவற்றிற்கு முத்திநிலை விதித்தாற்போல விதற்குமோர் முத்திவேறுபாடு வேண்டுமெனின் அது கூறுதும். சிவஞானசித்தியாரில்,

[3]இம்மையே யீரெட்டாண் டெய்தியெழி லாரு
மேந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றுமுத்தி யைந்து கந்த
மறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தி யென்று
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

என்பதனுள் அட்டகுண, மெய்வடிவாஞ் சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தி என்றலின் முத்திநிலை வந்தவாறு கண்டுகொள்க. இதனானேயன்றே, சிவநெறிப்பிரகாசத்துள்ளும்,

[4]மந்தமாஞ் சத்திநிபா தர்க்கருளாற் குரவன்
மாய்த்தருளி யிருகலையின் மருவுவினை யனைத்துஞ்
சுந்தரமாம் பிரகிருதி தனக்கு மேலாய்ச்
சொல்லுபுவ னங்கடமிற் றொக்கிருக்க வளிப்பன்.

---

[1]சிவஞானசித், சூ, 11, பா, 11. [2]சிவஞானசித், சூ, 1, பா, 64. [3]சிவஞானசித், சூ, 8, பா, 12. [4]சிவநெறி, பா, 160.

சிந்தையார் மந்ததர †சத்திநிபா தர்க்குத்
　　திர்த்தருளி முக்கலையின் வினையனைத்து மாயப்
பந்தமா னவையறவே சுத்த மான
　　பந்தானத் தேசுத்த வித்தைதனிற் பதிப்பன்.

[1]*பெற்றிடினே தீவிரமாஞ் சத்தி பாதம்
　　பேசியிடிற் சாந்திகலைப் பாச நீக்கி
உற்றிடினே சிவசமமா முத்தி யென்றே
　　யுரைசெய்யு மபரமுத்தித் தானமுற வளிப்பன்
பற்றிடுமிப் பதமுத்தி மூவகையோர் தமக்கும்
　　பரமுத்தி பிரளயத்தே பரமனளித் திடுவன்
சற்றுமோர் பற்றிலதீ விரதரமாஞ் சத்தி
　　தான்பதியிற் சத்தியோ நிருவாணந் தானே.

என்றதுஉமென்க. இவ்வாறு அவாந்தர சைவர் பத்ததியினும், (கிரியாதீபிகை படலம் 4.)

9 आत्मनीश्वरशक्तेः स्वल्पाभिव्यक्तौ मन्दशक्तिनिपातः। तदानीमात्मनः संसारनिवृत्तिमीश्वरो यया शक्त्या करोति सा शक्तिर्निवृत्तिर्नाम। सा निवृत्तीश्वरस्थानम्। तत्पतिश्च निवृत्तीशः। पूर्वस्मादधिकाभिव्यक्तौ मन्दतरशक्तिनिपातः। तरप्प्रत्ययस्य न्यूनाधिकवाचकत्वात्। अत्र तु अधिक वाचक एव। तदानीं निवृत्तस्य पुनः प्रवृत्तिरहितत्वेन प्रतिष्ठां यया शक्त्या करोति सा शक्तिः प्रतिष्ठा नाम। सा च प्रतिष्ठेश्वरस्थानम्। तत्पतिश्च प्रतिष्ठेशः। ततः पूर्वस्मादधिकाभिव्यक्तौ तीव्रशक्तिनिपातः। तदानीं आत्मनो यया शक्त्या विषयगोचरपशुज्ञानं मोचयित्वा शिवज्ञानं प्रकाशयति सा शक्तिर्विद्या। सैव विद्येश्वरस्थानम्। तत्पतिर्विद्येश्वरः। ततः शिवज्ञानपूर्णा-भिव्यक्तौ तीव्रतरशक्तिनिपातः। तदानीं यया शक्त्या तापत्रयादि सर्वबन्धं मोचयित्वा परां शान्तिं ददाति। सा शक्तिः शान्तिः। सैव च शान्तीश्वरस्थानम्। तत्पतिः शान्तीशः। तदुक्तं मृगेन्द्रे अध्वप्रकरणे:—

10 निवर्तयति भूतानि यया सास्य निवर्तिका।
निवृत्तिरिति तत्स्थानं तत्रेशोऽपि निवृत्तिमान्॥ 166

निवृत्तस्य गतिर्भूयो यया प्रच्यावलक्षणा।
निक्षिप्यते प्रतिष्ठा सा स्थानं तद्वांश्च तत्पतिः॥ 167

त्यक्त्वात्मगम्यविषयं यया ज्ञानं ददात्यणोः।
सा विद्यास्थानमप्यस्य विद्येशश्च तदीश्वरः॥ 168

सर्वदुःखप्रशमनं ययास्य कुरुते हरः।
सा शान्तिस्तत्पदं चेति तत्कुर्वन् सोऽपि शान्तिमान्॥ 169

†சத்திபதிபோதிற் சிதைந்திட என்று அச்சுப்பாடம். [1]சிவநெறி, பா, 161.
*பெற்றிடிற்றீவிரமாகும், பேசியிடும், உற்றிடவே பற்றில்லா என்பன அச்சுப்பாடங்கள்.

यथा भेषजसामर्थ्यादशक्तानां बलं वरम् ।
तथा तच्छक्तियोगेन सामर्थ्यममितं भवेत् ॥

என்பதனாற் சத்திநிபாதானுசாரத்தானே தானபேதமு மதிட்டானபேதத்தாற் சத்திநிவ பேதமுங் கூறும்வழிச் சிவசமமுத்தித்தானமும் வந்தவாறு கண்டுகொள்க. இம்முத்தியைப் பிரதிபாதிக்கு மவர்கள் முற்கூறியவாறே கன்மசித்தாந்தகுரவரா மன்றே அதனன் இவ்வபிவியத்தி சமவாதியெனினுங் கன்மசித்தாந்தகுரவ ரெனினு மொக்கும் என்பதாம். அவரவ்வாறு கூறினுஞ் சித்தாந்திக்கெல்லாம் பூர்வபக்கமாகக்கூடலின் அவர் மாற்றமும் ஈண்டுப் பொருந்துவ வெல்லாங் கொள்ளப்படுமாகலின் அவர் நூல் சித்தாந்திக்கு மாறுபாடின்று. அன்றி இவ்வாறுவரும் மாறுபாடுடைய வசனங்களை நோக்கிப் பிறிதொன்றாக அவ்வாறு கூறு நூல்களைப் போக்கிவிடுதலு மொன்று. என்னை? ஞானசித்தியில்,

11 इत्यष्टाविंशतिर्भेदाः शैवसिद्धान्तकल्पनाः ।
पूर्वाष्टविंशतिःप्रोक्ताः चतुष्पाज्ज्ञेयकल्पनाः ॥

अन्यथा चागमः प्रोक्तः शिवधर्मोत्तरं द्विधा ।
नानाचारप्रवृत्त्यर्थां नानासिद्धान्तभेदकाः ॥

पौष्करा योगसाङ्ख्यार्थास्तत्त्वसारादिभेदकाः ।
अनेकार्थागमाः साङ्ख्याः चतुष्पादाःशैवनिर्णयाः ॥

देविकालोत्तरस्कन्दकालोत्तरद्विशतोत्तराः ।
सर्वज्ञानोत्तराः साङ्ख्याः इत्यादिज्ञानसाङ्ख्यकाः ॥

नानाशैवप्रवृत्त्यर्थं नानाशैवागमोदिताः ।
अनन्तागमयोः सङ्ख्या आदिकालेशकल्पना ॥

இத்தியாதி வசனமுண்டாகலின் என்பது. ஆகவே எல்லாவற்றானும் அபிவியத்திசமவாதி சித்தாந்தி யன்றென்றாயிற்று. அவ்வாறாகவுஞ் சித்தாந்தியே யெனின் ஏனைச் சங்கிராந்தி முதலோருஞ் சித்தாந்திகளாதல் வேண்டும். அஃது ஆகாமையிற் கூடாதென்க. இதனானேயன்றே அன்றெனின் மற்றோர்க்கும் அது என்றதூஉம். ஆன்மாநந்த வாதியு மொருவாற்றான் இவர்களைப்போலச் சமதை கூறலின் அவனுக்கும் இந்நிராகரண மொக்கும். பிறவுமன்ன.

இருபத்தோராம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்

# இருபத்திரண்டாம் பாட்டு

உள்ள மலநீங்கி யோங்கு சிவாநந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே - கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு.

எ-து பாட்டு. எ-னின், முன்னர்ப் பிறன்கோள் சிதைத்தது * நின்ற வாற்றாற் சித்திக்குந் தனதுகோள் இதுவென வுணர்த்துகின்றது, முன்னர், [1]அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம் என்றலிற் சித்தாந்த முத்தி இஃதெனக்கூறாது பிறன்கோளை மாத்திரஞ் சிதைத்தவாறே யொழிந்துபோகின், அப்பிறன்கோள் சிதைத்துஞ் சிதையாததனோ டொத்துக் குன்றக்கூறலுமாக நிகழ்தலின்.

உள்ள மலம் நீங்கி ஓங்கு சிவாநந்த
வெள்ளம் திளைத்து அதுவாய் மேவுதலே

என்பது, ஆன்மாவானவன் தனது சத்திநிரோதமான ஆணவமலமுதலானவற்றை நீங்கி, ஒருகாலமுங் குறைவுபடாத சிவாநந்தமாகிய பெருங்கடலிற் றிளைத்து, அச்சிவனும் ஆன்மாவும் ஒன்றுமன்றி, யிரண்டுமன்றி நின்ற அத்துவித நிலையைப்பெறுதலே,

கள் அவிழ் பூ கொத்து ஆர் விரிசடையார் கூறு சிவாகமத்தில்
சித்தாந்தமுத்தி எனத் தேறு.

என்பது, மதுவொழுகும் பூங்கோதை யணியும் விரிசடைக் கடவுளான பரமசிவன் கூறுங் காமிகாதி யாகமத்திற் சித்தாந்தமுத்தி யெனத் தெளிவாயாக வென்றவாறு.

ஈண்டுத் திளைத்தல் என்பது மிகவு மழுந்தியறிதற் சிறப்புக்குறித்து நின்றது. அது,

[2]நின்னருட் பெருங்கடலிற் றிளைத்துந் தேக்கியும்.

எனவும்,

[3]செங்கையோ டுலகி லரசுவீற் றிருந்து திளைப்பதுஞ் சிவனருட் கடலே.

*நின்றவாற்றாற்முடிந்தவாற்றால். [1]முத்திநிச், பா, 2, [2]திருவாசகம், செத்திலா, பா, 10, [3]திருவிசை, கங்கைகொண்ட, பா, 11.

எனவும் வருமாற்றான் உணரப்படும். இது முன்னரும் கூறினும். ஈண்டுச் சிவாகமத்திற் சித்தாந்தமுத்தியென்றது, முன்னர்ச் [1]சந்தானநற்குரவர் என்னும் பாட்டில், **அந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தி லந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம்** என்றலின் உலகாயதமுத்தி முதலாகச் சிவாத்துவிதமுத்தி யீறாகப் பலவகை முத்திகளையும் நீக்குதற்கு என்க. அது,

[2]நிலவுலோ காயதாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துட்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகிவேதத்
தலைதரு பொருளா யின்பாய்த் தாவில்சற் காரியத்தாய்
மலைவறு முணர்வாற் பெத்த முத்திகண் மதித்தா மன்றே.

என்பதனானு மறியப்படும். அம்முத்திக ளெத்துணைப்பட நிற்குமோ வெனின் அது கூறுதும். அசிதத்தில்,

न्यायं वैशेषिकं चैव बौद्धं वै चार्हतं तथा।
लोकायतं च साङ्ख्यं च मीमांसा वैष्णवं तथा॥

न्यायाद्यष्टमयो भेदो वहिस्थसमयार्थकः।
शैवं शिवाद्वयं चैव शिवसंमेलनं त्रिधा॥

पश्चात्पाशुपतं चैव कालामुखं महाव्रतः।
वामभैरवयोर्भेदाः शैवा ह्यभ्यन्तराष्टकाः॥

எனவும், இவ்வாறே திருமந்திரமாலையில்,

[3]எட்டான வுட்சமயம் மிவைமா மாயை
எட்டாம் புறச்சமய யத்துடன் யாவையுந்
தொட்டான மாயை யிருமாயை தோயாது
விட்டார் சிவமாவர் வேதாந்தப் போதரே

[4]குணக்குக் குடக்குத்தெற் குத்தரமேல் கீழ்பா
லிணக்கத் தகுஞ்சைவ மாகியா றென்பர்
தணக்கத் தகுஞ்சிவாத் துவிதஞ்சம் மேளங்
கணக்கொடுமுன் றுறுங் காணவெட் டாமே.

எனவும் வந்தது.

இவற்றுட் சைவமென்பதன்பாற் படுவன, சிவசாங்கியமானவபிவியத்தி சமதாமதமென்க. எனவே ஆன்மாநந்தமென்பது அவற்றுள் ஒருமதமும் அன்றாகலின் மிகவுங் கடியப்படுவதூஉமாயிற்று. இவ்வாறன்றிப் பிறவாற்றான் யோகசத்தில்.

2 स्थूलं च सूक्ष्मकं चैव द्विविधं समयं भवेत्।
स्थूलं बाह्यमिति प्रोक्तं सूक्ष्ममाभ्यन्तरं स्मृतम्॥

[1]முத்திநிச், பா, 2. [2]சிவப்பிர, சூ, 12, பா, 2. [3,4]திருமந்திரம், அச்சிட்ட பிரதிகளில் இல்லாதன.

लोकायतोऽथ बौद्धश्चार्हतो मीमांस एव च ।
मायावादः पाञ्चरात्रं षडेते समया बहिः ॥

शैवं पाशुपतं वामं भैरवं तु महाव्रतम् ।
कालामुखमिति ख्यातमन्तःसमयषट्ककम् ॥

शैवं पूर्वमुखोत्पन्नं दक्षे कालामुखं तथा ।
पश्चिमे पाशुपतकमुत्तरे तु महाव्रतम् ॥

ऊर्ध्ववक्त्रे भैरवं च पाताळे वाममुच्यते ।

எனவும், இவ்வாறன்றிப் பிறவாற்றான் அசிந்திய விசுவத்தில்,

3 बौद्धं तथार्हतं चैव पाञ्चरात्रं च शैवकम् ॥
समयःचतुर्विधः प्रोक्तस्तत्तद्भेदस्तु वक्ष्यते ।

चार्वाकः परपक्षः स्यात् पुनर्बौद्धश्चतुर्विधः ।
सौत्रान्तिकस्तथा योगाचारमाध्यमिकाख्यकौ ॥

वैभाषिकस्थितिर्द्वेधा क्षपणश्च निखण्डकः ।
आशीवकं च त्रिविधं भट्टाचार्यः प्रभाकरः ॥

नैय्यायिकश्च मीमांसो मायावादस्तथा परः ।
मायावादी भास्करीयो निरीशः सेश्वराख्यकः ॥

वैष्णवं त्रिविधं प्रोक्तं तस्य भेदमिहोच्यते ।
पाञ्चरात्रं भागवतं तथा वैखानसं मतम् ॥

अक्षपादः कणादश्च कपिलो जैमिनिस्तथा ।
व्यासः पतञ्जलिश्चैते वैदिकाः शास्त्रकारकाः ॥

बृहस्पत्यार्हता बुद्धाः वेदमार्गविरोधिनः ।
वेदाप्रामाण्यसिद्धान्ता बौद्धा लोकायतार्हताः ॥

युक्त्या निरसनीयास्ते वेदाप्रामाण्यवादिनः ।

எனவும்,

वैदिकाद्यं तु तद्भेदं प्रोक्तं वामाख्यमुच्यते ।
वामं तु त्रिविधं प्रोक्तमनादि पूर्वपश्चिमम् ॥

चतुर्विधं दक्षिणं स्यान्महाव्रतमतः परम् ।
कालामुखं च कापालं तद्वत्पाशुपतं भवेत् ॥

शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ।
कर्मान्तमेवं ज्ञानान्तं ज्ञानमूर्ध्वं परं स्मृतम् ॥

எனவும், வேறிடத்தில்,

5 शैवभेदं प्रवक्ष्यामि ऐक्यपाषाणवादिनौ ।
भेदवादी समवादी सङ्क्रान्ती चाविकारवान् ॥

परिणामी च शैवश्च सिद्धान्ती पर ईरितः ।

எனவும் வருமாற்றால் காண்க.

6 चार्वाकाः कौलंका ज्योतिः शास्त्रज्ञाश्चैव भाषिताः ।
वामदक्षिणमार्गस्थाः पिशाचादिपदे स्थिताः ॥

तन्मात्रसिद्धाः स्मार्ताश्च चक्षुरादीन्द्रिये पराः ।
वैशेषिकास्त्वहङ्कारे मनःस्था न्यायवादिनः॥

बुद्धितत्त्वे स्थिता बौद्धा गुणेष्वप्यार्हताः स्थिताः ।
प्राकृताः पाञ्चरात्रास्ते मन्यन्ते प्रकृतिं हरिम् ॥

वेदान्तज्ञाश्च साङ्ख्याश्च योगिनः पुरुषे स्थिताः ।
पाशुपतास्तु मायायां विद्यायां तु महाव्रताः ॥

शक्तितत्त्वे तदद्वैता गतिमिच्छन्ति बिन्दुजे ।
मुक्तिस्थानानि सर्वेषामुक्तानीह प्रसङ्गतः ॥

றிறுடக்கத்தால் அப்பூர்வபட்ச முத்திபேதங்காண்க. ஈண்டு, **சிவாநந்த வெள்ளம்** என்றது சிவரசசமுத்திரம் என்றபடி. **வெள்ளம்** என்பது ஒருகாலுங் குறைவு நிறைவின்றி யொருதன்மைத்தாய் நிகழும் பெருந்தன்மை குறித்து நின்றது. எனவே சிவாநந்தநுபவமாவதே சைவசித்தாந்த முத்தி யென்பதாயிற்று; **திளைத்து** என்பது அனுபவப்பொருள் விளைத்தலின் சிவாநந்த மெனினும் சிவாநந்தாநுபவ மெனினும் பிரமரசாநுபவமெனினும் பிரமரசமெனினும் நிரதிசயாநந்த மெனினும் சிவதரிசன மெனினும் சிவஞானமெனினும் திருவருள் பெறுதலெனினும் சிவயோகமெனினும் சிவபோகமெனினும் பரமாநந்தபோக மெனினும் பரமபதமெனினும் சிவப்பேறெனினும் சிவசாயுச்சிய மெனினும் ஆன்மாநந்தமெனினும் நிசாநந்தமெனினும் ஆன்ம சுத்தி யெனினும் ஆன்மலாப மெனினும் ஆன்மஞானமெனினும் ஒக்கும்; அவையெல்லாம் ஒரு பொருட் கிளவிகளாம். பிறவாற்றானும் இப்பொருள்பற்றி நடப்பன வெல்லாங் கண்டு கொள்க.

சிவாநந்தமென்பது சிவனை யறிதலினாலுளதாகிய மகிழ்ச்சி. அது காமிகத்தில்,

7 तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ।

எனவும், இரௌரவத்தில்,

8 शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ।

எனவும்,

[1]தேனினு மினியர் பாலன நீற்றர்
தீங்கரும் பனையர்தந் திருவடி தொழுவார்
ஊனயந் துருக வுவகைக டருவார்.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும் என்க. சிவாநந்தானுபமென்பது சிவ ரசத்தை யறிவது எனப் பொருள்படும். அது. ஞானசித்தியில்,

9 शिवानन्दमयः प्रोक्तः स्वानुभूतिस्थितं भवेत् ।

எனவும், இரௌரவத்தில்,

10 देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।

எனவும் சர்வஞானோத்தரத்தில், (பிர 2-சு61)

11 शिवज्ञानामृतं पीत्वा विचरस्व यथासुखं ।

எனவும்,

[2]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

எனவும்,

[3]பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்.

எனவும் பிறவும் வருதலான் அறியப்படும். பிரமரசானுபவமென்பது பிரம ரூபமாயுள்ள வினிமையை யனுபவித்து மகிழ்சியடைதல். அது, பஞ்சதசி (யோகா-சு-2)

12 रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा ।

எனவும்,

[4]தேனுமின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்.

[1]சம்பந்தர், அச்சிறுபாக்கம், பா, 2. [2]சிவஞானசித், சு, 11, பா. 12. [3]திருவிசை, பூந்துருத்தி, பா, 2.
[4]திருவாசகம் திருவேசறவு, பா, 10.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். பிரமரசமென்பது அறியும் பொழுது சிவன் இனிமை யுடையவனுக விருப்பது. இதற்கும் முற்கூறியனவே யுதாரணம். சிவதரிசனமென்பது சிவனொருவனையே காண்டல் சிவஞானமென்பதும் இது. இவை,

13 शिवार्कशक्तिदीधित्या समर्थीकृत चिद्दृशा ।
शिवं शक्त्यादिभिः सार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥ (மோட்ச-சு-111)

எனவும், இரௌரவத்தில்,

14 निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः ।

எனவும், சுவேதாரணிய மான்மியத்தில்,

15 शिवानन्दार्णवे मग्नो न च सस्मार वै जगत् ।

எனவும், பகவத்கீதையில், (அத்தி-2, சு-69)

16 या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥

எனவும்,

[1]உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே.

எனவும்,

[2]உவமையா னவத்தொ டொன்றே.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். திருவருள் பெறுதலென்பது ஞானத்தினும் முதிர்ந்தநிலையுடையனுதல். அது

[3]சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித்து.

எனவும்,

[4]திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி.

எனவும்,

[5]நின் னருட்பெருங் கடலிற்
றிளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்.

எனவும்,

[6]அருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே.

---

1,3 சிவஞானசித், சூ, 11, பா, 10, 11. 2 சிவப்பிர, சூ, 10, பா, 8. 4 சிவப்பிர, சூ, 2, பா, 32.
5 திருவாசகம், செத்திலா, பா, 10. 6 அப்பர், ஐயாறு, திருவிருத்தம், பா, 4.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். சிவயோகமென்பது சிவனோடு இரண்டறக் கலந்து கூடுதல். அன்றிச் சிவயோக மென்னுந் தசகாரியத் தொன்றாயுள்ளதுமாம். அது,

17 शिवयोगं शिवानन्दं शिवमन्त्रस्वरूपकम् ।

எனவும்,

18 अथात्मानं शिवे लीनं जले तु लवणं यथा ।
अविशेषं भवेत्तद्वदात्मा तु परमात्मनि ॥

எனவும் [2]'உவமையா ணவத்தொ டொன்றே' எனவும் பிறவும் வருதலான் அறியப்படும். சிவபோகமாவது சிவசத்திகளனைத்துங் கழன்று சிவனோடுதானே கலந்து வாக்கு மனத்திற்கெட்டாத நிரதிசயாநந்தத்தை யநுபவித்தல். அது அசிந்திய விசுவத்தில்,

19 केवलं शिवसद्भावो यतित्वमिति निर्दिशेत् ।

எனவும், வாதுளோத்தரத்தில்,

20 सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगश्च तदेव परमं सुखम् ॥

எனவும், ஞானசித்தியில்,

21 मूकस्वप्नसेवाहुर्निरतिशयात्मविज्ञानम् ।

எனவும், அதிலேயே,

22 तज्ज्ञानं शक्तिसामर्थ्यं शिवभोगमिहोच्यते ।

எனவும்,

[1]மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

எனவும்,

[2]உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணர்ந்தான்.

எனவும் பிறவும் வருதலானும்,

23 * * अष्टमं शिवदर्शनम् ।
नवमं शिवयोगं च दशमं शिवभोगकम् ॥

என்பதனானும்,

---

[1] திருமந்திர, மோனசமா, பா, 9. [2] திருக்கோவை, பா, 9.

24 आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ।

என்பதனனு மறியப்படும். பரமாநந்தபோகம் என்பதும் இது. அது,

25 परमानन्दभोक्तृत्वमन्नप्राशनमुच्यते ।

என்பதனல் அறியப்படும். பரமபதமென்பது எல்லாவற்றினு முயர்ந்தகதியாய்க் [1]'காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவுந்' தோன்ருதநுபவித்தறிவது. அது

26 सा मुक्तिस्तत्तु निर्वाणं तदेव परमं पदम् ।
ज्ञातृज्ञानज्ञेयत्वविहीनं तत्परं पदम् ।

எனவும், சிவஞானசித்தியாரில்,

[2]பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் * * * சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். சிவப்பேறு என்பது † சிவனையே பெறுதல். அது அசிந்தியவிசுவத்தில், एवमानन्दसंप्राप्तौ । எனவும்,

27 ब्रह्मप्राप्त्यवधिश्चैव चात्मानन्दसुखं भवेत् ।

எனவும்,

28 भिन्ने देहे शिवो भूत्वा शिवमेवाधिगच्छति ।

எனவும்,

[3]ஞானப் பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். சிவசாயுச்சியம் என்பது சிவனோ டிரண்டறக்கலந்து பிரியாது அவனைப்பெறுகை. அது,

29 शिवे संयोजितं रूपं सायुज्यमिति कथ्यते ।

எனவும்,

[4]பந்த முற்ற கந்தல கழித்த, ‡ வறிவனோ டறிவு பிரியாப் பெற்றி.

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். ஆன்மாநந்தமாவது ஆன்மாச் சிவனை யநுபவித்ததனலுளதாகு மகிழ்ச்சி. ஆன்மாவிற்குரிய ஆநந்தமெனினு மாம். அது,

27 ब्रह्मप्राप्त्यवधिश्चैव चात्मानन्दसुखं भवेत् ।

---

[1]விணுவெண்பா, பா, 11. [2]சிவஞானசித், சு, 11, பா, 2. [3]சிவஞானசித், சு, 8, பா, 22.
† சிவனை யன்றி யின்றி யவனையே பெறுதல் என்பது எழுத்துப்பிரதி. சிவனைப் பிரிவின்றி யவனையே பெறுதல் என்னில் பொருந்தும். [4]சங்கற்ப, சிவசமவாதி, வரி, 76, 77. ‡ அறிவினோடு என்பது அச்சுப் பாடம்.

என்பதனுல் அறியப்படும். நிஜாநந்தம் என்பது மிது. அது பாசஞ் சடமாகலா னிவனே யநுபவிக்க வேண்டுதலானும் காமிகத்தில்,

तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ।
निजानन्दमहाम्भोधौ यस्मिन्मज्जेदनाकुलः ॥

எனவும்,

नैजाह्लादैकपूर्णः (सिद्धान्तसार - क्रिया-2.)

எனவும், பிறவும் வருதலானும் அறியப்படும். ஆன்மசுத்தி என்பது சிவனையுணர்ந்தி யறிந்து சுத்தனுதல். ஆன்மலாபம் என்பது சிவயோக போக முதலானவற்ருல் சிவனைப் பெறுதல். இவற்றிற்கு உதாரணங்கள் முன்னர்க் காட்டினவேயாம்.

[1]தேசுற மருவு மான்ம தெரிசனம்.

என்பதனுனுங் கண்டுகொள்க. ஆன்மஞானமாவது சிவாநுபவத்தாற் றன்னை யறிவது. அது சிவஞானபோதத்தில்,

30 मलमायाद्यसंस्पृष्टो भवति स्वानुभूतिमान् ।

எனவும், பிறவும் வருதலான் அறியப்படும். பிறவுமன்ன.

அதுவாய் மேவுதலே யென்றது அத்துவிதநிலையை. அது,

[2]உவமையா னவத்தொ டொன்றே.

[3]தாடலைபோற் கூடியவை தாகனிழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள்.

எனவும், பிறவும் வருதலின் உணர்க. இவ்வாறு சிவானந்தாநுபவ மாவதே சைவசித்தாந்தமுத்தி யென்பது கண்டுகொள்க. இதற்குதாரணம் முன்னர்க் காட்டினவே கொள்க. அன்றி மீண்டுங் கூறவேண்டிற் கூறிக்கொள்க. காமிகத்து வித்தியாபாத முதற்படலத்தில்,

31 नमस्ते परमानन्दप्रदाय विमलात्मने ।
अनन्यवकुकामं तत्परिज्ञानपरायिने ॥ ?

எனவும், அதிலேயே ஏழாவது படலத்தில்,

32 शिववत्सर्वैकर्तृत्वे सर्वज्ञत्वे च सत्यपि ।
न करोति न जानाति भृशं मुह्यति बालवत् ॥

यदानुगृह्यते सोऽयं गुरुणा करुणाब्धिना ।
तदास्य पुद्गलस्यैषा ज्ञानशक्तिः प्रसर्पति ॥

[1]சிவப்பிர, சூ, 8, பா. 1. [2]சிவப்பிர, சூ, 10, பா, 8. [3]திருவருட், இன்புறு பா, 4.

देशकालानवच्छिन्ना निरवद्या निरर्गला ।
विपर्ययेण रहिता विषयेष्वतिलङ्घिनी ॥

अतिसूक्ष्मतरेष्वर्थेष्वन्तर्गत्या प्रसर्पिणी ।

अतीतानागतार्थज्ञा न शब्दपरिमोहिनी ।
तथापि विपुलानर्थान्न जानाति स पुद्गलः ॥

तद्विलक्षणमात्मानं ज्ञात्वा च परिहृष्यति ।
निजानन्दमहाम्भोधौ यस्मिन्मज्जेदनाकुलः ॥

सा मुक्तिस्तत्तु निर्वाणं तदेव परमं पदम् ।
मृग्यं हि ऋषिभिः सर्वैर्योगिभिश्च द्विजोत्तमाः ॥

एतद्रूपस्य लाभार्थं तप्यते हि तपो महत् ।
व्रतानि दानयज्ञाश्च नियमाश्चाप्यनेकशः ॥

वर्णाश्रमप्रयुक्ताश्च नित्यनैमित्तिका अपि ।
अभिव्यक्तात्मनि फलानि पर्यवस्यन्ति चात्र वै ॥ ?

எனவும், இரௌரவத்தில்,

33 एवं शैवाध्वरं प्राप्य दीक्षामन्त्रसमुद्भवम् ।

14 न पुनर्जन्मतां याति दीक्षितो मनुजोत्तमः ॥

10 भिन्ने देहे शिवो भूत्वा शिवधर्मैः समन्वितः ।
शिवानन्दमनुप्राप्य चाविर्भावाय कल्पते ॥

जलं सामुद्रमासाद्य नदी हृद्याम्बुवाहिनी ।
क्षारतोयत्वमायाति प्रभावाद्धि महोदधेः ॥

एवं वै देहभिन्नात्मा शिवमेवाधिगच्छति ।

எனவும், அதிலேயே,

34 एवं दीक्षाविशुद्धात्मा देहस्थोऽपि न देहभाक् ।
निर्दग्धाशेषपाशत्वाज्जीवन्मुक्तः शिवैकधीः ॥

देहपाते चिदानन्दं शिवैकरसतां व्रजेत् ।
न पुनर्भेदमायाति सरित्तोयमिवाम्बुधौ ॥

यथा सूर्योदयं प्राप्य तमः क्षिप्रं विनश्यति ।
एवं दीक्षां समासाद्य धर्माधर्मौ विनश्यतः ॥

எனவும், அதிலேயே,

35 तीव्रशक्तिनिपातेन युक्तं शिष्यं स देशिकः ।
मुहुर्स्तं परमानन्दे मग्नो भूत्वाऽभ्यनन्तरम् ॥

पराशक्तिमयो भूत्वा पश्येत्पाशनिवृत्तये ।
तन्निवृत्तौ चिदानन्दं जायते शिवयोगतः ॥

तन्नौ सद्यः प्रजायेत

எனவும், சுப்பிரபேதத்தில்,

36 शिवे संयोजितं रूपं सायुज्यमिति कथ्यते ।
ज्ञानात्सायुज्यमेवं तु तोये तोयं यथा तथा ॥

योगाज्ज्ञानं समादाय ज्ञानतत्त्वं सदाभ्यसेत् ।
यथा जलं जले क्षिप्तं क्षीरे क्षीरं घृते घृतम् ॥

अविशेषं भवेत्तद्वदात्मा तु परमात्मनि ।

எனவும், வாதுளோத்தரத்தில்,

सद्भोगं वाङ्मनोऽतीतं स्वयमेवानुभूतिमत् ।
तदेव शिवभोगश्च तदेव परमं सुखम् ॥

எனவும், அசிந்திய விசுவசாதாக்கியத்தில், ஆசாரிய இலக்கணத்தில்,

37 शिवानुभूतिसंयुक्तः सर्वक्लेशविवर्जितः ।

எனவும், அதிலேயே ஞானதீக்ஷையில் சோடசசமற்காரப்பிரகரணத்தில்,

38 शिथिलीभूतबन्धस्य शक्तावुत्कर्षणं च यत् ।
आत्मनो रुद्रपुत्रत्वं गर्भाधानं तदुच्यते ॥

स्वातन्त्र्यादिगुणव्यक्तिरिह पुंसवनं भवेत् ।
मायात्मनोर्विवेकेन ज्ञानं सीमन्तवर्धनम् ॥

शिवादिसदसद्वस्तुस्वीकारो जननं भवेत् ।
बोधनं यच्छिवत्वेन शिवत्वार्हस्य नाम तत् ॥

शिवत्वस्य प्रवेशो हि निष्क्रामणमितीर्यते ।
परमानन्दभोक्तृत्वमन्नप्राशनमुच्यते ॥

शिवप्रसादोत्कर्षं तु यत्तच्चूडाकरं भवेत् ।
निर्वाणज्ञानसूत्रेण सम्बन्धमुपवीतकम् ॥

इन्द्रियाणां च संरोधो व्रतादेश इति स्मृतः ।
पुनर्जन्मपरित्यागो गोदानमिति कीर्तितम् ॥

सर्वेषु निरपेक्षत्वसद्भावः स्नानमुच्यते ।
अनन्तशक्तिसंयुक्तिर्विवाह इति कीर्तितः ॥

अनन्तशक्तिविश्लेषः वानप्रस्थत्वमिष्यते ।
केवलं शिवसद्भावो यतित्वमिति निर्दिशेत् ॥

शिखां यज्ञोपवीतं च संत्यजेद्यतिनं प्रति ।

எனவும், அதிலேயே சமாதிராசபடலத்தில்,

39 एवमानन्दसंप्राप्तौ मुक्तिरेव न संशयः ।

40 गुरुवक्त्रेण तत्सिद्धिरानन्दस्तु न संशयः ।

எனவும், அதிலேயே,

24 आनन्दं शिवभोगं तु शिवयोगं सदाभ्यसेत् ॥

41 आनन्दं भावयेद्योगी सर्वक्लेशनिबर्हणम् ।

எனவும், அதிலேயே,

42 आनन्दं जुह्वते जन्तुस्तस्मादानन्दमिच्छति ।

எனவும், அதிலேயே,

27 ब्रह्मप्राप्त्यवधिश्चैव आत्मानन्दसुखं भवेत् ।

எனவும், சர்வஞானோத்தரத்தில்,

43 निस्तत्त्वे निष्कलीभूते विन्दत्यात्मनि यत्सुखम् ।

44 तत्सुखं परमं ज्ञेयमनाद्यन्तमनौपमम् ॥ (சு-39)

शिवज्ञानामृतं पीत्वा विचरस्व यथासुखम् ।

எனவும், காலோத்தரத்தில் ஞான பூசையில்,

45 अज्ञानवासनानाशो धूपो दीपः स्वयंप्रभा ।
शिवानुभूतिर्नैवेद्यं पानीयं च सुवासितम् ॥

रसास्वादस्य गलनं हस्तोद्वर्तनमीरितम् ।
कषायगलनं जातं ताम्बूलं मुखवासनम् ॥

अनाहताख्यनादस्य लयः स्तोत्रं समीरितम् ।
प्रदक्षिणं च सर्वत्र व्यापित्वं शम्भुना सह ॥

सरित्समुद्रसंयोगाज्जलं समरसं यथा ।
तथात्मशिवयोर्योगो नमस्कारः प्रकीर्त्यते ॥

ज्ञाता ज्ञानं यथा ज्ञेये मग्नं भवति तत्तथा ।
पराङ्मुखार्घ्यमित्याहुरात्मनश्च निवेदनम् ॥

எனவும், *சிவதருமோத்தரத்தில்,*

46 धर्मरज्ज्वा व्रजेदूर्ध्वं पापरज्ज्वा व्रजत्यधः ।
द्वयं ज्ञानासिना छित्वा विदेहं शान्तिमृच्छति ॥

ज्ञानामृतरसो येन सकृदास्वादितो भवेत् ।
स सर्वकर्माण्युत्सृज्य तत्रैव परिधावति ॥

எனவும், *மோக்ஷகாரிகையில்,*

13 शिवार्कशक्तिदीधित्या समर्थीकृतचिद्दृशा ।
शिवं शक्त्यादिभिःसार्धं पश्यत्यात्मा गतावृतिः ॥

எனவும், *சித்தாந்த ரஹஸ்யத்தில்,*

47 परमेशार्ककिरणप्रकाशीकृतचक्षुषा ।
मुक्तात्मनाक्षिवच्छम्भुर्ज्ञायते शिवतेजसा ॥

எனவும், *சித்தாந்த சாராவளியில்,*

48 स्वाम्नायज्ञानसिद्धाचरणमविकलं चाचरन्विप्लुतौ तन्
निष्कृत्याढ्यो मृतोऽन्ते शिवनिहितमनाश्चान्त्ययागाच्छिवत्वम् ।
लब्ध्वा व्याप्त्याप्तविश्वः परमशिवसमोऽनीशिता तेन शक्तो
नैजाह्लादैकपूर्णो निखिलपरिवृतः शङ्करप्रीतिरास्ते ॥

எனவும், *ஞானசித்தியில்,*

49 अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ।
ज्ञानात्सायुज्यमाप्नोति शुद्धात्मा शिवसङ्गमम् ॥

22 तज्ज्ञानं शक्तिसामर्थ्यं शिवभोगमिहोच्यते ।

எனவும், *பஞ்சதசியில்,*

12 रसो ब्रह्म रसं लब्ध्वाऽऽनन्दी भवति नान्यथा ।

2

எனவும், ஸ்ரீமத் கந்த மகாபுராணத்துச் சங்கரசங்கிதையில் தீர்த்தவர்ணனையில் அரியரசம்வாத சுவேதாரணிய மான்மியத்து இரண்டாம் அத்தியாயத்தில் சூதர்,

50 साधु पृष्टं महाभागैर्भवद्भिर्भाग्यवत्तमैः ।
तद्वोऽहं संप्रवक्ष्यामि जगतां हितकाम्यया ॥

नृत्तदर्शनसंह्लादाद्भगवान् कमलापतिः ।
15 शिवानन्दार्णवे मग्नो न च सस्मार वै जगत् ।

51 ममज्ज सुचिरं कालं शिवानन्दमहाम्बुधौ ।
उन्ममज्ज पुनस्तस्माच्छिवानन्दमहाम्बुधेः ॥

तीरं कथंचित्संप्राप्य पुनः सस्मार वै जगत् ।
दृष्ट्वा महेश्वरं देवं नृत्यमानं सदाशिवम् ॥

स्तोत्रैः स्तुत्वा प्रणम्याथ पप्रच्छ पुनरीश्वरम् ।

எனவும், திருமந்திரத்தில்,

[1]ஆயு மலரி லணிமலர் தன்மேலே
மாய விதழும் பதினாறு மங்குள
தூய வறிவு சிவானந்த மாகியே
போய வறிவாற் புணர்ந்திடுந் தானே.

[2]ஆறந்த *முஞ்சென் றடங்கிடு ஞேயத்தே
யாறந்த ஞேய மடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடல் வீடவே
தேறிய மோனஞ் சிவானந்த மாமே.

[3]†மாயனு மாய மலரோ னிறையுமாய்க்
காயன நாட்டுக் கருமுகி லானவன்
சேய னணியன் றித்திக்குந் தீங்கரும்
பாயமிர் தாகிநின் றண்ணிக்கின் றானே.

[4]அணுவும் பரமு மசிபதத் தேய்ந்து
கணுவொன்றி லாத சிவமுஞ் கலந்தால்
இணையறு பாறே னமுதென வின்பத்
துணையது வாயுரை ‡யற்றிடந் தோன்றுமே.

[5]ஆறாறு தத்துவத் ||தப்புறத் தப்பாற்
கூறா வுபதேசங் கூறே °சிவபதம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக வாநந்தம் பேணும் பெருகவே.

---

[1],[3]அறிவுதயம், பா, 5. 11. [2]ஆறந்தம், பா, 13. [4],[5]முப்பரம், பா, 4. 3. * முன்சென்று, † மாயனுமாகி, ‡ யற்றிடத்தோன்றுமே, || அப்பரம், ° சிவபரம் என்பன அச்சுப்பாடங்கள்.

[1]அரனவன் பாதல மாதி சிவாநந்தம்
வருமவை சத்திகண் மூன்றாய் வகுத்திட்
டுரனுறு சந்நிதி சேட்டிப்ப வென்றிட்
டிரனுறத் தோயாச் சிவாநந்தி யாமே.

[2]நின்று மிருந்துங் கிடந்து நிமலனை
யொன்றும் பொருள்க ளுரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்
தொன்றே யுணரு மொருவனு மாமே

[3]பண்டங்க ளெண்பத்து நான்குநூ றாயிரந்
துண்டஞ்செய் யாரைத் தொடர்ந்துயி ராய்நிற்குங்
கண்டவதனிற் கலந்துண்ணே னுனென்
றுண்டியு மாகி யொருங்கிசின் றானே.

[4]அன்பு ளுருகி யழுவ னரற்றுவன்
என்பு முருகி யிராப்பக லேத்துவன்
என்பொன் மணியை யிறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் றிருத்தலு மாமே.

எனவும் சிவஞானபோதத்தில்,

[5]ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் — ஏகமா
யுள்ளத்தின் கண்ணாலு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணாதே யுற்று.

[6]சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளம்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோல் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

எனவும், சிவஞானசித்தியில்,

[7]கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

[8]உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே.

[9]மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே

எனவும், சிவப்பிரகாசத்தில்,

[10]திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி திகழ்முத்தி
யிதுமுத்தித் திறத்த தாமே.

[1]இது அச்சுப் பிரதியிலில்லை. [2]புறங்கூறாமை, பா, 6. [3]இது அச்சுப்புத்தகத்தில் இல்லை.
[4]அணைந்தோர்தன்மை, பா, 24. [5], [6]சிவஞானபோ, சூ, 8, பா, 2, 7. [7], [8], [9]சிவஞானசித். சூ, 11, பா, 12, 10, 1. [10]சிவப்பிர, சூ, 2, பா, 32.

[1]பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனு லுள்ளச் செயலறுத் திடவு திக்கும்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

எனவும், திருவருட்பயனில்,

[2]இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவம்
இன்பகன மாதலினு லில்.

எனவும், துகளறுபோதத்தில்,

[3]பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
யுருகியடி யேனருந்த வூட்டுங் — குருவே
யழியாத வின்ப மரனருந்தா னென்னும்
வழியேது சொல்லாய் மகிழ்ந்து.

[4]சர்க்கரைதா னியார்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்கால் — சர்க்கரைக்கின்
றின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ
வின்புருவ மேயிறைக்கு மென்.

எனவும், சிவாநந்தமாலையில்,

உற்றசிவா நந்தமிலாப் பூசையுயி ரில்லாத
வெற்றுடலம் பாலற்ற மென்முலையாம் — முற்றுமிசை
நாதந்தா னற்றயாழ் நற்பொருளில் லாதவுரை
வாசந்தா னற்ற மலர். 373

பற்று மறிவழியப் பார்த்தநிலை பாராத
சிற்பரமா முண்மைச் சிவானுபவத் — துற்றுவளர்
தம்பிரா னுடைந்தோர் தாம்பிறவார் தாண்டவஞ்செய்
தம்பிரா னுர்சீர்பா தம். 365

அறிவுதொழி லொத்தாலு மஞ்சிலே யைந்தாஞ்
செறிவுசிவ தத்துவமாய்ச் சேர்ந்தோன் — பிறிவின்றுஞ்
சுத்தமிவை யைந்துக்கு மப்பாலாந் தூவெளியா
மத்துவிதா நந்தனு வான். 382

எனவும், தத்துவப்பிரகாசத்தில்,

இன்றுதா டலையோ டாய காறலை யிருளுந் தானு
மொன்றதன் றிரண்டுமன்ற திரண்டொன்று மாவ தன்றும்
நின்றதோ ராநந் தந்தா னிலையென வழுந்துவாருக்
கன்றது பரமாநந்த மதிற்சுக மழுந்த லாமே. 294

[1]சிவப்பிர, சூ, 10, பா, 1. [2]இன்புறு, பா, 3. [3],[4]துகளறு, பா, 72, 73.

மதுவுண்ட வண்டு போலும் வல்விட முதிர்தல் போலும்
திதமுற விகாரங் கெட்டுத் தெளிந்தடங் குவையே யாயி
னது*பிரிந் தகல வொட்டா வதுசாயுச் ‡சியம தாகுங்
கதியது வந்த §வர்க்கே கணக்கையார் $மதிப்பார் தாமே. 298

சர்க்கரை தேன்பால் கண்டு தானுகர்ந் திடுநாப் போலு
முற்றிய விரத மாகா முழுவிர தத்தை நீங்காப்
பொற்பது போலு †நாத்தான் பொருந்தனு பவித்த போதே
சிற்பர னுன்ம லாப மாமது திருந்தக் காணே. 297

எனவும், மறைஞானமாலையில்,

இருந்தாலு மைம்புல னென்றுபெற் றாலுன்னை யன்றியொன்று
மருந்தா துனக்குமிங் கப்படி நாமந்த வின்பதுன்பம்
பொருந்தா தெமையருட் பேரின்ப நாம்புசிக் கின்றவனீ
வருந்தாகொ ளென்றனன் புத்தூர் வருமறை ஞானமன்னே.

எனக்கோ நினைவற் றன்னிய மாக வெழுந்தசுக
முனக்கோ வுரியதென் றேனென்ற போதிவ் வுயிர்கட்கின்றித்
தனக்கோ பயனில்லை சர்க்கரை போலுந்தன் றன்மை யென்றான்
மனக்கோயில் வாழு மறைஞான சத்திய வாசகனே.

எனவும், பிள்ளையார் தேவாரத்தில்,

தேனுமா யமுதுமாய்த் தெய்வமுந் தானாய்த்
தீயொடு நீருடன் வாயுவாந் தெரியில்
வானுமா மெனதுரை தனதுரை யாக
||வரியர வரைக்கசைத் துழிதரு மைந்தன்
கானமான் வெருவுறக் கருவிர லூகங்
கடுவனோ டுகளுமூர் கற்கடுஞ் சார
லேனமா னுழிதரு மிலம்பையங் கோட்டூ
ரிருக்கையாப் பேணியென் னெழில்கொள்வ தியல்பே.

இலம்பை, பா, 5.

தேனினு மினியர் பாலன நீற்றர் தீங்கரும் பனையர்தந் திருவடி தொழுவா
ரூனயந் துருக வுவகைக டருவா ருச்சிமே லுறைபவ ரொன்றலா தூரார்
வானக மிறந்து வையகம் வணங்க வயங்கொள நிற்பதோர் வடிவினை யுடையா
ரானையி னுரிவை போர்த்தவெம் மடிக ளச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே.

திரு அச்சிறுபாக்கம், பா, 2.

எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலா யெனையு மாள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. திருமணஞ்சேரி, பா, 3.

*விரிந்தகல. ‡சியத்த. §வர்க்காங். $கணிப்பார். †தானும். ||வரியர என்பன அச்சுப்பிரதி.

எம்பிரா னெனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரா னுவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே. பிரமபுரம், பா, 1.

பத்திப்பேர் வித்திட்டே பரந்தவைம் புலன்கள்வாய்ப்
பாலேபோகா மேகாவாப் பகையறும் வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச்
சித்திக்கே வுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானுகச் செயுமவ னுறையுமிடங்
கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. கழுமலம், பா, 8.

எனவும், அப்பர் தேவாரத்தில்,

கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினுந்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே. இடைமருது, பா, 10.

பெருக லாந்தவம் பேதமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ராநந்த
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. திருமருகல், பா, 1.

விள்ளத்தா னென்றுமாட்டேன் விருப்பெனும் வேட்கையாலே
வள்ளத்தேன் போலநுன்னை வாய்மடுத் துண்டிடாமே
யுள்ளத்தே நிற்றியேனு முயிர்ப்புளே வருதியேனுங்
கள்ளத்தே நிற்றியம்மா வெங்ஙனங் காணுமாறே. தனித்திருநேரிசை, பா, 7.

எனவும், சுந்தரர் தேவாரத்தில்,

ஊனங் கத்துயிர்ப் பாயுல கெல்லா மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கத்தவர்க் குமளப் பரிய வள்ள லையடி யார்கட் முள்ளத்
தேனங் கத்தமு தாகியுள் ளூறுந் தேச னைத்திளைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. வலிவலம், பா, 1.

மருக லுறைவாய் மாகா ளத்தாய் மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல வகல வருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே
பருகப் பணியா யடியார்க் குன்னைப் பவளப் படியானே. ஊர்த்தொகை, பா, 5.

குருகுபா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா
றருகுபா யும்வய லந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
தருகுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. ஆரூர், பா, 1.

எனவும், திருவாசகத்தில்,

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா வார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா வாநந்தம் பெற்றே னியாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான் றிருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா வுடலிடங் கொண்டா யானிதற் கிலனொர்கைம் மாறே.

கோயிற்றிருப், பா. 10.

எனவும், திருக்கோவையாரில்,

ஆநந்த வெள்ளத் தழுந்துமொ ராருயி ரீருருக்கொண்
டாநந்த வெள்ளத் திடைதிளைத் தாலொக்கு மம்பலஞ்சே
ராநந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரி
னாநந்த வெள்ளம்வற் றாதுமுற் றாதிவ் வணிநலமே. பா, 307.

எனவும், திருவிசைப்பாவில்,

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே சித்தத்துட் டித்திக்குந் தேனே
யளிவள ருள்ளத் தாநந்தக் கனியே யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத் தொண்டனேன் விளம்புமா விளம்பே.

திருமாளிகை, கோயில், பா, 1.

பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப் பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந் திருவுரு விருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த தனிமுழு முதலுமா யதற்கோர்
வித்துமா யாரு ராதியாய் வீதி விடங்கராய் நடங்குலா வினரே.

பூந்துருத்திநம்பி, ஆரூர், பா, 2.

பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றுசென் றேறிச்
சிந்தையுந் தானுங் கலந்ததோர் கருவி தெரியினுந் தெரிவுறு வண்ணம்
எந்தையுந் தாயு மியானுமென் றிங்ங னெண்ணில்பல் லூழிக ளுடனாய்
வந்தணு காது நுணுகியுள் கலந்தோன் மருவிடந் திருவிடை மருதே.

கருவூர்த்தேவர், இடைமருது, பா, 5.

ஏகநா யகனை யிமையவர்க் கரசை
யென்னுயிர்க் கமுதினை யெதிரில்
போகநா யகனைப் புயல்வணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநா யகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்
யோகநா யகனை யன்றிமற் றொன்று
முண்டென வுணர்கிலேன் யானே. சேந்தனார், திருவீழி, பா, 1.

எண்ணில்பல் கோடி சேவடி முடிக ளெண்ணில்பல் கோடிதிண் டோள்க
ளெண்ணில்பல் கோடி திருவுரு நாம மேர்கொண்முக் கண்முக மியல்பும்

எண்ணில்பல் கோடி யெல்லைக்கப் பாலாய் நின்றைஞ்ஞூற் றந்தண ரேத்து
மெண்ணில்பல் கோடி குணத்தரேர் வீழி யிவர்நம்மை யாளுடை யாரே.

சேந்தனர், திருவீழி, பா, 9.

எனவும், திருப்பல்லாண்டில்,

சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங் குமென்று புண்ணியர் போற்றிசைப்ப
மாலு மயனு மறியா நெறிதந்து வந்தென் மனத்தகத்தே
பாலு மமுதமு மொத்துநின் றானுக்கே பல்லாண்டு கூறுதுமே. பா, 8.

எனவும், பட்டினத்துப்பிள்ளை திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில்,

உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
* * * *
இமைப்பிற் கழியு மியற்கையோ ருடைத்தே. பா, 10.

மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்
* * * *
தன்னையுங் காணாத் தன்மை யோரே. பா, 13.

அடிசார்ந் தவர்க்கு முடியா வின்பம்
நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வம்
மூல நடுவு முடிவு மிகந்து
கால மூன்றையுங் கடந்த கடவுள். பா, 22.

எனவும், திருக்கழுமலமும்மணிக்கோவையில்,

ஒளிவந்த வாபொய் மனத்திரு ளீங்கவென் னுள்ள வெள்ளந்
தெளிவந்த வாவந்து தித்தித்த வாசிந்தி யாததொரு
களிவந்த வாவன்பு கைவந்த வாகடை சாரவையோ
வெளிவந்த வாநங் கழுமல வர்ணர்த மின்னருளே. பா, 6.

எனவும், சேரமான் பெருமாணயனர் பொன்வண்ணத்தந்தாதியில்,

மாயநன் மாமணி கண்டன் வளர்சடை யார்க்கடிமை
யாயின தொண்ட ரவனரு ளாத லரிதலவே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே. பா, 100.

எனவும், பெரியபுராணத்தில்,

நிகரிலா மேருவரை யணுவாக நீண்டானை
நுகர்கின்ற வடியவர்கட் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற வடியார்க டமைவினவித் தமிழ்விரகர்
புகர்கின்ற வருமறையின் பொருள்விரியப் பாடினார். சம்பந்தர், 402.

விழுந்து மெழுந்தும் பன்முறையான் மேவிப் பணிந்து மிகப்பரவி
யெழுந்த களிப்பி னுலாடிப் பாடி யின்ப வெள்ளத்தி
லழுந்தி யிரண்டு கண்ணுலு மம்பொற் புற்றி னிடையெழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார்.

எயர்கோன், 311.

மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவாநந்த ஞானவடி வேயாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர செய்திஞர். திருநாவுக், 427.

எனவும், அருணகிரிநாதர் கந்தரலங்காரத்தில்,

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்பு முள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமி லாதொன்று வந்து வந்து
தாக்கும் மனேலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
யாக்கு மறுமுக வாசொல் லொணுதிந்த வாநந்தமே. பா, 73.

பெரும்பைம் புனத்தினிற் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி னுல்மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மாநந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே. பா, 6.

எனவும், திருவருணைத் திருப்புகழில்,

வரைவி றெரிவையர் தருசுக சலதியி
லலையு மெனதுயி ரனுசித நெறிபெறு
மவுன சிவசுக சலதியின் முழுகுவ — தொருநாளே.

எனவும், பிறவும் வருமாறே கண்டுகொள்க. எனவே சிவாநந்தாநுபவமாவதே சைவசித்தாந்த முத்தி யென்பதற்கு முன்னர்ப் பாயிரத்தினுஞ் சந்தானநற்குரவ ரென்னும் பாட்டினுங் கூறியவாறே மூலாகம வுபாகம பிரகரண வேதாந்த புராணமும், தமிழிற் றொல்லாசிரியர்செய்த திருமந்திரமாலை சிவஞானபோத முதலிய சைவநூல்களும், தேவாரந் திருவாசகந் திருவிசைப்பா திருப்பல்லாண்டு பிரபந்தக்கட்டளை பெரியபுராணமும், பிறவும் பிரமாணமாக வந்தவாறுயிற்று. ஆகவே பிறர்கோள் பிரமாணவத்தன்மையிற் சிதைந்ததூஉமாயிற்று. இந் நூலாற்போந்த பொருள்,

வல்லான் கமலையின் ஞானப்ர காசன் வசனமுணர்ந்
தெல்லாம் வெறுமித்தை யென்றுகண் டேனின்ப வாரியுள்ளே
செல்லாமற் சென்றதைத் தேக்காமற் றேக்கித் தினந்தினமு
மில்லாம னின்றுகொண் டேனிது வேமுத்தி நிச்சயமே.

இருபத்திரண்டாம் பாட்டுரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

தென்கமலை மேவு திருஞான சம்பந்தன்
றன்கமல பாதந் தலைமேற்கொண் — டென்கமலத்
தேதா னிருந்துணர்த்தச் செய்தளவிற் செய்யுமெனைப்
பேதாயென் றுரே பிறர்.

பந்த மறுத்தருள்சம் பந்தகுரு வாகமத்தின்
அந்தமுத்தி நிச்சயநூ லாக்கினான் — சிந்தை செய்தே
யன்றோ னருள்வெள்ளி யம்பல வாணமுனி
யிந்நூ லுரைசெய்தா னே.

முத்திநிச்சயப் பேருரை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

குருபாதம்.

## உரையில் எடுத்தாளப்பெற்ற

# மேற்கோள் முதற்குறிப்பகராதி

[பக்க எண்]

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[பக்க எண்]

# பிழையும் திருத்தமும்

| பக்கம். | வரி. | பிழைகள். | திருத்தம். |
|---|---|---|---|
| iii | 37 | முத்திநிச்சப்பேருரை | முத்திநிச்சயப்பேருரை |
| ,, | 40 | மாடியம் | மாபாடியம் |
| 2 | 14 | ழீரிண் | ழீரிரண் |
| 6 | 20 | அழகுடமை | அழகுடைமை |
| 9 | 6 | என்கோன் | எங்கோன் |
| 11 | 7 | ब्राह्मणादि | ब्राह्मणादि |
| 13 | 12 | बाग्देवि | वाग्देवि |
| ,, | 29 | शूदूस्यापि | शूद्रस्यापि |
| 15 | 6 | முக்கியப் | முக்கியத்துவப் |
| ,, | 31 | அப்பிரமாணிய | அப்பிராமாணிய |
| 16 | 28 | ब्रह्मचारी | ब्रह्मचारी |
| 18 | 11 | सर्वोंषाम् | सर्वैषाम् |
| 21 | 6 | देहपातेते | देहपाते तु |
| 22 | 5 | दीपान्वं | दीपान्यं |
| 26 | 9 | மறுகொளக் | மாறுகொளக் |
| 54 | 8 | பிராமணபூர்வம் | பிரமாணபூர்வம் |
| 64 | 33 | பாயிரம் 9. | பாயிரம் 8. |
| 76 | 21 | सदसद्वयकि | सदसद्व्यक्ति |
| 79 | 34 | பரமோ. | பரமோப. |
| 81 | 24 | தேனங்கத்து | தேனங்கைத்து |
| 95 | 6 | द्रक्क्रिया | दृक्क्रिया |
| 111 | 2 | இன்றுண்டே | இன்புண்டே |
| 115 | 7 | எ-து, பாட்டு. | எ-து பாட்டு. |
| 125 | 21 | கூறுதலின்ப | கூறுதலின் |
| 134 | 38 | 1 தொல் | 3 தொல் |
| 135 | 20 | ஈன்டைக்கு | ஈண்டைக்கு |
| 142 | 24 | இங்கன் | இங்ஙன் |
| 146 | 34 | திளைக்கின்றார | திளைக்கின்றார். |
| 156 | 17 | உணர்த்துங்கேள் | உணர்த்துதுங்கேள். |
| 169 | 18 | சிவனை. | சீவனை. |
| 171 | 21 | ब्रह्मानन्दम् | ब्रह्मानन्दम |

| | | | |
|---|---|---|---|
| 176 | 8 | अनीशता | अनीशिता |
| 177 | 35 | கதிர்வான் | கதிர்வாள் |
| 181 | 16 | ஏன்னே | என்னே. |
| 194 | 29 | பொருட்குற்றங் | பொருட்குற்றந் |
| 216 | 12 | अन्यथाःऽन्यैः | अन्यथाऽन्यैः |
| 218 | 39 | நில்லாதன | இல்லாதன |
| 223 | 13 | பிறவாற்றூற் | பிறவாற்றூல் |
| 225 | 17 | यत्तद्ब्रह्मत्येवधारयेत् | यत्तद्ब्रह्मेत्यवधारयेत् |
| 232 | 13 | संयोगजलम् | संयोगाजलम् |
| 235 | 23 | பண்ணித் | பண்ணியும் |
| ,, | 24 | இதனே | இதனுனே |
| 245 | 24 | சிவதருமோத்திரத்தில் | சிவதருமோத்தரத்தில் |
| 256 | 20 | பெற்றநிலே | பெத்தநிலே. |
| 257 | 41 | சிவப்பிர, கு, | சிவப்பிர, கு, |
| 262 | 4 | சத்தியாம் | சுத்தியாம் |
| ,, | 5 | சத்தனுகையான் | சுத்தனுகையான் |
| 264 | 7 | शिक्ति | शक्ति |
| ,, | 27 | பத்திற்குமொக்கன் | பத்திற்குமொத்தல் |
| 266 | 28 | சத்திநிபாதமல்லாத | சத்திநிபாதரல்லாத |
| 269 | 25 | सोहमस्मि | सोऽहमस्मि |
| ,, | 27 | सोहम् | सोऽहम् |
| 270 | 23 | सून्यम् | शून्यम् |
| 272 | 35 | உறையுனும் | உரையினும் |
| 289 | 20 | பூங்கோதை | பூங்கொத்தை |
| 290 | 21 | புறச்சமயயத்துடன் | புறச்சமயத்துடன். |

# முத்திநிச்சயப் பாட்டு முதற்குறிப்பகராதி.